# திருக்குறள் மெய்ப்பொருளுரை



பாவலரேறு பெருஞ்சித்திரனார்

1

# பெருஞ்சித்திரனார் திருக்குறள் மெய்ப்பொருளுரை

(உரைச் சுருக்கம்)

## PERUNCHITHIRANAR'S THIRUKKURAL A PHILOSOPHICAL BRIEF COMMENTARY.

(FIRST PART)

முதற்பகுதி

பொது முன்னுரை

வெளியீடு

**தென்மொழி பதிப்பகம்,**

**பாவலரேறு தமிழ்க்களம்,**

1, வடக்குப்பட்டுச் சாலை,

மேடவாக்கம், சென்னை – 601 302.

தொலைபேசி : 044 – 22771231

| | | |
|---|---|---|
| பதிப்பு | : | முதல் பதிப்பு : தி.பி. 2028 கும்பம் 27 (10.03..1997) |
| இரண்டாம் பதிப்பு | : | தி.பி. 2037 மீனம் 19 (02.04.2006) |
| நூல் தலைப்பு | : | **பெருஞ்சித்திரனார் திருக்குறள் மெய்ப்பொருளுரை முன்னுரை - முதல் பகுதி** |
| ஆசிரியர் | : | பாவலரேறு பெருஞ்சித்திரனார் |
| வெளியீடு | : | **தென்மொழி பதிப்பகம், பாவலரேறு தமிழ்க்களம்,** 1, வடக்குப்பட்டுச் சாலை,. மேடவாக்கம், சென்னை - 601 302. தொலைபேசி : 044 - 22771231 |
| அச்சாக்கம் | : | தென்மொழி அச்சகம், சென்னை - 601 302. |
| தாள் | : | வெள்ளைத்தாள் |
| பக்கங்கள் | : | 288 |
| அளவு | : | மடி(தெம்மி) 1/8 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | உரு. 100/- |

# பெருஞ்சித்திரனார்
# திருக்குறள் மெய்ப்பொருளுரை
# உரைச் சுருக்கம்

*அதிகார அடைவுகள்*

*அறம்முப்பத் தெட்டு பொருளெழுப தின்ப*
*உறவிருபத் தைந்தென் றுரை.*

*பாயிரம் நான்காம் பயனறம்முப் பன்னான்காம்*
*ஆயும் பொருளெழுப தாகுமே -- தோயுமுண்மைக்*
*காதல் மனைவியொடு நுண்காமம் ஐயைந்தாம்*
*ஓதும் திருக்குறள்என் றோது.*

# வெளியீட்டுரை

**துரை மா. பூங்குன்றன்.** அறி.இ., க.மு., மெய்.மு.

நம் பாவலரேறு ஐயா அவர்கள் இயற்கையின் இயக்கங்கள் அமைப்புகள், போக்குகள் அனைத்தையும் மெய்ப்பொருளறிவோடு பொருத்தி இவை ஒரு நெறியோடுதான் இயங்க வல்லன எனக் கூர்ந்தாயும் பழக்கம் உள்ளவர்கள். அனைத்து வாழ்வியல், அறிவியல் அறிவும் உள்ளடக்கியதுதான் மெய்ப்பொருளறிவு என முறைப்படுத்திக் கொண்டவர்கள்.

எனவே, திருக்குறளின் கருத்துகள் மெய்யறிவுப் பார்வையில் பார்க்கத் தக்கன எனப் பார்வையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அப்பார்வையில் மிகவும் புதுமையான பொருள்களை ஆங்காங்குத் திருக்குறளைப் பற்றிய சொற்பொழிவுகளில் வெளிப்படுத்துவார்கள் அரசியல் நெருக்கடிக் காலமான 1975-76 ஆம் ஆண்டுகளில். அற்றை அரசு இவ்வுலக நடைமுறை வாழ்வினின்று பிரித்து ஓராண்டுக் காலம் ஐயா அவர்களைத் கொடுஞ்சிறையில் வைத்திருந்த காலத்தில்தான் திருக்குறளை மெய்ப்பொருள் நோக்கில் நோக்கி, அதைச் சார்ந்தே உரையெழுத அவர்களுக்கு எண்ணம் எழுந்தது.

இயல்பாகவே ஐயா அவர்களின் மெய்ப்பொருள் நோக்குக்குத் திருக்குறள் மிகவும் பொருந்தி வந்ததை உணர்ந்தார்கள். தாம் உணர்ந்த மெய்ப்பொருள் உணர்வை வெளிப்படுத்தத் திருக்குறளை ஒரு களமாக எடுத்துக்கொண்டதாகவும் கூறினார்கள்.

நெருக்கடிக் காலச் சிறையின்று வெளிப்பட்டபின், தாம் எழுதிய உரைக் குறிப்புகளைப் படியெடுக்கவும் பிரிக்கவும் துணையாளர்கள் தேவைப்பட்டனர். அப்போது அப்பணிச் சுமை பற்றி அனைவரி

டமும் விளக்கினார்கள். அக்கால் தலைமைச் செயலகத்தில் பணியாற்றி வந்த திரு வடிவேல் இராவணன், மந்தைவெளிப் பள்ளித் தமிழாசிரியர் திரு. தமிழ்நாவன் போன்றோர் ஓரிரு திங்கள் தொடர்ந்து மாலை நேரங்களில் படியெடுத்தும் வகைப்படுத்தியும் உதவி செய்தனர்.

நாள் எந்நேரமும் உரையைப் பற்றிய எண்ணமும் பேச்சுமாகவே ஐயா இயங்கி வந்தார்கள். இதற்கிடையில் 1982 இறுதியில் திரு. இளமாறன் அவர்கள் பவானியில் திருக்குறள் தொடர்சொற்பொழிவு நிகழ்ச்சி ஒன்று அமைத்தார். இச்சொற்பொழிவின் பின் இந்நூல் விரைவில் அமைவதற்கான சூழல் அமைந்ததெனினும் நடைமுறை போக்கில் அச்சூழல் நில்லாமற்போனது.

இதற்கிடையில் ஐயாவின் மகளான தங்கை செந்தாழை பட்டம் முடித்து வீட்டில் இருந்த காலத்தில் இப்பணிக்குத் துணையாக இருந்தது குறிப்பிடத்தக்கது. எனினும் அவர்க்கும் மணவாழ்க்கை அமைக்கப்பட்டது.

அதன்பின் சரியான துணைச் சூழல்கள் வாய்க்காமலும் இல்லத்தில் ஏற்பட்ட சிற்சில சிக்கல்களாலும் உரை செய்யும் பணி தடைப்பட்டது. அதன்பிறகு அரசியலிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டு வந்தன. ஐயாவின் பணி இதழ் வெளியீடுகளிலேயே தொடர்ந்து இருந்தது. இதற்கிடையில் 1991 சூன் மாதம் செயலலிதா ஆட்சியின் கொடுமையான சூழல் தமிழகத்தில் தொடங்கியது. ஐயா அவர்கள் மிகவும் இச்சூழலால் தமிழினத்தை எண்ணி வருந்தியிருந்தார்கள். அத்துடன் ஐயாவின் கண்களில் கதிர்முறையில் அறுவை செய்ய நேர்ந்தது.

இவ்விரண்டு அழுத்தமான நிகழ்வு எண்ணங்களோடு தென்மொழி அச்சகம் சென்றிருந்தபோது தென்மொழி அச்சகப் பெயர்ப்பலகை வேறு காற்றினால் வீழ்ந்திருந்தது கண்டு திடுக்குற்றார். இவைபோன்ற மனச்சுமையான எண்ணங்களோ்டு ஒருநாள் இரவு உறக்கத்தினிடையில் திடீரென்று விழிப்பு வந்தபோது திருக்குறள் உரையை முடித்துவிட வேண்டும் என்ற முனைப்பு பீறிட்டு எழுந்தது.

இதன்படி முதலில் உரைச் சுருக்கத்தை வெளியிட்டு விட வேண்டும் என்ற உந்துதலில் அதற்கானப் பணிகளை மும்முரமாகத் தொடங்கினார். தென்மொழியில் முன் வெளியீட்டுத் திட்ட அறிக்கைகள் வெளிவந்தன. அச்சிடுவதற்காகப் பெருந்தொகை வேண்டியிருந்ததாகையால் அத்தொகையில் தென்மொழி நெஞ்சங்களான திருவாளர்கள் ஈரோடை அரசமாணிக்கனார், மா.செ.தமிழ்மணியார், நிலா.வேங்கடவனார் முதலியோர் ஐயா அவர்களிடம் நூல் வெளியீட்

டிற்குத் துணையாகத் தொகை விடுத்திருந்தனர். மேலும் முன் வெளியீட்டுத் திட்டத்தின்படி தென்மொழி அன்புள்ளத்தினர் சிலரும் தொகை விடுத்திருந்தனர்.

கதிரச்சுக்கோப்பில் பணி விரைவுபடுத்தப் பெற்று 10.3.93 அன்று வெளியிட்டுவிடத் திட்டமிடப்பெற்றது. இவ்வாறு மும்முரமாகத் திட்டமிட்டுப் பணி முனைப்பில் இருந்தபோது 1993 சனவரி 26-ஆம் பக்கலில் 'தாடா'வில் ஐயா சிறைப்படுத்தப்பட்டார்கள். இந்த முறை சிறை ஐயாவிற்கு மன நைவையும், உடல் நலிவையும் ஏற்படுத்தியது. ஏழு திங்கள் சிறை வாழ்விற்குப் பின் வெளிவந்த பிறகு மீண்டும் திருக்குறளை வெளியிடும் பணியில் முனைந்தார். திருத்தத்திற்குப் பின் உரை நீண்டது.

இல்லறவியல் பகுதி வரை (240 குறள்களுக்கு மட்டும்) முழு நிறைவுபடுத்திவிட்டு முடிக்கும்போது அதைப் பற்றி ஐயா அவர்கள் நகைச்சுவையாகக் குறிப்பிட்டுப் பேசுகையில், "இல்லறவியல் வரையில் முடித்துவிட்டேன். இனி, துறவறவியல்தான் போக வேண்டும்" என்று கூறினார்கள். ஆனால் வாழ்க்கையையே துறப்பார் என்று அப்போது யாரும் எண்ணிப் பார்க்கவில்லை.

ஐயா அவர்களின் மறைவிற்குப் பின்னர், உயிர் முயற்சியான இந்நூலை வெளியிட வேண்டும் என்ற துடிப்பு அனைவரிடமும் இருந்தது. ஆனால் குறிப்புகள் ஒன்றும் விடுபடாமல் தொகுத்து வருவதற்குக் காலம் எடுத்துக்கொண்டது. முதல் நூறு திருக்குறளுக்கான உரை முதல் பகுதியை தி.பி.2028 (10-03-1997)-இல் முதல் பதிப்பாக வெளிக்கொணர்ந்தோம். அதன்பின் ஐயா அவர்களின் 73-ஆம் ஆண்டு நிறைவையொட்டி 2006-இல் இந்த முதல் பகுதியின் இரண்டாம் பதிப்பை வாங்குவோரின் சுமையைக் கருதி, பொதுமுன்னுரை, முதல்தொகுதி எனப்பிரித்துத் தனித்தனியாகவும் வெளிக்கொணர்ந் துள்ளோம்

ஐயா அவர்கள் இவ் வடிவங்களைப் பார்க்காமல் சென்றிருந்தாலும் அவர்கள் குறித்திருந்தபடியே பதிப்புரையைத் திருக்குறள்மணி புலவர் இறைக்குருவனார் அவர்களும் வெளியீட்டுரையை நானும், தகவுரையைச் சொல்லாய்வு அறிஞர் ப. அருளியார் அவர்களும் எழுத அவை இணைக்கப்பட்டுள்ளன. திரு. அருளியார் எழுதிய தகவுரையை ஐயா அவர்களே பார்க்க நேர்ந்தது.

முகப்பு அட்டைவடிவத்தை உருவாக்கிய எம் மகன் செல்வன் மா.பூ. தமிழ்மொய்ம்பனுக்கும் மற்றும் இந்த நூல்கள் உருவாகத் துணைநின்ற அனைத்து அன்பு நெஞ்சங்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# புதிப்புரை

திருக்குறள்மணி
**புலவர் இறைக்குருவனார்**

திருக்குறள், தான் தோன்றிய காலத்துக்கு முந்தைய நூல்களி னின்றும் பெரிதும் வேறுபட்டு விளங்கி நிற்கின்றது. அதற்குப் பின்னெழுந்த நூல்களிலெல்லாம் அதன் தாக்கம் தட்டுப்படுகின்றது. திருவள்ளுவரால் ஈர்க்கப்பெறாத அறிஞர்கள் எவரும் இருக்க முடியாது. குறட்பாவை மேற்கோள் காட்டுவதன் மூலம் தம் கருத்துக்கு வலிமை சேர்க்கவும் அதனைச் செல்லுபடியாக்வும் முற்படுபவர்கள் எண்ணறோர்!

திருக்குறளை வாழ்வியல் நூலாகக் கொண்டு! அதன்வழி வாழ்வாங்கு வாழ்ந்து சிறப்பதைவிட, இப்பெருநெறிக்குரியதான அதனை, முன்னரே கட்டமைக்கப்பட்டுத் தாம் சார்ந்திருக்கும் ஏதேனும் ஒரு நெறிக்கு உரியதாக ஆக்கிவிடவும், காட்டிக்கொள்ளவும் முயன்றவர்கள் மிகப்பலர். இம்முயற்சி ஒவ்வொரு காலக்கட்டத்திலும் தொடர்ந்து, இன்றளவும் நீடிப்பதால், ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் திருக்கு றளுக்குப் புதுப்புது விளக்கங்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. ஆயினும் அதன் மெய்ப்பொருள் இதுவெனத் தெளிவுப்டுத்தப்படாத நிலையே நீடிக்கிறது.

பல்துறை சார்ந்த சீரிய அறிவாற்றலாலும், பல்வேறு ஆய்வுகளாலும் பாவலரேறு ஐயா அவர்கள் திருக்குறள் தொடர்பாக மேற்கொண்ட அருமுயற்சியின் வெளிப்பாடே திருக்குறள் மெய்ப்பொருளுரை!

திருக்குறளுக்குப் பாவேந்தர் பாரதிதாசனார் உரை (வள்ளுவர் உள்ளம்) எழுதத் தொடங்கிய போது, 'பரிமேலழகர் உரையில் ஆங்காங்

குள்ள சிலசில நச்சுக் கருத்துகளை நீக்கிவிட்டால், அவ்வுரையே போதும்; நூல் முழுமைக்கும் புத்துரை எழுதத் தேவையில்லை' என்றும், மொழி ஞாயிறு பாவாணர் அவர்களின் உரை (தமிழ் மரபுரை) வெளிவந்தபோது பாவாணரின் தமிழ் மரபுரையே நிறைவானது; வேறு எவரும் திருக்குறளுக்கு உரைஎழுதத் தேவையில்லை, என்றும் கருத்துத் தெரிவித்த பாவலரேறு அவர்கள், உள்நாட்டுப் பாதுகாப்பு என்னும் கொடிய அடக்குமுறைக் கடுஞ்சட்டத்தின்கீழ்(MISA) ச்சிறைப்படுத்தப்பட்டிருந்தபோது, உடனிருந்த சிறையாளிகளின் வேண்டுகோட்கிணங்கி, அங்கு, வகுப்பு நடத்தும் பொருட்டுத் திருக்குறளை நுணுகி நோக்க முற்பட்டு, அதன் கருத்தாழத்தையும் பிற சிறப்பு நலங்களையும் கண்டு வியந்து, இதுகாறும் வெளிவந்த எவ்வுரையானும் பொந்திகையுறாத மனநிலைக்கு ஆளாகித் திருக்குறளுக்குத் தாமே ஒரு புத்துரை காணவும், அதன்வழித் தாங்கண்ட மெய்ப்பொருளை விரித்து விளக்கிக் காட்டவும் வேண்டும் என்று உள்ளங்கொண்டு முனைந்தார்கள்.

தொடர்ந்து கோனேரிப்பட்டி, அணைப்பட்டி, பவானி என்னும் இடங்களில் திருக்குறள் தொடர்பாக நடைபெற்ற கட்டூர்(Camp)நிகழ்ச்சிகளும் பிறவும் உரைகாணும் முயற்சிக்கு உரஞ்சேர்த்தன.

அடுத்து ஒடுக்குமுறைக் கொடுஞ்சட்டத்தின்கீழ் (TADA)ஐயா அவர்கள் சிறைப்படுத்தப்பட்டிருந்த காலத்தில் உரையெழுதும் பணி தொடர்ந்தது; மேலும் தொடரமுடியாத நிலைக்கும் அச் சிறைவாழ்வு அடிகோலியது.

பாவலரேறு அவர்கள் தம் வாழ்நாளில் இம் மெய்ப்பொருளுரைக்காக மேற்கொண்ட முயற்சியைப் போல் வேறு எதன் பொருட்டும், எந்நூலுக்கும் எடுத்துக்கொண்டதில்லை. இதனைத் தம் வாழ்நாட் பெரும்பணியாகவே கொண்டிருந்தார்கள். அவர்கள் இதற்காகச் செலவிட்ட நேரத்தில் நூறாசிரியமும், பாவியக்கொத்தும், ஐயையும் போல் எத்தனையோ இலக்கியங்களைப் படைத்திருக்கலாம்; கனிச்சாறும் பள்ளிப் பறவைகளும் போலும் பலப்பல பாடற்றொகுதிகளை வெளியிட்டிருக்கலாம். கற்பனை யூற்றுகளைப் பெருக்கியிருக்கலாம். உரைநடை ஆக்கங்களின் எண்ணிக்கையை உயர்த்தியிருக்கலாம்.

ஆனால், திருக்குறளின் அரும்பெருஞ் சிறப்புகளை ஆய்ந்துகண்டு அதிலேயே தோய்ந்துவிட்ட அவரது உள்ளம், பொய்யாமொழியின் மெய்ந் நெறியே தமிழினத்தை உய்விக்கும் தக்க பெருவழி என உறுதியாகக் கொண்டமையால் அதன் மெய்ப்பொருளுரை ஆக்கத்திலேயே இறுதிவரை முயன்றார்கள். அவர்கள்தம் இறுதிக் காலத்து உரைப் பொழிவுகளிலும் உரையாடல்களிலும் திருக்குறளும் மெய்ப்பொரு

ளுரையுமே மேலோங்கி நின்றன.

இனி, வந்தேறிகளான ஆரியச் சிற்றினத்தவரால், செந்தமிழ் மக்களின் பண்பட்ட வாழ்வியல் நிலைகள் பாழ்படத் தொடங்கிய நிலையில், அவ்விழிநிலையைத் தடுத்து நிறுத்தித் தமிழினத்தை உய்விக் கவே வாழ்வியல் நூலான திருக்குறளைத் திருவள்ளுவர் படைத்தார் என்னுங் கருத்தை இவ்வுரையின் முன்னுரையுள் பாவலரேறு ஐயா அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

திருவள்ளுவப் பெருந்தகை, அற்றைக் கழகப் புலவர்கள் போல் அரசர்களை நாடியும் பாடியும் பரிசில் வாழ்க்கை மேற்கொள்ளாமல் தன்மானத்துடன் வாழ்ந்து, மக்களுக்கான பொதுநிலையறம் உணர்த் தியுள்ள சிறப்பைப் பெரிதும் பாராட்டியிருப்பது, திருவள்ளுவரின் பெருமையை மட்டுமன்றிப் பாவலரேற்றின் பெருமித உள்ளத்தையும் புலப்படுத்துகின்றது.

திருக்குறளுக்கு உரைவகுத்த முற்கால பிற்கால உரையாசிரியர்களும் ஆராய்ச்சியாளர்களுமான பலர் வெளிப்படுத்தியுள்ள பொருந்தாக் கருத்துகளைச் சுட்டிக் காட்டிக் கண்டித்திருப்பதுடன், பாவலரேறு அவர்கள் அவற்றுக்குத் தாங்கண்ட மெய்ப்பொருளையும் தெளிவுபடுத்தி யுள்ளார். அன்றியும் ஆரிய நச்சுக் கருத்துகள் இவை; அருந்தமிழ் நற்கருத் துகள் இவையென வேறுபடுத்தி விளக்கியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

பெண்பாலார்க்கு மட்டுமே கற்பை வலியுறுத்தி ஆண்பாலார்க்கு அதனை வலியுறுத்தாதது மட்டுமன்றி, அவர்தம் பரத்தமை வாழ்வையேகூடப் பாராட்டிப் பாடும் முன்னை நிலைக்கு மாறாக, ஆண்பாலார்க்கும் திருவள்ளுவர் கற்பு நிலையை வலியுறுத்துகிறார் என்பதினை

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு

என்னுங் குறட்பாவின்வழிப் புலப்படுத்தியிருப்பதோடு, அதனை அறத்துப்பால்-இல்லறவியலில் எடுத்துரையாது, பொருட்பால்குடியியலில் கூறியதேன் என்பார்க்கு, உரையாசிரியர் பாவலரேறு தரும் விளக்கம் இம்மெய்ப்பொருளுரையின் சிறப்புக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கு கின்றது.

உரனென்னுந் தோட்டி, வரனென்னும் வைப்பு, வழியடைக்குங் கல், இயல்புடைய மூவர், எழுபிறப்பு என்பனவும் இன்ன பிறவுமான பலப்பல தொடர்கள் இம்மெய்ப்பொருளுரையில் புதுப்புது விளக்கங்

களைப் பெற்றுள்ளன.

கடின சந்திகள் பிரிக்கப்பட்ட நிலையில் மூலமும், பொருள்கோள் முறையமைப்பும், பொழிப்புரையும், சில விளக்கக்குறிப்புகளும் என அமைந்துள்ள மெய்ப்பொருளுரையில் நூற்றுக்கணக்கான நூல்களினின்றும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன; தருக்கமுறையில் கருத்துகளை வலியூட்டி நிற்கின்றன.

இனி, மனு முதலிய வடமொழி நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்பு எழுத்துஞ் சொல்லும் ஆகிய இருவகை நிலையிலும் கலவை நடையி லேயே இருந்தமையால், இவ்வுரையின்கண் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ள அந் நூற்பகுதிகள் அவற்றில் உள்ளவாறே ஈண்டு இடம்பெற் றுள்ளன. உரை மேன்மேலும் விரிவுபட்டுக்கொண்டே சென்றமையால், உரையாசிரியர் அம் மொழிபெயர்ப்பைத் தமிழ்ப்படுத்துவதில் நாட்டஞ் செலுத்த வாய்ப்பில்லாமல் போய்விட்டது. இப்போது அவற்றைத் தமிழ்ப் படுத்திப் பதிப்பிக்கலாம் எனினும் ஐயா அவர்கள் புகழுடல் எய்திவிட்ட நிலையில் இந்நூல் வெளிவருதலால் அவ்வாறு செய்ய விரும்பவில்லை. இது நிற்க!

இம் மெய்ப்பொருளுரை தொடர்ந்து நடந்து முற்றிய பின், இதன் மீதெழும் ஐயங்களைக் களைந்தும், விடுபாடுகளை விளக்கி நிறைத்தும், இன்னும் பல அரிய செய்திகளைக் கூட்டியும் நிறைவுரை யொன்று எழுதவும் எண்ணியிருந்தார்கள். ஆனால் அதற்கு வாய்ப்பில்லாமலே போய்விட்டது. பாயிரவியலும், இல்லறவியலும் எனும் ஈரியல் களிலுமுள்ள இருபத்து நான்கு அதிகாரங்களுக்கான உரையே நிறைவெய் தியுள்ளது.

இம் மெய்ப்பொருளுரை முதற்பகுதியில் 'உரையெழுத விழைந்த நோக்கமுஞ் சூழலும் உருவாக்கத் திட்டமும்' என்பது முதலான எழுபெருந் தலைப்புகளில், ஐயா அவர்கள் வரைந்துள்ள விரிவான முன்னுரையும், 'இனியவை கூறல்' ஈறான முதற் பத்து அதிகாரங் களுக்குரிய உரையுமே இடம்பெற்றுள்ளன.

'செய்ந்நன்றியறிதல்' முதலான ஏனைப் பதினான்கு அதிகாரங் களுக்கான உரை, இப் பேருரைக்கென ஐயா அவர்களால் தொகுக்கப் பெற்ற பன்னூறு குறிப்புகளையும் பின்னிணைப்பாகக் கொண்டு வெளிவரும்.

திருக்குறள் வரலாற்றில் ஒரு திருப்புமுனை முயற்சியான இம் மெய்ப்பொருளுரையைத் தமிழ்க்கூறு நல்லுலகம் தக்கவாறு பயன்கொள்ளுமென நம்புகிறோம்.

O

# தகவுரை

செஞ்சொற்கதிரவன், சொல்லாய்வறிஞர்

## ப. அருளி

துறைத்தலைவர்
தூய தமிழ்-- சொல்லாக்க அகரமுதலிகள் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர். 5

இருபதாம் நூற்றாண்டின் இறுதியெல்லையோரத்திற்கு மிக அருகில், இன்று நாம் உலவுகின்றோம்! அறிவியல் வளக்கொழிப்பின் உச்சவிளைவுகளையெல்லாம் ஒரு சேரத் துய்த்துத் திளைக்கும் உயரிய காலத்தில் மாந்தஇனமே உயிர்த்துக்கொண்டுள்ளது!

இங்குள்ள ஒரு சிற்றூரில் சிறிய கணிப்பொறியிற் பிணைப்புற்றுள்ள தட்டச்சுப்பொறியில் தட்டப்பெறும் மெல்லிய தட்டுகளை [நன்றாகக் கவனிக்கவேண்டும்! . . . . . . மெல்லிய தட்டு! . . . . . "தட்டு" - என்றுஞ் சொல்லக்கூடாது! . . . மெல்லிய தீண்டல்! அத் தீண்டலுங்கூட மெல்லியமகளிரின் மெல்லியவிரலின் வழியதான மெல்லிய தீண்டலாகத் தீண்டும் மீமெல்லிய தொடுகையாகவே இருக்கவேண்டும்! ஆங்கிலத்தில் - இத் தீண்டல் முறையை ("பெண்டின் தொடுகை" -) "Lady's touch" என்பர்! இன்னும் மிகுமென்மைப்படுமாறு ("தூவித் தொடுகை") - "Feather - touch" என்றவாறும் உரைப்பர்!] உலகின் ஏதாம் ஒரு மூலையிலுள்ள ஒரு சின்னஞ்சிறிய சிற்றூரில் உள்ள மற்றொரு கணிப்பொறியிலுங்கூட எழுத்துப்பதிவுகளைக் காணலாகும் அதற்குரிய படப்படிகளையே பெற்றுக்கொள்ளலாகும் காலம், இது! அத் தட்டுகை நிலையால் - உலகத்தின் நூற்றுக்கணக்கான மூலைமுடுக்குகளில் கோடிக்கணக்கான கணிப்பொறிகளின் வழி அதற்குரிய பதிவுகளைப் பெற்றுக்கொள்ள விரும்பினாலுங் கூட

அதுவும் மிக எளிதே இயலுவதாகிய கணிப்பொறி நிறை காலக்கட்டத்தில் நாம் வாழுகின்றோம்!

அத்தொடு மட்டுமன்று! . . . அமெரிக்க நாட்டின் ஓரிடத்தில் இருந்துகொண்டு, ஆங்கிலத்தில் பேசினால் - சப்பான் நாட்டின் ஒரு கணிப்பொறி முன்ன ர் அதற்குரிய மொழிபெயர்ப்பையே இன்னொருவர் கேட்கலாம்! அப் பேச்சின் மொழிபெயர்ப்பையே எழுத்துப் பதிவாகவும் பெறலாம்! உலகத்தின் ஒரு மூலையில் எவரோ ஒருவர் பேசுவதையே - பிறிதொருமூலையில் வாழும் நம்முன் எழுத்துருவிற் பார்வைக்குட்படுத்தலாகும் கருவிகள் குவிந்துகிடக்கும் பரும்பயன் நிறைந்துள்ள பாரிய அறிவுவளக்காலத்தில் நாம் வாழுகின்றோம்!

ஈராயிரம் ஆண்டுகளுக்கும் முன்னர் - இத் தமிழகத்தில் எழுதுவதற்கு உரிய வசதிப்பாடு எவ்வாறு இருந்திருக்கும்?! . . . . சற்று எண்ணிப்பாருங்கள்! . . . . முற்ற முற்றி முதிர்ந்ததாகத் தெரிந்து பறித்த பனையோலையே - தாள்! . . . இரும்புக் கூராணியே - எழுதுவதற்குரிய மாழைக் குச்சி! . . அதுவே, எழுத்தாணி! இரண்டு மட்டுந்தாம் - அன்றைய எழுதுபொருள்கள்! தூரிகையைக் கொண்டு துணியில் எழுதுவதோ, அன்று மிகமிக அரிதாயிருந்திருக்கும்! அதுவும், அரசுச்சார்புச் செய்திகளுக்கோ- தூதுச்செலவு நிலைகளுக்கோ ஓரொருகால் பயன்படுத்தங் கொண்டிருக்கலாம்! எழுதுவதற்குப் பயன்படுபொருள்களாயிருந்த ஓலை - ஆணி என்னும் ஈரெழுது பொருள்களைக் கொண்டுதாம் - நூல்கள் யாவும் எழுதப்பெற்றன! படியெடுக்கப்பெற்றன! அவைதாம் படிக்கவெனப் பயன்பரப்பின! [ஓலைகளின் தொகுதிக்குரிய பெயர்தான் - சுவடி என்பது! பொத்திய (சேர்த்துத் தொகுத்த) எழுத்தேட்டுக் கற்றையாகிய தொகுதியே, பொத்தகம் என்பது! அப் பொத்தகமே - இன்று புத்தகம் ஆனது! நுண்மையான அறிவுக் கருத்துகளடங்கிய பொத்தகமே சுவடியே - "நூல்" என்று, நுவலப்பெற்றது! (ஒ.நோ: "நுண்ணிய நூல் . . ." (307) ( நுல்> நுண்> நுண்+மை> நுண்மை. நுல் > நூல் . ]

இந் நூல்களையெல்லாம் அன்று தோற்றுவதற்கு - நம் புலவர் பெருமக்கள் எவ்வளவு அரும்பாடு நிகழ்த்தியிருக்க வேண்டும்?! . . . . ஆயிரமாயிரமாகத் தோற்றங்கொண்ட அன்றைய அரும்பெரு நூல்களெல்லாம் இன்று எங்கே? கடைக்கழக நூல்களாகத் தப்பிநின்று நமக்கு இன்றைக்குப் பயன்படுகின்ற - நம்மை நாம் மீட்டுக்கொள்ளுவதற்குரிய வகையில் உள்ளீடான வரலாற்று

*நிலைகளைப் படிபதித்துக் காத்துவைத்துள்ள பத்துப்பாட்டும் - எட்டுத் தொகையும் - பதினெண் கீழ்க்கணக்குள் சிலவும் ஆகிய யாவும் - நம் கையகத்தின் ஒரேயொரு பிடிக்குள்ளேயே அடங்கும் அளவின!!.. இவையன்ன ஆயிரமாயிரமடங்கு அளவினவாக - அக்கால் உருவாக்கப் பெற்றிருந்த அரிய அக் கருத்துமணிக் கருவூலங்கள் இன்று எங்கே?! . . . நுண்மாண் நுழைபுலத்தில் விளைந்து முற்றிய அந் நெற்று நூன்மணிகள் இன்று எங்கே?!. . . .*

*". . . . . . தமிழரின் பேதைமையினால் , பாழான மண்ணிற்கும் - படியாதார் நெருப்பிற்கும் - பதினெட்டாம் பெருக்கிற்கும் - படையான சிதலுக்கும் - பற்பல பூச்சிக்கும் - பகைவரின் சூழ்ச்சிக்கும் இரையான தமிழ்நூல்கள், எத்துணை எத்துணையோ!. . . "– என்றவாறு ஓரிடத்து அலமரலுற்று அயர்ந்தவாறு அரற்றுவார், - நம் செந்தமிழ்ப்பாவாணர் அவர்கள்! நாம் குன்றிருந்த அன்றிருந்து நம்மோடு நம்மவராகக் கலந்துறைவதுபோற் கரந்துறைந்தே வந்த கயவர்களான பார்ப்பனர்கள் - அன்றைய அரசர்கள் துணைக்கொண்டு - தமிழையும் - தமிழினமானத்தையும் எவ்வெவ் விடங்களிலெல்லாந் தட்ட வேண்டுமெனக் கருதினார்களோ - அவ்வவ்விடங்களிலெல்லாம் விடாது தட்டித் தொடர்வாராயினர்! (அன்று, அரசரைத் தட்டிக்கொடுத்துத் தட்டினர்! இன்று, அமைச்சரைத் தட்டிக்கொடுத்துத் தட்டுகின்றனர்! அத்தோடு, அமைச்சராகவே ஆகிநின்று ஆகுலத்தோடு தட்டுகின்றனர்! நம்மவர் யாவரும் தட்டுக்கெட்டுத் தடுமாறி இடம்மாறி ஏமாறி இடர்ப்பட்டவாறே கிடக்கின்றவராயினர்;!) அதற்கும் முன்னீடாகக் - கடலுங்கூட, நம்மினத்தின் மூலவர்களையும் மூலங்களில் பலவற்றையும் வேண்டியமட்டுந் தாண்டிவந்து உட்கொண்டு ஒலியார்த்தது! இம் மரபுவழிச் செய்தியை - "வாரணம் கொண்டது-அந்தோ! வழிவழிப் பெயரும் மாளா!" என்றவாறு வரும் பழைய பழம்பாட்டொன்றும் பதிவு காட்டும்! . . . . நினைக்க - நினைக்க, நம் நெஞ்சகங்களில் குமுறல்களும் - அவலவுணர்வின் கொப்புளிப்புகளும் - பொருமல்களும் செறுமுகின்றன!*

*இயற்கைச் சீற்றங்களாலும், கூற்றன்னாராகிய மாற்றாரின் கொடுஞ் சூழ்ச்சிகள் தோற்றிய மாற்றங்களாலும் நாம் இழந்தும் இழிந்தும் சுழிந்தும் நிற்கும் நிலைகளினும், - நம் தமிழ முன்னோர் தாம் கொண்டு பேணிய பேணாமைப்பண்பால் நெகிழ்த்தனவும் நீத்தனவுமான நிலைகளே மிகப் பேராளமாகுவன! (இவ் இடைக்காலத் தமிழரின் எள்ளத்தகும் அப்போக்கை –" யாதொன்றும் பேணாமை" (833) என்னும் சொற்றொடர்*

வழியே தொட்டுக்காட்டிக் குட்டினார், - நம் திருவள்ளுவர் பெருமான்!

பனையோலையையும் எழுத்தாணியையுங் கொண்டே, - தாம் பெற்ற பட்டறிவுகளையும் வரலாற்றுமூலங்களையும் கொண்ட இலக்கியங்களை ஈன்றெடுத்த பண்டைய ஆற்றல் ஒள்ளியர்களாகிய நம் அருந்தமிழ்ப் புலவர்கள் - தாம் பதித்த எழுத்துருக்களை இயன்ற அளவில் உருச்சுருக்கமாகவே யாத்தளிப்பாராயினர்! அவற்றிற் பெரும்பான்மையையும் பாவடிவங்களாகவே படைப்பாராயினர்! பாக்களை இடைவைத்த குறிப்பு உரை - பாக்களேயின்றி அமையும் கிளவியுரை - பொருள்மரபில்லாப் பொய்ம்மொழியுரை - பொருளொடு புணர்ந்த நகைமொழியுரை ஆகியவாறான நான்முறை உரைவகைகள் (தொல். பொருள். 8: 166) உரையாட்டு வகையிலும், - காண்டிகை, உரை என்னும் இருவகையினவான மரபுவழிப்பட்ட சிறப்பு உரைமுறைகள் நூல் விளக்கவுரை வகையிலும் ( தொல். பொருள்: 9: 103, 105) தொல்காப்பியர் காலத்திலும் - அதற்கும் முன்னீடாகவும் பயின்று வந்த பழைமையனவேனும் - அன்றிருந்த பாப்பெருக்க அளவின் முன்னர் - அவை அளவில் மிகக் குறைந்தனவாகவே குன்றியிருந்தன!

பிறமொழி ஒன்றிலமைந்திருந்த அரிய செய்திகளை - கருத்துகளை முறைப்பெற மொழிபெயர்க்கும் அருவினை கூட - அன்றைய தமிழகத்தில் ஆர்ந்த வழக்கமே! (காண்க: "மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்" (தொல். பொருள் - மரபியல்: 99: 1-2). எனினும் - அன்றைய பாவிளைவுகளின் பரப்பெதிரில் - இவற்றின் விளைவு குற்றளவினதாகவே நிற்றலுற்றது! பின், அற்றை அவ்விளைவெலாம் முற்றும் - இற்றும் அற்றும், இற்றைக்கு ஒற்றைப்பதிவேடும் உற்றிலோமாயினோம்! . . . . .

எழுதுபொருள் வசதிப்பாட்டுக் குறையே - அன்றைய உரைநலக் கொழுமைகள் நிறைவளவிற் பதிவெய்தாக்குறைக்கு ஒரு பெருங் காரணமாயிற்று! இது காரணமாகச், சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் செந்திறப்போக்கும் அன்றைய நம் கல்விமுறையில் வளர்ந்து செழிப்புறுவதாயிற்று! இலக்கிய வெளிப்பாட்டிலும் - இலக்கண வரையறுப்பாக்கத்திலும் கடைப்பிடிக்க வேண்டிய இலக்கணப்போக்குகளாகவே - "சுருங்கச்சொல்லல்," விளங்கவைத்தல்" ஆகியன இலங்கின!

உரையாக மொழிவதைக்கூட, - சுருக்கமாகவே - அதுவும் சில

சொற்களிலேயே கருத்துரையாடிக் கொள்ள வேண்டும் என்றவாறான கருத்துப்போக்கும் அறிஞர்கள் நடுவில் அமைந்திருந்தமையை திருவள்ளுவர் பெருந்தகையின் வாயுரையாலும் அறியலாகும்! ( காண்க: "பல சொல்லக் காமுறுவர் மன்ற, மாசற்ற - சில சொல்லல் தேற்றா தவர்" (649)). "தெளிவுடைய அறிவரே - சில சொற்களிலேயே திறம்பெறச் சொல்லி முடிக்கும் ஆற்றலார்ந்தவராவார்" என்னும் கருத்தும் இதன் உட்கிடையாகும். ஆக, அன்றைய அறிவுலகப் போக்கில் - எதனையும் அகலிதாகச் செய்யும் முறையே முற்றுந் தவிர்ப்புற்றது! அதற்கான உச்சநிலைச் சான்றைக் குறளமைப்பாலும் அறியலாகும்!

நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும் எண்மையும் (எளிமையும்) என்றிவ்வாறான கூறுகள் கொண்டதாகி, நன்கு தெளிய விளங்கும் தோற்ற நிலையோடேயே அறிவுவெளிப்பாடு அமைந்திலங்க வேண்டும் என்பது - அக்கால அறிவர்க்கு உட்கிடையாகிக் கிடந்த ஓர் உணர்வு! அவ்வுட்கிடை, வெளிப்படை கொண்டுள்ள உண்மையைத் தொல்காப்பிய இலக்கண வரைவுக்குள்ளும் உறைவு கொண்டுள்ளமையைக் காணலாகும்! ( ஓ.நோ: தொல். பொருள். செய்யுள்: 170)

கருத்துச் சாறமாக யாத்தளிக்கப்பெற்ற அறிவுச்செய்தி மூலத்திற்குரிய பொருட்பாடு அறியவிரும்புவார் எவரும், - அதற்குரிய மூலவிளக்கங்களை முன்னரே ஆரக் கேட்டும் - விண்டு விளங்கியும் அறிவறிந்தவராகிய புலவர் பெருமக்களிடமே கேட்டு விளங்கிக் கொள்ளுவதாகிய பாடமுறை - அன்றைக்கு இருந்தது! கேள்வி என்பது, கேட்டுத் தெரிந்து கொள்ளும் முறை! அதற்கெனத் திருவள்ளுவர் பெருமகன் தனியதிகாரமொன்றையே வகுத்தளித்துள்ள நிலையால் - இதன் அன்றைய இன்றியமையாமையையும் உணரலாம்! ஈண்டிய கேள்வியராகவும் (417), கேள்வியால் தோட்கப்பட்ட செவியினையுடையாராகவும்(418), நுணங்கிய கேள்வியராகவும் இயங்கும் பான்மையரே - அறிவுந் தெளிவும் ஆர்ந்தவராக அக்கால் திகழமுடியும் என்னும்படியான குமுகச்சூழலே - உரிய விளக்கவுரை நூல்களின்மை காரணமாக அமைந்திருந்தது! அதற்கு அடிப்படை, உரிய எழுதுபொருள் வசதி வாய்ப்பின்மைக் குறையே!

தேவையான பெரும்பாலான விளக்கங்களையும் அறிஞர் பெருமக்களிடமே நேரிற்சென்று, அவர் வாய்வழியேதாம் அன்றைய நிலையில் கேட்டுக்கொள்ள முடிந்தது! உரைகளை எழுத

முளைந்துவிட்ட தேவைக்காலத்திலும் - இவ் எழுதுபொருள் வசதிப்பாட்டுக்குறை இருந்தகாரணத்தால்தான் - அவ்வுரையுரைப்பின் இடையிடையிலான பல்லிடங்களிலும், “விரிப்பின் பெருகும்” - “விரிவஞ்சி விடுத்தாம்!” “வல்லார்வாய்க் கேட்டுணர்க!” - “வந்தவழிக் காண்க!” என்றவாறெல்லாம் உரையாசிரியர்கள் துள்ளிக்குதித்துச் செல்லவேண்டியிருந்தது!

உரிய விளக்கங் குறித்து மாணாக்கர் வினாத் தொடுக்கையில் - தமக்கே விளங்கா நின்ற கருத்து மயக்கங்களைத் தமக்கு முன்னர் இருந்த அம்மாணாக்கர் உணர்ந்துகொண்டு குறைவாக மதிப்பிட்டுத் தாழ்வாகக் கருத இடந்தந்துவிடக்கூடாது என்பதற்காகத் தான் - ஆசான்மார்இனமே தப்பித்துக்கொள்ள வழிசெய்யும் போக்கு முறைக்கு ஒத்த காப்பு வகையுளொன்றாக - “ஆணைகூறல்” (இது - இப்படித்தான்! நான் சொல்கிறேன்! அதற்கும் மேல் கேள்வியே வேண்டா! - என்றவாறான போக்கில், “இது என் ஆணை” - என்னுதல்.) என்னும் உத்தியும் தோற்றுவிக்கப்பெற்றது! ( காண்க : “முடிந்தது காட்டல், ஆணைகூறல்” தொல். பொருள்: 9: 112: 15), இவ்வுத்தியும் - அனைவரும் விளங்க விளங்கிக் கொள்ளும் போக்குக்கு வசதியான உரிய விளக்கவுரை நூல்கள் ( தக்க எழுது பொருள்களின்மைக் குறை காரணமாக-) அன்றிலவாயிருந்தமையால் - இலக்கணத்திடையில் நுழைத்துத்தீரவேண்டிய தேவையாகவே அன்றிருந்தது!

தமிழரின் வாழ்க்கையுள் அயலவர்கள் - (மிகக் குறிப்பாகவும் தெளிவாகவும் வெளிப்படையாகவும் சொல்வதானால்) - ஆரியப் பார்ப்பனர்களாகிய அயலவர்கள் நுழையத் தொடங்கியதிலிருந்து - தமிழ்க்குடி தடுமாறத் தொடங்கியது! பார்ப்பான் வந்ததும் அவனின் - அவர்களின் வெண்ணிறத் தோலுக்கும் - உரப்பொலி ஓசைக்கும் பணிந்திசைந்து நின்ற நம் மன்னர் மரபினர் - தமிழ்மானங்கெட்டுத் தகவிழந்திழிந்தனர்! கி.பி. மூன்றாம்நூற்றாண்டுக்குப் பின்னர்த் - தமிழகத்தின் ஒட்டுமொத்தச் சூழலே மோசமெய்தி நசிவுறலாயிற்று! ஆறாம் நூற்றாண்டையடுத்து - இம் மண்ணில் - (இத் தமிழ மண்ணில்) மன்னர்களாக அரசாண்டு வந்த அரகேசரி மாறவர்மன் - குமாராங்குசன் - பாண்டியன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் பரச் சக்ர கோலாகலன் - விஜயாலயன் - வரகுணவர்மன் - ஆதித்தன் - ஜடில பராந்தகன் - பாஸ்கரவர்மன் ஆகிய சிலரின் பெயர்களைப் பார்த்தாலே - ஆரியப்பார்ப்பனர் இவர்களின் ஆட்சிகளுக்கிடையே எத்துணையளவுக்கு ஆட்டம் - பாட்டங்களையும் நடக்

கொட்டங்களையும் நடத்தி ஆண்டவராயிருந்துள்ளனர் என்பதுவும் நமக்குத் தெளிய விளங்குகின்றது!

[ களப்பிரர், பல்லவர் முதலிய அயன்மாக்களும் இப் பசும்புற் பைந்தமிழகத்தில் நன்கு மேய்ந்து பசியாறின! கடந்த நான்கு நூற்றாண்டுகளிடையில் - போர்த்துக்கீசியர், தச்சுக்காரர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலேயர் முதலிய அயல் - ஆக்களும் இங்குப் புல்லும் வைக்கோலும் தழையும் தண்ணீரும் ஆரவுண்டு, தத்தம் சிறு நீரங்களையும் இம் மண்ணில் சிறக்கச் சொரிந்து கொண்டே - தத்தம் கொழுமடிகளிற் சுரந்த பாலை மட்டும் - தத்தம் சொந்த நாடுகளில் மட்டுமே பாய்ச்சிக் கொண்டு நின்றவாறிருந்து - பின் சென்ற அண்மைக்கால அவலக்கதைகளும் நமக்குப் பசிய நினைவுகளாகவே இன்றும் இருக்கின்றன! இன்றும் - நம் பசுமை விளைவுகளை வடமாடுகளும் வடவாக்களும் விடாது மேய்ந்து வயிறார உண்டுகொண்டு - நமக்கென நிறைய சாணத்திரளைகளாகவே சரித்துச் சாய்க்கின்றன! [ நாமோ - “சாணம் நல்லது தானே!” என்றவாறாக ஒருமை - ஒருமைப்பாடு பேசிப் பேசிப் பூசி மெழுகிக் கொண்டே நயந்திழிந்து கொண்டே புரண்டு கிடக்கின்றோம்! . . . . . ஏமாற்று இதுவென நோகின்றோம் அல்லோம்! ஏய்ப்பு இதுவென வேகின்றோமா? . . . அதுவும் அல்லோம்! . . . ] அன்றிருந்து இன்றுவரை நம் பாடு - தொடர் பாடுதான்! நாம் இழிகதையோ, இன்னும் தொடர்கதைதான்!]

இவ் இழிகதையின் நனிமுது தொடக்கத்தை நன்கு உற்று உள்நோக்கிய உயராசான் - திருவள்ளுவர்பெருந்தகை, அக் காலவட்டத்தில் வதிந்து கோலோச்சிய மன்னர்களுக்குப் புகழ்பாடிகளாயிருந்துழன்ற மற்றைய புலமக்கள்போன்று - தாமும் உழலாதவராய், - அன்று ஆரியச் சூழ்வழுத்தத் தாக்கத்தால் உழன்று நெளிந்த நந்தமிழ்க் குமுகத்தை மீட்டு நிலைநிறுத்தி மீண்டும் செழிப்புக்குள்ளாக்க வேண்டும் என்னும் அருளுள்ளத்தவராய் மக்கட்பற்றோடு யாத்தளித்த மாபெரும் அறநூல் - இத் **“திருக்குறள்”** என்னும் மறைநூல் ஆகும்.

இளங்கோவடிகள், சீத்தலைச்சாத்தனார் முதலிய பெரும்புலமை சான்ற ஆக்கத்தர்கள், இதனைப் பயன்கொண்டிருக்கும் சான்றிடங்களை உற்று உள்நோக்குகையில், - இம் மறைநூலானது அக்கால வட்டத்திலேயே பெருஞ்செல்சொல் (செல்வாக்கு) பெற்றுச் சிறப்பிடம் பெற்றிருந்தமையும் நன்கு புலனாகின்றது! இதற்கும் பின்னீடாகத்

தோற்றப்பெற்ற நூற்றுக்கும் மேற்பட்ட தமிழிலக்கியங்களில், திருக்குறளில் பதிந்துள்ள கருத்துக்களிற் பல பரவலாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன! ஆயினும், இஃது இற்றைக்குத் தெரிவுறும் பெருநிலையில் - அது தோற்றங்கொண்ட காலத்தினின்று இத்தகைய பரவலுற்ற பெருமதிப்பைப் பெற்றிருக்கவில்லை! தொடர்ந்த சிதைவுகளை நம் இனமும் மொழியும் பெற்றவாறே யிருந்தன! எழுச்சியும் உணர்ச்சியும் விழிச்சியுமற்று - வீழ்ச்சியிலேயே சரிந்து சாய்ந்து கொண்டிருந்த தொடர்வரலாற்றையே நம்மினம் பதிவு செய்து கொண்டிருந்தது! இன்னும் எழவேயில்லை! . . . . .

எக் காரணத்திற்கெனத் திருவள்ளுவர்பெருமான் இந்நூலை யாத்தளித்தனரோ - அதற்குரிய கரு பற்றிய சிந்தனையோட்டமே நம் மக்களின் நெஞ்சப்பையுள் முறையுற இன்னும் பாயவில்லை; படியவில்லை! முறைப்படப் படியாமையாலும் - அனைவர்க்கும் தெளிவுறுத்தத் தக்கவகையில் உரிய திறம்பெற அவை இன்னும் விளக்கப்படாமையாலும் - விளங்கிய சிலவரும் முற்றக் கடைப் பிடியாதிருந்தமையாலும் - இந்நூலும் அப்படியே - இருந்தபடியே இருந்து கொண்டிருந்தது! அல்லவை தேயாவாயிருக்கையில் எப்படி அறம் பெருகும்? அல்லவை தேய வேண்டுமானால், நல்லவை நல்லோரால் நன்கு ஆராய்ந்துணரப்பெற்று - அவை இனிய வகைமுறையில் மக்களிடம் பரப்பப்பெற வேண்டுமே! நல்லோர் சிலவர் உணர்ந்தறிகின்றனரெனினும் - அவர் மக்கட்பற்றும் பொதுத்தொண்டுணர்வும் மக்கட்பண்பும் வாயாதவராகவே பெரும்பாலரும் உள்ளனராதலால் - இம் மண்ணில் உரிய வினை விதைகள் வித்தப்பெறவில்லை! எனவே, விளைவுகளுமில!

இதுகாறும், திருக்குறளைக் குறித்து - எண்ணிக்கையில் ஆயிரத்தை எட்டும்படி, நூல்கள் வெளிவந்துள்ளன! அவற்றில் இருபது விழுக்காட்டளவுக்குக் குறளுக்குப் பொருளுரைக்க வந்த உரைநூல்களே உள! திரும்பத் திரும்ப அச்சுத்தேரில் அவை ஊர்ந்து ஊர்ந்து ஆயிரமாயிரமாய் உருப்படிகளாகின்றன!· ஆங்காங்கும் பரப்பவும் பெறுகின்றன! இரண்டு நூற்றாண்டுகளாய் இந்நிலை தொடர்கின்றது!

கடைக்கழகக் காலத்திற்குப் பிறகு - நெடும்படுக்கையில் நெடுகலுங்கிடந்த நெற்றிலக்கிய - முற்றிலக்கண நூல்களையெல்லாம் மீண்டும் பயில வேண்டும் என்றவாறு பரவலாகிய ஓர் உந்தெழுச்சி - கி.பி. பத்தாம் நூற்றாண்டளவில் முளைவிட்டுத் தளிர்கொண்டது!

இக்காலத்திடையில் வாழ்ந்து வந்த தமிழறிஞர்பெருமக்களிடம் திருக்குறளுக்குத் தனிமதிப்பு ஏற்படலாயிற்று! உரையாசிரியர்கள் உழைப்பெடுக்கத் தொடங்கினர்! ஏறக்குறைய நானூறாண்டுக்காலம் இந்நிலையில் வளங்கொழிக்கலாயிற்று! கி.பி. பத்தாம் நூற்றாண்டினின்று - பதினைந்தாம்நூற்றாண்டு வரையிலான உரைவெளிப்பாட்டுக்காலம் தமிழ்வளர்ச்சிவரலாற்றில் ஒரு பொற்காலமாகவே கருதத்தக்கது. இலக்கிய இலக்கண நூல்களுக்குக் கட்டாயமாக உரைகள் தேவையாயினமைக்கு - ஆயிரம் ஆண்டுக் கால இடைவெளிக்குள் தமிழின் மொழிநடையிலும், அதன் மரபுக் பொருள்கோள்முறை வகையிலும் கனத்த அளவில் நேர்ந்திருந்த நொய்வுந்தொய்வுங் கொண்ட மயக்கநிலைப் போக்கே காரணமாயிருந்தது!

பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தவராகக் கொள்ளத்தகும் பரிமேலழகர்க்கும் முன்னர், - தொண்மர் (ஒன்பதின்மர் - 9) திருக்குறளுக்கு உரைகண்டு காட்டினர்! (அத் தொண்மர் உரைகளுள்ளும், மணக்குடவர் (மணக்குடியர்; தேவர்), பரிதி, பரிப்பெருமாள், காலிங்கர் (காளிங்கர்) ஆகிய நால்வர் உரைகளே நமக்கின்று கிடைப்பன!)

அத் தொண்மர் உரையிற் பெரும்பாலனவற்றை உறுத்து உள்நோக்கி உட்கொண்டார், பரிமேலழகர்! இத் தோய்வு உண்மையை, 133 இடங்களில் - அவர் பிறர் உரைகளைச் சுட்டிச் செல்வதனுள் அறியலாகும். 48 இடங்களில் பாடவேறுபாடுகள் பற்றிய முடிபுக் கருத்துரைத்துள்ள நிலைகளை உற்றுக்காணுகையில், - பல்வேறு மூல ஏடுகளை இதற்கென அவர் முயன்று பெற்றுத் தொகுபடச் சேர்த்து - அவற்றை வகையுற ஆய்ந்துள்ள திறவுழைப்புந் தெரிவுறுகின்றது! கழக இலக்கியங்களிற் பெரும்பான்மையன, அவர்க்கு அற்றுப்படி! காப்பியங்களிலோ, அவர் மூப்பறிவர்! அக்காலச் சமயநூல்களில் அவர் ஆழ்ந்து திளைத்தவர்! இலக்கண நூல்களை ஏற்றமுறக் கற்றவர்! கீழ்க்கணக்கு நூல்களின் ஆழ்வனப்பில் ஆழ்ந்து எழுந்தவர்! அவருரையிடையில், மிகப் பலவேறு நூல்களினின்றெடுத்துக் கோத்து நிறைத்துக் கொட்டியுள்ள, 230 மேற்கோள்களிலெல்லாம் இத் தகுதிறங்கள் வெளிப்பட்டொளிர்கின்றன! அக் காலவட்டத்தில் அரியனவாயிருந்த சொற்களுக்கு 286 இடங்களில் அரும்பொருள் விளக்க விதைகளை விதைத்துள்ள உரைப்புலங் காண்கையில் நமக்கு வியப்பே மேலிடுகின்றது! வடமொழியில் அமைந்துள்ள பலதுறை நூல்களிலும் அவருக்குப் பரந்துபட்ட புலத்தோய்விருந்தமையை, உரியவாக அவர் எண்ணியவிடங்களிலெல்லாம் உரையிடங்களிடையில் இயைத்துக்

காட்டியுள்ளமையிற் காணலாகும். முறைவைப்புக்கு இயைபு காட்டுந்திறத்திலுங்கூட, ஒருவகைச் சமர்த்தையே திறம்பெறக் காட்டிநின்ற அழகும் உரைக்கோப்பிடையில் தெரிகின்றது!

அவர்க்கும் முன்னீடாகவிருந்து இன்று நமக்குக் கிடைக்கும் நான்கு உரைகளையும் அவருரையையும் ஒப்பவைத்துப் பொதுப்பட நோக்குமிடத்து - நமக்குப் புலனாகும் முதல் உண்மை, - " பரிமேலழகர் உரை" முன்னைய யாவற்றையும்விடப் பருமையுடையது, என்பதே! தொடக்கத் தோற்றுவாயாகச் சிறப்புரை கூறல் - அதிகாரத் தோற்றுவாய் செய்து அதற்குரிய இயைபு சுட்டல் - பொருள் விளக்கம் நிறைத்தற்கென அவாய்நிலை வருவித்து நிறுத்தல் - கூர்த்த இலக்கணச் செய்திகளின் அடிப்படையில் பிறர் உரைகளை மறுத்துத் தனாஅது நிறுத்தல் - உரிய இடங்களுக்கேற்ப உவமைகளாகப் பல கூறி அவற்றைப் பலபடிகளாக விளக்கிச்செல்லல் ஆகியன இவருரையிற் காணப்பெறும் பெருஞ்சிறப்புக் கூறுகள்! அக்காலப் புலவர்களே மலைக்கவும் வியக்கவுமாக அவருரை அன்றைய நிலையில் அமைவிலங்கியது! இவையனைத்துக்கும் மேலாக, அவர் ஒரு பார்ப்பனர்! . . . [ பார்ப்பானுக்கு நம்மவர் நடுவில் எப்போதும் ஒரு தனிஇமதிப்பு!. . .] . (ஆரியப் பார்ப்பனர் மனம் நோகும்படியான எச்செயலையும் அரசரே செய்ய முடியாது - செய்யக்கூடாது என்னும்படியான ஒரு தனி மதிப்பு நிலை - ஈராயிரம் ஆண்டுகளுக்கும் முற்பாடேயே, இம் மண்ணில் மன்னியிருந்தது! (ஒ.நோ: புறம்: 43:13-14). அத்தொடு மட்டுமன்று; பார்ப்பனர்க்குப் பணிந்தவாறுதான் மன்னனே நடந்துவந்தான்: (ஒ.நோ: பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே ! (பதிற்றுப்பத்து:63:1)

[ உமாபதி சிவாசாரியார் என்னும் பெயரிய புலவர்ஒருவர் (கி. பி: 1313) தமிழிற் சிறப்புற வெளிப் போந்துள்ளனவாகப் பட்டியலிட்ட ஆறுநூல்களுள் - இரண்டிவையென்றவாறு திருக்குறளையும் - அதற்கெனப் பரிமேலழகர் செய்த உரையையும் இணைத்தகுதி பெறுமளவிற் குறித்தெழுதிய பழைய வெண்பா ஒன்று, அக் காலப் புலவர்பெருமக்களிடையே ஒரு திருதிரு மருட்சியையும் - ஒரு தனிஇ மதிப்பச்சத்தையும் ஏற்படுத்தியதோடு, அவருரை பற்றி அளவற்ற மீமதிப்பீட்டுக்குமான உரத்தையுந் தந்து நின்றதாயிற்று என்னும் உண்மையும் - இவ்விடத்திற் கருதத்தக்கதாகும்! அவர் - ஓர் ஒக முனிவரென்றும் - அவ்வோகத்தில் ஊழ்க வயத்தாழ்ந்து ஒவ்வொன்றாக உன்னியுன்னிக் கண்டறிந்த ஒப்புயர்வற்ற கருத்து மணிகள் - இவையென்னுமாறுபோலப் பல்வேறு கட்டுக் கற்பனைக் கதைகளும் - அக்கால மேம்போக்குக் கல்விமான்களிடம் பரிமாற்றங்

கொண்டிருந்தன! பரிமேலழகர், பரிமேலுக்கும் மேலாகி விரிவிசும்பேறிய கதை - இப்படிப்பட்டதே!]

வடமொழியிலுள்ள பல்துறை நூல்களையும் ஆழ்ந்து கற்ற வடமொழிப்புலமைசான்ற அவர் - தேவையற்ற இடங்களிலெலாங்கூடத், தம் அறிவகலம்(!) பிறர்க்கு விளங்குமாறு - அவற்றை ( அவ்வடமொழி நூற் செய்திகளை) இடையிடையிடுக்கில் நுழைத்து நிறுத்தியுள்ளமையால் - அன்று வடமொழிமயக்கந் தெளிவுறாதிருந்தவராகிய நம்மவர் - ஒருவகை அறிவுமதிப்போடேயே அவ்வுரையைப் போற்றிக் கற்பாராயினர்!

அவர் பார்ப்பனராக இருந்தமையால் - அவர் உரையானது அதன் உண்மைமதிப்புக்கும் மேலாக, ஓராயிரம் மடங்கு உயர்த்தித் தூக்கப் பெற்றது! பார்ப்பனரும் தூக்கினர்; பார்ப்பனரைத் தூக்கித் தூக்கியே தோளுஞ் சுவலுந் தொய்வடைந்தவராகிய நந்தமிழரும் தூங்கியவாறே தூக்கினர்! இவ்வாறு, - தூக்கு தூக்கென்று தூக்கி - அவருரைக்கு நிகருரையே இல்லை என்றவாறான ஒரு நிலையையும் இம் மண்ணில் கருத்தேற்றி, அதனை நிலவுவிப்பாருமாயினர்! பாரித்துரைக்கப் பெற்றுள்ள அக் கரவுரைக்கும் மேலாகத் - தமிழ்மான மீட்புக்கான உயரிய ஒரு பேருரையைச் செய்யவேண்டும் என்னும் வேட்கையும் - அறிவுமதுகையும் - முயற்சிப்பாடும் ஆழ்ந்த அடிமையுணர்வு வயப்பட்டிருந்த அன்றைய மயக்கத் தமிழகத்தில் எப் புலவனுக்கும் எட்டாதனவாகவே நின்றன! எட்டு நூற்றாண்டுகளாக நெட்ட நடையிடையிட்ட நிலைமை, இது!

பிற்றைக் காலத்தினின்று - இற்றைக் காலம் வரைக்குமாக, ஒரு நூற்றுவர்க்கும் மேலான எண்ணிக்கையர் பலவகைப்பட உரைவரைந்துள்ளனர்! இவருள், பரந்து நிற்கும் முழுமையுரை செய்ய முயன்றவர் விரல்விட்டெண்ணத் தக்க விறலவரே! அவருள், - பன்மொழிப்புலவர் - அப்பாத்துரையாரையும் அடுத்து நம் செந்தமிழ்ப்பாவாணரையும் சிறக்கச் சுட்டலாம். முன்னவரின் முனைப்பு, - விரிவுரைப்பு முயற்சி; பின்னவராகிய பாவாணரின் முனைப்பு, மரபுரை காண்பு முயற்சி! முன்னவர், - நான்கு தொகுதிகளோடு நின்றார்! பின்னவர், - ஒரே தொகுதியில், ஒரே மூச்சில் விரைவு விரைவாகப் பரிமேலழகரைப் பெரும்பான்மையிடங்களில் அடியொற்றியவாறு வினைமுடித்தார்!

இதுகாறும் வெளிவந்துள்ளனவற்றில் திருவள்ளுவரை ஓரளவுக்கு உளங்கொண்டு உண்மைகாண முயன்ற முயற்சிகளாகச் சில்லிடங்களே

நம் புலப்பார்வைக்கு முன்னர்த் தென்படுவனவாகின்றன! மற்ற உரைமுயற்சிகள் பெரும்பான்மையவும் மயற்சியைத் தருவதோடு - அயர்ச்சியிலும் ஆழ்த்துவனவாகின்றன! ஆக, மிகப் பெரும்பான்மையாக முன் குவிந்து கிடக்கும் பல்வகை உரைமுயற்சிகள், முனைப்புற்ற தெள்ளறிவுச் சிந்தனையர்க்கு இடையிடையிலான இடறல்களையும் முரணூறுகளையுங்கூடத் தருவனவாகவேதாம் நிற்கின்றன!

ஒருண்மையை இக்கால் நாம் இங்கு ஒப்புக் கொண்டாக வேண்டும். தெளிந்த திருவள்ளுவர்வாயுரைக்கான மெய்யுரை காணுவதற்கு அடிப்படையான பல்லாயிரங்கூறுகளும், சிந்தனைக் கிளர்ச்சியூட்டங்களும் - நமக்கு இன்றைக்குக் கிடைக்கும் "பரிமேலழகம்" உள்ளிட்ட பழையவுரைகள் சிலவற்றாலும், பிற்றைக்கால அண்மைக்கால அறிஞர்பெருமக்களால் விரிக்கப் பெற்ற, சுட்டப்பெற்ற வினாத்தொடுக்கப்பெற்ற பல்வேறு எழுச்சியுரைகளாலுமே உருவானவை!. . . . எனவே, முன்னைய அவை எவற்றையும் - அறிவுத் துலக்கமுடைய இக்கால், முழுமையும் எளியவையாக எள்ளவும் அவ்வாறு விள்ளவுங் கூடாது! அவ்வாறு விள்ளுவது சால்புடையதுமன்று; அவ்வாறு, முற்ற எள்ளுவது சான்றாண்மை சான்றதுமன்று; அத்தோடு, தெள்ளிமை சான்ற போக்குக்குரிய தன்மையும் அன்று!

ஒட்டு மொத்தமாக, -- இதுகாறும் வந்துற்ற உரைநூல்கள், நம்மை முழுமையாக நிறைவிக்கவில்லை! இக்கால அறிவு வளர்ச்சிக்கேற்ற நிலையில் - அப் பழைய கருத்துச் சாறங்களின் மெய்ந்நிலைகளைப் புரிந்துகொள்ளும்வகையில் - அவை தெளிவிக்கவேயில்லை! ஒரு குறிப்பிட்ட மதச்சார்புடைய உள்ளத்தவர் ஒருவர் - அதற்கு உரை செய்கையில் - தம் மதமனத்தின் கருக்களை உள்நுழைத்தவாறே கண்டும் - காண்பிக்கவுஞ் செய்கின்றார்! கடவுள் மறுப்புக் கொள்கையாளர் தம் கடவுளின்மைக் கருத்துக் கருப்புக் - கண்ணாடியை மாட்டிக்கொண்டவாறே குறளை உறுத்து நோக்கி, தம் கருத்துக்குரிய உரையேற்றிக் கண்டு - அதனையே விண்டு விளக்கி உணர்த்த முற்படுகின்றார்! தம் பகுத்தறிவுக்கருத்து நோக்கில் ஒவ்வோரிடத்தையுங் கண்டு பகுத்தறிவுரையாகவே வள்ளுவத்தைப் பகர்கின்றார்! இவ் அனைத்து நிலைகளிலும், ஓர் ஊடிழை உள்ளோடுகின்றது! அஃதாவது - தம்தம் தனிக்கருத்துக்களின் பிழிவையெல்லாம் வள்ளுவப்பாலில் வாக்கி வடித்துக் கலந்து கலக்கி உள்ளுவந்து நமக்கு ஊட்ட முனையும் ஆர்வப் போக்காலாகிய ஊடிழையே, - அது!

திருவள்ளுவத்தினுள், அத்தகு உரையாசிரியர் தம் தனிச் சாற்றைத் தாமே பெய்துவைத்து நிற்பதையே அறிகிலார்! நல்லுணர்விலும் - அறிவவாவிலும் - வள்ளுவரின் வாய்மொழி மேல் தாம் வைத்த நயப்பற்றிலுமாக - அவருரைகள் அவருமறியாவாறே நடைபயில்வனவாயினும் - நள்ளுணர்வொடும் நயனுணர்வொடும் அவற்றை நண்ணும் நன்னெஞ்சினார், - அந் நடைகளிடையிலுள்ள பிசுபிசுத்த நெகிழ்வு அடைவுகளையெல்லாம் அசைவற்று நின்று அளவிட்டோர்ந்து கொண்டே அவற்றின் மெய்யியல்புகளறிந்தவாறே மேற்செல்லுவர்! இது இயற்கையே! பல்கிக் கிடக்கும் அனைத்துரைகளிலும் மயங்கிய நிலையொன்று மல்கிக் கிடக்கும் உண்மையை - அது தெள்ளிதாகத் தெரிவுறுதலை ஓர்ந்துபார்ப்பவர் உணர்வர்!

இம் மயக்கநிலை அகற்றும் மாமருந்து எது? அதுவே, மயக்கமற்ற ஒரு வள்ளுரையாகும்! வள்ளுவவுள்ளத்தோடேயே வாழ்விலும் வதியும் தெள்ளியர் ஒருவரால்தாம், - அவரன்ன மதிமை சான்ற சான்றோர் ஒருவரால்தாம், - அவரன்ன பட்டறிவார்ந்த ஒருவரால்தாம் - அத்தகு வள்ளுரையை வரைவாகவும் வார்க்கவல்லும்! வடித்தெடுக்கவும் ஒல்லும்! அவையல்லவை யாவும் வெள்ளுரைகளாகவே உள்ளூறுத்திநின்று அல்லலையே தந்து அலைவுறுத்தங்களும் ஆற்றும்!

நுண்ணிய நூல்கள்பல கற்ற அறிஞராயிருந்துவிட்டால் மட்டும் - இத் திருக்குறளுக்கு உரிய உரையொன்றை உருவாக்கிவிட முடியுமா? முடியவே முடியாது!. . . இதற்கென்று இன்றியமையாது அமைந்திருக்கவேண்டிய தகுதிப்பாடுகள் சிலவும் - இவ்வுரையாண்மையாளர்க்கு வேண்டுவனவாகின்றன! அவை, இவை! 1. உண்மை காண்பு வேணவா 2. மக்கட்பற்று 3. பொதுத் தொண்டீடுபாடு 4. தொடர்ந்த கல்வியீடுபாடு 5. நல்லொழுக்கம் 6. அறிவவா 7. மெய்யறிவுநோக்கு 8. ஏரணநோக்கு 9. அஃகியகன்ற பல்துறையறிவுத்தெளிவு (அவற்றுள் வரலாற்றறிவும் - மொழியியலறிவும் தொடக்கத் தலைமையன! . .) 10. துறவுள்ளம் பற்றிய இல்லற நல்லொழுக்கத். தோய்வு.

இவையாவும் ஒருசேரக் கொண்ட ஏந்தல் ஒருவர்க்கே - உரைகூற ஒல்லும்படியாக, அதன் கட்டமைப்பானது கடுகிய அகக்கட்டுமானத்தைக் கொண்டதாயுள்ளது! அந்நூல் தோற்றப் பெற்றதனின்று - அதனுள் பரவலாக் ஒளிறும் பொதுவான அறக்

கூறுகளே, பொருட்கருத்துகளே, இன்பக்கருத்துகளே நூற்றுக் கணக்கான நூல்களில் பன்னூற்றுக்கணக்கான இடங்களில் பொதுப்படுமாறு பயன்படுத்தப் பெற்றுள்ளன! ஆயினும் - அந்நூல் எவ்வெந்நோக்கங்களைநோக்கி யாக்கப் பெற்றதோ - அந் நோக்கக் கூறுகள்பற்றிய சிந்தனைப்போக்கே எந்நூல்களிலும் இன்னும் பதிவெய்தவில்லை! எவ்விடங்களிலும், அந் நோக்கங்களை நோக்கிய செயற்பாடுகளில் அது உரிய முறையில் பயன்படுத்தப்பெறவுமில்லை!

ஏனெனில், - இது, அக்கால் இக்கால்போல்பரவவில்லை! இக்கால் பரவியுள்ளதெனினும், இதனின் உரிய உள்நோக்கம் இன்னும் மக்களால் உணரப் பெறவில்லை! உணரப்பெறாமைக்குக் காரணம் - முறையுற உணர்த்தப்பெறவில்லை, என்பது தான்! உணர்த்துவது யார்? உணர்ந்தவர்தாமே உணர்த்தவொல்லும்!இருபத்திரண்டு ஆண்டுகளுக்கும் முன்னரேயே, இந்நிலையில் - என் பார்வையுள் பதிவெய்தி, நோக்கினுள் கோப்பெய்தி வதியும் - நம் **பாவலரேறு ஐயா அவர்களை** இன்றும் அன்றைய வியப்போடுதான் பார்க்கின்றேன்! விழிகளை அகலித்தவாறே கண்டின்புற்று நின்று அன்றைக்கமைந்த அதே விழைவோடும் விருந்துணர்வோடுந்தான், திருக்குறள் தொடர்பாக அவர் விளக்கிவிள்ளும் வியப்புச் செய்திகளை இன்றைக்கும் என் செவிவாயால் மாந்தி மகிழ்கின்றேன்!

ஏனெனில், - கண்ட உரைகளைக் கண்டுவந்த என் முன்னர் அவர் கண்டுகாட்டிய விண்டுவிளக்கிய கண்டனைய கவினுரை - உள்ளுரை - தெள்ளுரை - ஒட்டு மொத்தமாகச் சுட்டினால், - வள்ளுவர் அறங்கூறும் மெய்ப்பொருளுரையாகிய வள்ளுரையே (வளவியவுரை; கூர்த்தவுரை) உரிய வள்ளுவநெஞ்சத்தையும் நெறியையும் உண்மையையும் எனக்கு உணர்த்தியது, ஆதலின்! எவ்வாறு - இது இவரால் இயலுகின்றது?!.. முன்னர்ச் சுட்டிய பத்துத் தகுதிப்பாடுகளின் பாடு (பெருமை) இப் பாட்டாளியிடம் (பாட்டு + ஆளி) நிறைவுறப் படிந்துள்ளமையே - அவரின் இவ் வெளிப்பாட்டுண்மைக்குரிய உட்புலமும் பின்னணியும் ஆகுவன என உணரவும் இயன்றது!

அவர் உணர்ந்து தெளிந்த உரையின் - உரைத்துக் கொண்டு வரும் முறையுரையின் விரிவுற்ற பேருரை வெளிப்பாட்டைத் தமிழறிவுலகம் அங்காந்து எதிர்நோக்கியவாறுள்ளது! அதற்கும் முன்னீடாக, அவரின் கருத்துப்போக்கின் சுருக்கத்தையேனும் முதற்கண் உருக்கித் தருமாறு விழைந்து வேண்டிய நல்லுள்ளங்களின் அறிவார்வ -

செயலார்வவுணர்வுகளுக்கு மதிப்பளிப்பாகவே இம் மெய்ப்பொருளுரைச் சுருக்கத்தின் முதற்பகுதியாக நூறு குறளுரைகளடங்கிய தெண்ணூல் புறப்படுத்தப் பெற்றுள்ளது! இது ஐயா அவர்களின் அறுபானாட்டை நிறைவுப் போழ்திலேயே கையகங்கிட்டி நெஞ்சகம் நிறைவித்தாக வேண்டும் என்னும் அவ்வார்வலர்களின் திட்டமீட்டின்படியே இங்ஙனம் திருவும் உருவும் எய்தித் திகழ்ந்து நிற்கின்றது!

சோற்றுப்பதம் பார்க்கும் முயல்வாக - இச் சுருக்கவுரையுள் அடங்கி மிளிறும் தகைமையை, ஒருவாறு தொட்டுச் சுட்ட வேண்டுவதும் - ஈண்டு எனக்கு ஒதுக்கப்பெற்றுள்ள தகவுரை கூறுங் கடப்பாட்டுள் ஒரு கூறு!

இச் சுருக்கவுரையமைப்பு, - மூலப்பா, பொருள்கோள் முறை சில விளக்கங்கள் என்னும் பொதுக்கட்டமைப்போடும், உரிய பாலுக்கும் இயலுக்கும் அதிகாரத்திற்கும் உரிய முன்னுரை முதலாய அறிமுகமன்களாகிய தோற்றுவாய்க் கட்டமைப்போடும் முறையுற நடையிடுகின்றது!

உரையாசிரியர்கள் வழிவழியாகப் பயின்றுவந்த முதற்பாயிர அதிகாரப் பெயர்க்குப் புத்ததிகாரத் தலைப்பில் மாற்றங் கொடுத்துள்ள ஐயா அவர்களின் உர மறம், - உரைவரைவில் ஓர் அறவரண் சான்றது! சான்றாகப், - பாயிரவியற் பகுதியுளடங்கிய நான்கு அதிகாரங்களுள் தலைச் சிக்கலுடைய தலைமைப் பாயிரப் பகுதியையே கொள்ளலாம்! அத் தலைமைப் பாயிரமாகிய முதலதிகாரத்தின் தலைப்பாக - மணக்குடவர் முதல் பரிமேலழகர் வரை "கடவுள் வாழ்த்து" என்றவாறே குறிக்கப்பெற்று வந்தது!

திருக்குறட்கண் அடங்கிய அதிகாரத் தலைப்புகள் யாவும், அவ்வவ்வதிகாரத்தின் முதற்குறளிலுள்ள அதிகாரப் பொருளை உணர்த்தும் சொல்லையோ - பொருளையோ கொண்டிருப்பதன் அடிப்படையை உற்றுக்கண்ட திருவி.க. அவர்கள், இம் முதற்பாயிரத்தின் தலைப்பு "ஆதிபகவன்" என்றோ "உலகமுதல்" என்றோ இருக்கலாமெனக் கருத்துத் தெரிவித்துவிட்டுப் - பல்லேட்டுத் தொடர்ச்சிவழிப்பயில்வு காரணமாக - மாற்றத் துணியாமலேயே "கடவுள் வாழ்த்து" என்பதையே ஏற்று முன்னுரையாசிரியர்களின் அடிசேர்ந்தார். "சுகாத்தியர்" என்பார், அதனை "முதற் பொருள் வாழ்த்து" என்றவாறு இவருக்கும் முற்பட்டு

முன்மொழிந்து நின்றார். இலக்குவனார் - "இறை நலம்" என்றார். அப்பாத்துரையார் - "இறை வாழ்த்து" என்பது போலப் பட்டும் படாமற் குறித்துச் சென்றார் பாவாணர் பெருமகன் - "முதற்பகவன் வழுத்து" என்றார்

நம் பாவலரேறு ஐயா அவர்கள், சமயங் கடந்தவரும் - மதமற்றவருமாகிய வள்ளுவர் பெருந்தகையின், - கடவுள் என்னும் அக்கால் பரவுற்றிருந்த சொல்லாட்சியையே தம் அறவாக்கத்தில் காரணத்தோடு தவிர்த்துநின்ற உள்ளப்போக்கின் உண்மையுணர்வுகளை உட்கொண்டு நுண்ணிதினுணர்ந்து - இறைக்கே வாழ்த்துக்கூறும் செயன்மிகை அல்லது எல்லையுணராத அடாப்போக்கு திருவள்ளுவர்க்கு அமையாத நோக்கென்று தெளிந்து, - "கடவுள்" என்ற சொல்லையும் "வாழ்த்து" என்ற சொல்லையும் வேண்டுமென்றே அறத்தவிர்த்தவராய் - அறத்திற்கெல்லாம் மூல முதலாகிய ஆற்றல்கூறை உணர்தற்கென்றே உணர்த்தியதிது என உணர்ந்து புத்தம்புதிய தலைப்பாக **"அறமுதல் உணர்தல்"** என்னும் அழகிய - நேரிய அருந்தொடர்ச்சொல் வழி ஆங்குப் பதித்துள்ள துணிவு - போக்குணர்ந்த நோக்குவீறு காட்டும் கட்டியமாகவே முன்னிற்கின்றது!

பொருள்கொள்ளும் முறைமைக்கேற்ப, - திருக்குறளின் யாப்பமைப்பை நேரிய உரைப்பு முறையில் (பிறிதொரு சொல் யாதும் கொண்டு கூட்டாது-) உரியவற்றையே நிரல்படநிறுத்தி - கடிய சொற்புணர்ச்சியிடங்களில் பகுப்புரு காட்டி அரிய தோற்றத்தில் அமைத்திருக்கும் அழகு மிகு நனி சிறப்புடையது! [காண்க: குறள்: 77] **என்பு இலதனை வெயில் போல - அன்பு இலதனை அறம் காயுமே.** இப் பொருள்கோள்முறையை மூலச் செய்யுளுக்கு அடுத்தும், பொழிப்புரைக்கு முன்னுமாக இடையில் வைத்துவிட்டுப் பொருள் கூறப்புகும் முறை, - உண்மைப் பொருளைத் தெரிந்துகொள்வார்க்குச் சிந்தனையோட்டத்திற்குரிய தெளிவு வாய்கால் ஒன்றை உருவாக்கி நிறுத்தும் அரிய அறிவுமுறையே ஆகும்.

**"அறமுதல் உணர்தல்"** என்னும் முதற்பாயிரத்துள் பயிலப் பெற்றுள்ள சில சொற்களுக்கு உரையாசிரியர்கள் இது வரையிலாகப் பொருள்கொண்ட வகை, - அவர் தாம் கொண்டேற்றிருந்த மதச் சார்புக்கருத்துத் தோய்வாலும் - இறைவழிபாட்டு நடைமுறைப் பயில்வொன்றன் காட்சியை மட்டுமே உட்கொண்டதாலும் உரைத்து நின்ற பாங்குடையதாகும். அறநூலாசிரியர்பெருந்தகையாகிய திருவள்ளுவர் உள்ளத்தின் சமயஞ்சாரா மாட்சிமையை நன்கு

*விளங்கிக்கொண்டால்தான், - பொதுப்பொருள் காழ்த்துநின்ற சொற்கள் சிலவற்றிற்குச் சிறப்புப்பொருள் பாங்கிலாக அவர் கொண்டிருந்த உட்கருத்தையும் வெளிக்கொணரமுடியும் என்பதற்குக் கீழ்க்குறிக்கப்பெறும் பாயிரச்சொற்கள் சான்றுகளாகும்.*

*"தாள் சேர்தலும் - அடிசேர்தலும்": - பாதஞ்சேர்தல்களா இவை? தாள் தொழுதல் (நற்றாள் தொழாஅர் - 2), அடிசேர்தல் (மாணடிசேர்ந்தார் - 3; அடிசேர்ந்தார்க்கு - 4, அடிசேராதார் - 10), தாள்சேர்தல் (தாள் சேர்ந்தார்க்கு - 7,8), தாளை வணங்குதல் (தாளை வணங்காத் தலை - 9) என்றவாறு வரும் இடங்களுக்கெல்லாம் உடலுறுப்புகளாகிய பாதங்களைச் சேர்தல் (தொழுதல், வணங்குதல்) என்றவாறே பொருளெடுத்துக்கொண்டு முன்னைய உரையாசிரியர்களெல்லோரும் (குழந்தையுட்பட – அடி விழுந்து கிடந்த நிலையோடு,- இவை பயிலப் பெறும் இடங்களுக்கெல்லாம் நம் ஐயா அவர்கள்,* ***"தாள்*** *என்பது* ***முயற்சி,"*** ***'அடிசேர்தல்'*** *என்பது* ***'பின்பற்றுதல்'*** *என்றவாறு தெளிப்புப்பொருள் தெருட்டுதலையும், வழிபடுதல் என்னும் கூட்டுச்சொற்குரிய முற்பொருள் - பின்பற்றுதலே என்றவாறு பொருள்கூறி வழிகாட்டுதலையும் ஒப்பிட்டு எண்ணித் தெளிகையில் - கடவுள் வாழ்த்துப் பகுதியைக் குறித்து முன்னிருந்துவந்த நம்மின் பல்வேறு மனநெருடல்களின் ஊற்றுக்கண்களே அடைபடுகின்றன! [ "மாணடி சேர்ந்தார்" (3) என்பதற்குப், "பெருமை பொருந்திய நெறிகளைப் பின்பற்றி உலகநடை மேற்கொண்டார்" என்றவாறு நம் பாவலரேறு-ஐயா அவர்கள் உரை வரைந்துள்ள தெளிபுநிலையை உணருவதற்கு ஏந்தாக, - இதே அதிகாரத்துள் பதிவுற்றுள்ள "பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்"(6) என்னும் திருவள்ளுவரின் வாயுரையும் நம் மனத்துலையின் மற்றொரு தட்டின் மடியிலேறிக்கொண்டு சமன்காட்டி நிற்பதாகின்றது! ] ஐயா அவர்கள், திருவள்ளுவர் உள்ளக் கருத்தின் அடிசேர்ந்து (பின்பற்றி) தாளொடு ( முயற்சியொடு) தாளில் எழுதியதால்தான் நமக்கு இத்தகு மெய்யுரையும் வாய்த்துள்ளது என்னும் உவப்பும் நம் நெஞ்சுள் ஊடுபடர்கின்றது!*

*உரைகூறலில் ஒரு தெளிவான வெளிப்பாட்டுமுறையைக் கையாளுந்திறம், அவர்க்கு இயல்பாயமைந்துள்ள எழிற்போக்குடையது! ஒரு குறட்பகுதிக்கு ஐயா அவர்கள் உரைத்துள்ள பொருள்வெளிப்பாட்டுரையைச் சான்றுக்கென இங்குக் காணலாம்!*

***"தம் பொருள் என்ப தம் மக்கள்"*** *: 63 - ஆம் எண்ணுடைய குறளின் முதல்வரியிலமைந்த ஒரு கருத்து, இது! இக் கருத்துடைய வரிக்கு*

முன்னைய உரையாசிரியர்கள்சிலவர் கண்ட பொருளுரைகளைச் சற்று உற்றுப்பாருங்கள்!...

மணக்குடவர்: "உலகத்தவர் தம் மக்களைத் தம்முடைய பொருள் என்பவர்."

பரிதி: "தமக்கு அழியாத உடைமையாவார் புதல்வர்,"

பரிப்பெருமாள்: "தம் பொருளாவார் தம் மக்கள்,"

பரிமேலழகர்: "தம் புதல்வரைத் தம்முடைய என்பர் அறிந்தார்"

கவிராசர்: "தம் புதல்வரைத் தம்முடைய பொருள் என்பர்"

பழைய உரையாசிரியர் (-1): "தமக்கு அழியாத உடைமையாவது புதல்வர்"

பழைய உரையாசிரியர் (-2) : "தம் புதல்வரைத் தம் பொருள் என்று சொல்லுவர் பெரியார்"

கா. சுப்பிரமணியனார்: "மனிதர் தம்முடைய குழந்தைகளைத் தம்முடைய அருமையான உடைமை (செல்வம்) என்பர்."

திரு.வி.க.: மு.வ. : "தம் மக்களே தம் பொருள் என்பர் பெற்றோர்."

நாகை. சொ. தண்டபாணியார்: (பரிமேலழகரை அடி சேர்ந்துரைக்கும் பொருள்.)

இராமாநுசக் கவிராயர் : "தம்முடைய செல்வம் எனப்படுவது தம் மக்களே."

புலவர் குழந்தையார்: "தம் மக்களைத் தம் பொருள் என்பர் அறிவுடையோர்"

அப்பாத்துரையார்: "குடும்பம், சமுதாயம் ஆகியவற்றின் உண்மையான செல்வமாவது இனப்பண்பு வாய்ந்த புதல்வர் - புதல்வியர்களே" பாவாணர்: "தம் மக்களைத் தம் செல்வம் எனப் பாராட்டுவர் பெற்றோர்"

இலக்குவனார்: "தம் மக்களைத் தம் செல்வம் எனப் பாராட்டுவர் அறிந்தோர்"

இம் மேற்குறித்துக் காட்டியுள்ள பதினைவரின் உரைகளையும் கண்டு விட்டீர்களா?. . . ஐயா அவர்களின் உரையை இப்போது காணுங்கள்! . . . "தம் பொருள் என்ப தம் மக்கள்" : "(இவ்வுலகில்) தம்முடைய பொருள் என்று உரிமை கொண்டாடுவதற்கு உரியவர்கள் தாம் பெற்று உருவாக்கிய தம் மக்களே! "

கருத்து முழுமையதாக விளங்கும் நிலையில் - சிக்கலற்ற தெளிவான அளவான மீமெல்லிய மலர்ச்சியுடன் எளிய உரையாப்பில் வார்த்தெடுக்கப் பெற்றிருக்கும் இந் நிழலுரைப் போக்கைப் - பொழிப்பு உரை கூறும் இலக்கணமுறை கொண்டமைந்த ஒரு நிறை சான்றாகவே

கொள்ளலாம்! இம் மேற்குறித்துக் காட்டப் பெற்றுள்ள பதினைந்து உரைகளின் அமைப்பு முறைக்கும் - இவ்வுரையமைப்பாக்கத்திற்கும் எவ்வளவு வேறுபாடு உள்ளது என்பதை மேனோட்டமாகப் (மேல் நோட்டமாக) பார்க்கினுங் கூட எவரும் விளங்கிக் கொள்ளுவர்! [ அடைப்புக் குறிக்குள் அடங்கித் தோன்றும் [ "இவ்வுலகில்"] - என்னும் வெளிப்பாடு, கருத்தை எல்லை அடைவு செய்து தெளிவிக்கும் வகையில் முன்னிருத்திவைத்த அவாய் நிலையினது!]

தம் மக்கள் (63) : (ஐயா அவர்களின் உரைவிளக்கத்துள் ஒரு சிறு கூறு:) எம் மக்கள், எம் மகன், எம் மகள் என்று உரிமைகொண்டாடுவதற்கு உரிய பொருளாக இவ்வுலகில் ஒருவர்க்கு இருப்பது, அவர் பிள்ளைகளே! இஃது, தாய் தந்தை இருவர்க்குமே பொது என்பதால் "தம்" என்றார்!

உரைச் சுருக்கத்தின் - விளக்கக் குறிப்பின் உள்ளீட்டிலும் இத்தகு நுண்ணுட்பங்களெல்லாம் நுணுக்கி நுணுக்கி நுவலப் பெற்றுள்ளன! தம்தம் அறிவின் ஆழவகலங்களுக்கேற்ப அங்கங்கும் அறிவர் சுவைத்துத் துய்க்கலாகும்படி திட்டமாக இவ்வுரைச்சுருக்கம் அருக்கமான (abridgement) ஆக்கமாகி நிற்கின்றது!

திருவள்ளுவர் காலச்சூழலை - அக்கால வரலாற்றுப் பின்னணியை நன்கு விளங்கிக்கொண்டு உரைவரைந்துள்ள முறை, இவ்வுரைப் பெருமைக்குரிய தலைமைச் சிறப்புக் கூறுடையது!

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (55)

- என்னும் குறட்பாவுக்கு மணக்குடவர், பரிதி, பரிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர், மல்லர் முதலிய முற்கால உரையாசிரியர்களிற் பலரும் - முன்மைக்கும் அண்மைக்கும் இடைமையராயிருந்து பரிமேலழகருரைக்கு உரைவரைந்தவர்களாகிய காரிரத்னக்கவிராயர், கவிராசபண்டிதர் ஆகியோரும், - கா.சு, திரு.வி.க, நாகை.சொ. தண்டபாணியார், வ.உ.சி, முதலிய அண்மைக்கால உரையாசிரியர்களில் மிகப்பெரும்பாலரும், "கணவனைத் தொழுதெழும் கற்புடையாட்டி பெய் என்று சொன்னவுடன் மழையானது கட்டாயமாகப் பெய்யும்' என்னும் பொருட்படுமாறு வகையுரைகள் வரைந்து வெளிப்படுத்தியுள்ளனர். வ. சுப். ப. மாணிக்கனார் "மழை பெய்யுமே'' என்றவாறு ஏகாரம் புணர்த்தித் தெளிவுபடவும்

உரைவரைந்துள்ளார்.

குழந்தையாரும் பாவேந்தரும் "பெய் எனப் பெய்யும் மழை போல்வாள்" என்றவாறு பகுத்தறிவுசான்ற உரையைப் பெய்துள்ளனர். அப்பாத்துரையாரும் இலக்குவனாரும், "பெய்தால் நல்லது என்றவுடன் குறிப்பு உணர்ந்து பெய்யும் மழையைப் போல்வாள்" என்றவாறு ஒப்பேற்றியுள்ளனர்! "மக்கள் வணங்க அதனால் மகிழுந் தெய்வங்கள் கற்புடையாள் வணங்காமல் இருக்கவே தானே வலியவந்து ஏவல் செய்யும் " என்றவாறு - தாம் முன்னர் ஒப்பேற்றியிருந்த உரைக்கு அதிகாரியான அப்பாத்துரையார் சப்பையொன்றை அதற்கு மேலுஞ் சார்த்திக் கட்டி வைப்பார் ஆயினார்!

1. "அவள் "பெய்" எனச் சொன்னால் மழை பெய்யும்! " 2. "அவள், - பெய் என்றால் பெய்யும் மழை போன்ற சிறப்பினள்". இவையிரண்டே, இது வரையில் இக் குறள்வழியவாகிய ஈருரைப்பாட்டுச் சாறங்கள்!... முன்னையது, முன்னைய உரையாசிரியர்கள் அனைவரும் முற்ற ஏற்றது! முறைக்கொப்ப மொழிந்தது! பின்னையது - அச் செயற்பாட்டு இயன்மை என்பது இயலவே இயலாதவொன்றெனத் தேற்றமாகத் தெளிந்துநின்ற அண்மைக்காலத்தே பகுத்தறிவாண்மை சான்றார் சிலவரால் காலவளர்ச்சிக்கேற்பக் கட்டிச் சுட்டியது!. . . முன்னையது - மரபுரை! பின்னையது - புத்துரை! பகுத்தறிவாண்மைச் சால்பு உரை!

[ இங்கு நமக்கு வேண்டியது, - திருவள்ளுவர் எக் கருத்தை உட்கொண்டு, அக் குறளை வெளிக்கொணர்ந்திருக்கின்றார், என்பதுவே! குறளுக்கு - வகைவகையான பொருள்கூறுதல் ஒரு வண்ணவகையினவாகுமேயன்றி, - ஆக்கிய அவ் ஆன்றோரின் எண்ணத் தொகையாகாது! தமிழின் பன்வகை வளர்ச்சிநிலைகளை அதனின்று வெளிக்கொணருந் திறப்பாடுகள் ஆங்குப் புறப்பாடு கொண்டுள என்பதன்றி - அது ஆக்கப் பெற்ற நோக்கத்தைத் தூக்கிநிறுத்தும் ஆக்கப் போக்கு ஆகி விடாது! உரையாசிரியர்பலரும் தத்தம் அறிவுத் திறத்தை - எண்ணப்போக்குத்திறத்தை வகைவகையாகக் காட்டும் வல்லுரைகள் பல, - திருக்குறளுக்கென வாய்த்துள்ளன! அவற்றிற் பெரும்பான்மையன-ஒரு கருத்தையே எவ்வெவ்வாறெலாம் கிளைகிளையாகச் சிந்தித்துப்பார்க்கலாம் என்பதற்குரிய- வாய்பாடுகளாகவேகூடல் உள! அவற்றுள் சில்லுரைகள் தம்தம் வாய்க்குவந்தபடியாகவும் கைக்கு வந்தபடியாகவும் எண்ணிய எண்ணப்படியாகவும் உள! அவர் எண்ணியபடி எண்ணிய திண்ணிய நுண்ணிய நேருரைகளோ, அவற்றில் மிகச் சில!

வள்ளுவர்கால வரலாற்றையும் - அக் காலச் சூழலையும் - அது யாக்கப்பெற்றதற்கும் ஆக்கப்பெற்றதற்குமான நோக்கத்தையும் - அதனுள் பதிவுசெய்யப்பெற்றுள்ள சொற்களுக்குரிய அற்றைக் காலப் பொருள்வழக்குகளையும் நுண்ணிதாகக் கூர்ந்தறியுந் திறஞ்சான்ற சான்றோரே, - அதற்கேயுரியதாக உள்ளடக்கி நிற்கும் நுண்பொருள்களைத் துலக்கியும் இலக்கியுங் காட்டும் விளக்கத்தையும் வெளிக்கொணரவியலும்! மற்றவர் முயற்சிகள் யாவும், - குன்று முட்டிய குருவிகளின் முயற்சிகளும் - விளைவுகளுமே! அம் முயற்சிகளை உள்ளேற்கும் பயினன் (பயிலுநன்) உள்ளப்பையும் குன்று முட்டிய குருவிப்பாடு பெற்றுக் குடைச்சலுற்றுக் குலைவே கொள்ளும்!

கூறப் பெற்ற கருத்தொன்று - பிழைபாடுடையது என்னினும் - கூறப் பெற்றவாறே கூறப்பெறவேண்டுமேயன்றிப், - "பயன் விளைக்க வேண்டும் என்றே நல்லுள்ளங் கொண்டேம்!" என்றவாறு சுற்றி வளைத்து அதற்குச் சுவரெழுப்பிக் காப்பதோ - இட்டுக் கட்டி அங்கு ஏற்றமிறைத்து நிற்பதோ - இன்று வரையிலாக ஒரு சொல் பெற்று வந்துள்ள வளர்ச்சிகளையும் விரிவாக்கங்களையும் பயன்படுத்திக் கொண்டு பாடுகாட்டும் நோக்கத்திற்கெனக் கூடுவிட்டுக் கூடுபாய்வன்ன மாய்மாலங் காட்டுதலோ - கூடவே கூடா! ஏனெனில், உரையானது - மூலத்தின் உள்ளிருப்பதை வெளிக்கொணரும் உரமுடையதாக இருக்கவேண்டுமேயல்லாது - உரையாசிரியரின் உரவறிவைப் பதிவுசெய்வதற்கென்றமைந்த காட்சித் திரையாக அதனை மாற்றிவிடக்கூடாது! (அது-) கூறியதைக் கூறவேண்டுமேயன்றி - வீறு கொளுத்தவென்றெண்ணி அதுவே மாறுகொளக் கூறலாகாது! அந் நிலை, தாறுமாறு நேரற்கு இடந்தருமே யன்றித் - தேறுமாறு காட்டத் தினையளவும் பயன்படாது! கூறுமாற்றில், ஏறுமாறு கூடாது!

திருக்குறளுக்குரிய உரையை "மெய்ப்பொருளுரை" என்றவாறு பெயர்வைத்து உரைத்துள்ள பாங்கிடையில், ஓர் அரிய உண்மையும் உள்ளடங்கியுள்ளது!

"ஈராயிரம் ஆண்டுகளுக்கும் முன்னர் வாழ்வாங்கு வாழ்ந்த அவ் வள்ளுவப்பெருமகனாரின் மெய்ம்மவியல் நோக்கங்கள் உட்பதிவுகள் கொண்டுள்ள பெரும்பாலான இடங்களினின்று அன்று அவருள்ளத்துட் கருதித் தேர்ந்த தனிச்சிறப்புடைய மெய்ம்மக் கருத்துகளையும் - அவர் காலத்து நின்று நிலைபெற்றிருந்தவற்றினின்று அவர் ஒப்பியேற்றுப் பதித்துள்ள அரிய மெய்ம்மக் கருத்துகளையும் ஒரு சேர வெளிக் கொணருவதற்கென்றமைந்த "மெய்ப்பொருளுரை" இதுவே, - என்பது ஒன்று!" "நூற்றுக்கும் மேற்பட்டனவாகி அச்சேறி அச்சுறுத்திநிற்கும்

பெரும் பல்லுரைகள் இதுகாறும் வெளிப்படுத்தியார்த்துள்ள பொருட்கூறுகளின் பொக்காந் தன்மைகளைச் சுட்டியும் - அவற்றின் புரை குறைகளைப் புலவாள் கொண்டு காரண கருமியப் பட்டியலிட்டு வெட்டியும் - வள்ளுவர் பெருமகனாரின் உள்ளத்தே வயப்பட்டு நின்று வெளிப்பட்டொளிறும் குறட்பாக்களுக்குரிய தெள்ளுரை என்பது, அதற்கேயுரிய உண்மையுரையாகிய - (மெய்ப் பொருட்பாட்டுரையாகிய) "மெய்ப்பொருளுரை" ஆகிய இதுவே, என்பது மற்றொன்று!"

அஃதாவது, - மெய்ம்மந் தொடர்பான பொருட்கூறுகளை நுண்ணிதின் காட்டும் உரை, என்னும் பொருட்பாடு பெறுமாறும் - வள்ளுவர் கருதிய மெய்யான பொருள்களைக் கூறும் உரை என்னும் பொருட்பாடு பெறுமாறும் ஒரு சேரச் சுட்டவல்ல நுட்பப் பெயராகவே - "மெய்ப் பொருளுரை" என்றவாறு இங்குக் குறிக்கப் பெற்றதாயிற்று!]

"பெய்யெனப் பெய்யும் மழை" - என்பதற்கு, "(அத்தகையவள்-" பெய் எனக் கூறின் மழை பெய்யும்! " - என்றவாறு முன்னைய மரபுப் பொருட்சாறத்தை உள்வாங்கி ஏற்றுக் கொண்டு பிறழாது பொருள் வரைந்துள்ள நம் பாவலரேறு-ஐயா அவர்கள் - அத்துடன் நில்லாராய் - அதற்குரிய விளக்கப்பகுதியில் தம்மின் தனிப்பட்ட கருத்துரையையும் வெளிப்படையாக முன்வைத்திருக்கும் செப்பச் செழும்போக்கு மிகவுங் கருதி மகிழுதற்குரியது!. .

"பெய் என்று யார் சொன்னாலும் மழை பெய்யாது! அஃது இயற்கையன்று! இறும்பூது ; கற்பனை! . . . . . . பழந்தமிழகத்தில் கற்புள்ள பெண்டிர் என்றால், அவள் கணவனைத் தெய்வமாக மதித்துத் தொழல் வேண்டும். அத்தகைய கற்புள்ளவள் "பெய்" என்றால் மழை பெய்யும்! - என்னும் நம்பிக்கை இருந்துளது என்பதே இக் குறளடக்கிய பிற கூற்றுகளிலிருந்தும் தெரிய வருகிற செய்தி!

---- இது மிகைப்படுத்தப் பெற்ற ஒரு தெய்வ நம்பிக்கையே தவிர, இயற்கைக்குப் பொருந்தியதாகக் கூற முடியாது. இஃதும், ஒரு வகையில் மூட நம்பிக்கையே!

இம் மூட நம்பிக்கை நூலாசிரியர்க்கும் இருந்துள்ளது என்பதையே இக் குறள் காட்டும்! அதற்காக, அவரை அதனின்று மீட்கும் பொருட்டு, இத் தொடர்க்குப், "பெய்யெனப் பெய்யும் மழை போன்றவள்!" என்றெல்லாம் பொருளுரைப்பது தேவையில்லை என்றறிக!" (காண்க: விளக்கப் பகுதி : குறள் : 55)

இச் சிறிய விளக்கக்குறிப்புள் அடங்கிநிற்கும் செய்திகளாவன: 1.

அப்படிப்பட்ட செயல் நடக்கக்கூடியதா அன்றா என்பதுபற்றித் தம் கருத்தைத் தெரிவித்தல். 2. இந்நிலை இயற்கைக்கு உடன்பாடு உடையதா - அல்லதா என்பது பற்றிச் சுட்டல். 3. இது "கற்பனை" என்று தெளிவாகச் சுட்டல். 4. இது, அக்காலக் குமுகச் சூழலில் எங்கும் பரவி நின்ற நம்பிக்கை என வரலாறு கூறல். 5. இது, அக்கால தெய்வநம்பிக்கையுள் ஒன்று எனல் இத்தொடு மட்டுமன்று - இது மிகைப்படுத்தப் பெற்ற தெய்வ நம்பிக்கையாகும் என்றவாறு மேலுந் தெளிவுறுத்தல் 6. இது, மூடநம்பிக்கை எனல். 7. நூலாசிரியர்க்கும் (திருவள்ளுவர்க்கே!) இம் மூடநம்பிக்கை இருந்துள்ளது என்றவாறே மிகமிக வெளிப்படையாகவே ஒரு துணிவுக் கருத்தை முன்வைத்து நயன்மை மொழிதல். 8. பகுத்தறிவு சான்ற உரைகள் சிலவற்றை உரையாசிரியர்கள் ஏற்றி வைத்தமை - திருவள்ளுவரையே அக் கருத்தினின்று மீட்டெடுத்து உயர்த்திப் பிடிப்பதற்கான முயற்சிகளே - என மொழிதல். 9. அப்படி உரைவரைதல் கூடவே கூடாது, அது தேவையின்று என்றவாறு கண்டிப்புமுறை கூறல்.

இம் மேற்குறித்தவாறான தொண்டு (9) வெளிப்பாடுகளையும் "பெய்யெனப் பெய்யும் மழை" எனவரும் உரைத் தொடருக்கான விளக்கவுரைக் குறிப்பிற் பதித்துள்ளமையும் - இத் தற்கருத்து விளக்கத்தின் எள்முனை அளவும் அக் குறட்பாவுக்கு என வரைந்துள்ள பொழிப்புரையாகிய நிழலுரையிற் படாதவாறு காத்துள்ளமையும், உரையாசிரியரொருவர் உரைகூற வருகையில் எத்தகு நயன்மையுணர்வைக் கடைப்பிடித்தொழுகவேண்டும் என்பதற்குரிய சான்றுக் காட்சிகளாகும்! மூலத்தின் பொழிப்புரையில் மூலமுனைவனின் அறிவு மட்டுமே ஒளிறும்படியாகக் காட்டவேண்டுமேயன்றி - வேறு ஒளிப்பு என்பதே கூடாது! அஃதாவது, உரையாசிரியர் தம் தற்கருத்து முளைப்பின் பசும்புல்லின் தலைகாண்பும் அப்பொழிப்புரையில் நேருமாறு விடக் கூடாது! நெளிவுஞ் சுளிவும் முளிவும் தற்கருத்துத் தளிர்வும் உரையுட்படலாகாது! உள்ளது உரைத்தலே, பொழிப்புரை கூறுங்கால் உரையாசிரியர் கொள்ள வேண்டிய கடமை! மூல ஆசிரியருடன் முரண்படுகையில் அதற்குரிய களத்தைத் தனிப்பெற அமைத்துக் கொண்டு தக்க காரண - கருமியங்களை ஏரணமுறையிலும் உலகியல் நடப்புச் சான்று முறையிலுமாகச் சாற்றுதல் வேண்டும்! அஃதாவது, மூல இடத்திலேயே முரண் கொள்ளுதல் - முறையே அன்று! அது, முறைப்பே! அங்குத் தனக்குரிய தனிக் கருத்துக்களை அதற்குரிய வரைவில் (எல்லையுள்) வரைகை - வரைவில் (எல்லையில்லாத - வரம்பு மீறிய) செயலொப்பது! உள்ளதை உள்ளவாறே உரைத்து முன் நிறுத்தல் - பொழிப்பில் செய்ய வேண்டிய பழிப்பில்

பயன் செயல்! . . . மாறு கருத்து வேறு இருப்பின் - வேறு இடத்திலேயே - அது கூறுறுமாறு கூறுதலுறவேண்டும்! இந் நடைமுறைக்கொத்த நேரிய சான்றாண்மை சான்ற போக்கு, - பாவலரேறு ஐயா அவர்களின் நடைமுறையாகவே உள்ளமையை, அவர் வகுத்துக் கொண்டாற்றியுள்ள உரைப்போக்கின் நெடுகலுங் கண்டுணரலாம்!

கருமைநிலையாகிய இருட்சி நிலையே ( இருள்நிலை - இருட்டு நிலை) இருள்! இவ் இருள் - அறிவற்றவுணர்வாகிய மனமலட்டுத் தன்மையை - அஃதாவது அறியாமையைக் குறித்தற்கெனவும் பொருள் விரிவாக்கம் எய்தியது! [ இக் கருத்து வளர்ச்சிப் போக்கின் உண்மையை - அறிவைக் குறித்துப் பொருள் விரிவெய்தி நின்ற "ஒளி" என்னும் சொல்லோடும் பொருத்திப் பார்த்து உணரலாகும். (ஒளி= அறிவு) மேலும், - ஒளிக்கருத்து அறிவுக்கருத்துக்கு விரிவடைந்து ஒளிர்கின்ற உண்மையை, ஒள்ளியர் (= அறிவிற் சிறந்தவர்) (714), ஒள்ளியவர் (487), ஒளியார் (714) என்றவாறான சொல் வகைப்பாடுகளாலும் - "ஒள்" என்னும் வேரடியினின்று முளைத்துக் கிளைத்த ஒள்+பு >ஒட்பு > (ஒட்பு+ அம்)> ஒட்பம் (= அறிவுடைமை) (404, 425), (ஒள் > ஒண்>ஒண்+மை>) ஒண்மை) ( = சிறந்த அறிவு) (844) ஆகியனவாகிய ஒளி பொருந்திய அறிவைக் குறித்த இரு சொற்களாலும் தெள்ளிதின் உணரலாகும்!

இருள் என்பதற்கு மயக்கம் ( மனமயக்கம்) என்னும் பொருளும் உள்ளது! (காண்க: 675) [ அத்துடன் இருள் நிறைந்ததாகக் கற்பனை செய்து கொண்டு - பின் நம்பிக்கையாகவே கடைக்கழகக்காலத்தில் சிலர் ஏற்று நின்ற நிரயத்தையுங் கூட ( நிரையம்>நிரயம் =நரகம் (சமற்.) இவ் இருள் என்னும் சொல் குறித்தது! இதனை "ஆர் இருள்" (121) என்றவாறு அடையடுத்து நிற்கும் கூட்டுச்சொல்லாலும், "இருள் சேர்ந்த இன்னாவுலகம்" (243) என்றவாறு தொடர்ப்பாட்டுச் சொல்லாலும் திருவள்ளுவர்பெருமான் சுட்டி நின்றார்!]

ஆக, இருள் என்பது இருள் நிலவும் நிலையையும் - இருட்டுக் காலத்தையும் - இருள்நிலைமையுடைய மனத்தன்மையாகிய மயக்கத்தையும் - பின்னர் அறியாமையையும் சுட்டியவாறு பொருள் வளர்ச்சியாக்கங்களைப் பெற்று நீடியது! இம் மேற்சுட்டிய சொற்பொருள்வகையுள் ஒன்றாகிய "மயக்கம்" என்னும் பொருட்பாட்டுக் கருத்தையே 5-ஆம் எண் குறளின் முதற்சொல்லாகிய "இருள்" என்பதற்கு உரையாசிரியர்களாகிய பெரும்பாலரும் எடுத்து நிறுத்தி முன்வைத்துள்ள நிலையில், நம் பாவலரேறு ஐயா அவர்களோ - "அறியாமை" என்னும் தெளிவுப்பொருளையே மயக்கமற எடுத்துத்

தொடுக்கும் - அஃதாவது இருள் தீர எண்ணித் தேர்ந்து முறப்படுத்தும் ஒள்ளழகு - அவரின் தெள்ளிமையையே நமக்குத் தெளிவுறத் தெரிவிக்கின்றது! (காண்க: (5) இருள்சேர் இருவினை=மறவினை தீவினை. பொருள்: அறியாமை சேர்ந்த அறத்திற்கு எதிரான மறவினை; (நன்மைக்கு எதிரான -) தீவினை ஆகிய இரு வினைகள்.) . தெளிந்ததும் உரியதுமான நேர்ப்பொருள் கூறுகை - இவ்வுரைச் சுருக்கத்தில் அமைந்துள்ள சீரிய செந்நிலையாகும்!

"புகழ் புரிதல்" (59) என்பதற்கு அனைவரும் "புகழை விரும்புதல்" என்றவாறே பொருள் சுட்டி நிற்க - அப் "புரிதல்" என்பது "விருப்பமாகச் செய்தல்" என்றவாறான அடிப்படையில் வளர்ந்து - "செய்தல்" என்றவாறும் பொருள் விரிவாக்கம் பெற்று நெடுகலும் வழக்கிலிருந்து வந்தமையைப் பொருட்பாடறிந்து கண்டு, - "புகழ் புரிதலாவது: புகழுக்குரிய செயலைச் செய்தல்" என்றவாறு இவ்வுரைச் சுருக்கத்தினிடையிற் சுட்டப்பெற்றறுள்ளமை பொருள்தெளிவு சான்றதாகும்!

மணிவிளக்கவுரை வரைந்த அப்பாத்துரையார் - அதனுள் ஓரிடத்து, "அறம்" என்பதற்கு இந்தியாவுக்கு வெளியே சரியான சொல் கிடைடாது என்றவாறு குறித்துச் சென்றார். அதற்கு, - "இந்தியாவுக்கு வெளியே என்பதினும் தமிழியலுக்குவெளியே என்பதே சரியாக முடியும்" - என்றவாறு, நம் பாவலரேறு ஐயா அவர்கள் வரலாறுணர்ந்த வீற்றொடு மாறுகூறும் அழகு சுவைக்கத் தக்கது! இத்தகு தமிழ்மானஞ் செறிந்த வெளிப்பாடுகள் இவ்வுரைச் சுருக்கத்துள் பேராளமான பதிவுகள் கொண்டுள்ளன!

இவருரைக்கும் முன்னர், - "எண் குணத்தான்" சிக்கலுக்குரியவனாகவும் மதச்சேற்றில் சிக்கலுற்றவனாகவும் இருந்தான்! உரையாசிரியர்கள் பலரும் தாம்தாம் சார்ந்திருந்த மதங்கள் விரித்தார்க்கும் எட்டெட்டுக் குணங்களையும் எண் குணத்தானுக்கெனப் பட்டியலிட்டனர்! இதற்குப் பரிமேலழகப் பார்ப்பனரும் விலக்கினாரல்லர்! பைந்தமிழ்ப் பாவாணரும் விலக்கினாரல்லர்! பலரும் இவ் எண் குணத்தைச் சிவனிய மதத்துக்கும் சமணமதத்துக்குமாக முடிச்சுப் போட்டு மூச்சுமுட்டினர். நம் பாவலரேறு ஐயா அவர்கள், அனைத்துச் சிக்கலும் அடியோடறுமாறு - "எண் குணத்தான்: ( எல்லா நிலை மக்களும் ஏற்றத் தாழ்வின்றி அணுகுதற்கு உகந்த-) எளிமையான குணத்தினை உடைய அறவாணன்" என்றவாறு பொருளுரைத்திருக்கும் எண்மையொண்மை, - நனி சிறந்த தெண்மை தேர்ந்தது!

பெருமைப்பட விரித்துரைத்து வியந்து மகிழ்தற்கு இவ்வுரைச் சுருக்கத்துள் விரிவான இடங்களுள! அந்நிலை, நூலுட் புகப் புகப் புலனாகும்!

கொழுந்தமிழ் எண்மையொடு குழந்தைப் பாடல்களையெல்லாம் கொழிக்க வெளிப்படுத்தவல்ல திறஞ்சான்ற நம் ஐயா அவர்களால் - அதே வண்ண எளிய நடையில் இதனையும் எளிதே ஆக்கிப் படைக்க இயலுமெனினும் - இதனை அவ்வாறு ஆற்றாது இவ்வாறாகிய திறச்செறிவு நடையில் தீட்டியிருப்பதற்குரிய காரணம், - பொருளுக்கேற்ற புலநடையிற் புறம்படுத்தலே பொருந்தியதாமென்று புலந்தெளிந்ததால் - என்க!

வயிரத்தை அளமியத்திற் (Aluminium) பதித்தல் போன்ற பொருத்தமற்றது - அவ்வெளிய நடையில் உரைப்படுத்தலாகிய செயல்! வயிரம் - பொன்னிற் பதிவுறலினும் தூயதங்கத்தில் பதிவுறலிலேயே - ஒளி துலங்கி அழகிலங்குவதாகும்! அப் போன்மைப் பான்மை - இவ்வுரையிற் பிறங்குதலை அறிவார் அறிவர்!

அனைத்தையும் உலகியலுண்மைகளோடும் தம் சொந்தப் பட்டறிவுகளோடும் பொருந்த எண்ணிப்பார்த்து - இதற்குரியனவாகப் பலர்பலரால் இதுகாறும் (கடை விரித்துப்) பரப்பப் பெற்றுள்ள பல்வேறு உரைத்தெறிப்புகளையெல்லாம் தம் புலத்தில் உள்வாங்கிக்கொண்டு, சிலவற்றை விளைவுக்கே எவ்வகையிலும் தகாதனவெனத் தெள்ளிப் புறந் தள்ளியவராய், உரிய நெற்று மணிகளிற் சிலவற்றை மட்டும் தேர்ந்து தெளிந்து ஏற்றுக் கொண்டு, சிலவற்றைத் தம் புல வினைக்கு உரமாகவே இட்டுக் கொண்டு, நேரிய மணியை நிரல்படக் கோத்தவாறு - சீரிய செழுமிய எழிலியை ஏற்றச் சொன்மணிகளை இவ்வுரை நூலில் கோத்தமைத்துள்ள கொழுமையழகு - தனிஇப் பொலிவுடையதாயுள்ளது! உண்மை உரைகல்லில் உரைத்துப் பார்த்து உரைத்துள்ள உயர்ந்த பொன்னுரைகள் இவை!

ஆரியவியல் கொள்கைகளாக எங்கெங்கெல்லாம்? முன்னைய-? அண்மைய உரையாசிரியர்கள் பலரின் உரையிடங்களில் பதிவிடப் பெற்றுள்ளனவோ - அங்கெங்கெல்லாம் ஆர அமரத் தங்கிநின்று அவற்றை முறையுற மறுத்து, உரிய உண்மைகளை நிலைநாட்டிச் செல்லும்போக்கு, - தமக்கே ஆசிரியத் தகைமை சான்றவராயிருந்த பைந்தமிழ்ப்பாவாணர் அவர்கள் - பரிமேலழகரைப் பின்பற்றிச் சறுக்கியவாறு உரை வரைந்துள்ள இடங்களிலெல்லாம் தாம் ஒருபாற்கோட்டமலும் கண்ணோட்டம் நோடாதும்

வெளிப்படையாகவே வன்மையாகவே மறுத்து - தேவையானவிடத்துக் கண்டித்துக் கருத்துக்கூறும் போக்கு, - முன்னுரையாசிரியர் முன்னி முனைந்து கண்ட நுட்பங்களை ஏற்றுத் தக்கவிடங்களில் அவற்றை நன்றியுணர்வொடு பதித்துச் செல்லும் போக்கு, - காலவட்டத்தில் மீண்டும் மீண்டும் கூறப்பெற்ற உண்மையல்லாக் கருத்துகள் கல்வியுலகில் ஆழப் பதிவு கொண்டுள்ள இடங்களில் - அவற்றுக்குப் பேராளமான எடுத்துக்காட்டுகளாலும் சான்றுகளாலும் ஏரணமுறைகொண்டு மறுப்புகள் சுட்டித் திருவள்ளுவர் தம் உள்ளத்தை நிலைநிறுத்திக்காட்டிச்செல்லும் அரிய முயற்சிப்போக்கு, - திருவள்ளுவர்பெருமான் எந் நோக்கத்துக்கென எழுதிச்சென்றாரோ - அதனை உரிய இடங்களிலெல்லாம் நன்கு வலுப்பெற விளக்கிச்செல்லும் போக்கு, - சொல்லுக்குரிய பொருள் அளவை, இடத்திற்கேற்பவும் யாத்த அக்காலத்திற்கேற்பவுமாக உட்செறித்துக்கொண்டு - இக்காலத்திற்குத் தெளிய விளங்கும்படியான சொல்லமைப்பில் அதனை நிறுத்திக் காட்டும் நுண்ணிய உத்திமுறை பயிலும் உரையுரைப்புப்போக்கு என்றனைய இவ்வுரைச் சுருக்கப் பதிப்புள் அடங்கியொளிறும் செம் போக்குகள் சிறப்பொடு ஈண்டுச் சுட்டத் தகுவனவாகும்!

திருவள்ளுவர் உள்ளத்தின் உட்கிடைகளை ஏரணமுறையிற் கூர்ந்தெண்ணித் தேற்றமாகவும் ஊற்றமாகவும் அவற்றை ஆங்காங்கும் அமைத்திருக்கும் மேம்பாடும் - இவ்வுரையாக்கத்தின் உச்சமேன்மையும், இதுகாறும் வெளிப்போந்துள்ள உரைகளொடு ஒப்பிட்டுக் கண்ட பின்னரே எவர்க்கும் விளங்கித் தோன்றுவதாகும்! அவ் வகையிற் பெரும்பான்மையளவிலாக ஒப்பிட்டுக் கண்ட உவகை மகிழ்ச்சியில் ஊக்கநிலையுற்றே இதனை உங்கள் முன் உரைக்கின்றேன்!

பெருங்கருத்தைச் சுருக்கி வார்த்த குறள்யாப்பின் உருத்தோற்றம் போன்றே - நம் பாவலரேறு ஐயா அவர்களின் இவ் வுரைச் சுருக்கமும் நுணங்கிய நோக்கினர்க்கான திணுகிய வடிவமைப்பில் தீட்டப் பெற்றுள்ளது! சீரிய இச்செஞ்செயலின் பாரிய பெருமையை அவரின் நேரிய விளக்கவுரையிலேயே நாம் நிறைவாரக் காணவியலும்!

இன்று, இங்குச் சோறுமட்டும் பரிமாறப்பெற்றுள்ளது! சாறுங், குழம்பும், வகைவகை வறையும், கறியும் பொரியும், கும்ம் மணஞ் சான்ற கொழுஞ் சுவைத் தயிரும் அயிருங்காலம் அண்மி வருகின்றது! ஆம்! . . . அது அண்மையில்! . . . அன்று, நம் ஆனைத் தீயன்ன அறிவுப்பசி ஆறும்! அதற்குரிய உரையாறும் முறையுற விரைவாரும்! அதுவரை - இச் சுருக்குரை நம்முன் வீறும்! . . . நாம் முதற்கண் தேறும்படிக்கெனக்

கூறிய கூறே - இப் பேறும்!

இதுவரை வந்து வரிசை கொண்டுள்ள உரைகள் அனைத்தினுக்கும் மேம்பட்ட நுண்மையதும் - திண்மையதும் - ஒண்மையதும் - தெண்மையதும் - வன்மையதும் - முன்மையதும் - முதுவதும் - புதுவதும் - வண்மையதும் உண்மையதுமாகித், திருவள்ளுவர் வாயுரைக்கெனவே வாய்த்துள்ள **தகவுரை** என்பது இம் மெய்ப்பொருளுரையே!

இத் தகவுரையானது, எதிர் வரவுள்ள விளக்கப்பேருரைக்கு, - ஓர் அகவுரையே! இவ்வகவுரையாகிய மகவுரைக்குத் (பெருமையுரை) தாயுரையே திருவள்ளுவர்பெருமானின் வாயுரை ஆகும்! அவ் வாயுரையுள் தோய்ந்துறைந்து நம் ஐயாஅவர்கள் உரைத்து வரும் இச் செயல் தொடக்கம் . . . இனித் தொடர்ந்து நடக்கும்! . . அது நம் அறிவுப்பசியையும் அடக்கும்; அதே கணத்தில் - நம் பகைக் கணத்தின் கொட்டத்தையும் எற்றியடக்கும்! அன்று, நம் இனம் விழிக்கும்! எதிரியின் இனமும் - இனும் இன்ன செய்வதெனத் தெரியாது விழிக்கும்! . . .

மீண்டும் கூறுகின்றேன்! இதுவே, - திருவள்ளுவர் வாயுரைக்குரிய தகவுரையாகும்! இதுவே என்னின் தகவுரையுமாகும்!

தஞ்சை
25.1.1993

அன்பன்,
ப. அருளி

# பொது முன்னுரை

## 1. உரை எழுத விழைந்த நோக்கமும் சூழலும் உருவாக்கத் திட்டமும்!

அழிவற்ற நம் அரும்பெரும் **திருக்குறள்** நூலுக்கு இன்றுகாறும் நூற்றைம்பதுக்கு மேற்பட்ட உரைகள் அது தோன்றிய நம் அறத்தமிழ் மொழியிலும், அண்டை அயல் மொழிகளிலும் தோன்றித் துலங்கி, மூல நூலுக்கு உயிர்ப்பும் செழிப்பும் சிறப்பும் பரப்பும் உயல்வும் பயில்வும் ஊட்டி வருகின்றன. திருக்குறள் போல் உலகில் தோன்றிய வேறு எம்மொழி நூலுக்கும், எவ்வற நூலுக்கும் இப் பலர்பால் உரைப்பேறு வாய்த்ததில்லை என்று வலிந்தும் துணிந்தும் கூறலாம்.

மக்கள் குலம் முழுமையும் கருத்திலும் செயலினும் மேம்பாட்டினும் அளாவியும், அனைத்துக் காலத்தையும் இடத்தையும் தழுவியும் நிற்கும் ஒருதனிப் பேறாய் நின்றிலங்கும் ஓர் அரும் பெரும் அரிய அறநூலுக்கு, இத்துணை மாந்தப் பார்வை செல்லுவதும், அதன் மேல் இத்துணை ஆய்வு நோக்குகள் கொள்ளுவதும் வியப்பன்று; உரைப் பெருக்கம் சார்வது செயற்கையுமன்று; இயற்கையே! இந்நிலை இந்நூலுக்குப் பெருமையே தவிர, எனைத்தானும் சிறுமையே அன்று.

ஆயினும், இந்நூலுக்கு இன்றுவரை வெளிவந்த எம் கண்களிற் பட்ட நூலுரைகள் யாவும், அந்நூலின் கருப்பொருளுக்கும் திருப்பொலிவிற்கும், அஃகியகன்ற அறிவுச் செறிவிற்கும், உணர்வுத் திணர்வுக்கும், மெய்ப் பொருளுக்கும், உய்ப்பு அருளுக்கும் ஏற்றவாறு செய்யப் பெற்றுள்ளனவோ எனில், எம்மைப் பொறுத்த அளவினும் எம் சிற்றறிவிற்கு எட்டிய உணர்வினும் இல்லை என்றே சொல்ல வேண்டியுள்ளது.

இது பற்றியெல்லாம், கடந்த அரசியல் இருட்காலமாகிய 1975-76-ஆம் ஆண்டுகளில், யாம் சிறைப்படுத்தப் பெற்று, ஓராண்டுக் காலம், சென்னை, நடுவண் சிறையுள் வைக்கப் பெற்றிருந்த பொழுது, தீவிரமாகச் சிந்திக்கவும், அதன் வழித் தக்கவொரு தீர்வுக்கு எம்மைக் கொளுவிக்கவும் வேண்டியிருந்தது.

இவ் வகையில், எம் விழித்திறவுக்கு மொழிப்புலங் காட்டிய, விழுப்பெருந் தோன்றல், தமிழ்ப்பேராசான், மொழிஞாயிறு **ஞா. தேவநேயப் பாவாணர்** புலப்படுத்திய, **'திருக்குறள் தமிழ்மரபுரை'**யும், எமக்கு ஒரு சிறிதும் நிறைவளிக்கவில்லை யெனின், பிறர் பிற உரைகளெல்லாம் பற்றிக் கூறுதல், வறட் பாறைக்கண் வளந்தேடுதல் போன்றதே! சுருங்கக் கூறுமிடத்து, திருக்குறள் - பரிமேலழகர் உரையே ஒரு பொறுக்கு மணியாக உள்ளது எனலாம். ஆனால், அவரின் இன, மதக் காப்புணர்வாலும், தமிழறக் காழ்ப்பெரிவாலும், மூல விடங்களிலெல்லாம் பெய்து போகிய ஆரியப் பார்ப்பனீயச் சார்புரைகளாலும், அவர் பழிக்கப்பட வேண்டிய அல்லது கண்டிக்கப்பட வேண்டிய - ஒருவராகவே உள்ளாரேயன்றி, அவர் கண்டு காட்டிய உரையூற்றம் இல்லாமற் போமாயின், திருக்குறள் மணியின் முழுஒளிச் சிதறலையும் உலகம் உணர்ந்திராது என்னும் உண்மையை யாரும் மறைத்தோ மறுத்தோவிடற்கியலாது. எனினும் பரிமேலழகர் உரையின் புரைகளைப் பாவாணர் காட்டிய ஒருவகைப் பாங்கு ஓரளவு போற்றுதற்குரியதே என்க. அது, திருக்குறள் நோக்கிற்கே ஒரு திருப்பத்தைத் தந்தது எனலாம். ஆயினும், அவரும் பெரும்பாலான விடங்களில் பரிமேலழகர் பதித்துச் சென்ற காலடிகளின் மேலேயே தம் காலடிகளையும் வைத்துச் சென்றுள்ளது யாவர்க்கும் எளிதே புலப்பட்டு விடும் தன்மையதே.

இனி, பாவாணர்க்கு யாம் தந்த உரைச் சிறப்பும் பாயிரத்துள்,

'பத்துரைக்கு மேலும் பரிமே லழகரோ(டு)
ஒத்தவுரை நூறுசெய்தும் ஒன்றாமே - — மெத்ததிரு
வள்ளுவனார் நூலுக்கு வாய்மை உரைசெய்தார்
தெள்ளுதமிழ்ப் பாவாணர் தேர்ந்து'

பாடல்: 1.

**'திருக்குறள் தமிழ்மரபுரைச் சிறப்புப் பாயிரம்'**

'தேவநே யன்என்னும் தேர்ந்தமதிப் பாவாணர்
தேவத் திருக்குறட்குத் தீர்ந்தவுரை -மேவியபின்
மற்றோர் உரைசெயவும் மானுவரோ? மானுவரேல்
கற்றோர் நகைப்பர் கலித்து'

— மேற்படிநூல், பாடல் : 10.

— என்றோர் உறுதி கூறியிருந்ததும், பின்னர் யாம் மேலும் ஓர் உரையெழுதத் துணிந்ததும், காலத்தால் நேர்ந்த கட்டாயக் கருத்து வெளிப்பாடுகளே! அவ்வெளிப்பாட்டிற்கும் அம்மெய்ப்பொருள் உணர்வே கரணியமாக அமைந்ததெனில், அது புனைவோ பொய்யோ ஆகா தென்க.

இனி: 1975 - 76 - களில், எம் சிறையிருப்பின்பொழுது, **'திருக்குறள் மெய்ப்பொருள் உரை'**யை, யாம் எழுதத் திட்டமிட்டபடி, அஃது ஏறத்தாழ ஐயாயிரம் பக்க அளவில் வருமென்பதும், அவ்விரிவும் விளக்கமும் பற்பல சிறப்பியல்களும் வாய்ந்த உரைக் கருத்துகளை அடிதாங்கி, ஏறத்தாழ ஐம்பதினாயிரம் குறிப்புகளும், நூற்சான்றுகளும் கொண்டிருக்குமென்பதும், அவற்றுக்குரிய ஆராய்ச்சிக் காலம் ஐந்தாண்டுகளும், ஆக்கக் காலம் ஐந்தாண்டுகளுமாக மொத்த உருவாக்கக் காலம் பத்தாண்டுகளாக இருக்குமென்பதும், அக்காலத்தில், எமக்கு, உணர்வும், அறிவும், உழைப்பும், ஒரே நோக்கமும், இயற்கையிலேயே பொருந்திய ஓர் அணுக்கத் துணையாளர் இன்றியமையாத் தேவை என்பதும், அவரும் ஓர் ஆண்துணையாக விருப்பின் பொருந்தாமற் போகுமாகலின், பெண் துணையே பொறையும் நிறையும், அமைவும் சமைவும், எண்ணச் சிதர்வின்மையும் கொண்டு, இயங்கல் தகுதியும் உடையதாக இருக்கும் என்பதால் அத்தகு துணை வாய்க்க வேண்டும் என்பதும், அஃதோர் இறைப் பேறாகத்தான் அமைய முடியும் என்பதும், பிற சிலவும் எண்ணி வகுத்துக்கொண்ட கோட்பாடுகள் ஆகும். அவ்வகையில் அக்காலே அம்முயற்சி தொடங்கி, ஏறத்தாழ பத்தாயிரம் குறிப்புகளும் எடுக்கப் பெற்று, பிற ஆய்வுகளிலும் தோய்ந்து, உரைப்பணி தொடர்ந்து நடந்து வந்தது.

யாம் ஏற்கனவே எடுத்துப் போட்டுக்கொண்ட இலக்கிய ஆக்கப் பணிகள், இதழ்ப் பணிகள், சொற்பொழிவுப் பணிகள், இன, நாட்டுப் போராட்ட முயற்சிகள், முதலியவற்றுடன், திருக்குறள் மெய்ப்பொருளுரை எழுதுவதையும். ஒரு கூடுதல் பணியாகத் தோள்மேல் சுமந்து கொண்டதால், அம் முயற்சி இடையிடை மிகவும் மெதுவாகவே நடந்து வரலாயிற்று. தகுதுணை அமையக் காலமும் கருத வேண்டுவதாயிற்று.

இந்நிலையில் யாம் வேண்டியபடி, 1982 திசம்பர் இறுதியில், நற்றுணை யொன்றும் வந்து வாய்த்திடக் காலம் கைதர விருந்தது. ஆனால், எம் உயரிய நோக்கத்தை - அறிவியல் ஆக்கத்தை, உலகியல் நோக்கோடு வைத்துப் பொருத்திப் பார்த்த எம் வாழ்வியல் **மனைத்துணை** யுறவுகள், இறையருளால் வரவிருந்த அவ் **வினைத்துணை** யுறவுப் புதுமைக்கு ஏதமும் இழிவும் பழியும் கற்பித்து, எதிரேறி நின்று, வாய்வழக்குச் சதிராடி, எம் உள்ள உணர்வுகளை நுறுங்கடித்து, எம் அறிவையும் கிறங்கவைத்து, அச்

சூழலையே கலைத்தழித்து விட்டன. அதன் தாக்கத்தில் மீண்டும் அப்பணி தொடங்கும் வாய்ப்பு உள்ளமுந்திப் போய்விட்டது.

ஆயினும், அவ்வுணர்வை அவ்வப்பொழுது சில, நல்லுள்ளங்கள் நினைவூட்டி வந்தன. இறுதியில் கடந்த (1991) சூன் மாத இடையில், ஒரு நாள் இரவு முழுவதும் இந் நூலாக்க உணர்வு தன்னளவில் தானே கிளர்வு கொண்டு உள்ளத்தில் ஒரு பெரும் தாக்கத்தை உருவாக்கியது. அதன் விளைவாக அன்றைய விடியலில் ஒரு நன் முடிவுக்கு நாம் வந்தோம். அஃது இது:

"**திருக்குறள் மெய்ப்பொருளுரை**"யினை நாம் முதலில் திட்டமிட்டு வகுத்துக் கொண்டவாறு முழு அளவில் எழுதப் புகுவதானால், அதற்குரிய நேரமும் சூழலும் துணைவாய்ப்புகளும் அதுவரை வந்து நேரவில்லை. அவ்வாறு நேர்ந்து காலமும் இடமும் பொருந்தி வரும் சூழல் எக்கால் அமையுமோ என்பது அக்கால் தெரியவில்லை. அப்படியே அமைந்தாலும், அப்பொழுது தொடங்கி அவ்வுரை முடிய ஏறத்தாழ, பத்து ஆண்டுகள் ஆகலாம். அப்பொழுது, இக்கால் அவ்வுரையை எதிர்பார்ப்பவர்கள் பலர் இல்லாமலும் போகலாம்; நம் உடல், உள்ள நிலைகளும் எவ்வளவாக இருக்குமென்றும் கூறுதற்கு இயலாது.

"இவ்வாறான சூழலில் இக்கால் உள்ளவர்கள் ஓரளவு நிறைவு பெற, அதன் உரைச் சுருக்கத்தையேனும் எழுதி வெளியிட்டுவிடலே நன்றாகும். அதன் விரிவாக்கத்தையெல்லாம் எம் வாழ்க்கை இறுதிக்குள் எழுதிவிடலாம். இச் சுருக்கவுரையையும் அடுத்து வரும் எம் அறுபதாண்டு நிறைவின் பொழுது (1993) நூல் வடிவில் வெளியிட்டுவிடுதல் வேண்டும்" என்பதாக முடிவு செய்தோம்.

அம்முடிவின்படி, உடனே (1991 - சூன் மாத இறுதியிலிருந்தே) எழுதத் தொடங்கி விட்டோம். அதன்படி, அவ்வுரை 1992 திசம்பர் முடிவு வரை, முதல் பகுதியான ஓர் அறுநூறு பக்க அளவில் எழுதப் பெற்றது. எனவே, அதனை அச்சிடுவிக்கவும் திட்டமிட்டு, அச்சுக்கும் கொடுத்தோம்.

ஆனால், அப்பணி தொடர்ந்து நடைபெறா வண்ணம், 1993, சனவரி 26-ஆம் பக்கல் தமிழக அரசு எம்மேல் கடுங்குற்றம் ஒன்றைச் சுமத்தி, 'தடா' என்னும் கருப்புச் சட்டத்தின் கீழ்த் தளைசெய்து, சென்னை நடுவண் சிறையுள் வைத்தது. அதன் பிடியில், 1993 ஆகத்து 26 வரை, சரியாக ஏழு மாதங்கள் சிறையுள் இருக்க வேண்டியதாயிற்று!

இந்தக் கடுஞ்சூழ்நிலையால், 1993 மார்ச்சு 10-ஆம் பக்கல், எம் அறுபதாம் அகவை நிறைவுநாள் அன்று வெளியிடுவதாகத் திட்டமிட்டிருந்த, இத் '**திருக்குறள் மெய்ப்பொருளுரை**' நூலின் **முதல் பகுதி**, அச்சு முடிந்து,

இம்முன்னுரை எழுதப்பெறாத நிலையில், வெளியிடற் கியலாமல் போனது.

ஆனாலும், அதன் இடையீட்டுச் சிறையிருந்த ஏழு மாதக் காலத்தையும், சிறைக்குள்ளிருந்தவாறே, தொடர்ந்து உரையெழுத வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொள்ள முடிந்தது என்பதும் ஓர் இறையருளே! அதன்படி வெளியிலிருந்து எழுதிய இம் முதல் பகுதியைத் தொடர்ந்து, மேலும் மூன்று பகுதிகள், அஃதாவது ஏறத்தாழ ஆயிரத்து எண்ணூறு பக்கங்கள் சிறைக்குள்ளேயே எழுதி முடிக்கப்பெற்றன.

அதன் பின்னர், சிறைமீண்டு வந்த பின்னும், இரண்டு மூன்று மாதங்கள் எம் வீடு மாற்றத்திலும், அதனைத் தொடர்ந்து நிகழ்ந்த எம் குடும்ப நிலைத்துயரத் தாக்கங்களிலும், எம் அன்னையார் மறைவாலும், அழுந்தியிருந்த ஓர் அமைவற்ற சூழலாலும், இம் முன்னுரை எழுதப் பெற்று, இவ்வுரையின் முதல் பகுதியாகிய இந்நூல் வெளிவர இத்துணைக் காலத்தாழ்வு நேர்ந்துவிட்டது என்க.

இனி, இத் **'திருக்குறள் மெய்ப்பொருளுரை'** என்னும் இந்நூல், இன்றைய மதிப்பீட்டின்படி, ஏறத்தாழ எண்ணாயிரம் பக்கங்கள் கொண்டதாகவும், அவை, ஒவ்வொன்றும் ஏறத்தாழ அறுநூறு பக்கங்களைக் கொண்ட, பதினான்கு அல்லது பதினைந்து பகுதிகளாக, ஒன்றன் பின் ஒன்றாக, ஏறத்தாழ ஐந்தாண்டு எல்லைக்குள் வெளிவரும் என்றும் திட்டமிட்டுள்ளோம். தொடக்கத்தில் எண்ணியிருந்த நிலை வேறு; இக்கால் எண்ணியிருக்கின்ற இந்நிலை வேறு. இனி,. இதனினும் மாற்றங்களும் ஏற்றங்களும் நிகழலாம். உடல் நிலையும் காலநிலையும் பொருள் வாய்ப்புகளும் வாய்க்கின்ற நிலைகளைப் பொறுத்தும் இவ்வெளியீடுகள் மாற்றமும் பெறலாம். திருவருட் பேறு எவ்வாறு இயங்குகின்றதோ அதைப் பொறுத்தது, அது.

இனி, திருக்குறள் பற்றிய பெருமை கூறுகையில், யாவரினும் மேலாகவும் சுருக்கமாகவும், இடைக்காடர்,

'கடுகைத் துளைத்து) ஏழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்'

— *தி.வ.மா: 54.*

என்றும், ஔவையார் அதனினும் நுட்பமாக,

'அணுவைத் துளைத்து) ஏழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்'

— *தி.வ.மா: 55.*

என்றும் கூறுவர். இங்கு இருவரும் அஃது ஒரு கடல் போன்றது என்று கூறியது எண்ணி வியக்கத்தக்கது. உண்மையிலேயே திருக்குறள்

இன்னும் தெளிவாகச் சொன்னால், அணுக்களும், அண்டங்களும் அவற்றின் இயக்கங்களும் மெய்ம்மமே! அவற்றின் தவறும் சரியும்கூட மெய்ம்மமே! அவற்றின் விரிவும் விளக்கங்களும் கூட மெய்ம்மமே!

– இவற்றின் மெய்ம்ம இருப்பையே திருக்குறள் கூறுகிறது. மெய்ம்மங்களின் – இயற்கையின் – சுழற்சியிலே மாந்த மெய்ம்மத்தை மட்டும் தனியே பிரித்தெடுத்துக் கூர்மைப் படுத்தி, அதன் இயக்க நிலைகளைக் காட்டும் முயற்சியே திருக்குறள். அதன் முடிவு காண்கின்ற முயற்சிகளே உரைகள். அவற்றின் வெற்றியும் தோல்வியும் காலத்தையும் கருத்தையும் பொறுத்தன.

மாந்தருள் ஆண், பெண் பெயர்களும், ஆணுக்குத் தந்தை, மகன், அண்ணன், தம்பி, நண்பன், உறவன், கணவன் -முதலிய பெயர்களும், பெண்ணுக்குத் தாய், மகள், அக்கை, தங்கை, நண்பி, உறவி, மனைவி -முதலிய பெயர்களும், மாந்த மெய்ம்மத்தின் இருப்பு மாற்றங்களே! இவர்தம் உறவையும் உறழ்வையும், அவற்றால் விளையும் பயன்களையும் விளக்குவதே திருக்குறள். அவற்றை மேலும் நன்கு புலப்படுமாறு விளங்கச் செய்வனவே உரைகள்! அவற்றின் துல்லியத்தைக் காண்பதே இம் மெய்ப்பொருள் உரை!

இனி, திருக்குறளில் இவ்வளவுதாம் சொல்லலாம் என்பதில்லை; இன்னமும் சொல்லலாம்; எவ்வளவும் சொல்லலாம். உலக உயிர்களில் சிறந்து நிற்கும் மாந்தனின் உறவுகளையும், துய்ப்புகளையும், இன்ப துன்பங்களையும், எழுச்சி ஒடுக்கங்களையும் ஒருவாறு அடையாளம் காட்டி விளக்கிக் கூறுகிறது, திருக்குறள். – அவற்றை இஃது இன்னின்னது என்று சுட்டிக் காட்டுகிறது இவ்வுரை.

இதில் சாதியில்லை; மதமில்லை; இனமில்லை. மாந்த இனத்தை வேறு பிரிக்கும் எந்த வேற்றுமைக் கூறும் இதில் இல்லை, என்க.

காற்று, உலகெங்கும் வீசிக்கொண்டிருந்தாலும் ஓர் இடத்திலும் உறைந்து நின்று விடாதது போல், மாந்த இனம் பல்வேறு இயக்கங்கட்கு ஆட்பட்டிருந்தாலும், ஒன்றினும் உறைந்துவிடக்கூடாது என்பதே திருக்குறள் கூறும் மாந்த மெய்ம்மம்.

மாந்தன் இயங்குவதுதான் இல்லறம், அரசியல், பொருளியல், வாழ்வியல்!

அவன் நின்று நிலைத்துவிடுவது தான் துறவறம், பேரா இயற்கை!

இந்நிலைகளையெல்லாம் முற்ற முடிந்த நிலையில் அடையாளம் காட்டிப் பேசுவதுதான் இம் மெய்ப்பொருள் உரை!

இன்னும் தெளிவாகச் சொன்னால், அணுக்களும், அண்டங்களும் அவற்றின் இயக்கங்களும் மெய்ம்மமே! அவற்றின் தவறும் சரியும்கூட மெய்ம்மமே! அவற்றின் விரிவும் விளக்கங்களும் கூட மெய்ம்மமே!

— இவற்றின் மெய்ம்ம இருப்பையே திருக்குறள் கூறுகிறது. மெய்ம்மங்களின் — இயற்கையின் — சுழற்சியிலே மாந்த மெய்ம்மத்தை மட்டும் தனியே பிரித்தெடுத்துக் கூர்மைப் படுத்தி, அதன் இயக்க நிலைகளைக் காட்டும் முயற்சியே திருக்குறள். அதன் முடிவு காண்கின்ற முயற்சிகளே உரைகள். அவற்றின் வெற்றியும் தோல்வியும் காலத்தையும் கருத்தையும் பொறுத்தன.

மாந்தருள் ஆண், பெண் பெயர்களும், ஆணுக்குத் தந்தை, மகன், அண்ணன், தம்பி, நண்பன், உறவன், கணவன் -முதலிய பெயர்களும், பெண்ணுக்குத் தாய், மகள், அக்கை, தங்கை, நண்பி, உறவி, மனைவி முதலிய பெயர்களும், மாந்த மெய்ம்மத்தின் இருப்பு மாற்றங்களே! இவர்தம் உறவையும் உறழ்வையும், அவற்றால் விளையும் பயன்களையும் விளக்குவதே திருக்குறள். அவற்றை மேலும் நன்கு புலப்படுமாறு விளங்கச் செய்வனவே உரைகள்! அவற்றின் துல்லியத்தைக் காண்பதே இம் மெய்ப்பொருள் உரை!

இனி, திருக்குறளில் இவ்வளவுதாம் சொல்லலாம் என்பதில்லை; இன்னமும் சொல்லலாம்; எவ்வளவும் சொல்லலாம். உலக உயிர்களில் சிறந்து நிற்கும் மாந்தனின் உறவுகளையும், துய்ப்புகளையும், இன்ப துன்பங்களையும், எழுச்சி ஒடுக்கங்களையும் ஒருவாறு அடையாளம் காட்டி விளக்கிக் கூறுகிறது, திருக்குறள். — அவற்றை இஃது இன்னின்னது என்று சுட்டிக் காட்டுகிறது இவ்வுரை.

இதில் சாதியில்லை; மதமில்லை; இனமில்லை. மாந்த இனத்தை வேறு பிரிக்கும் எந்த வேற்றுமைக் கூறும் இதில் இல்லை, என்க.

காற்று, உலகெங்கும் வீசிக்கொண்டிருந்தாலும் ஓர் இடத்திலும் உறைந்து நின்று விடாதது போல், மாந்த இனம் பல்வேறு இயக்கங்கட்கு ஆட்பட்டிருந்தாலும், ஒன்றினும் உறைந்துவிடக்கூடாது என்பதே திருக்குறள் கூறும் மாந்த மெய்ம்மம்.

மாந்தன் இயங்குவதுதான் இல்லறம், அரசியல், பொருளியல், வாழ்வியல்!

அவன் நின்று நிலைத்துவிடுவது தான் துறவறம், பேரா இயற்கை!

இந்நிலைகளையெல்லாம் முற்ற முடிந்த நிலையில் அடையாளம் காட்டிப் பேசுவதுதான் இம் மெய்ப்பொருள் உரை!

இதை அவரவர் அறிவு வளர்ச்சிக்கும் முதிர்ச்சிக்கும், இயல்பு நிலைகளுக்குகொண்டிருந்ததால், மாற்றினத்தவர்களால் அதை அழிக்க முடியவில்லை."

இனி, இவ்வுரை நூலுள் நாம் கையாண்ட நடை பற்றி ஒரு விளக்கம் இங்குத் தரவேண்டியுள்ளது.

இந்நூலின் முதற்பகுதி எழுதி முடிக்கப் பெற்ற பின் அதிலிருந்து ஒரு பத்து குறளுரைகளை நாம் நம் **தென்மொழி** இதழில் வெளியிட்டு, இவ்வுரையின் சிறப்பியல்களைத் தமிழறிஞர்களும் தமிழன்பர்களும் அறிந்து இதன் வெளியீட் டுக்கு உதவுமாறு ஓர் அறிவிப்பு தந்திருந்தோம். **தென்மொழி;** சுவடி : 26; ஓலை : 8) அவ்வுரைப் பகுதியைக் கண்ட அன்பர்கள் சிலர், "மெய்ப்பொருள் உரை'யின் நடையை இன்னும் கொஞ்சம் எளிமைப்படுத்தி வெளியிட வேண்டும்" என்றும், அவ்வகையில் நாம் இதழ்களில் கையாளும் மூவகை நடைகளைக் குறிப்பிட்டுத் **தென்மொழி** இதழ் நடையிலிருந்து சற்று இறங்கித் **தமிழ்நிலம்** இதழ் நடையிலோ, அல்லது இன்னும் எல்லாரும் எளிதாக அறிய உதவும் வகையில் **தமிழ்ச்சிட்டு** இதழ் நடையிலோ மேற்படி மெய்ப் பொருள் உரை அமையுமானால், வளரும் இளைய தலைமுறையாம் மாணவர்கள் முதல் மற்ற எல்லாரும் பயன்படுத்த பெரும் வாய்ப்பாய் அமையும்" என்றும், ''மேலும்' கூறவேண்டுமானால், உரைகளிலேயே பரிமேலழகர் உரை சிறந்தது என்று பலரும் கூறுவர். (கருத்து வேறுபாடும் உண்டு). இருப்பினும் அதனையே குறள்போல் இன்னொருவர் மூலம் விளக்கக் கேட்டால்தான் மாணவர்கள் நிலையில் உள்ள மற்றவர்களும் புரிந்து கொள்ள இயலும். எண்ணிப் பாருங்கள் என்றும் வேண்டி விரும்பி எழுதியி ருந்தனர். (தென்மொழி - சுவடி: 26; ஓலை:9).

அதற்கு விடையாகப் பின்வருமாறு நாம் விளக்கம் தந்திருந்தோம். மேற் குறிப்பிட்ட இதழ்)

"நூலின் பொருள் உயர்ச்சிக்குத் தகுந்த உரைநடையே பொருந்துவது; வையிரத்தைத் தங்கத்தில் தான் பதிக்க வேண்டும்; வெள்ளியில் கூட பதியார். அவ்வாறு பதிப்பது வையிரத்தின் பெருமைக்குக் குறைவு செய்வது போல் ஆகும்! மொழியறிவு வேறு; கருத்தறிவு வேறு. கருத்துக் கேற்ப நடை அமைவதுதான் சிறப்பு. எளிமை எளிமை என்றுதான் நாம் தெருநிலைக்குத் தாழ்த்திவிட்டோம். எதிரிகளும் இதையே வாயப்பாகக் கருதித் தமிழை நாள்தோறும் மேலும் மேலும் தாழ்த்திக் கல்லாதார் மொழி யாக-தாழ்த்தப்பட்ட மொழியாக-சூத்திரர் மொழியாக இழிவுப்படுத்தி வருகிறார்கள். தமிழ் அளப்பரிய வளமும் செழுமையும் உயர்ச்சியும் கொண் டிருந்ததால், மாற்றினத்தவர்களால் அதை அழிக்க முடியவில்லை."

"எப்பொழுதும் ஒன்றை நினைவில் வைத்திருங்கள். தமிழின் உயர்ச்சி அளவுக்கு நாம் உயர்ந்து போக வேண்டுமே தவிர, நம்மின் தாழ்நிலை அளவுக்கு நம் தமிழையும் தாழ்த்தக்கூடாது. இதை எதிரிகள் பயன்படுத்திக் கொண்டுதான், தமிழை மட்டும் கலப்பாகவும் தாழ்வாகவும் ஆக்கி வருகிறார்கள். நாமும் அவ்வாறு செய்யக்கூடாது. இதனால் நம் மொழிக்கும் நமக்குந்தாம் தாழ்ச்சியே தவிர, நமக்குப் பயன் என்பதே இல்லாமற் போகும்."

"திருக்குறள் அதன் தன்மையில் உலக நூல்கள் யாவற்றினும் உயர்ந்தது. அது தமிழில் உள்ளதால் தமிழுக்கும் பெருமை; தமிழர்க்கும் பெருமை. எனவே அதைத் தமிழில் கற்பதால் கருத்தையும் உணர்கிறோம்; தமிழையும் உணர்கிறோம். அதன் உயர்ந்த கருத்துகளை அறிந்து கொள்வதைப் போலவே, மொழியின் உயர்ந்த தன்மைகளையும் அறிந்து கொள்ள வேண்டாவா?"

"மெய்ப்பொருள் உரை நீங்கள் நினைப்பது போல் அவ்வளவு கடின நடையன்று. அந்த நடைக்காகவே நூலைப் பலமுறை கற்க வேண்டிய இனிய, ஆற்றொழுக்கான அழகிய தனிச் சிறப்பான தூய தமிழ்நடையில் எழுதத் திட்டமிடப்பெற்றது. தமிழின் அத்தகைய நடையை வேறு எந்த மொழியினரும் ஒரு கலங்கரை விளக்கமாகக் காலங் காலத்திற்கும் காண வேண்டும் என்னும் கருத்துக் கொண்டே அவ்வாறு எழுத எண்ணப் பெற்றது. நமக்கது கடினமாக இருந்தால் நாம் மொழிநிலையில் மிகவும் தாழ்ச்சியுற்றிருக்கிறோம் என்று கருதி, இன்னும் உயர முயற்சி செய்ய வேண்டும்.

## 2. திருக்குறள் - ஒரு பொது மதிப்பீடு:

நம் அருந்தமிழ் மொழியின்கண் தோன்றிய பெருந்தமிழ்ப் பேரறநூலாகிய **திருக்குறள்** ஒன்றுதான்,

– உலகப் பெருநூல்களையெல்லாம் ஆக்கத்திலும் நோக்கத்திலும் வெல்லும் தரமிக்கது;

– அதற்கு ஒப்பதும் மிக்கதுமாகிய ஒரு **பேரறநூல், வாழ்வியல் நூல், பொதுமை நூல்,** காலத்தையும் இடத்தையும் பொருளையும் இனத்தையும் மதத்தையும் மீறியும் கடந்தும், வென்றும் நிற்கும், ஞாலம் முழுவதற்குமான ஒரு **வாலறிவு நூல்,** இன்றுகாறும் தோன்றியதில்லை, துலங்கியதில்லை என்பது ஒருதலை உறுதி.

– இது, வெறும் பேருணர்வும் பேரவாவும் கொண்டு கூறப்பெறும் கூற்றன்று; பேரறிவும், மாந்தப் பெருநோக்கமும் கொண்டும் கூறும் பேருண்மைக் கூற்றே ஆகும்.

தமிழிலுள்ள நூல்களும் சரி, உலகிலுள்ள வேறுசில தலைசிறந்த மொழிகளில் இதுவரை தோன்றியுள்ள நூல்களும் சரி, மாந்த வினத்திற்குத் தேவையான பொதுவியல், சிறப்பியல் கூறுகளில் தனித்தனியாகவும், ஒன்றிரண்டை அல்லது ஒரு சிலவற்றை மட்டுமே சிந்தித்ததாகவும் உள்ள நூல்களே ஆகும். ஆனால், பொது மாந்தவியல் கூறுகளை முழுவதும் ஒருங்களாவிச் சிந்தித்த நூல் முதன்முதல் திருக்குறள் ஒன்றேயாகும்.

இனி, தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு பிறந்தவர்களில் மட்டுமன்றி, உலக மொழிகளில் சிறந்த மொழிகளாகவுள்ள வேறு சில மொழிகளைத் தாய்மொழிகளாகக் கொண்டு பிறந்து, தமிழ் மொழியை ஏதோ ஒரு வகையில் கற்றுணர்ந்தவர்களிலும்கூட, திருக்குறளை அறியாதவர்கள் எவருமே இருக்க முடியாது.

இனி, யாதாம் ஒரு தேவையின் பொருட்டு ஒரு நூலைக் கற்பதென்பதுடன், அதைக் கற்றோம் என்னும் பெருமையின் பொருட்டும் ஒரு நூலைக் கற்கின்ற பெருஞ் சிறப்புக்கு உரிய நூல் உலக நூல்களில் திருக்குறள் ஒன்றேயாகும்.

இனி, தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழினத்தில் பிறந்தவரும், அயல் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு, தமிழ்மொழியைப் படிக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்ட அயலினத்தவரும், திருக்குறளை அறிந்துகொள்ள வாய்ப்பிருந்தும், அதை அறிந்து கொள்ளாமலேயே, இவ்வுலகில் பிறந்து மறைந்து விடுவாரானால், அவர் தம் பிறவிப் பேற்றின் ஒரு பகுதிப் பயனை இழந்து விட்டவரே ஆவர் என்பதை ஒவ்வொருவரும் நினைவில் வைத்துக்கொள்ளதல் வேண்டும். அத்தகைய சிறப்புக்குரிய உலகின் மிகமிகச் சிறந்த நூல்களுள் திருக்குறளும் ஒன்று.

அடுத்து, ஒரு நூல் முழுவதையும் மனப்பாடம் செய்து நினைவில் வைத்துக் கொள்ளும் தகுதியும் திறனும் வாழ்வியல் தேவையும் உள்ளதும், ஈராயிரத்து அறுநூற்று அறுபது அடிகள்(ஆயிரத்து முந்நூற்று முப்பது இணையடிகள்) கொண்டு அந்நிலைக்கு இசைவானதுமான ஒரு நூல், உலகிலேயே திருக்குறள் ஒன்றுதான் என்பதை நாம் நினைவில் கொள்ளுதல் வேண்டும். மற்றபடி, தமிழில் உள்ளதானாலும் வேறு பிற மொழிகளில் உள்ளதானாலும், ஒரு நூலின் சிற்சில பகுதிகளை மட்டுமேயன்றி, நூல் முழுவதையுமே மனத்தில் வைத்துக்கொள்ளும்படிக்கு அளவும் அமைப்பும் தகுதியும் வாய்ந்த நூல் நாமறிந்த வரை ஒன்றுமில்லை என்று உணர்ந்துகொள்க. அவ்வாறு ஒன்றிரண்டு எங்கேனும் இருப்பினும், அதனைப் பலரும் அவ்வாறு செய்தல் இயலாத ஒன்றாய் இருக்கும் என்று உறுதியாய் நம்புக.

இலக்கியங்கள் வெறும் வாழ்வியல் சுவைகளை மட்டுமே பேசுகின்றன. இதற்கு நெறிவிலக்காகச் சிற்சில இலக்கியங்களே மாந்த வாழ்வியல் நுட்பங்களையும், நல வழிகளையும் குறிக்கோள்களையும் கூறுகின்றன. இவ்விரண்டாம் வகை இலக்கியங்களுள் **திருக்குறள்** முதலானதும், தலையாயதும் ஆகும்.

இனி, தமிழ்மொழியின்கண் இக்கால் இலக்கியம் எனும் பிரிவின் உள்ளடக்கிக் கூறப்பெறும் சான்றோர் செய் நூல்கள் பற்பலவற்றுள், திருக்குறளே மிகுதியான உரையாசிரியர்கள், திறனாய்வாளர்கள், இயல் நூல் அறிஞர்கள், அறநூல் ஆசிரியர்கள், பொழிவாளர்கள், மனனம் செய்து மக்கட்கு வியத்தகு விளக்கங்கள் கூறும் பல்திறனாளர்கள், மொழி பெயர்ப்பாளர்கள், எழுத்தாளர்கள் முதலிய பன்முக அறிஞர்களாலும் மிகுதியும் எடுத்துக் கையாளப்பெற்றுவரும் ஒரு நூலாகும் என்பதை எண்ணிப் பார்ப்பின், இதன் பெருமையும் அருமையும் வழக்கும், காலநிலைப்புப் சாலப் போற்றுதலும் பெரிதினிது விளங்கும். மற்று, இது போல் வழக்கு நூல்கள் சிலவே. அவையும் சமயஞ் சார்ந்த நூல்களே; அல் இலக்கியங்களே!

எனவே, இவ்வகையுள், இன்றுள்ள மக்கள் வழக்கு நூல்களுள் இதுவே தொன்மையது, முன்மையது, அறங்கூறுவது, அரசியல் தெளிவது பொருளுரைப்பது, புலனறிவுறுத்துவது, இன்பம் நுவல்வது, இயற்கை தெரிப்பது, மெய்யறிவுணர்த்துவது, மேலோர் புகழ்வது, நீடு நிலைப்பது பாடுபொருள் சிறப்பது முதலிய பல்வகைப் பாராட்டுக்கும் சீராட்டுக்கும் உரியதாம் என்க. இனி, இவற்றுடன் தமிழியல் கோட்பாடுகளை, ஆரியவியலினின்று பிரித்தெடுத்து, மரபு நிலையில் தமிழின மாந்தப் பெருமையையும், பண்பியலையும் விளக்க முனைந்த முழு முயற்சியில் இதுவே முதலாவதும் முடிவானதும் ஆகும் என்று பெருமிதம் கொள்க.

இனி, தமிழில் உள்ள **'திரு'** என்னும் ஓர் உயர் சொல் பலவகையிலும் பற்பல சிறப்புப் பொருள்களைத் தருவதாகும். அழகு, செல்வம், செல்வத்தெய்வம், தெய்வத் தன்மை, சிறப்பு, ஒளி, பொலிவு, நற்பேறு, நல்வினை, மங்கலம், மங்கலநாண், ஒரு வகைத் தலையணி, மகளிர் மார்பில் அமர்ந்துள்ளதாகக் கருதும் ஒரு வீற்றுத் தெய்வம், நுகர்ச்சிப் பேறு, எல்லோராலும் விரும்பப்பெறும் தன்மை, கவர்ச்சி நிலை - என்னும் பொருள்கள் அவற்றுள் சில.

இவ் வுயர்ச்சி முன்னடைச் சொல், நூல் பெயர்களுக்கும் சில இடப் பெயர்களுக்கும் முன்னடையாக வந்து, அந்நூல்களின், - இடங்களின் பெருமையையும் சிறப்பையும் தெய்வத் தன்மையையும் உணர்த்தத் தமிழில்

வழங்குகிறது. ஆனால் அத்தகு நூல்களில் பலவும் சமயஞ் சார்ந்த நூல்களாகவே உள்ளன. இடப்பெயர்களும் அவ்வாறே.

அவ்வகையான இடப்பெயர்களுள் சில: திருஅகத்தியான் பள்ளி, திருஅச்சிறுபாக்கம், திருஅச்சோபுரம், திருவண்ணாமலை, திருஅம்பர்ப் பெருந்திருக்கோயில், திருஅம்பர் மாகாளம், திருஅம்பிலாந்துறை, திருஅச்சலி, திருஅரதைப் பெரும்பொழில், திருஅரிசிற்கரைப் புத்தூர், திருஅரிமேய விண்ணகரம், திருஅவணிவ நல்லூர், திருவழுந்தூர், திருவன்பில், திருஅன்னியூர், திருஆய்ப்பாடி, திருஆலம்பொழில், திருஆரூர், திருஇடும்பவனம், திருஇடைச்சுரம், திருஇந்தளூர், திருஇராதாபுரம், திருஇராமேச்சுரம், திருஇரும்பூளை, திருஇரும்பை, திருஇலம்பையங்கோட்டூர், திருஈய்ங்கோய்மலை, திருஉத்தரகோசமங்கை, திருஎயினனூர், திருஎருக்கத்தம்புலியூர், திருஎறும்பியூர் (திருவெறும்பூர்), திரு ஏகம்பம், திருமாம்புலியூர், திருசிரபுரம், திருக்கங்கை கொண்டான், திருக்கச்சி, திருக்கடம்பை, திருக்கடவூர், திருக்கடன்மல்லை (திருமாமல்லபுரம், மாமல்லபுரம்), திருக்கடிக்குளம், திருக்கடையூர், திருக்கண்டியூர், திருக்கண்ணங்குடி, திருக்கண்ணபுரம், திருக்கருகாவூர், திருக்கருக்குடி, திருக்கருப்பறியலூர், திருக்கருவிலி, திருக்கருவூர், திருக்கவித்தலம், திருக்கழுக்குன்றம், திருக்களிற்றுப் பாடி, திருக்காட்டுப் பள்ளி, திருக்காம்பிலி, திருக்காரோணம், திருக்காளத்தி, திருக்காழி (ஸ்ரீகாழி, சீர்காழி), திருக்குடமூக்கு, திருக்குடவாயில், திருக்குருகூர், திருக்குலசேகரன் பட்டினம், திருக்குற்றாலம், திருக்கூடலூர், திருக்கேதீச்சுரம், திருக்கயிலாசபுரம், திருக்கொடுங்குன்றம், திருக்கோட்டியூர் திருக்கோணமலை, திருக்கோவலூர், திருப்பெரும்புதூர், திருவொற்றியூர், திருச்சிராப்பள்ளி, திருச்சிற்றம்பலம், திருச்சீரலைவாய், திருச்செந்தூர், திருச்செப்பறை, திருத்தங்கல், திருவெண்காடு, திருப்பூந்துருத்தி, திருத்துறையூர், திருத்தெங்கூர், திருமுல்லைவாயில், திருநல்லூர், திருநள்ளாறு, திருநறையூர், திருத்துறைப் பூண்டி, திருநாகேசுவரம், திருவல்லிக்கேணி, திருநாகை, திருப்பராய்த்துறை, திருநாரையூர், திருநாவலூர், திருவேங்கடம், திருநின்றவூர், திருவான்மியூர், திருநீர்மலை, திருநெல்வேலி, திருவெண்ணெய் நல்லூர், திருப்பதி, திருத்தணிகை, திருப்பரங்குன்றம், திருப்பழுவூர், திருப்பன்ந்தாள், திருப்பாதிரிப்புலியூர், திருப்பாடகம், திருப்பாம்புரம், திருப்புட்குழி, திருப்புல்லாணி, திருப்பெரும்புலியூர், திருப்பேரூர், திருப்பைஞ்ஞீலி, திருஎவ்வளூர், திருமலை, திருமருகல், திருமழபாடி, திருமழிசை, திருமறைக்காடு, திருவனந்தபுரம், திருமுதுகுன்றம், திருமுனைப்பாடி, திருவானைக்கா, திருவரங்கம், திருவலஞ்சுழி, திருவாடானை, திருவாதவூர், திருவிடைமருதூர், திருவிதாங்கோடு, திருவிதாங்கூர், திருவேட்களம், திருவையாறு, திருவேரகம், -முதலிய

நூற்றுக்கணக்கான ஊர்கள், இடங்கள்.

– அவ்வகையான நூல்களின் பெயர்கள் சில:

திருக்கோவையார், திருவாசகம், திருப்பாவை, திருவெம்பாவை, திருமந்திரம், திருவிளையாடல் புராணம், திருவந்தாதி, திருத்தொண்டர் திருஅந்தாதி, திருத்தொண்டத் தொகை, திருமுருகாற்றுப்படை, திருமொழி, திருவாய்மொழி, திருவாய்மொழி நூற்றந்தாதி, திருவிசைப்பா, திருவிருத்தம், திருவுந்தியார், திருவெங்கைக் கோவை, திருவேகாதசமாலை - முதலியவை. இவையனைத்தும் சமயம் சார்ந்த நூல்களே!

இவ்வகையில், எந்தச் சமயமும் சாராத, அறவியல் சார்ந்த, நூலாக இருப்பது தமிழிலக்கியப் பரப்பிலேயே திருக்குறள் ஒன்றே.

இனி, உலகப் பேரறிஞர்கள், இலக்கிய மதிப்பீட்டாளர்கள், மக்கள் நலம் கருதிய மாமாந்தர்கள், உலக உய்வுக்கு வழிகாட்டிய மாமேதைகள், சீர்திருத்தக்காரர்கள், அரசியல் ஆய்வாளர்கள், பொருளியல் சார்ந்த பொதுமைக் கருத்தாளர்கள், பெரும்புலமைத் திறமிக்கவர்கள், தமிழியல் ஆய்ந்த சான்றாளர்கள், பிறமொழி இலக்கிய வல்லுநர்கள், உலக இலக்கியம் ஆய்ந்த உரவோர்கள், சமயங்கள் சார்ந்த நல்லுணர்வாளர்கள், சமயஞ் சாராத பொதுவுணர்வாளர்கள், பகுத்தறிவாளர்கள் முதலிய அனைத்துத் துறை அறிஞர் பெருமக்களும் ஒருமுகமாகப் பாராட்டிப் பேசும் உலக உயர்வாக்க நூல்களில் முந்து நூலாக வந்து நிற்பது திருக்குறள் ஒன்றே என்க.

அவர்களின் புகழ் மாலைகள் சிலவற்றை இங்கு நினைவுகூர்தல் திருவள்ளுவப் பேராசானுக்கு வழுத்துக் கூறுவதாகும்.

"பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ"

– பெருந்தொகை: 1544.

"தெய்வப் புலமைத் திருவள் ளுவர்குறளில்
உய்விக்கும் நூலெல்லாம் உள்ளது"

– பெருந்தொகை: 1546.

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவர்" – கல்லாடம்.

"பல்காற் பழகினும் தெரியா வுளவேல்
தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும்'

— இலக்கணக்கொத்து.

"வற்புறுத்த ஓர்பொருளை வள்ளுவனார் பத்துமுறை
சொற்பொருத்தி ஓதும் துணிவு"

— சிவப்பிரகாசர்.

"திருவள்ளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை ஓதியே உணர்ந்து"

— திருப்புகழ்.

"வால்வளை யுலவும் வீதி
மயிலைவள் ளுவன்சொல் யார்க்கும்
மேல்வழி யுணர்த்திக் கீழ்மை
விலக்குநல் வேத மாமே'

— புலவர் புராணம்.

"வள்ளுவர்செய் திருக்குறளை
மருவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி
ஒருகுலத்துக் கொருநீதி"

— மனோன்மணியம்.

"மொழிசுருங்கல், பொருள்விளங்கல், மொழியஇனி(து)
ஆதல், நல மொழிபு ணர்த்தல்,
வழியமைஓ சையிற்பொலிதல், ஆழ்ந்திருத்தல்,
முறைநிறுவல், மலைவு தீர்தல்,
பொழிவிழுமி யதுபயத்தல், காட்டாதல் -
இப்பத்தும் பொலிய வாய்ந்த
கழிபொருளும் கருதணியும் நோக்குமிடந்
தொறும்கிடந்து களிப்புச் செய்ய,

மையேறும் எழில்மதுரை மாநகரத்(து)
அருட்புலமை மாட்சி யார்முன்
கையேறு திருமூலஆ கமச்சோதி
மறைமுளைத்த கனிவாய் விண்டு
பையேறு மணிபொருமோர் துதிகவிசொற்
றிடப்பலரும் பரவிப் போற்ற
வையேறு திருக்குறள்என் றொருநூல்செய்(து)
உலகுஉவப்ப அளித்தா னாக!."

— பெரும்பேராசிரியர் மீனாட்சிசுந்தரனா

*"செய்யொத்த பயிர்போலச் செந்தமிழும்
செழும்பொருளும் சேர்ந்த செல்வம்,
மையொத்த மனவிருளை மாற்றியொளிர்
மணிவிளக்கு, மாந்த ரெல்லாம்
வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தமர
வாழ்வுஎய்த வழிந டத்தும்
கையொத்த நற்றுணைவன் வள்ளுவனார்
திருக்குறள்எம் கண்கள் அன்றோ!*

*காதொளிரும் குண்டலமும் கைக்குவளை
யாபதியும் கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியும் மெல்லிடையில்
மேகலையும் சிலம்பார் இன்பப்
போதொளிர்பூந் தாளிணையும் பொன்முடிசூ
ளாமணியும் பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத்
தாங்குதமிழ் நீடு வாழ்க!"*

— ஓகி சுத்தானந்த பாரதியார்.

*"வள்ளுவனார் வாய்மொழிபோல்
மன்பதையா வும்பேணும்
தெள்ளுமறை ஒன்றுளதோ தேர்!*

*உலகிற் கொருபுலவர்
வள்ளுவரே; ஓர்நூல்
இலகு திருக்குறளே ஆம்!"*

— ந.மு. வேங்கடசாமியார்.

"மக்கள் உலக வாழ்க்கைக்கு வேண்டப்படுவனவாய் உள்ள அடிப்படை அறிவுண்மைகள் எல்லாம் நூலில் கூறப்பட்டுள்ளன என்பது நன்கு புலனாகும். ஆதலின் இந்நூலைச் சிற்றின்பநூல், அறநூல், ஒழுக்கநூல், அறிவியல் நூல், அரசியல்அறிவுநூல், உலகவறிவுநூல், மெய்யறிவுநூல், பேரின்பநூல் - ஆகிய நூல்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து விளங்கும் ஒரு தொகுதிநூல் என்று நாம் கூறலாம். உலக வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாயுள்ள அறிவுண்மைகளெல்லாம் ஒன்று சேர்த்துக் கூறப்பெற்ற திருக்குறள் போன்ற ஒரு தனிநூல் எம்மொழியிலும் இல்லை.

*– மா.வெ. நெல்லையப்பர்*

*"திருக்குறளின் பெருமையை - புகழை எமது ஒரு வாயால் உரைக்கவும், எளிய கையால் எழுதவும் இயலா. ஏற்ற சொற்களும் எளிதில் அமையா. திருக்குறளில் செறிந்து, நிறைந்து, பொருந்தியுள்ள சொல்வளம், பொருள்வளம், செப்புமுறை, வைப்புமுறை, தொகுத்தும் வகுத்தும் தொடர்புபடுத்தியும் அமைத்துள்ள அமைப்பு, உடன்பாட்டிலும் எதிர்மறையிலும், இன்மொழியிலும் வன்மொழியிலும், வழிமொழிந்தும், வலியுறுத்தியும், இடித்துக் காட்டியும் கூறும் கூற்றுகள் முதலானவற்றின் பண்புகளைப் பலமுறையும் படித்து, உள்ளத்தால் உணர்ந்து, உணர்ச்சியால் அறிந்து, அறிவால் மதித்து, மதிப்பின் பெருமையால் மகிழ்ந்து, மகிழ்வால் அகம் நெகிழ்ந்து, ஆர்வம் மலர்ந்து, அன்பு கனிந்து, விளைந்த விளைவாம் இன்பத்தை இனிது நுகரும் போதுதான், திருக்குறளின் தனிப்பெருமை தெளிவாக விளங்குமேயல்லாது, மொழிவதாலும் எழுதுவதாலும் அதன் பெருமை முழுதும் உரைக்கவோ, வரைந்தறிவிக்கவோ இயலாதென்பது எளியேன் கண்ட தெளிவாகும்.*

*திருக்குறள், உயிர்களின் உணவு; உள்ளத்தின் உணர்வு; உணர்ச்சியின் ஊற்று; அறிவின் கருவூலம் - (களஞ்சியம்); அன்பின் அமளி; அறிவின் தெளிவு; அகத்தின் விளக்கு; அறத்தின் பிறப்பிடம்; ஆற்றலின் தோற்றம்; இன்பத்தின் இருக்கை; ஊக்கத்தின் சேர்க்கை; செந்நெறி செறிவிடம்; ஒழுக்கம் உறைவிடம்; வாழ்க்கையின் விளக்கு; உண்மையின் உறையுள்; பண்பின் பயிலிடம்; உலகின் ஒரு நெறி; மக்களின் ஆக்கம்; மாந்தரின் வாழ்வு; மானத்தின் வரம்பு; பிறர்நலப் பிறப்பிடம்; தன்னலம் தகர்விடம்; துறவின் நிறைவு; பொருளின் புதையல்; பொறையின் பொற்பு; வீரத்தின் நேர்மை; மறத்தின் மாண்பு; நாட்டின் நாட்டம்; காதலின் கனிவு; ஈகையின் இன்பம்; கடமையின் காட்சி; முயற்சியின் முகப்பு; ஊழின் பகைவாள்; கூற்றுக்கு மாற்றான்; தமிழின் அமிழ்தம்; தென்மொழிச் செல்வம்; திராவிடர் தேட்டம்; தமிழர்கள் சட்டம்; சிறப்பின் முகடு; கலைகளின்நிலைக்களன்; சாகாக் கல்வியின் அடிப்படை; பேராவியற்கைப் பெருவாழ்வின் வழி. இன்னும் எந்தெந்த வகையில் உயர்த்திச் சொன்னாலும் எல்லாம் பொருந்தும்.*

*– உறையூர் இறையனார் (திருக்குறள் ஆராய்ச்சி-நூல். 1949)*

"Sage Valluvar, priest of the lowly clan.
No tongue repeats, no speech reveals thy name,
Yet, all things changing, dieth not thy fame.

For thou art bard of universal man
And still thy 'Book' above the Waters wan
Virtue, true, wealthy and joy, and beings
In sweetest mystic couplets doth proclaim
Where winds sea - wafled palmy forests fer
Hoply undreaned of 'visions' glad thine eyes
In realms beyond thy fabled 'seven fold birth'
And cloud of darkness from the spirit roll;
Which lands far - off have heard with strange surprise
Faint echoes of thy song. Through all the earth
Men hail thee brother, seer of spotless soul."

- G.U. Pope, (Sacred Kural.P.2.)

"The Kural is composed in the purest Tamil. In about 12,000 Words which the poet has employed to convey his thoughts here are scarcely fifty of Sanscrit origin"

– Rev. Dr. J. Lazaras.

*'குறளாசிரியர், இந்துக்களுக்குரிய மூட நம்பிக்கைகளினின்றும் தாம் விடுபட்டு நிற்பதை நூல் முழுவதிலும் நன்கு விளக்கியுள்ளார். அவர் இறையைப் பற்றிக் கூறும் திறத்தை நாம் வியந்து போற்றாமலிருக்க முடியாது"*

*– அறிஞர் இரெவரண்டு எலிசாகூல்.*

*"நூல்களில் தலைசிறந்த திருக்குறள் உண்மையான தனிச்சிறப்புடன் அமைந்து விளங்குவதால் நம் கருத்தைக் கவரும் வன்மை யுடையதாயிருக்கின்றது. ஒரு வகுப்பினர்க்கு மட்டும் உரிய கொள்கைகளை மதியாது ஒதுக்கி, மக்கள் அனைவர்க்கும் ஒருங்கே பொருந்தும் உண்மைகளை மட்டுமே ஆசிரியர் நூலில் கூறியுள்ளார். இதனால், மனு நூலிலும் மற்ற சாத்திரங்களிலும் கூறும் பொருளற்ற மூடப் பழக்க வழக்கங்கள் நீக்கப்பட்டு. நூல் மேம்பாட்டுடன் விளங்குகிறது.*

*– அறிஞர் இரெவரண்டு டபுள்யு. எச். ட்ரு.*

*சமயப்போலி, சமயக் கொடுமை, பொய்யொழுக்கம் ஆகியவை நூல் முழுவதிலும் கண்டிக்கப்பட்டுள்ளன."*

*– இரெவரண்டு ஈ.செ. இராபின்சன்.*

*"இதற்குச் சமமாகிய நூல், மக்களாய்ப் பிறந்தோர் பேசும் வேறு எம் மொழியிலும் காண முடியாது."*

*– இரெவரண்டு பர்சிவெல்.*

"திருக்குறள் ஒரு கல்விக் களஞ்சியம்; புலவர் பெருந்துணை; ஒப்புயர்வற்ற சொற்றிறம் நிறைந்த ஒழுக்க நூல் தமிழர்களின் மனப்பண்பு உயர் ஒழுக்கத்தையே நாடி நின்றது என்பது இந்நூலால் தெளிவாக விளங்குகின்றது."

— சார்லசு ஈ. கவர்.

"திருக்குறள் பயக்கும் இன்பம் எத்தகையதென்று எம் மொழிபெயர்ப்பாலும் எடுத்துக்காட்ட இயலாது."

— முனைவர் கிரௌல்.

"தமிழிலக்கியத்தின் தலையணியாகிய திருக்குறளை ஓதியுணர்ந்தாலல்லது, தமிழ் அறிந்தவர் என்று எவராலும் கூறிக் கொள்ள முடியாது."

— பிரடெரிக் பின்காட்.

"திருக்குறள் உலக இலக்கியங்களில் பொறுக்கி எடுத்த மணியாகும். சாதி, வகுப்பு, மதம் என்ற எல்லாப் பிரிவினைகளையும் ஆசிரியர் கடந்தவர். அவர் கூறுவது மக்கட் குழுவுக்கே பொதுவான அறநெறியும் அறிவுரையுமாகும்."

— எம். வின்டெர் நிட்ச்.

"குறளின் தூய்மைக்கு மற்றெந்த தமிழ்நூலும் அதனருகிலும் இருக்கத் தகுதியுடையதன்று. . . . தமிழ் மக்களின் விடுதலைக்காகப் பாடுபடுவோர்க்குத் திருக்குறள் தனிப்பட்ட பேருதவி புரிவதாகும்"

— முனைவர். செ. இலாசரசு.

(அறிஞர் இரெவரண்டு எலிஜா ஹூல் முதல் ஜெ இலாசரஸ். வரையுள்ள கருத்துரைகள் யாவும், உறையூர் இறையனார் அவர்களின் 'திருக்குறள் ஆராய்ச்சி' எனும் நூலிலிருந்து எடுத்துக் கொடுக்கப் பெற்றவையாகும்.)

"Indeed, it is generally acknowledged, that there is no treatise equal to the Kural in any Indian language"

- John Murdock

( Catalogue of Tamil Books)

"Thiruvalluvar, guided by advice, had the address to select three topics of general interest and to avoid entirely everything that might be disputed or might he offensive to any of every sect, adding to this precaution great ingenuity of thought, and peculiar beauty and elegance of language, he produced a work united every saffrage, and stands confessed even to the present day, to be the best and chief of all compositions in the polished dialect.

- William Taylor.

(Oriental Historical Manuscripts - Page.177)

"Thiruvalluvar . . . whose message is intended not merely for their own age or country but for all time for all man-kind. He has given to the world a work to which, in perfection of form, profundity of thought, nobleness of sentiment, and earnestness of moral purpose. Very few books outside the grand scriptures of humanity can at all be compared. Indeed his work is culogised by the Tamil people as the Tamil Veda, the universal Veda, the later Veda, the Divine Book."

- V.V.S. Iyer.

(Maxims of Thiruvalluvar.)

இவை போலும் இன்னும் ஏராளமான சிறப்பியல் குறிப்புகளையும் பெருமை மொழிகளையும் திருக்குறளுக்குப் பேரறிஞர்கள் பலரும் கூறியுள்ளனர். பெருநூலாகவே விரியும் அவற்றை இங்கெடுத்துக் கூறுதல் இயலாததும் தேவையில்லாததுமாகும். எனவே மிகச் சிற்சிலவே எடுத்துக் காட்டுக்காக இங்குக் காட்டப்பெற்றன என்க. ஆர்வமுள்ளவர்கள் அவ்வவற்றை ஆங்காங்குத் தேடிக் கண்டுணர்ந்துகொள்வார்களாக.

மொத்தத்தில், மிகவும் சுருங்கக் கூறுவதானால், திருக்குறள் தூய்மையான நீர் ஓடிக்கொண்டிருக்கும் அகன்று ஆழ்ந்த ஓர் ஆறு போன்றது.

– அந்நீரை அருந்துகின்றவர், பலர்;

– அதில் குளித்து மூழ்கிக் களிப்பவர்கள், பலர்;

– அதை மொண்டு கொண்டு போய் விற்றுப் பணம் ஈட்டிப் பிழைப்பவர்கள், பலர்;

– அதில், தம்தம் அழுக்குகளை வெளுத்துக் கொள்பவர்கள், பலர்;

– அதில், தங்கள் கை கால்களைக் கழுவித் தூய்மைசெய்து கொள்வார், பலர்;

– அந்நீரில் பிணங்களை எறிந்து மிதக்கவிட்டுச் சடங்குகள் செய்வார், பலர்;

– அந்நீரை அருந்துகின்றவர்கள், அதிலுள்ள நன்மைகளை, கருத்துகளைக் கற்று, தம் வாழ்வு நலன்களுக்குப் பயன்படுத்திக் கொள்பவர்கள், பலர்;

– அதில் குளித்து மூழ்கிக் களிப்பவர்கள் - அதைப் படித்துப் புலமை பெற்று, அக்கருத்துகளை மக்களுக்குச் சொற்பொழிவு வாயிலாகவும், பட்டி மன்றங்கள் வழியாகவும், தங்கள் உரைத்திறன் நினைவாற்றல் திறன் வழியாகவும் பரப்பிப் புகழ் பெறுபவர்கள்,பலர்.

– அந்நீரைக் குப்பிகளிலும் குடங்களிலும் நிரப்பிக் கொண்டுபோகின்றவர்கள்-அந்நூலையும் உரைகளையும் அச்சிடுவித்தும் பரப்பியும் அவற்றின்வழிப் பொருள்செய்து பிழைக்கின்ற வணிகர்கள், ஆவர்.

– அதில், தம்முடைய அழுக்குடைகளை வெளுத்துக் கொள்பவர்களும், அதில் தம் மனமாசுகளைப் போக்கிக் கொள்பவர்களும், தம் அறியாமைகளாலும் அகங்காரத்தாலும் அதன் கருத்துகளுக்கு மாசு கற்பிப்பவர்கள் ஆவர்.

– அந்நீரில் தம் கைகால்களைக் கழுவித் தூய்மையிழக்கச் செய்பவர்கள், பொறாமையாலும், அந்நூற் கருத்துகள், தங்கள் கொள்கை கோட்பாடுகளுக்கு மாறாக இருப்பதாலும், அந்நூற் பெருமைக்கு இழுக்குச் சேர்ப்பவர்கள் ஆவார்கள்.

– அந்நீரில் பிணங்களை எறிந்து மிதக்கவிட்டுச் சடங்குகள் செய்வார், தத்தம் மதவியற் கருத்துகளை அதிற் புகுத்தி, எல்லார்க்கும் பொதுவான. பொது அற நூலாகிய இதனைத் தம்தம் மதநூல் போல் ஆக்கிக் காட்டும் வல்லடி வழக்கர்கள்.

இனி, திருக்குறள் ஒரு **மருந்துச்சாலை** போன்றது.

– அதில், ஒவ்வொருவரும் தம்தம் நோய்களைப் போக்கிக் கொள்ளும் மருந்துகளைத் தேடி எடுத்து, அவற்றை உண்டு செரித்துத் தம்தம் பிணிகளைப் போக்கிக் கொள்வதை வாழ்வியல் கடமையாகக் கொள்ளுதல் சாலச் சிறந்தது என்க.

மற்று, திருக்குறள் ஓர் அரிய **அறிவிலக்கிய நூல்** ஆகும்.

– இலக்கிய நூல்களைக் கற்க விரும்புவார், இவ் வறிவிலக்கியத்தையும்

கற்று மகிழ்வும் பயனும் பெறுவதை ஒரு நோக்கமாகக் கருதுவார்களாக.

மேலும், இஃது ஓர் **அறநூலும்** ஆகும்.

- உலகியல் அறக் கூறுகளைப் பற்றித் தெரிந்துகொண்டு, அவற்றைச் செய்து உயிர்நலம்பெற விரும்புவர், இந்நூலைத் தவறாது, பிற அறநூல்களுடன் ஒப்பவைத்துக் கற்று, இதன் பொதுமையறத்தை உணர்ந்துகொண்டு, அதன்வழி நடந்து வாழ்வியற் பயனும், புகழும் பெறுவதுடன், உலகோர்க்கும் அறிவித்து அதனைக் கடைப்பிடிக்கச் செய்தலும் வேண்டும்.

அடுத்து, இஃதொரு **வாழ்வியல் நூலும்** ஆகும்.

-- இதனை நன்கு கற்று நுட்பங்களை உணர்ந்து, ஒவ்வொருவரும் தம்தம் வாழ்க்கையைச் செவ்வனே நடத்திச் செல்வதற்கு இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். வையத்துள் வாழ்வாங்கு வாழ இது கட்டாயம் வழிகாட்டுவதாகும்.

இனி, இஃதோர் **அரசியல் நூலும்** ஆகும்.

- அரசியலில் ஈடுபட விரும்புபவர்கள் கட்டாயம் இதில் கூறப்பெறும் அரசியல் நுட்பங்களைக் கற்றுணர்ந்து, ஆட்சியியலை அறிந்து, மக்கட்கு நலஞ் செய்யும் பயனுடைய ஆளுமையைச் செய்ய முயற்சி செய்ய இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

மற்று, இஃதொரு **பொருளியல் நூலும்** ஆகும், என்க.

- என்னை? சமநிலைப் பொதுவுடைமைப் பொருளியல் அமைப்பை மக்களிடம் ஏற்படுத்த விரும்புபவர்கள், இதில் கூறப்பெறும் பொருளியல் உண்மைகளை உணர்ந்து, அவற்றின் வழி, தாங்கள் பொருளை ஈட்டவும், பேணவும், அதைப் பிறர்க்கும் பயன்படும்படியான பொதுமைப் பொருளியல் கொள்கைகளை வகுக்கவும், இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இனி, இஃதொரு **குமுகவியல்** (சமுதாய) **நூலும்** ஆகும்.

- சாதி, சமய வேறுபாடற்ற சமநிலைக் குமுகாய அமைப்பை உருவாக்கவும், இக்கால் உள்ள ஏற்றத் தாழ்வான குமுக நிலைகளில் சீர்திருத்தம் செய்யவும் விரும்பும் குமுகாயப் பொதுநலத் தொண்டர்கள் இதனை அறக்கற்று, அவர்களின் கொள்கை, கோட்பாடுகளுக்கு இதன் கருத்துகளை நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

அடுத்து, திருக்குறள் ஓர் **ஒழுக்கநெறி நூலுமாகும்.**

— தன்னொழுக்கத்தையும், குமுகாய ஒழுகலாறுகளையும் இதில் கூறப்பெறும் கருத்துகளின் அடிப்படையில் உருவாக்கிக் கொள்ள விரும்புபவர்களுக்கு இஃதொரு கலங்கரை விளக்கமாகும்.

இனி, திருக்குறள் ஒரு **புரட்சி நூலும்** ஆகும்.

— இதில் கூறப்பெறும் கருத்துகள் அரசியல், பொருளியல், குமுகாயவியல் அமைப்புகளை மாற்றியமைத்துப் புரட்சிசெய்ய முனைபவர்களுக்கு இஃதொரு தோன்றாத்துணை வழிகாட்டி நூலாகும்.

இவற்றுடன், இஃதோர் **இனநல மீட்பு நூலும்** ஆகும்.

— முந்து தமிழினத்திற்குக் கடந்த மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து இன்று வரை நேர்ந்துள்ள அரசியல், பொருளியல், குமுகவியல், மொழியியல், இனவியல், கலையியல், பண்பாட்டியல், கல்வியியல், அறிவியல் முதலியவற்றில் நிகழ்ந்த வீழ்ச்சிகளையும் தாழ்ச்சிகளையும், நெரிவுகளையும் சரிவுகளையும், இழிவுகளையும் அழிவுகளையும், அறியாமைகளையும் மூடநம்பிக்கைகளையும் அறவே அகற்றுகின்ற மறுமலர்ச்சி இனநல மீட்பு முயற்சிகளுக்கும், அத்தகைய மீட்பர்களுக்கும், போராட்டக்காரர்களுக்கும், புரட்சியாளர்களுக்கும் இஃதொரு செவ்வையான வழிகாட்டுதல் நூலாகும். ஆரியத்தால் அழிய விருந்த தமிழ் மரபியல் பண்புகளை ஒருசேரத் தொகுத்து நிலைப்படுத்திய நூல், இது. இதன்கண் தமிழின நல மீட்புக்கான கருத்துகளும் உத்திகளும் ஆங்காங்கு மறைமுகமாகவும் குறிப்பாகவும் காட்டப் பெறுவதுடன் , ஆரியத்தின் குமுகியல், பண்பாட்டியல் தாக்கங்களும், முள்ளின்மேல் விழுந்த பட்டுச்சேலையை மெதுவாக நீக்குவது போல் நீக்கப்பெறுகின்றன.

இனி, அனைத்துடனும், இஃதோர் ஆண்-பெண் **இன்பநூலும்** ஆகும், என்க.

— இதில் கூறப்பெறும் காமவியல் கூறுகளும், ஆண்-பெண், கணவன்-மனைவிக்கான இல்லறவின்ப உத்திகளும், உயர் நாகரிகமும், உளப்பண்பும் கொண்டவர்கள் கடைப்பிடித்து, மாறாத உளஇன்பமும் உடலின்பமும் பெற உதவுகின்றவை ஆகலின், அவற்றை அறிந்து கொள்ள விரும்புபவர்கள், இதில் கூறப்பெறும் அஃததற்கான பகுதிகளையும் இன்பத்துப் பாலையும் கருத்தூன்றிக் கற்றுக் கடைப்பிடித்து ஒழுகித் தங்கள் இல்லறத்தை இன்ப அறமாக ஆக்கிக்கொள்ளலாம், என்க.

## 3. திருவள்ளுவப் பேராசிரியர்:

'திருக்குறள்' எனும் ஒப்புயர்வற்ற நூல் பற்றிச் சிந்திக்கும் பொழுது, அதனை உருவாக்கி தந்த ஆசிரியர்ப் பற்றி எண்ணிப் பாராமல் இருக்க முடியாது. அவரைப் பற்றி எண்ணும் பொழுது ஏற்படுகின்ற அறிவுணர்வும், மலைப்புணர்வும், வியப்புணர்வும், மதிப்புணர்வும், புகழுணர்வும் கொஞ்ச நஞ்சமல்ல.

இதுகாறும் உலகில் பிறந்த மிகச் சிறந்த அறிஞர் பெருமக்களுள் தலைசிறந்த பேரறிஞர், அவர்; மிகவுயர்ந்த சிந்தனையாளர், அவர்; மாந்த இன த்தைப் பற்றி மேல் நிலையாகவும் அடியூன்றவும் சிந்தி த்த அறிஞர்க மிகச் சிலருள் மிகவும் மேம்பட்டு நிற்பவர் அவர். அவர் போலும் மிகச் சிறந்த - மாந்த இனக் கூறுகள் அனைத்தையும் அளாவிச் சிந்தித்த - பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் மாந்தன் எதிர்கொள்ளவேண்டிய வாழ்வியற் பாடுகளுள் முழுக் கருத்தையும் ஊன்றி அடிமுடி கண்ட வேறு பேரறிஞர் ஒருவரை வேறு எந்நாட்டிலும் வேறு எம்மொழியிலும் காண இயலவே இயலாது. இவரைப்போல் உள்ள பேரறிஞர்கள் பிறர் ஒரு சிலர், மக்கள் வாழ்வியலின் சில சில கூறுகளையே சிந்தித்து விளைவு கண்டவர்களாகவே காணப்படுகின்றனர். தனியொரு மாந்தனால், இவ்வுலக நிலைகள் பற்றியும், இங்குள்ள மாந்தவுயிரினம் பற்றியும் மேல் எல்லையாக எந்த அளவுவரை சிந்தித்து உண்மைகள் காணமுடியும் என்பதற்குத் திருவள்ளுவரைத் தவிர வேறு ஒருவரை இவ்வுலக மாந்த இனத்துள் எடுத்துக் காட்டாகக் கூற முடியாது என்பதை உறுதியாகச் சொல்லலாம்.

மக்கள் வாழ்வியல் பற்றியும், அதன் தேவை தேவையின்மைகள் பற்றியும், அவற்றின் நன்மை தீமைகள் பற்றியும், முழுமையாகச் சிந்தித்து முடிவு கண்ட பேராற்றல் கொண்டவர் அவர். அவர் ஒரு பெரும் குமுகவியல் சிந்தனையாளர்; அரசியல் பேரறிஞர்; பொருளியல் வல்லுநர்; வாழ்வியல் அறிந்துணர்த்தும் அறவியல் மேதை, தனி மாந்த உளவியலும், பொதுமாந்த உளவியலும், குமுக உளவியலும் உணர்ந்த சிறந்த உளவியல் பேராசிரியர்; மக்கள் உடல் நலக்கூறுகளை அறிந்த மருந்தியல் வல்லுநர்; வேளாண்மைத் திறமுணர்ந்த உழவியல், வேளாண் இயல் திறனாளர்; உயிரியல் ஆய்ந்து நுட்பமான இயக்கக் கூறுகளை முதன்முதலாகத் தெரிவித்த உயிரியக்கவியல் பேரறிவாளர்; உலக இயற்கை நுட்பங்களறிந்த இயல்பியல் அறிஞர்; அறிவியல் அறிஞர்; உலகியல் உணர்ந்த நுண்ணறிவாளர்; என்றும் அழியா ஆற்றல்களை அறிந்துணர்த்திய மெய்ப்பொருள் விண்டவர்; இவையத்தனைத் திறங்களுடனும் ஆண், பெண் காதலையும் ( Love ),

காமத்தையும் ( Sex) உணர்ந்த பாலுணர்வியல் பேரறிஞர்;

இனி, எல்லாவற்றுக்கும் மேலாகச் சொல்வதானால், அவரை ஒரு மாந்தவியல் புரட்சியாளர், மக்களியல் வழிகாட்டி என்றே முற்ற முடிந்த முடிபாகக் கூறிப் பெருமிதம் கொள்ளலாம். சுருக்கமாகக் கூறுவதானால், அவர் மக்கள் தொடர்பாகச் சிந்தித்த எதையும் வேறு எவரும் அவ்வளவு சிறப்பாகச் சிந்தித்ததில்லை; சிந்திக்காத எதையும் வேறு எவரும் சிந்தித்ததாகவும் தெரியவில்லை.

திருவள்ளுவப் பேராசானைப் பற்றி அக்கால முதல் இக்காலம் வரை அனைத்துப் பேரறிஞர்களும் வியந்தும், பெருமிதமுற்றும், புகழ்ந்தும், பாராட்டியும் கூறிய கூற்றுகள் அனைத்தும் மறுக்கவியலாத உண்மைகளே. இவ்வாறு இவ்வுலகத்துப் பிறந்த பேரறிஞர் ஒருவரை, அனைத்துக் கூறினரும், அனைத்துத் துறையினரும், அனைத்து இனத்தினரும், அனைத்துத் திறத்தினரும், ஒப்பி ஒருமுகமாக ஏற்றுக்கொண்டு பாராட்டிப் புகழ்ச்சி செய்த அளவுக்கு, வேறொரு பேரறிஞர் இலர் என்பதே அவர் அனைத்துப் பெருமைக்கும் உரியவர் என்பதற்குப் போதுமான சான்றாகும்.

அப்புகழ்ப் பொன்னுரைகள் அன்றும் இன்றும் என்றுமே உண்மையாகும். அவற்றுள் சில:

"அவனே புலவன்; அவனே அறிஞன்;
அவனே தமிழை அறிந்தோன்"

பெருந்தொகை.

– 'நன்றென

"எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி"

– கல்லாடர்.

'பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறும் சேரச் - சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லார்ஆர் வள்ளுவர்அல் லால்."

– அரிசில்கிழார்.

"– வள்ளுவனார்

முப்பாலின் மிக்க மொழியுண்(டு) எனப்பகர்வார்
எப்பா லவரினும் இல்"

– முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்.

"முப்பால் மொழிந்த முதற்பாவ லர்ஒப்பார்
எப்பா வலரினும் இல்"

— **ஆசிரியர் நல்லந்துவனார்.**

"எல்லாப் பொருளும் இதன்பால் உள;இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை"

— மதுரைத் தமிழ்நாகனார்.

"புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல் — நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்"

— மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்.

"குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநேர் ஒவ்வாதே
முன்னை முதுவோர் மொழி"

— கோவூர் கிழார்.

"திருவள் ளுவர்தாமும் செப்பியவே செய்வார்
பொருவில் ஒழுக்கம்பூண் டார்"

— செயிர்க்காவிரியார் மகனார் சாத்தனார்.

'உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு"

— செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

"இழுக்கின்றி
என்றுஎவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றுஇவர் இன்குறள்வெண் பா"

— நச்சுமனார்.

"தெள்ளிய
வள்ளுவர் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி"

— மதுரைப் பாலாசிரியனார்.

— இன்னோரன்ன கழகப் பெரும் புலவர் பலரும் அவரையும் அவர் நூலையும் அறிவாற்றலையும் வியந்தும் மகிழ்ந்தும் பாடியதாக உள்ள பாடல்கள் அனைத்தும் கொண்ட **திருவள்ளுவமாலை** என்னும் ஒரு பாடல் தொகுப்பு உண்டு. இந்நூல் பற்றிப் பல்வேறு கருத்துகள் உண்டு எனினும், இஃதொரு சிறப்புப் பாயிரமாக நின்று திருவள்ளுவத்தைச்

சிறப்புப்படுத்துகிறது. இத்தகைய சிறப்பு, தமிழில் வேறு எந்தப் புலவர்க்குமோ நூலுக்குமோ வாய்த்திலது.

இந்நூல் தவிர, வேறு சிறப்புரைகளும் இப்புலவர் பெருமானுக்கு உண்டு. நம் நாட்டுப் புலவர்களும் வெளிநாட்டுப் புலவர்களும் இவரைப் பற்றிக் கூறிய, கூறுகின்ற சிறப்புரைகளும் பெருமையுரைகளும் பல நூற்றுக் கணக்கானவை. அவை அனைத்தும் இவ்விடத்து ஒருசேரத் தொகுத்துக் கூறின், அவையே ஒரு பெருநூலாக விரியும் தகைமை பெற்றவை. விரிவஞ்சி அவற்றை இங்கெடுத்துக் கூறாமல் விடுகிறோம்.

சுருங்கக் கூறின், திருவள்ளுவப் பேராசிரியர் காலத்தையும் இடத்தையும் வென்ற பேராற்றல் படைத்தவர்; சிறந்த நுண்மாண் நுழை புலம் மிக்கவர்; தம் தாய்மொழியாகிய தமிழ் மொழியைப் பழுதறக் கற்றவர்; அதில் உள்ள சொற்களைப் பொருளளவாகவும், சொல்லாய்வு அளவாகவும் மிக நன்றாக உணர்ந்தவர். அதனால் மிகச் சிறந்த சொற்களைக் கொண்டு அரிய செய்திகளை மிக நுட்பமாக எடுத்துக் கூறும் ஆற்றல் மிக்கவர். அதற்கு அவர் கூறும் கீழ்வரும் சில குறட்பாக்களும் குறள் தொடர்களுமே சான்று பகர்வன:

"இன்சொலால் ஈரம் அளைஇப் படிறு(று)இலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்' — 91.

"அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்" — 96.

"சிறுமையுள் நீங்கிய இன்சொல்" — 98.

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" — 100.

"ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்" — 128.

"பயன் சாராப் பண்பில் சொல்" — 194.

"பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்" — 196.

"அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்" — 198.

"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்" — 200.

"யாதொன்றும் தீமையிலாத சொலல்" — 291.

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்பு" — 389.

"நிரம்பிய நூலின்றிக் கோட்டிகொளல்" — 401.

"கல்லாதான் சொல் காமுறுதல்" — 402.

"கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்" — 404.

"கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்" — 405.

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று" — 407.

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ(டு) ஏனை யவர்" — 410.

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்' — 411.

"செவிக்கு உணவு" — 412.

"ஒழுக்க முடையார் வாய்ச் சொல்" — 415.

"பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்(து)
ஈண்டிய கேள்வி யவர்" — 417.

"கேள்வியால் தோட்கப் படாத செவி" — 418.

"நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது" — 419.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்" — 420.

"அறிவுஅற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள்அழிக்கல் ஆகா அரண்" — 421.

"தீதொரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு" — 422.

"மெய்ப்பொருள் காண்பது அறிவு" — 423.

"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு' — 424.

"மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு" — 425.

"எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு" — 426.

"அறிவுடையார் ஆவது அறிவார்" — 427.

"அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்" — 428.

"எதிரதாக் காக்கும் அறிவு" — 429.

"அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்" — 430.

"அறனறிந்து மூத்த அறிவுடையார்" — 441.

"அரியகற்று ஆசற்றார்" — 503.

"அறனறிந்து ஆன்றமைந்த சொல்" — 635.

"நாநலம் என்னும் நலனுடைமை" — 641.

"ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு" — 642.

"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்" - 643.

"திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூங்கு இல்" — 644.

"ஆராய்ந்த சொல்வன்மை" — 682.

"ஆராய்ந்த கல்வி" — 684.

"அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்" — 711.

"இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்" — 712.

"ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல்" — 714.

"கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து" — 717.

"வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்" — 721.

— என்றவாறு அவர் பயன்படுத்திய சொற்களையும், அவற்றால் அவர் விளக்க வந்த அரும்பொருள்களையும் அரிய செய்திகளையும் இந்நூல் முழுவதும் பரக்கக் காணலாகும்.

ஒருவரின் புலமை,

1) அவர் கூறும் கருத்து.

2) அதைக் கூறும் முறை.

3) அதைக் கூறுதற்கு அவர் பயன்படுத்திய சொற்கள்.

(அஃதாவது, சொற்களின் எண்ணிக்கை, அவற்றின் பொருத்தம், வேறு சொற்களால் அக்கருத்தைச் சொல்ல இயலாமை — அஃதாவது 'வெல்லுஞ் சொல் இன்மை)

*4) அக்கூற்றின் உண்மை.*

*5) உலகியல் பொருத்தம்.*

*(அஃதாவது, கற்பனை, புளுகு, பொய், புனைந்துரை, வரட்சி, மிகைப்படுத்தம் – ஆகியவை இல்லாமற் கூறுதல்.)*

*ஆகியவற்றால் அறியப்படும்.*

*– இவ்வகைகளில் அவர் வெளிப்படுத்திய இப் பெரும்புலமை நூலை மதிப்பிடுவதெனின், அவரினும் எல்லாக் கூறுகளினும் மேம்பட்டுச் சிறக்கும் மிகப்பெரும் புலவர் ஒருவராலேயே இயலும் என்க. அவரைச் சுருக்கமாக, "அறச்செல்வர், அறிவின் மேதை, வாயுரத்தின் பெரும்புலவர், வற்றாத அறிவூற்று, உயிர்ப்பாறு, தமிழினத்தின் பாயிரத்தைப் பாடிவைத்த முதல் தலைவர், வல்ல திருவள்ளுவர்" உரையாசிரியர், '**தென்மொழி**' , சுவடி 26; ஓலை:10*

*– என்றவாறெல்லாம் அவரைப் புகழ்வதும் போற்றுதலும்கூட வானும் மலையும் கடலும் காற்றும் நெருப்பும் நீரும் கண்டு மலைதலும் குலைதலுமே ஆகும் என்க. எனவே திருவள்ளுவரின் புலமைப் பெருமைக்குத் திருக்குறளே உரைகல் என்க. இதனையும் அவர் கூற்றே எண்பிக்கும்; என்னை?*

*"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்*
*கருமமே கட்டளைக் கல்" – 505.*

*என்பார் ஆகலின்.*

*இனி, அவரின் தகுதியையும் திறமையையும், பெருமையையும் அருமையையும் அச்சான்றோரின் வாய்மொழிகளாலேயே கூறுவதன்றி, வேறுபிறர், பிற எளிய வறிய சொற்களால் கூறுதலும் ஆகா தென்க. அவை இவை:*

*வாலறிவர் (2); தனக்குவ்மை இல்லாதார் (7); அறம் பூண்டார் (23); செயற்கரிய செய்தார் (26); பெரியர் (26); ஐந்தின் வகை தெரிவார் (27); நிறைமொழி மாந்தர் (28); குணம் என்னும் குன்றேறி நின்றார் (29); அந்தணர், அறவோர் (30); மனத்துக்கண் மாசிலர் (34); வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர் (50); சான்றோர் (69); ஆருயிர் (73); செம்பொருள் கண்டார் (91); இன்சொலவர் (94); நல்லவை நாடி இனிய சொலர் (96); பண்பின் தலைப் பிரியார் (97); மாசற்றார் (106); செப்பம் உடையவர் (112); தக்கார் (114); நன்றிக்கண் தங்கியார். (117); சொற் கோட்டம் இல்லாதவர் (119); அமரர் (121); அறிவறிந்து ஆற்றியவர் (123); நிலையில் திரியாதவர் (124); நா காத்தவர் .(127); கற்றடங்கல் ஆற்றியார் (130); ஒழுக்கம் உயிரினும் ஓம்பியவர்*

(131); உரவோர் (136); பல கற்றவர் (140); அறம் பொருள் கண்டார் (141); தெளிந்தார் (143); பகை, பாவம், அச்சம், பழி இகவாதவர் (146); பேராண்மை உடையவர் (148); நிறையுடையவர் (154); துறந்தாரின் தூய்மையர் (159); அழுக்காறு இலாதவர் (161); செவ்வியர் (169); பழிப்படுவ செய்யார் (172); அறனல்ல செய்யார் (173); வெஃகுதல் செய்யார் (174); அஃகி அகன்ற அறிவுடையார் (175); ஆற்றின் கண் நின்றார் (176); வேண்டாமை என்னும் செருக்கர் (180); அறஞ்சொல்லும் நெஞ்சத்தார் (185); நீர்மையுடையார் (195); அரும்பயன் ஆயும் அறிவினார் (198); மருள் தீர்ந்த மாசறு காட்சியர் (199); விழுமியார் (210); கைம்மாறு வேண்டாக் கடமையர் (211); ஒத்ததறிவார் (214); பேரறிவாளர் (215); நயனுடையார் (216); பெருந்தகை (217); கடனறி காட்சியர் (218); ஈத்துவக்கும் இன்பினார் (228); புகழுடையார் (233); புலவர் (234); வித்தகர் (235); இசையென்னும் எச்சம் பெற்றார் (238); அருட்செல்வர் (241); அருள் சேர்ந்த நெஞ்சினார் (243); அருளாள்வார் (244); மெய்ப்பொருள் கண்டார் (249); செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் (258); புலால் மறுத்தார் (260); தவத்தர் (261); அளவென்னும் ஆற்றல் புரிந்தார் (287); அளவறிந்தார் (288); வாய்மையர் (298); அகந்தூயர் (298);

நூலோர் (323); ஐயத்தின் நீங்கித் தெளிந்தார் (353); மெய்ப்பொருளறிஞர் (355); பேரா இயற்கையர் (370); நுண்ணிய நூல் பல கற்றவர் (373); உண்மையறிவர் (373); தெள்ளியர் (374); காட்சிக் கெளியர் (386); கசடறக் கற்றார் (391); கற்றறிந்தார் (399); நிரம்பிய நூல் கற்றவர் (401); நுண்மாண் நுழை புலம் மிக்கார் (407); இலங்கு நூல் கற்றார் (410); செவிச்செல்வர் (411); ஆன்றோர் (412); இழைத்துணர்ந்து ஈண்டிய கேள்வியர் (417); நுணங்கிய கேள்வியர் (419); நுண்பொருள் கண்டார் (424); ஆவதறிவார் (427); அறனறிந்து மூத்த அறிவினார் (441); நல்லார் (450); தேர்ந் தெண்ணிச் செய்வார். (462); எள்ளாத எண்ணிச் செய்தார் (470); அருவினை செய்தார் (483); ஊக்கமுடையார் (486); மொய்ம்பர் (492); குடிப்பிறந்தார் (502); அரிய கற்று ஆசற்றார் (503); அறிந்தாற்றிச் செய்தவர் (515); புகழ்ந்தவை போற்றிச் செய்தவர் (538); உள்ளியது எய்தியவர் (540); கருமம் சிதையாமல் கண்ணோடியவர் (578); நாகரிகர் (580); ஊக்கம் ஒருவந்தம் கைத்துடையார் (593); உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளியவர் (596); சிதைவிடத்து ஒல்கா உரவோர் (597); மடிமடிந்து மாண்ட உஞற்றிலவர் (607); முயற்சிப்பெருமையர் (611); அசாவாமை உடையவர் (611); தாளாண்மை என்னும் தகைமைக் கண் தங்கியவர் (614); இன்பம் விழையாது வினை விழைந்தவர் (615); துன்பம் துடைத்தூன்றிய தூண் (615); முயற்சி திருவினை ஆக்கியவர் (616); மடியிலாத் தாளாளர் (617); அறிவறிந்து ஆள்வினை செய்தவர் (618); ஊழையும் உப்பக்கம் கண்டவர் (630); உலைவின்றித் தாழாது உஞற்றியவர் (630); இடும்பைக்கு இடும்பை படுத்தவர் (623);

மடுத்தவாய் எல்லாம் பகடன்னார் (624); பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றியவர் (626); இன்பத்துள் இன்பம் விழையாதவர் (629); இன்னாமை இன்பம் எனக் கொண்டவர் (630); கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்டவர் (631); தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் மாண்டவர் (634); செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து இயற்கை அறிந்தவர் (637); முறைப்படச் சூழ்ந்து முடிவுறவே செய்யும் திறப்பாடு உடையவர் (640); நாநலம் உடையவர் (641); ஆக்கமும் கேடும் அதனால் வருதலால், சொல்லின் கண் சோர்வு காத்து ஓம்பியவர் (642); கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் சொல்வன்மை உடையவர் (643); அறனும் பொருளும் திறனறிந்து சொன்னவர் (644); பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து சொற்களைச் சொன்னவர் (645); வேட்பத் தாம் சொல்லிப் பிறர் சொல் பயன் கொள்ளும் மாட்சியுடைய மாசற்றவர் (646); சொலல் வல்லர்; சோர்விலர்; அஞ்சார்; அதனால் இகல் வெல்லல் யாரும் இலாதவர் (647); ஞாலம் விரைந்து தொழில் கேட்கச் செய்தவர் (648); நிரந்து இனிது சொல்லுதல் வல்லார் (648); பல சொல்லக் காமுறாது சில சொல்லால் தேற்றியவர் (649); கற்றது உணரவிரித்து உரைத்தவர் (650); ஆக்கம் தரும் துணை நலம் கொண்டு, எல்லாம் தரும் வினைநலம் விரும்பியவர் (651); புகழொடு நன்மை பயவாத வினையை என்றும் ஒருவியவர் (652); ஆதும் என்னும் எண்ணவுறுதி கொண்டவர்; ஒளி மாழ்கும் செய்வினை தவிர்த்தவர் (653); இடுக்கண் படினும் இளிவந்த செய்யதாத நடுக்கற்ற காட்சியவர் (654); எற்றென்று இரங்குவ செய்யாதவர்; செய்யினும் மற்றன்ன செய்யாதவர் (655); ஈன்றாள் பசி காண்பாராயினும் சான்றோர் பழிக்கும் வினை செய்யாதவர் (656); பழிமலைந்து எய்திய ஆக்கத்தினும் கழிநல்குரவே தலை என்றெண்ணும் சான்றோர் (657); கடிந்த கடிந்து ஒருவியவர் (658); இழப்பினும் பிற்பயக்கும் நற்பாலவை செய்தவர் (659); அழக்கொண்ட எல்லாம் அழப்போம் என்றுணர்ந்தவர் (659); சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல், பசுமட் கலத்துள் நீர் பெய்து இரீஇயற்று என்றுணர்ந்தவர் (660); வினைத்திட்பம் என்பது ஒருவர் மனத்திட்பம் என்றறிந்தவர் (661); ஊறு ஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்று ஆய்ந்தவர் (662); கடைக்கொட்கச் செய்தக்கது ஆண்மை; இடைக்கொட்கின் எற்றா விழுமம் தரும் என்பது அறிந்தவர் (663); சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம் சொல்லிய வண்ணம் செயல் என்றுணர்ந்தவர் (664); வீறு எய்தி மாணும் வினைத்திட்பம் கொண்டவர் (665); எண்ணிய திண்ணியராகி, எண்ணிய எண்ணியாங்கு எய்தியவர் (666); உருள் பெருந்தேருக்கு அச்சாணி அன்னார் உடைத்தாகலின் உருவு கண்டு எள்ளாதவர் (667); கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது தூக்கம்

கடிந்து செய்தவர் (668); துன்பம் உறவரினும் துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை செய்தவர் (669); எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம் வேண்டாரை வேண்டாது உலகு என்று உணர்ந்தவர் (670);

சூழ்ச்சி, முடிவு, துணிவெய்தல், அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது என்றறிந்தவர் (671); தூங்கிச் செயற்பால தூங்கியும், தூங்காது செயற்பால தூங்காதும் ஆற்றியவர் (672); ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று என்றறிந்து, ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செய்தவர் (673); வினை, பகை என்று இரண்டின் எச்சம், தீயெச்சம் போலத் தெறும் என்றுணர்ந்தவர் (674); பொருள், கருவி, காலம், வினை, இடம் என இவ்வைந்தும், இருள் தீர எண்ணிச் செய்தவர் (675); முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும் படுபயனும் பார்த்துச் செய்தவர் (676); செய் வினை, செய்வான் செயல்முறை, அவ்வினை உள்ளம் கொளச் செய்தவர் (677); வினையால் வினையாக்கிக் கொள்ளும் திறத்தவர் (678); நட்டார்க்கு நல்ல செய்தவர் (679); பெரியார்ப் பணிந்தவர் (680); அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், வேந்து அவாம் பண்புடைமை கொண்டவர் (681); அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை கொண்டவர் (682); நூலாருள் நூல் வல்லர் (683); அறிவு, உரு, ஆராய்ந்த கல்வி இம் மூன்றினும் செறிவுடையவர் (684); தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி நன்றி பயந்தவர் (685); கற்றுக் கண் அஞ்சாது செலச் சொல்பவர்; காலத்தால் தக்கது அறிந்தவர் (686); கடனறிந்து காலம் கருதி, இடனறிந்து எண்ணி உரைத்தவர் (687); தூய்மை, துணைமை, துணிவுடைமை - இம்மூன்றின் வாய்மை வழி உரைத்தவர் (688); வடுமாற்றம் வாய்சோரா வன்கண் உடையவர் (689); இறுதி பயப்பினும் எஞ்சாது உறுதி பயந்தவர் (690); அரியவை போற்றியவர் (693); செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தவர் (694); குறிப்பறிந்து, காலம் கருதி, வெறுப்பில வேட்பச் சொன்னவர் (696); வினையில கேட்பினும் சொல்லாதவர் (697); நின்ற ஒளியோடு ஒழுகியவர் (698); துளக்கற்ற காட்சியவர் (699); பண்பல்ல செய்யாக் கெழுதகைமையர் (700);

எஞ்ஞான்றும் மாறாநீர் வையத்திற்கு அணியானவர் (701); தெய்வத்தோடு ஒப்பக் கொளப்பட்டவர் (702); குறிப்பில் குறிப்புணர்ந்தவர் (703); உற்றது உணர்ந்தவர் (706); அவையறிந்து ஆராய்ந்து சொன்னவர்; சொல்லின் தொகையறிந்த தூய்மையர் (711); இடை தெரிந்து நன்குணர்ந்து சொன்னவர்; சொல்லின் நடைதெரிந்த நன்மையர் (712); சொல்லின் வகையறிந்த வாய்மையர் (713); ஒளியார் முன் ஒள்ளியர் (714); நன்றென்றவற்றுள் நன்றறிந்தவர் (715); கற்றறிந்த கல்வி விளங்கியவர்(717); கசடறச் சொல் தெரிந்த வல்லவர் (717); உணர்வது உடையார் முன் சொல்லி, வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தவர் (718); நல்லவையுள் நன்கு செலச் சொல்லியவர் (719); வகையறிந்து வல்லவை வாய் சோராதவர்

(721); கற்றாருள் கற்றார்; கற்றவர்; முன் கற்ற செலச் சொல்லியவர் (722); அவையகத்து அஞ்சா அரியர் (723); கற்றார் முன் கற்ற செலச் சொல்லி தாம் கற்ற மிக்காருள் மிக்க கொண்டவர் (724); ஆற்றின் அளவறிந்து கற்றவர்; அவையஞ்சா மாற்றம் கொடுத்தவர் (725); நூலொடு நுண்ணறிவை அஞ்சாதவர் (726); பல்லவை கற்ற பயனுடையவர் (728); கூற்றுடன்று மேல்வரினும் எதிர் நிற்கும் ஆற்றல் உடையவர் (765); மறமானம் மாண்டவர் (766); கான முயலெய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது - எனும் கொள்கையர் (772); உறின் உயிர் அஞ்சா மறவர் (778); இறைவன் செறினும் சீர் குன்றல் இலாதவர் (778); புரந்தார் கண் நீர்மல்கச் சாக்காடு கொண்டவர்: (780); நீரவர் (782); நவில் தொறும் நூல் நயம் போன்றவர்; பயில்தொறும் பண்புடையாளர் (783); மிகுதிக்கண் மேற்சென்று இடித்தவர் (784); அழிவினவை நீக்கி, ஆறு உய்த்து, அழிவின்கண் அல்லல் உழந்தவர் (787); உடுக்கை இழந்தவர் கைபோல் ஆங்கே இன இடுக்கண் களைந்தவர் (788); குடிப்பிறந்து தன்கண் இனப் பழி நாணியவர் (794); அழச் சொல்லி அல்லவை கடிந்தவர்; வழக்கறிந்த வல்லார் (795); உள்ளம் சிறுகுவ உள்ளாதவர் (798); உப்பாகிய சான்றோர் (802); தனிமை தலைநின்றவர் (814); ஒல்லும் கருமம் உடற்றியவர் (818); மன நல்லர் (823); ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தானடங்கியவர் (824); தகை மாண்ட தக்கார் (897); குன்றி அனைய செய்யாத குன்றன்னார் (898); ஏந்திய கொள்கையார் (899); சிறந்தமைந்த சீரார் (890); எண் சேர்ந்த நெஞ்சத் திடன் உடையார் (910); ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இழுக்காத குடிப்பிறந்தார் (952); பண்பில் தலைப் பிரியாப் பழங்குடியர் (955); சீரினும் சீரல்ல செய்யாப் பேராண்மையர் (962); பெருந்தகைமை பீடழியாப் பேராளர் (968); மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் (969); உலகு ஒளி தொழுது ஏத்தும் மானம் உடையார் (970); அருமைச் செயலாற்றிய பெருமை உடையவர் (975); பெருமிதம் கொள்ளாப் பெருமையர் (979); கடனறிந்து நல்லது மேற்கொண்ட சான்றாண்மையர் (981); அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையொடு ஐந்து சால்பூன்றிய தூண் (983); ஊழி பெயரினும் தாம் பெயராச் சான்றாளர் (989);

நயனொடு நன்றி புரிந்த பயனுடைய பண்பாளர் (994); கைதூவாக் கருமம் செய்த பீடுடைய பெருமையர் (1021); ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் குடி நீளச் செய்தவர் (1022); குடிசெய்வல் என்ற கொள்கைத் தெய்வம் (1033); தம் குடியைத் தாழாது உஞற்றியவர் (1024); குற்றம் இலராய்க் குடிசெய்து வாழ்ந்தவர் (1025); அமரகத்து வன் கண்ணர் போலத் தமரகத்துக்கு ஆற்றியவர் (1027); இடுக்கண் கால் கொன்றிட வீழ்ந்த குடிக்கு அடுத்து ஊன்றிய நல்லாளாய் அமைந்தவர் (1030); உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்றறைந்தவர் (1032); கரவாது உவந்தீயும்

கண்ணன்னார் கண்ணும் இரவாத மானம் உடையவர் (1061); தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள் தந்தது உண்டு மகிழ்ந்தவர் (1065); தம்மில் இருந்து தமது பாத்து உண்டவர் (1107); அறிதோறும் அறியாமை கண்ட அறிவாளர் (1110) - எனப் பலப் பல்வகைப் பெருமையும் திறனும் அறிவாற்றலும் ஒருங்கே பெற்ற மீமிசை மாந்தர் திருவள்ளுவர் பெருமான். அவரைப் போலும் ஒருவரை இவ்வுலகம் இன்னும் கண்டிலது; இனியும் காணுதல் அரிது என்று கூறுதலும் மிகையாகாதென்க.

## 4. திருவள்ளுவரின் உலகப் பார்வையும், அறநோக்கும் நிலை தாழாமையும்:

திருவள்ளுவர், தமிழ் நாட்டில் தோன்றித் தமிழ்மொழி பேசித் தமிழராகவே வாழ்ந்திருந்தவரேனும், தமிழியற் புலவர்கள் வேறு யாவரையும்விட, பொதுமாந்தப் பார்வையும், அஃதாவது உலகப் பார்வையும், அறநோக்கும் உடையவர் என்பது, அவர் நூல் செய்த தன்மையாலும், அவரதனை வகுத்துக்கொண்ட முறையாலும், அவற்றைக் கொண்டு அவர் வெளிப்படுத்திய கருத்துகளாலும் தெரிய வருகின்றது. உலக மக்களை ஒருசேரப் பார்த்தே, அவர்கள் இந்நிலவுலகில் வாழ்ந்து சிறப்பதற்கான வழிமுறைகளையும் நன்னெறிக் கூறுகளையும் வேறு எவரினும் மிகச் சிறப்பாக இந்நூல் முழுவதினும் எடுத்துக் கூறியிருப்பதை எவர் ஒருவரும் மிக வெளிப்படையாகவே உணரலாம்.

பொதுமாந்தப் பார்வை - அல்லது உலகப் பார்வை என்பது, மக்களினம் அறிவுணர்வாலும் பண்புணர்வாலும் மிகவும் படிநிலை வளர்ச்சியும், உலகத் தொடர்பும் மிகுத்துக்கொண்டு, அரசாளுமைப் பரிமாற்றங்கள் நிகழ்ந்து, பொருளுடைமைச் சமநிலைகள் உணரப் பெற்று, மேலை நாடுகளில் பொதுவுடைமைக் கருத்துகள் முதிர்ச்சியுற்ற பின்னரே உலகம் கண்ட ஒன்றாகும். இவ்வுணர்வை ஏறத்தாழ ஈராயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழினம் பெற்றிருந்தது என்பது மிகையான கூற்றன்று. அதற்குச் சான்றாகக் கழக நூல்களில் ஏராளமான கருத்துகள் கூறப்பெற்றுள்ளனவேனும், முழுமையாக அப்பார்வை திருக்குறள் ஒன்றிலேயே தெளிவுற அறியக் கிடக்கின்றது.

பிறர் செய்த நூல்கள் யாவும் இயற்கை, வீரம், காதல், வெற்றிச் செய்திகள், சமயக் கோட்பாடுகள் முதலிய பொதுவான கருத்துகளையே கொண்டிருந்தாலும், அவையெல்லாம் உலக மாந்தர் அனைவர்க்கும்

பொருந்துமாறு பொதுவியல்புகள் கொண்டனவாகப் பெரும்பாலும் இருப்பதில்லை. திருக்குறள் அவ்வாறில்லாமல், அறவியல், அரசியல், பொருளியல், வாழ்வியல், இல்லறவியல், ஆண் பெண் இன்பவியல் முதலிய அனைத்துக் கூறுகளிலும் பொதுமாந்தத் தன்மைக் கூறுகள் பளிச்சிடுமாறு புலப்படுத்தியிருப்பதைக் காணலாம்.

தமிழில் உள்ள பல நூல்களும் தொடக்கத்திலேயே உலக நோக்குக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். திருக்குறளும் தன் முதற்குறளிலேயே உலகை முன்வைத்திருப்பதை, அறியலாம். **'அறமுதல்வனாகிய இறைவனை முதலாக கொண்டு இயங்குகின்றது, இவ்வுலகம்."** என்னும் கருத்தே, இவ்வுலகில் கூறப்பெறும் அனைத்து நிலைக் கருத்துகளுக்கும் முதல் கருத்தாக இருத்தல் முடியும் என்பதை அனைவரும் உணர்தல் வேண்டும்.

ஒரு நூலின்கண் கூறப்பெறும் கருத்துகளை அறியப் புகுமுன், இவ்வுலக இயக்க முதலை அறிதல் அல்லது உணர்தல், படிப்பவர்கள் மனத்தைத் தூய்மைப்படுத்தும் முயல்வாகும். வேறுவேறான மன உணர்வுகளையும், வேறுவேறான அறிவு நிலைகளையும், வேறுவேறான மதக் கோட்பாடுகளையும், வாழ்வியல் கொள்கைகளையும் ஏற்றுக் கொண்டுள்ள வேறுவேறான மாந்த இன மக்களின் சிதர்ந்து நிற்கும் கலங்கல் உணர்வுகளை ஒருமுகப்படுத்தி, நூலுக்குள் தூய்மையான ஓர்மை எண்ணத்துடன் கொண்டு செலுத்தும் பொதுநிலைக் கருத்தாகும் இது.

**'இறைமை என்பது இயற்கை. அதன் பொதுமை இயக்கமே அறத்திற்கு முதல் வடிவம். எனவே இறைமையே இயற்கை; இயற்கையே அறம்; அறமே பொதுமை; பொதுமையே வாழ்க்கை. இதில் வேறுபாடுகள் உண்டு; மாறுபாடுகள் உண்டு; ஆனால் உணர்வு ஒன்றுதான்; அதுதான் பொதுமை; இப்பொதுமை உணர்வு நோக்கியே அனைத்து மக்கள் வாழ்க்கையும் இயங்குதல் வேண்டும் என்பதே பொதுமைக் கொள்கைக்கு மூலமும் வேருமாகும்'** என்னும் தம் தெளிந்த கோட்பாட்டை முதற் குறளிலேயே உணர்த்திவிடுகிறார், மெய்ப்பொருள் அறிஞராகிய திருவள்ளுவப் பேராசான், என்க. இவ்வாறு, தம் நூலுக்கு வாயில் வகுத்தது, அவரின் பேரறிவையே காட்டுகிறது.

இவர் கூறும் பொதுமை - பொதுவுணர்வு-பொதுத்தொண்டு-எல்லார்க்கும் நல்லது செய்வது. இவ்வுணர்வைத்தான் இவர் **அறம்** என்று கூறுகிறார். இவர் கூறும் பொதுவுணர்வெல்லாம் **அறம்**; அறமெல்லாம் பொதுவுணர்வு. **இவ்வாறு பொதுமைக்கே அறம் என்றும், அறத்திற்கே பொதுமை என்றும் இவர் கூறும் உலகப் பொதுமை மிகவும் வியக்கத்தக்கது.** வேறு எவரும் கூறாதது. இவர் கூறும் அறவுணர்வுகளை யெல்லாம் ஒருசேரப் பார்க்கின் இவ்வுண்மை தெற்றெனப் புலப்படும். இதுவே **தமிழியல்** என்று நாம் தெளியவேண்டும். மற்றபடி **ஆரியவியல்** கூறும் வருணக் கொள்கையையும்,

சாதியக் கொள்கையையும், அவற்றுக்குத் தகுந்த வாழ்வியல் கோட்பாடுகளையும் நடைமுறைகளையும் இவர் ‘அறம்’ என்று ஒப்புவதில்லை. ஆரியவியலின்படி ‘ அறம்’ என்பது **‘தர்மம்’. ‘தர்மம்’** என்பது **‘குலவொழுக்கம்,’** அல்லது **மதவொழுக்கம்;** அல்லது **மதக்கடமை** அல்லது **ஆரியப் பார்ப்பன நன்மை நெறிகள்.**

கீழ் வரும் சில எடுத்துக் காட்டுகளைக் காண்க.

“மனுவால் எந்த வருணத்தார்க்கு என்ன **‘தர்மம்’** விதிக்கப்பட்டதோ, அதுவே வேத சம்மதமாகும்.”

– மனு தர்மம்: 27.

“சூத்திரர்களின் தர்மம் என்னவென்றால் பிராமணர்களுக்குப் பணிவிடை செய்வதும், அவர்களுக்கு அடிமையாய் இருப்பதுமே”

– மனு தர்மம்: 1:31.

இவை போலும் குலவொழுக்கக் கோட்பாடுகளே ஆரியதர்மக் கோட்பாடுகளாகும். பொதுவாகக் கூறுமிடத்து ஆரிய தர்மம் என்பது அவர்களுடைய நன்மையும், வாழ்வும் நோக்கியே வகுக்கப்பெற்றுள்ளது. தமிழியல் அறம் என்பது உலக மாந்தர்க்கே பொதுவானது. இங்கு மேலும் சில ‘மனுதர்ம’க் கருத்துகளைக் கவனியுங்கள்.

‘‘சூத்திரன் பிராமணனுடைய தொழிலைச் செய்தாலும் சூத்திரனேயாவான். பிராமணன் சூத்திரனுடைய தொழிலைச் செய்தாலும் பிராமணனேயாவான்.”

“சூத்திரன் எவ்வளவு திறமை உடையவானக இருந்தாலும் கண்டிப்பாய் அவனைப் பொருள் சேர்க்க விடக் கூடாது. சூத்திரனைப் பொருள் சேர்க்க விட்டால், அது பிராமணனுக்கு ஆபத்தாக முடியும்.”

– மனு: 10-129.

“பிராமணன் உண்டு மிகுந்த எச்சில் ஆகாரமும், உடுத்திக் கிழிந்த கந்தல் ஆடையும், கெட்டுப்போன தானியமுமே சூத்திரனுடைய வாழ்க்கைக்குக் கொடுக்கப்பட வேண்டும்”

– மனு: 10:125.

“பிராமணர் இழிதொழில்களில் ஈடுபட்டிருந்தாலும் பூஜிக்கத் தக்கவர்கள்.”

– மனு:9 – 313.

“பிராமணன் மூடனாக இருந்தாலும் அவனே மேலான தெய்வம்”

– மனு:9 – 317.

*"பெண்களையும், சூத்திரர்களையும் கொல்வது மிகவும் குறைந்த பாவமாகும்."*

*— மனு: 11:66.*

*"ஒரு பிராமணன் ஒரு தவளையைக் கொன்றால் செய்ய வேண்டிய பிராயச் சித்தம் எதுவோ, அதைத்தான் ஒரு சூத்திரனைக் கொன்றாலும் செய்ய வேண்டும்."*

*— மனு: 11 — 131 — 132.*

*"சூத்திரன் பிராமணனுக்குப் பணிவிடை செய்வதே தவமாகும்"*

*— மனு: 11 : 285*

*"சூத்திரன் பொருள் சம்பாதித்தால் அது அவனுடைய எஜமானாகிய பிராமணனுக்குச் சேரவேண்டுமேயன்றிச் சம்பாதிப்பவனுக்குச் சேரலாகாது"*

*— மனு: 9 — 416*

*"பிராமண குலத்தில் பிறந்தவன் ஆசாரமில்லாதவனாயினும் அவன் நீதி செலுத்தலாம். சூத்திரன் ஒருபோதும் நீதி செலுத்தலாகாது"*

*— மனு — 8 — 20.*

இவ்வெடுத்துக் காட்டுகளே ஆரியவியல் தர்மத்தின் 'ஒருகுலத்துக் கொரு நீதி' சொல்லும் ஓரவஞ்சகத் தன்மையையும், அதன் தாழ்ச்சியையும் இழிவையும் கொடுமையையும் உணர்ந்துகொள்ளப் போதுமானவையாகும்.

ஆனால், தமிழியலின்படி, **"பொதுமையே — பொதுவுணர்வே - மக்கள் யாவர்க்கும் இருக்க வேண்டிய நல்லுணர்வுகளே - நன்னெறிகளே அறம்"** என்பது **திருவள்ளுவம்**. இவ்வுண்மைகளை இந்நூல் முழுதும் பரக்கக் காணலாம். இது தொடர்பாக மிக விரிவாக நூலுள் ஆராயப்பட்டிருக்கிறது. இதில் அறம் என்று வகுத்துக் கூறும் சில பல நல்லுணர்வுகளையும், பொதுமைக் கூறுகளையும் கீழே காண்க:

*'எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவது அறம்; அவ்வாறு ஒழுகுபவர் அறவோர்; அந்தணர்; அறவோர் அல்லாதவர் அந்தணரல்லர்.' (30.)*

*'அறம் சிறப்பு தரும்; செல்வமும் ஈனும்' (31.)*

*'அறத்தின் வழிப்பட்டதாகவே ஆக்கம் (செல்வம்) இருக்கவேண்டும்.(32.)*

*'ஒல்லும் (முடிந்த) வகையால் அறவினை செய்க. (33).*

‘மனத்துக்கண் மாசு இலாதது, அறம்’ (34.)

‘அழுக்காறு (பொறாமை), அவா (பேராசை), வெகுளி (கடுஞ்சினம்), இன்னாச்சொல் (நல்லதல்லாத, நல்லது விளைவியாத சொல்) ஆகிய இந் நான்கும் இழுக்காமல் இயன்றது அறம்’ (35.)

‘அன்றறிவாம் என்னாது அறம் செய்க’ (36.)

‘வீழ்நாள் படாஅமை நன்று (அறம்) ஆற்றுக’ (38.)

‘அறத்தால் வருவதே இன்பம்’ (39.)

‘செயற்பாலது அறனே’ (40.)

‘அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை’ (49).

‘அறனிழுக்கா இல்வாழ்க்கை’ (48.)

‘அறத்தாற்றின் இல்வாழ்க்கை’ (46.)

‘அன்பும் அறனும் . . . . இல்வாழ்க்கை’ (45.)

‘அறத்திற்கு அன்பு சார்பு’ (76.)

‘முகனமர்ந்து இன்சொல் வழங்குவது;
அகனமர்ந்து ஈவது - அறம்’ – (92.)

‘நல்லவை நாடுதல்; இனிய சொல்லுதல், அறம்’ (96.)

‘அல்லவை தவிர்த்தல், நல்லவை நாடுதல், அறம்’ (96).

‘பண்பின் தலைப்பிரியாமை, அறம்’ (97.)

‘சிறுமையுள் நீங்குதல், அறம் (98.)

‘செய்யாமல் செய்யும் உதவி, அறம்’ (101.)

இனி, ‘காலத்தால் செய்யும் உதவி’ (102.)

‘பயன் தூக்காது செய்யும் உதவி.’ (103.)

‘துன்பத்தில் துப்பு (துணை) ஆதல்’ (106.)

‘விழுமம் (துன்பம்) துடைத்தல்’ (107.)

‘பகுதியால் (உறவு, நட்பு, நொதுமல் வேறுபாடுகள்)
இன்றித் தகுதியால் ஒழுகுதல்.’ (111.)

- போன்ற அனைத்து ஒழுகலாறுகளும் அறம் என்றே நூலுள் கூறப்பெற்றுள்ளன. மேலும் ஆசிரியர் கூறுதல் காண்க.

'செப்பம் உடையவன் ஆக்கம் (செல்வம்)' (112.)

'நடுவு இகந்த (நீங்கிய) ஆக்கம் (செல்வம்) ஒழிப்பது' (113.)

'செஞ்சத்துக் கோடாதது (ஒருசார்பாக வளையாதது)' (115)

'நடுஒரீஇ அல்ல செய்யாதது' (116).

'சொல்கோட்டம் (வளைவு) இல்லாதது' (119.)

'அடக்கம் உடைமை' (121.)

'அறிவறிந்து அடங்குதல்' (123.)

'நிலையில் (எந்த நிலையிலும்) திரியாதது (வேறுபடாதது) (124.)

'நா காப்பது' (127.)

'எல்லார்க்கும் பணிவது' (125.)

'தீச்சொல் இல்லாதது' – (178)

'கதம் (மிகுசினம்) காப்பது' – (130.)

'ஒழுக்கம் உயிரினும் ஓம்புவது' (131.)

'குடிமை இழுக்காதது' (133.)

- போன்ற அனைத்துக் கூறுகளுமே அறம் என்று விளக்குவார், அவர். மேலும்,

'தீயொழுக்கம் தீமை தரும்' (138.) என்றும்,

'தீய வாயாலும் சொல்லாதது' (139.) என்றும்,

'உலகத்தோடு ஒட்ட ஒழுகுவது' (140.) என்றும்,

'பிறனில் விழையாதது (அதி. 15)

'பொறுமையைக் கையாள்வது' (அதி.16)

'பொறாமை இல்லாமல் இருப்பது' (அதி.17)

'தன் தேவைக்கு மேல் விரும்பாதது' (அதி.18)

'புறம் கூறாதது' (அதி.19)

'பயனில சொல்லாதது.' (அதி.20)

'தீவினைக்கு அஞ்சுவது' (அதி.21)

'பொதுமை உணர்வு கொள்வது' (அதி:22)

'இல்லாதவர்க்குக் கொடுத்து உதவுவது' (அதி.23)

'புகழ்பட வாழ்வது' (237)

'வசை ஒழிய வாழ்வது' (240).

என்றும், அறவுணர்வைப் பல கோணங்களில் புலப்படுத்திக் காட்டுவார். அத்துடன்,

'அருளுணர்வே (வேறுபாடற்ற அன்பே) அறம்' (249)

'ஊனுண்பது அருளன்று; அறமுமன்று (அதி:26)

'கரவாமை (மறைக்காமை, ஒளிக்காமை)யும்,
கள்ளாமை (திருடாமை)யும் அறம்' (288.)

'பொய்யாதது, வாய்மையாயிருப்பது அறம்' (அதி:30)

'எப்பொழுதும், எதற்கும், யார்க்கும் மனத்தாலும்
தீமை நினையாததும், செய்யாததும் அறம்' (317.)

'உயிர்களைக் கொல்லாதது அறம்' (321.)

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் அறம்' (322.)

'முறை செய்து மக்களைக் காத்தல் அறம்' (388.)

'ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை' (அறம்) (541.)

'குடிதழீஇக் கோலோச்சுதல் அறம்' (544.)

'குடி புறம்காத்து ஓம்புதல் அறம்' (549.)

'செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்' - அறம்.- (627.)

'இடுக்கண் படினும் இளி வந்த செய்யாமை அறம்' (654.)

'ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும், சான்றோர்
பழிக்கும் வினை செய்யாமை, அறம்' (656.)

பழிமலைந்து ஆக்கம் எய்தாமை, அறம்' (657.)

'சலத்தால் பொருள் செய்யாமை, அறம்' (660.)

'கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத
செய்யாமை, அறம்' (699.)

'பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யாமை அறம்' (700.)

'தீதின்றி வந்த் பொருள், அறம்' (754.)

'அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லாமை, அறம்' (755.)

'ஆற்றுவார் ஆற்றல் இகழாது போற்றுதல் அறம்' (891.)

– என்றும் பல படியாக அறத்தின் கூறுகளை ஆங்காங்கே நூல் நெடுகலும் உணர்த்திச் செல்வார், ஆசிரியர்.

இவையெல்லாம் பொதுமை உணர்வுகளே; பொதுநல ஒழுகாலாறுகளே. 'அறம் என்பது குமுகாய ஒழுங்குமுறை அமைப்பு (Social order)' என்பார், **'திருக்குறள் உண்மைப்பொருள்'** நூலாசிரியர், **கு.ச. ஆனந்தன்.** ஆனால் குமுகாய ஒழுங்கு முறை அமைப்பு - நாமாக அமைத்துக் கொள்ளும் அமைப்பு அன்று. **மாந்த உணர்வின் படிநிலை வளர்ச்சியால் வடிவமுற்ற இயற்கை அமைவு ஆகும்.** என்னை? கல்லும், முள்ளும், கரம்பும் புதரும், காடும் மேடும், மலையும் மடுவுமாய்க் கிடந்த நிலத்தில், வழி தெரியாமல், தள்ளாடித் தள்ளாடிக், கல்லை விலக்கி, முள்ளை நீக்கிக் கரம்பின் விலகிக், காட்டின் நிலை தெரிந்து, மலையைச் சுற்றி, மடுவின் இறங்கிக் காலூன்றி நடந்த மாந்தன், காலப்போக்கில் ஒரு பாதையை அமைத்துக்கொண்டானே - அந்தப் பாதையைப் போன்றதே அறம் என்னும் மன உணர்வும் என்க. மேலும் அந்தப் பாதையை அமைத்துக்கொண்ட பாதை என்று கூறாது, அமைந்த பாதை என்று கூறுவதே மிகவும் பொருந்துவதாகும் என்க.

இனி, அது, திருவள்ளுவர்க்கோ, அல்லது தமிழர்க்கோ மட்டுமே சொந்தமான உணர்வு அன்று. மாந்தவினமே உற்றுணர்ந்து அறிய வேண்டிய, தெளிய வேண்டிய இயற்கை உணர்வாகும். விலங்குத் தன்மையினின்று மேலேறிய மாந்தன், அதனினும்மேலான உயிருணர்வுக்குத் தேவை என்று கண்டு கொண்ட ஓர் ஒப்புரவுணர்வாகும். விலங்குகளிடம் இதைப் புகுத்த முடியாது; புகட்டவும் முடியாது. அதேபோல, மாந்தர்களால் இதைத் தள்ளவும் முடியாது; தவிர்க்கவும் முடியாது. மொத்தத்தில் **நீர்த்தேக்கத்திற்கு இயற்கையாய் அமைந்த கரை போல, மாந்த நிலைப்பாட்டிற்கு இயற்கையாக அமைந்த பொதுமை உணர்வே, அறம் என்க.** இந்த உணர்வை வளர்த்தெடுக்க வேண்டியதும், நிலைப்படுத்திக் கொள்ள வேண்டியதுமான முயற்சிகளை செயல்களைச் செய்பவர்களே **திருவள்ளுவர்** போலும் மெய்ப்பொருளாசிரியர்கள் ஆவர்; அத்தகு முயற்சிகளே **திருக்குறள்** போலும் நூல்கள் ஆகும், என்க. இதில் தமிழ் மொழிக்கும் தமிழினத்திற்கும் உள்ள சிறப்பும் பெருமையும் என்னவென்றால், இது மிகுதொன்மை முன்மையினமான தமிழினத்துள்தான், முன்தோன்றி மூத்த இனநலமாக மலர்ச்சி பெற்றிருந்தது என்பதே.

இனி, உலகின் பிற மதவியலார் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு நூல் திருமறை நூலாக இருப்பது போலவே, உலகப் பொதுமையாகவும், அறத்

தோன்றலாகவும் உள்ள திருக்குறளை, ஆர்வ மிகுதியாலும் அளவிறந்த மதிப்பாலும் **உலகப் பொது மறை** என்று பெருமையுடன் சிலர் கூறியும் எழுதியும் வருகிறார்கள். அது சரியன்று.

'**மறை**' என்பது, அறிந்தோ அறியாமலோ '**வேதம்**' என்னும் பொருளில் பயன்படுத்தப்பெற்று வருகிற ஒரு சொல். மறைவான பொருள்களை உணர்த்துவதால் '**மறை**' என்றும், அதற்குத் '**திரு**' என்னும் அடை கொடுத்துத் '**திருமறை**' என்றும் கூறப்பெறுகின்றது. ஆனால், 'வேதம்' என்னும் சொல்லுக்கு '**அறிவு நூல்**' என்பதே பொருள். அதுவும் தமிழ் மூலம் கொண்டதே என்பார் பாவாணர்.

விழி - அறிவு. பார்வையறிவே முதலறிவாதலால் அறிவுக்கு விழி முதலாக நின்றது போலும்.

'விழிப்புணர்வு' 'விழிப்பற்றவன்' போன்ற நூல் வழக்கையும் உலக வழக்கையும் ஓர்க.

விழி - வித் - வேத் - வேது - வேதம் - அறிவு நூல்

'வேதம்' என்னும் சொல் ஆரிய வேதங்களையே சுட்டும் சொல்லாக, காலப் போக்கில் வழக்குக் கொண்டுவிட்டது. அதேபோல், கிறித்துவர்களின் '**பைபி**'ளும், இசுலாமியர்களின் '**குர்ஆ**'னும், வேதங்கள் என்றே வழக்குக்கு வந்துவிட்டன.

இதைப் பின்பற்றியே தமிழிலும் சிலர் திருக்குறளைத் தமிழர் வேதமாக்க வேண்டும் என்னும் நயப்பான குருட்டாசையில், '**தமிழ் வேதம்**' என்றும், அதன் வழி '**தமிழ் மறை**' என்றும், அதன் விரிவாக '**உலகப் பொது மறை**' என்றும் கூறிவருகின்றனர். இஃது, ஆரியத்தை மறைவாக மேம்படுத்திக் கூறுவதே ஆகும்.

'வேதம்' ஆரியர்க்கே உரியதும், பிறர்க்கு மறுக்கப்பட்டதுமான நூலாகவே இருந்து வந்திருக்கிறது. எனவே 'மறை' என்பது அதற்கு ஒருவேளை பொருந்தலாம். ஆனால், திருக்குறள் என்றைக்குமே எவர்க்குமே மறைக்கப்பெற்றதோ, தவிர்க்கப்பெற்றதோ அன்று. அந்நூல் உலகில் உள்ளார் யாவர்க்கும் பொதுவான, பொதுவுடைமையான நூலே ஆகும். எனவே திருக்குறளை மறைநூல் என்று கூறுவதைவிட, அறநூல், அறிவுநூல், வாழ்வியல் நூல் என்றவாறு சொல்லப் பெறுவதே மிகவும் பொருந்துவதாகும்.

திருக்குறள் '**அறம்**' என்னும் பெயராலேயே அழைக்கப்பெற்ற நூல் என்றும் அறிஞர்கள் கூறுவர். அதற்கு எடுத்துக்காட்டாக,

'ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்

*குரவோர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்திகொன் றோர்க்கு உய்தி இல்லென
**'அறம்'** பா டிற்றே'

- புறம்: 34: 1 - 7.

*இவ்வடியைப், 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்று உவே. சாமிநாதர் திருத்தி வெளியிட்டார்.

- என்னும் ஆலந்தூர் கிழார் பாட்டடிகளையும்,

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' - 110.

- என்னும் குறட்பாவையும் இணைவைத்துப் பொருள் கூறினார், பரிமேலழகர்.

இங்கு, புறப்பாடலை ஓர் எடுத்துக் காட்டாகக் கூறலாமே யன்றி, அதில் கூறப்பெற்ற **அறம்** என்னும் சொல் திருக்குறளையே குறித்ததாகக் கொள்ளப் பெறலாகாது. அதற்கு முன்னிருந்த 'அறம்' என்னும் பெயர் கொண்டதாகக் கருதப்பெறும் வேறொரு தமிழ்த் தனி நூலையே அது குறித்ததாகும் என்பதற்கு, அப் புறநானூற்றிலும், திருக்குறளிலும், வேறு சில தனிப் பாடல்களிலும் பல சான்றுகள் உள என்று கூறி, அவற்றை அறிஞர் சிலர் சுட்டியும் காட்டியுள்ளனர். அவை வருமாறு:

**'அறம்** புகழ்ந்த வலை சூடி' - புறம்:166:14.
(வலை - ஓர் அணிகலன்).

**'அறங்**குறித் தன்று பொருளா குதலின்'

- புறம்:362:10.

**'அறம்** பொருள் கண்டார் வாய்ச் சொல்' -141.

**'அறம்** கூறும் ஆக்கம் தரும்' -183.

'அந்தணர் நூற்கும் **அறத்தி**ற்கும்' 543.

**'அறம்**உரைத் தானும் புலவன்; முப் பாலின்
திறம்உரைத் தானும் புலவன்-குறுமுனி
தானும் புலவன்; தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனின்'

- பொய்யாமொழிப் புலவர்.

'ஏரணம் உருவம் யோகம்

இசைக்கணக் கிரதம் சாலம்
தாரணம் **அறமே** சந்தம்
தம்பநீர் நிலமு லோகம்
மாரணம் பொருளின் றின்ன
மானநூல் யாவும் வாரி
வாரணம் கொண்ட தந்தோ
வழிவழிப் பெயரும் மாள'

- பழம்பாடல்.

இவற்றிலிருந்து, 'அறம்' என்ற ஒரு நூல் தனியே இருந்ததென்பதும், அந்நூல் முன்னரே கடற்பெருக்கினால் அழிந்துபட்ட நூல்களுள் ஒன்றாயிருந்த தென்பதும் அறியப்பெறுகிறது.

இனி, இத் திருக்குறளுள்ளும் நூலாசிரியர் 'அறம்' என்பது இன்னது எனத் தெளிவாகவோ வரையறுத்தோ சொல்லவில்லை.

சில விடங்களில் **நல்ல மனவுணர்வையும், உயர் குணத்தையும்** - அறம் என்பார்:

*(எ-டு)*

*'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்'* -33.

*'அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்'* - 35.

*'அறத்திற்கே அன்பு சார்பு என்ப'* - 76.

*'பிறனாக்கம் பேணாது அழுக்கறுப்பான்*
*அறனாக்கம் வேண்டாதான்'* - 163.

*'அறனறிந்து வெஃகா அறிவுடையான்'* - 179.

— என்பன போன்றவை.

சில விடங்களில் **நல்ல சொற்களையும் நல்ல செயல்களையும்** - அறம் என்பார்.

*(எ-டு)*

*'எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுதல்'* - 30

*'அறவினை ஓவாதே' செல்லும் வாயெல்லாம் செயல்'* - 33.

*'அன்றறிவாம் என்னாது அறம்செய்க'.* - 36.

*'செயற் பாலது ஓரும் அறனே'* - 40.

'முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொல் இனதே அறம்' - 93.

'புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலில் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்' - 183.

'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற
செய்யாமை செய்யாமை நன்று' - 297.

— என்பன போன்றவை.

சில இடங்களில் **வாழ்வமைப்பையே** அறம் என்று விளக்குவார்.

(எ-டு):

'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' - 49.

'அறத்தாற்றின் இல்வாழ்க்கை' - 46.

'அறனிழுக்கா இல்வாழ்க்கை' - 48.

'அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்' - 147.

'பிறன்மனை நோக்காத பேராண்மை அறம்' - 148.

- என்று இவ்வாறு மனம், சொல், செயல், வாழ்க்கை என்னும் அனைத்து மாந்தவியல் கூறுகளிலும் 'அறம்' எனும் பொதுநலம் பேணும் ஒழுங்குணர்வு ஊடுருவி நிற்பதைத் திருக்குறள் போல் வேறு எந்த நூலும் எடுத்துக் கூறவில்லை.

ஆசிரியர், இவ்வாறு மனம், சொல், செயல், வாழ்க்கை ஆகிய அனைத்திலும் அறவுணர்வு பரவியிருத்தலை, வேறு வகையாகவும் விளக்கி உறுதிப்படுத்துவதையும் நாம் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும். அவ்வகையில்,

'**பழிப்பது இல்லாதது** அறம்' - 49.

'**நல்லவை** எல்லாம் அறம்' - 96.

'கடன் என்ப **நல்லவை எல்லாம்**' - 981.

— என்று கூறி மக்கள் தமக்கும் பிறர்க்கும் நன்மை பயக்கின்ற-பொதுநலம் தருகின்ற-செயல்களையே அறச்செயல்கள் என்று கருதுதல் வேண்டும் என்பார்.

மக்கள் எச்செயல் செய்தாலும் அது அறவுணர்வு என்னும் பொதுநலவுணர்வு நோக்கியே செய்யப்பெறுதல் வேண்டும் என்றும் வலியுறுத்துவார். அப்பொழுதுதான் உலகநலம் கிடைக்கும்; இயற்கை தரும்

அனைத்து நலன்களையும் மக்கள் அனைவரும் சமமாக நுகர்ந்து, துய்த்தல் இயலும்-என்பது அவர் கொள்கையாகவே நூலுள் விரிந்தும் பொதிந்தும் கிடக்கின்றது.

அத்துடன் அவர் கூறவந்த அறவுணர்வுகளையும், அறச் செயல்களையும் இல்லறத்தார்க்கு உரியவை இவை, துறவறத்தார்க்கு உரியவை இவை, அரசர்க்கு, அஃதாவது ஆட்சியில் உள்ளவர்க்கு, அமைச்சர்க்கு அஃதாவது ஆளுமைப் பொறுப்பில் - அதிகாரத்தில் உள்ளவர்க்கு, மற்ற பிறர்க்கு உரியவை இவை இவை என்று பகுத்தும் வகுத்தும் தொகுத்தும் கூறுகின்ற பாங்கு மிகவும் போற்றத்தக்கதாம், என்க.

அவ்வகையில், அவர் தொகுத்துக் கூறும் அறவுணர்வுகளும் அறச்செயல்களும், அனைவர்க்கும் பொதுவானவையாகவும், வகுத்துக் கூறும் அறவுணர்வுகளும் அறச் செயல்களும், அவ்வவ் வியல்களிலும், அதிகாரப் பகுப்புகளிலும் கூறப்பெறுபவர்களுக்கே சிறப்பானவையாகவும் அவர் கருதிக் கூறியதாக உணரமுடிகிறது.

எடுத்துக்காட்டாக, அறத்துப் பாலில், இல்லறவியலில் கூறப் பெறும் அறவுணர்வுகளாகிய அன்புடைமை, செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, ஒப்புரவறிதல் - ஆகிய **மன அறவுணர்வுக் கூறுகளும்**, இனியவை கூறல், புறங்கூறாமை, பயனில சொல்லாமை, புகழ் ஆகிய **சொல் அறவுணர்வுக் கூறுகளும்**, மக்கட்பேறு, விருந்தோம்பல், ஒழுக்கமுடைமை, பிறன்மனை விழையாமை, தீவினையச்சம், ஈகை முதலிய **செயல் அறவுணர்வுக் கூறுகளும்**, இல்லறத்தார்க்கே உரிய **சிறப்புக் கூறுகளாகவும்**, பிறர்க்கும் உரிய **பொதுக் கூறுகளாகவும்** ஆசிரியர் விதந்துரைப்பதாகக் கருத இடமுள்ளது.

அதேபோல், அதில் கூறப்பெறும், இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு ஆகிய மூன்று உலகியல் அறவுணர்வுக் கூறுகளும் கூட இல்லற நோக்கமுடையார்க்கே உரிய அறநலக் கூறுகளாகவே கூறப் பெறுகின்றன. இவை நேரடியாகத் துறவறம் மேற்கொள்வார்க்குப் பயன்படுவன அல்ல.

இனி, இவைபோலவே, துறவறவியலில் கூறப்பெறும் அருளுடைமை, புலால் மறுத்தல், தவம், கூடா ஒழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல், ஊழ் ஆகிய பதினான்கு அறக் கூறுகளும், துறவியர்க்கே சிறப்பாகவும், இல்லறத்தார்க்குப் பொதுவாகவும் கூறப் பெற்றனவே யாகும் என்றுணர்க. என்னை? இல்லறம் மேற்கொண்டொழுகுவார் இவற்றைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்தல் உலகியல் நிலையில் கடினமாகலினாலும், பெரும்பாலும் இவற்றினின்று தவறியொழுகுதல் இயல்பே ஆகலினாலும், இவற்றை அவர்க்குப் பொதுவாகவும், துறவியர்க்குச் சிறப்பாகவும்,

கடமைகளாக்கி அவற்றைத் **துறவறவியலில்** கூறினார் என்று உய்த்துணர்ந்து கொள்க.

என்னை? இல்லறம் மேற்கொண்டொழுகுவான் ஒருவன், தன் குடும்பத்தாரிடமும், உலகத்தாரிடமும் கலந்து பழகுதல் தவிர்க்கவியலாத ஒன்றாகையால், அருள் மேற்கொண்டொழுகுதலும், புலால் மறுத்தலும், தவம் இயற்றுதலும் பொய்யாமை ஆற்றுதலும், வாய்மை பேணுதலும், வெகுளாமை காத்தலும், இன்னா செய்யாமையும், ஒரோவொருகால் ஈ, ஏறும்பு, கொசுகு, எலி, பிற நச்சுயிரிகள், தாக்கவரும் கொடுவிலங்குகள் முதலியவற்றின்பால் கொல்லாமை மேற்கொள்ளுதலும், பொருள் நலன்களைத் தேவையின் பொருட்டு விரும்புதலும், தேடுதலும், காத்தலும், துய்த்தலும் ஆகிய வினைகளுக்கிடையில் நிலையாமை உணர்தலும், தன் தனி உயிர்நலம் கருதித் துறத்தலும், பொய்யும், புனைவும், போலிமையும் மிடைந்து விளங்கும் உலகத்து மெய்யுணர்தலும், ஆரா இயற்கை அவா நீத்தலும், ஊழ் வலியுணர்தலும் ஒல்லுமோ; ஒல்லாது ஆகலின், என்க.

அத்துடன் கூடா ஒழுக்கத்துச் சிற்சிலகால் நெஞ்சிடறுதலும், நேர்மை குலையுதலும், மழித்தலும் நீட்டலும் ஒழியாமையும் நேருமாம் என்க. இவ்வாறு வழுவி வழுவிச் சறுக்கலும் இழுக்கலும் என்று இவற்றிடை மனமும் மொழியும் மெய்யும் மழுங்கவும் அழுங்கவும் மயங்கவும் தயங்கவும் அல்லற்பட்டு ஆற்றாது வாழ்ந்து சலிக்கும் இல்லறத்தானுக்கு, இச்சான்றாண்மைக் கூறுகளும் துறவுணர்வுகளும் வலியுறுத்தப்பெறுவது முழுப்பயன் தருவதாகாது என்று நன்குணர்ந்த பேராசான், இவ்வனைத்துக் கூறுகளையும், உலகியல் முனிந்து மெய்யறிவியல் நினைந்து, துறவியல் துணிந்தவர்க்கே வலியுறுத்துவான் வேண்டி, இல்லறவியலில் வையாது, துறவறவியலிலேயே வைத்துக் கூறினார், என்க.

இனி, இது போலவே, இல்லறம் புகாது, நேரடியாகத் துறவறம் நோற்கப் புகுவார்க்கும், புகுந்தார்க்கும் **இன்பத்துப் பால்** எனப் பெறும் **காமத்துப் பால்** முழுவதும் தேவையின்றெனக் கொள்வதே அறமாம் என்க.

அத்துடன், இவ்விடத்து, இனியொன்றையும் நாம் கவனித்தல் இன்றியமையாததாம். அஃது, நூலாசிரியரின் திருவுளக் கொள்கையாம் ஆகலின்,

என்னை? திருவள்ளுவப் பெருந்தகைக்கு உற்ற உயர் கொள்கை யாதெனின், இல்லறத்துப் படிந்து, உயிர்க்குற்ற பிறவி நோக்கமாகிய காமவின்பத்துத் துய்ப்பறியாமல், உலகியலை அறநோக்கமாகவும் தவிர்த்துத் துறவு பூணுதல் தேவையுமன்று; சிறப்புமன்று என்று கருதுவதே என்க. என்னை?

'அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன்' - 46.

'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை' - 47.

'ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து' - 48.

'அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை' - 49.

– என்று பலவாறும் வலியுறுத்திக் கூறினார் ஆகலின். இனி, இவை பற்றியெல்லாம் இந்நூலுள், துறவறவியல் முன்னுரையில் அளவை முறையான் நன்கு விளக்கப்பெறும்; விரிவை ஆங்குக் கண்டுகொள்க.

இனி, இவை போலவே, பொருட் பாலின்கண் அரசியலில் கூறும், இறைமாட்சி, கல்வி, கேள்வி, அறிவுடைமை, குற்றங் கடிதல், பெரியாரைத் துணைக் கோடல், சிற்றினம் சேராமை, தெரிந்து செயல்வகை, வலியறிதல், காலம் அறிதல், இடன் அறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றந்தழால், பொச்சாவாமை,செங்கோன்மை, ஒற்றாடல், ஊக்கம் உடைமை, மடியின்மை, ஆள்வினை உடைமை, இடுக்கண் அழியாமை - ஆகியவையும்,

– அமைச்சியலில் கூறும், அமைச்சு, சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினை செயல் வகை, தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், அவை அறிதல், அவை அஞ்சாமை - ஆகியனவும், அரசுக்கு உறுப்பாயுள்ள,

– அரணியல், கூழியல், படையியல், நட்பியல், குடியியல் ஆகிய இயல்களுள் கூறுவனவும், அரசர்க்கும், அமைச்சர்க்கும், இற்றை ஆட்சியர்க்கும் சிறப்பும், மற்றுள்ள அனைவர்க்கும் பொதுவும் ஆகும் என்க.

– என்றிவ்வாறு, இங்குக் கூறப்பெற்ற இவ்விவ் வகைகளிலேயே திருக்குறளைப் பொருள்படுத்திக் கற்க வேண்டுமே யன்றி, அனைவர்க்கும் அனைத்தும் சிறப்பென்றோ, பொதுவென்றோ, கருதிக் கற்பது, திருக்குறளை நன்கு உணர்ந்து கொண்டதும், கடைப்பிடித்தலும், ஆகா என்க.

இனி, திருக்குறளில் ஆண் ஆளுமைத் (ஆணாதிக்கம்) தன்மையே மிகுந்திருப்பதாக ஒரு சிலர் கூறுவர். அஃது ஓரளவு உண்மையே ஆயினும், அவர் பேரளவில் கூறுவது ஆண்-பெண் பொதுமையையே என்பது இவர் கருத்துகளை நுணுகி ஆராய்வார்க்குப் புலப்படாமல் போகாது. மேலும், அவர் கூறும் ஓரளவு ஆணாளுமைத் தாக்கக் கருத்துகள்கூட ஆண் குமுகாயத் தாக்கம் எப்பொழுதும் பெண்மேல் படிந்திருப்பதையே காட்டுகிறது. இஃது

அந்தக் காலச் சூழ்நிலையின் புற அழுத்தமாகவும் இருக்கலாம். இந்நிலை இன்று வரை மாறவே இல்லை என்பதே நேரிடை. இன்று திருவள்ளுவர் காலத்தை விட ஓரளவு குறைந்துள்ளதாகக் கூறலாமே தவிர, அந்நிலை அடியோடு மாறிவிட்டது என்று கூறிவிட முடியாது. இஃது, இங்கு மட்டும் அன்று; பெண்ணுரிமையும், ஆண், பெண் சமநிலையும் உரக்கக் கேட்கும் உலகப் பொதுவுடைமை நாடுகளிலும் கூட இதே நிலைதான். இன்னும் சொல்வதானால், உலக இறுதி வரையிலும் கூட இச்சமநிலைக் கோட்பாட்டில் சிறிது ஏற்றத்தாழ்வு இருந்தே வரும் என்பதே இயற்கை இயலாகவும் இருக்கலாம். கரணியம் ஆணியல் கூறுகள் சற்று வலிந்தனவாகவும். பெண்ணியல் கூறுகள் சற்று மெலிந்தனவாகவும் இயற்கையிலேயே இருப்பதை நாம் ஒப்புக்கொள்வதே சரியானதாகும்; அதுவே நடுநிலையானதுமாகும். இயற்கை நிலையில் அவ்வாறிருப்பினும், ஒரு வகையில் உலகியல் நிலையில், ஆணியலை அடக்கி ஆள்வது பெண்ணியலே என்பதையும் நாம் மறந்து விடலாகாது. இந்நிலை உலக உயிர்கள் அனைத்திலும் பொதிந்திருப்பதை நாம் உற்றுணர்தல் வேண்டும்.

மேலும், ஆணாளுமை என்பது ஒரு புறத்தியல் கோட்பாடே. அஃதாவது வெளியில் மட்டும் தெரியவரும் ஒரு புற உண்மையேயாகும். ஆனால் அகத்தியலாக இருந்து இயங்கும்; பெண்ணாளுமை என்பது ஆணியலையும் வழிநடத்தும், உள்ளிருந்து இயக்கும் ஓர் ஆற்றல் கூறாகும் என்று உற்று நோக்கி உய்த்துணர்ந்து கொள்க. இயற்கையில் புறத்தியலே பார்வைக்குரியதாகவும், அகத்தியல் உணர்வுக்குரியதாகவுமே உள்ளன. அஃதாவது ஆண்மை புறமாகவும், பெண்மை அகமாகவுமே இருந்து இயங்கி வருகின்றன; அதனால் ஆண்மை எடுப்பாகவும் பெண்மை படுப்பாகவுமே தோன்றி நிற்கும். இவ்வுண்மை உடலியல், அறிவியல், மனவியல், உயிரியல் முதலிய அனைத்துக் கூறுகளிலுமே இயங்கியலாக -உலகியலாக- நின்று இலங்கி வருகின்றதை உற்று நோக்கி உணரலாம். மற்றபடி ஆணாளுமை, பெண் அடங்குமை என்பவெல்லாம் உரிமையியலில் கூறப்பெறும் - அல்லது கருதப்பெறும் - ஓர் உலகியல் பூசலே என்க. ஆனால் இது காலப் போக்கில் சமநிலை பெறும் ஒரு புறவியல் கோட்பாடே என்க.

ஆனால், உயிரியங்கியலைப் பொறுத்த வரையில், ஆண்மையினும் பெண்மையே வலிவும் பொலிவும் பொருந்தியதாகும். இவ்விரண்டு தன்மைகளையும் இரும்புக்கும், பொன்னுக்கும் ஒப்பிட்டுக் காணுக. பொதுவாக வலிவைப் பொறுத்த நிலையில் இரும்பு வலியது, பொன் மெலியது என்பது ஒரு புறத்து உண்மையே! ஆயினும் பொன்னினும் இரும்பு பொலிவுடையதோ? பொருளுடையதோ? நிலைப்பாடுடையதோ?, அன்று, அன்று, அன்று என்க. இரும்பு துருப்பிடித்து மண்ணோடு மண்ணாக மட்கும்; பொன் அவ்வாறு மட்குவதுமில்லை; மறைவதுமில்லை;

பொலிவிழப்பதுமில்லை; பொருண்மை குறைவதுமில்லை. ஆனால், இரண்டையும் ஒப்பு நோக்குகையில், பொன் அடங்கியிருந்து அமைந்து பயன்படும் தன்மையது. இரும்பு பரந்துபட்டு எழுந்து நின்று இயங்கும் தன்மையது. இரண்டினும் இரும்புக்கே ஆளுமை (பயன்படுத்தம்) மிகுதி. அதனால், இரும்பு போல் பொன்னும் பலபடு வினைகளில் பயன்பாடு பெறுமோ? பெறாதென்க. எனவே,பொன்னினும் இரும்பு உயர்வாமோ? ஆகாதென்க. இந்நிலைகள் போன்றவைதாம் ஆண்மையும் பெண்மையும்!

**ஆண்மை** பல எடுப்பு வினைகளில் பயன்படவேண்டிய ஓர் இயங்கியல் தன்மை கொண்டது. அதற்கு இறுக்கமும் முடுக்கமும் திண்மையும் வன்மையும் தேவை. எனவே, அவை இயற்கையாலேயே படைப்புப் பெற்றுள்ளன. பாடு (பயன்பாடு) திறனும் கொண்டுள்ளன. அதுபோலவே, **பெண்மை** பல படுப்பு வினைகளில் பயன்பட வேண்டிய ஓர் இயங்கியல் தன்மை கொண்டது. அதற்கு நளினமும், பொலினமும், தண்மையும் மென்மையும் தேவை. எனவே அவை இயற்கையாலேயே படைப்புப் பெற்றுள்ளன; பாடு திறனும் கொண்டுள்ளன. இவற்றுள் அவ்வவற்றின் தனித்திறன்களே உலக இயங்கியலாகும். இவ்வியங்கியல் தன்மைகள் கெடும்படி உலகியலில் அவை இயங்குதல் கூடாது. அவ்வாறு இயங்கின், அவற்றின் இருவேறு இயல்பியல் நிலைகளும் தறிகெடும்; ஒன்றுக்கொன்று மாறுபடும்; பின், வேறுபடும்; அதன் பின் ஊறுபடும்; இறுதியில் உலகியல் ஆக்கம் சிதைந்து தேக்கம் உறைந்து நிற்கும் - எனும் இவ்வுண்மைக் கோட்பாட்டினை உணர்ந்து தெளிக.

திருவள்ளுவப் பேராசிரியர், இம்மெய்ப்பொருள் கோட்பாட்டை நன்குணர்ந்தவர். எனினும் உலகியல் அளவான் அவர் அவற்றை அடக்கிக் கூறுதல் வேண்டி அவ்வவ்வாறு அமைத்துக் கூறினார் என்க. என்னை?

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல் - 637.

என்றாராகலின்.

எனவே, அவர் ஆணாளுமையையும், பெண்ணாளுமையையும் எவ்வெவ்விடத்து எடுத்தும் படுத்தும் பொதிந்து கூற வேண்டுமோ, அவ்வவ்விடத்து அஃததற்கு இயைபக் கூறினார் என்க. அவ்வகையில் அவர் ஆணாளுமையைச் சிற்சில இடங்களில் எடுத்துக் கூறினார் எனல் வேண்டும். அவ்விடங்கள் வருமாறு:

**1) இறைமையை அவர் ஆண்வடிவமாகவே கற்பித்தது.**

(எ-டு) :

அ) ஆதி பகவன்

- 1

ஆ) வாலறிவன்

- 2

இ) மலர்மிசை ஏகினான் - 3

ஈ) வேண்டுதல் வேண்டாமை இலான் - 4

உ) இறைவன் - 5, 10

ஊ) ஐந்தவித்தான் (இறைவன்) - 6

எ) தனக்குவமை இல்லாதான் - 7

ஏ) அறவாழி அந்தணன் - 8

ஒ) பற்றற்றான் (இறைவன்) - 350.

**2) ஆட்சித் தலைவரை அவர் ஆணாகக் கூறியது.**

(எ-டு) :

அ) இறை . . . அவனை. (அரசனை) - 547.

ஆ) இறைவற்கு (அரசனுக்கு) - 733.

இ) இறைவன் (அரசன்)

- 778.

**3) நீத்தாரைப் பலவிடங்களில் அவர் ஆண் பாலாராகவே உரைத்தது.**

(எ-டு) :

அ) ஓரைந்தும் காப்பான் - 24.

ஆ) ஐந்தவித்தான் (நீத்தார்) - 25.

இ) வகை தெரிவான் - 27.

ஈ) நீங்கியான் - 341.

**4) அனைத்து அறக் கூறுகளுக்குமுரியவன் ஆண் என்றே கூறியது.**

(எ--டு) :

மாசிலன் (34), பொறுத்தான் (37), அஃதொருவன் (38), ஒருவனுக்கு(40), இல்வாழ்வான் (41), (42), (47), வாழ்பவன் (50), வருவிருந்து ஓம்புவான் (84), மிச்சில் மிசைவான் (85), பணிவுடையன், இன்சொலன் (95), காண்பான் (99), செய்ந்நன்றி கொன்ற மகற்கு (110), செப்பம் உடையவன் (112), அடங்கியான் (124), ஆற்றுவான் (130), அறனியலான் (147), -முதலிய நூற்றுக்

கணக்கான இடங்கள்.

**5) இல்வாழ்வை, (விருந்தோம்பல் உட்பட) ஆண் சார்பாகவே கூறியது.**

*(எ-டு) :*

*இல்வாழ்வான் (41), (42), இல்வாழ்க்கை வாழ்பவன் (47), வாழ்வாங்கு வாழ்பவன் (50), விருந்து ஓம்புவான் (84), மிச்சில் மிசைவான் (85).*

**6) வாழ்க்கைத் துணை நலத்துள் பெண்ணுக்கே தகுதிகள் கூறி ஆணுக்குக் கூறாமல் விட்டது:**

*(எ-டு)*

*அ) மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. - 51.*

*ஆ) மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை எனைமாட்சித் தாயினும் இல் - 52.*

*இ) இல்லவள் மாண்பு. - 53.*

*ஈ) கற்பென்னும் திண்மை உண்டாகல் - 54.*

*உ) கணவற் தொழுதெழுவாள். - 55.*

*ஊ) தற்காத்துத் தற்கொண்டான் பேணி தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண். - 56*

*எ) நிறைகாக்கும் காப்பு. - 57.*

*ஏ) புகழ் புரிந்த இல். - 59.*

*ஐ) மனை மாட்சி - 60.*

**7) மக்கட்பேற்றுள் ஆண் மகனையே முன்வைத்துக் கூறியது:**

*(எ-டு)*

*அ) தந்தை மகற்கு (மகனுக்கு ) ஆற்றும் நன்றி. - 67.*

*ஆ) தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய் - 69.*

*இ) மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்எனும் சொல். - 70.*

*(இதில் தந்தைக்கும் மகனுக்கும் உள்ள தொடர்பு மட்டுமே குறிக்கப் பெறுகிறது)*

**8) பிறனில் விழையாமையை இருபாலர்க்கும் பொதுவாக்காமல், பெண்மேல் ஆண்செல்லுதலையே முன்னிருத்திக் கூறியது.**

- இதனை மிகுதியும் ஆணாளுமைத் தன்மையும் நோக்கிக் கூறினார் போலும்.

- இவ்வதிகாரத்துள் பெண்ணைப் **'பிறன் பொருள்'**, **'பிறனியலாள்'** **'பிறற்குரியாள்'**, **'பிறன்வரையாள்'** என்று கூறுவதிலும் ஆண்மை உயர்த்தப் பெறுகிறது, காண்க.

**9) நூல் நெடுகலும், அனைத்துக் கருத்துகளிலும் ஆணையே முன்வைத்துக் கூறுதல்.**

செப்பம் உடையவன் ஆக்கம் (112), நன்றிக்கண் தங்கியான் (117), நிலையில் திரியாது அடங்கியான் (124), கற்றடங்கல் ஆற்றுவான் (130), அழுக்காறுடையான் (135), அறனாக்கம் வேண்டாதான் (163), கொடுப்பது அழுக்கறுப்பான் (166) அழுக்காறுடையான் (167), அவ்விய நெஞ்சத்தான், செவ்வியான் (169), ஆற்றின்கண் நின்றான் (176), அறங்கூறான், புறங்கூறான்(181), அறஞ் சொல்லும் நெஞ்சத்தான் (185), பிறன் பழி கூறுவான். (186), புன்சொல் உரைப்பான் 9189), பயனில சொல்லுவான் (191), நயனிலன் (193), பயனில்சொல் பாராட்டுவானை மகன் எனல் (196), தன்னை அடல் வேண்டாதான் (206), தன்னைத்தான் காதலனாயின் (209), அருங்கேடன், தீவினை செய்வான்(210), ஒத்ததறிவான், உயிர்வாழ்வான், மற்றையான் (214), பேரறிவாளன் (215), நயனுடையான் (216), பெருந்தகையான் (217), அஃதொருவன் (220), குலனுடையான் (223), - முதலிய நூற்றுக்கணக்கான இடங்கள்.

இவ்வாறின்றிக் கருத்துகளை ஆண்பால் சார்ந்தனவாகக் கூறாமல்,பொதுப்பால் (பலர்பால்) சார்ந்து கூறுகிற முறையும் நூலாசிரியரிடம் உண்டு என்க. அவற்றுள் சில வருமாறு:

குழலினிது யாழினிது என்ப (66), அன்பிலார் எல்லாம் தமக்குரியர், அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு (72), இன்புற்றார் (75), அறியார் (76), அன்பிலவர்க்கு (79), உதவி செயப்பட்டார் (105), துன்பத்துள் துப்பாயார் (106), விழுமம் துடைத்தவர் (107), .அவர் செய்த ஒன்று (109), தக்கார் தகவிலர்...அவரவர் (114), யாகாவாராயினும், சோகாப்பர் (127), உரவோர்(136), ஒழுக்கம் உடையவர் (139), அறிவிலாதார் (140), அகழ்வார், இகழ்வார் (151), ஒறுத்தாரை, பொறுத்தாரை, வையாரோ, வைப்பர் (155), தற்பிறர் (157), தூய்மை உடையர், நோற்கிற்பவர் (159), அகன்றார், இல்லார் (170), செய்யார் - (172, 173, 174), அறிவுடையார் (179), துன்னியார், ஏதிலார் (188), நட்டார் (192), நீர்மையுடையார் (195) சான்றோர் (197), அறிவினார் (198) மாசறு காட்சியவர் (199), விழுமியார் (201), தீயவை செய்தார் (208), ஆற்றுவார், மாற்றுவார் (225), - போலும் நூற்றுக் கணக்கானவை.

- இவ்விரண்டு கடைப்பிடிகளையும் உற்றுநோக்குங்கால், உயர்வுத்

தன்மை கூறும் இடங்களிலெல்லாம் பொதுப்பால் சுட்டுச் சொற்களையும், தாழ்வுத்தன்மை கூறும் இடங்களிலெல்லாம் ஆண்பால் சுட்டுகளையுமே நூலாசிரியர் பயன்படுத்தியுள்ளார் என்று கருதவேண்டியுள்ளது.

ஆனால், இதற்கு நெறிவிலக்காகவும் பற்பல இடங்கள் உள்ளன என்றும் அறிகிறோம். அவற்றுள் சில வருமாறு:

**1) பொதுப்பாலில் உயர்வு சுட்டாமல் தாழ்வு சுட்டியது:**

‘விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார்’ - 88.
‘கொன்றன்ன இன்னா செயினும் அவர் செய்த’ - 109.
‘உய்வில்லை எந்நன்றி கொன்றார்க்கும்’ - 110.
‘இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி’ - 137.
‘இகழ்வார்ப் பொறுத்தல் தலை.’ - 151.
‘வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை’ - - 153.
‘ஒறுத்தாரை ஒன்றாக வையாரே’ - 155.
‘ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்’ - 156.
‘மிகுதியான் மிக்கவை செய்தாரை’ - 158.
‘துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்’ - 168.
- போல்வன.

**2) ஆண்பாலில் தாழ்வு சுட்டாமல் உயர்வு சுட்டியது:**

‘வருவிருந்து வைகலும் ஓம்புவான்’ - 83.
‘முகனமர்ந்து நல்விருந்து ஓம்புவான்’ - 84.
‘விருந்தோம்பி மிச்சில் மிசைவான்’ - 85.
‘வருவிருந்து பார்த்திருப்பான்’ -86.
‘நிலையில் திரியாது அடங்கியான்’ - 124.
‘அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான்’ - 176.
‘ஒத்ததறிவான் உயிர்வாழ்வான்’ - 214.
‘பேரறிவாளன் திரு’ - 215.
‘நயனுடையான்’ - 216.
‘பெருந்தகையான்’ - 217.
- போல்வன.

இவ்வாறு ஆணாளுமை மிகுதியும் பொதுவாளுமை குறைவுமாக உள்ள கூற்றுகளைத் திருக்குறளில் கண்டு, திருவள்ளுவர் ஆணாளுமையை (ஆணாதிக்கத்தை)யே மிகுதியும் பாராட்டுபவர் என்று தவறாக மதிப்பிட்டுவிடலாகாது.

இவ்விடத்தில் ஆண், பெண் ஆளுமைகள் பற்றியும் பொதுவாளுமை பற்றியும் உலக மாந்தவியல் வரலாற்று நிலைகளைக் கொஞ்சம் நினைவுகூர்தலும் வேண்டும்.

உலக மாந்தவியலின்படி, தொடக்கத்தில் பெண்ணாளுமையே இருந்தது என்பதும், பின்னர்தான் படிப்படியே ஆணாளுமை தலையெடுத்தது என்பதும், அந்நிலை இன்றுவரை நிலைப்பட்டே உள்ளது என்பதும், அறிவியலும், உரிமையியலும், பொதுமையிலும் வளர வளரவே ஆணாளுமையை எதிர்க்கின்ற நிலையும் தோன்றிச் சமநிலைப் பொதுவாளுமைக்கு வித்திடப்பெற்று வளர்ந்து வருகிறது என்பதும் வரலாறாகும். இவ் வரலாற்று வழிநிலைகளில், தமிழினத்தைப் பொறுத்த வரையில் இஃதொரு பெண்ணாளுமை இனம் என்பதும், ஆரிய வருகைக்குப் பின்னர்தான் இஃதோர் ஆணாளுமை இனமாக மேலோங்கி வந்தது என்பதும் அறியத் தக்கன.

இதற்குத் தமிழினத்தில் உள்ள தாய்மொழிக் கோட்பாடும், தாய்த்தெய்வ மிகுதிக் கோட்பாடும், தாய்நாட்டுக் கோட்பாடும், இல்லறத்தில் தாய்த்தலைமைக் கோட்பாடும் உறுதியான சான்றுகளாகும். தமிழினத்தில்தான், உலக இனங்களிலேயே தாய்மைக்குப் பெரும் மதிப்புக் கொடுக்கப்பெற்றுள்ளது. பெண்மை பெரிதும் மதிக்கப்பெற்றது என்க.

இஃதல்லாத ஆரியவியலில் ஆணாளுமையே தலைமை பூண்டிருந்தது என்பது அறியத்தக்கது, அவர்கள் தந்தை மொழி என்றும், தந்தை நாடு என்றும், இந்திரன், அக்கினி, வருணன், வாயு, முதலிய ஆண் தெய்வங்களே ஆளுமைத் தெய்வங்களென்றும் கொண்டிருப்பதே அதனை வலியுறுத்தும் என்க. ஆரியர்களின் இந்திய வருகைக்கும், பின் தென்னாட்டு வருகைக்கும் பின்னரே, தமிழினத்தினும் பெண்ணாளுமைக் கோட்பாடு படிப்படியாகக் குறைந்து, ஆணாளுமைக் கோட்பாடே தலையெடுத்தது. அத்துடன் பெண்ணடிமைத் தனமும் வேரூன்றியது. இவை விரிக்கில் பெருகும், ஆகையால் சுருங்கக் கூறப்பெற்றது. ஆயினும் இங்கு, ஓர் உண்மையை மறந்துவிட லாகாது. உலக இனங்களிலேயே தாய்த்தலைமையைக் கொண்டிருக்கும் தமிழினந்தான் முந்தித் தோன்றிய மூத்த இனமென்றும், தந்தைத்தலைமையினங்களெல்லாம் பிந்தித் தோன்றிய அதன் பிறங்கடை இனங்களென்றும் தெளிவாக உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

இனி, திருவள்ளுவர் காலம், பெண்ணாளுமை படிப்படியாகக்

குறைந்து, ஆணாளுமை தலையெடுத்து நின்ற காலமாகும். எனினும், திருவள்ளுவப் பேராசான் பெண்மைக்கும் தாய்மைக்கும் பெருமையும் அருமையும் சாற்றிப் பேசும் கொள்கையுடையவராக இருந்ததும், அவர்க்குப் பொதுவாளுமைக் கோட்பாடும் கால்கொண்டிருந்தது என்பதும், அவர் இந்நூலுள் அவற்றின் தேவை குறித்துப் பேசும் கருத்துவெளிப்பாடுகளால் தெரிய வருகின்றன. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

*'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மைஉண் டாகப் பெறின்'* - *54.*

*'இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*
*இல்லவள் மாணாக் கடை.* - *53.*

- இங்குப் பெண்ணைச் சிறப்பித்துக் கூறும் அதே பொழுதில் அவளுக்கு வற்புறுத்தப்பெறும் **கற்பியல் கோட்பாடு** என்பது, இல்லறவியலுக்கு மிக இன்றியமையாத கோட்பாடாகும். இது பெண்ணுக்கு மட்டும் உரியதாகத் திருவள்ளுவர் குறிப்பிடவில்லை. ஆணுக்கும் இது பெரிதும் வற்புறுத்தப்பெறுகிறது என்பதை நாம் மறத்தல் கூடாது. ஆரியவியலில் பெண் கற்பே மிகுதியும் வலியுறுத்தப்பெறுகிறது. ஆண் கற்பு அவ்வாறு பெரிதும் வலியுறுத்தப்பெறுவதில்லை என்பதையும் இங்கு நினைவு கூர்க. திருக்குறளில், **பெருமை** அதிகாரத்துள் வரும்,

*'ஒருமை மகளிரே போலப் பெருமையும்*
*தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு'* - *974.*

-என்னும் குறளில் ஆணுக்குக் கற்பு வலியுறுத்தம் தெளிவாகச் சுட்டப் பெறுகிறது. ஓர் ஆணுக்குப் பெருமையே, தன் கணவனையே நினைந்தொழுகும் ஒருமை மன மகளிர் 'போலத் தானும் தன்னையே நெகிழ விடாது நிலைநிறுத்திக்கொண்டு ஒழுக்கம் காப்பதில்தான் உண்டு' என்று இதில் கூறப்பெறும் ஆழமான கருத்து மிகவும் கவனிக்கத்தக்கது. இக் கருத்து இல்லறவியலில் கூறப்பெறாமல், **பொருட்பாலில், குடியியலில்** கூறப்பெறுவது, இன்னும் சிறப்பு மிக்கதும் வலிவு பொருந்தியதும் ஆகும் என்க. என்னை?

**இல்லறம்** என்பது பொதுமைப் படாதது; அகத்தது; அமைவு நிலை கொண்டது; எனவே ஒரு பெண்ணின் கற்புநிலை என்பது, அவள் கணவற்கும், அக் குடும்பத்திற்கும் மட்டுமே தெரிந்தொழுக வேண்டிய தேவை சான்றது. அந்நிலை மாண்பு (51, 53), மாட்சி (52), பெருமை (54), தகை (56), நிறை (57), சிறப்பு (58), புகழ் (59). - என்னும் உயர்வுகளுக்குரியது.

ஆனால், ஓர் ஆணுக்குரிய கற்பு என்பது, இல்லறத்தினும், பொதுவறத்திற்கு உரியது. பொதுமைப்படுவது, ஒருவன் இல்லத்தை விட்டு,

பொருளீட்டத்திற்கெனப் புறநிலைக்கு வந்து, அரசொடும், குடியொடும், நட்பொடும் புழங்குநிலை கொள்ளுங்கால், கடைப்பிடித்தொழுகும் கடமையும் பெருமையும் சான்றது. எனவேதான், ஆணுக்குரிய கற்புநிலை, பொருட்பாலில், குடியியலில், **மானம்** அதிகாரத்திற்குப் பின்னும், **சான்றாண்மை, பண்புடைமை** அதிகாரங்களுக்கு முன்னும், பெருமை அதிகாரத்துள் வைக்கப்பெற்றுப் பேசப்பெறுகிறது. மானவுணர்வு கெட்டால், ஆணுக்கு ஒழுக்கவுணர்வு நெகிழ்வுகொள்ளும் என்பதை நினைவுகூரவும், அது, தன் சான்றாண்மைக்கும் பெருமைக்கும் இழுக்கு என்பதை உணர்த்தவும், அந்நிலை பெரும்பாலான ஆண்களுக்கு நேருங்கால், அக்குடிமையே கெடும் என்று எச்சரிக்கவுமே, அவ்விடத்தில் எடுத்துக் கூறப்பெற்றது. பெண் கற்பு அகநிலை என்றால், ஆண் கற்பு புறநிலை என்றும், பெண்கற்பு குடும்பத்திற்குப் பெருமையும் (52), இல்லறத்திற்கு ஏற்றமும் (53), கணவனுக்குத் தலைநிமிர்வும் (59) தருவதென்றால், ஆண் கற்பு, குடிமைக்குப் பெருமையும் (இயல்), அவனுக்குத் **தன்மான** ('மானம்' -அதிகாரம் -97) உணர்வையும், பிறர் மதிக்கத் தக்க, பின்பற்றத்தக்க சால்பையும் ('சான்றாண்மை' அதிகாரம்-99) பெற்றுத்தருகிறது.

இவையன்றிப், பெண் கற்புக்கும் ஆண் கற்புக்கும் உள்ள இன்னொரு நுட்பமான வேறுபாட்டையும் இங்கு ஆசிரியர் தெளிவுபடுத்திக் கூறுகிறார்.

அஃதென்னெனில்,

ஒரு பெண், தனது கற்பைத் தானும் காத்துக் கொள்ளல் வேண்டும்; அவளைச் சார்ந்தவர்களும் அதைக் காப்பதற்குத் துணை நிற்றல் வேண்டும். ஏனெனில், அவள் உளத்தாலும் உடலாலும் மென்மையானவள்; (உள்ளத்தால் அன்பும் தாய்மையும் மென்மையானவை; உடலால் பெண்மையும், உறுப்பாண்மையும் மென்மையானவை - என்று ஓர்ந்து உணர்க.) எனினும், மற்றவர் காக்கும் காப்பைவிடத்தான் காத்துக்கொள்ளும் காப்பே சிறந்தது என்பதை உணர்தல் வேண்டும். (57), என்பது.

ஆனால், ஓர் ஆண், தன்னுடைய கற்புணர்வைத் தானேதான் காத்துக்கொள்ள முடியும். மற்று, அவனுக்கு வாய்க்கும் பிற சூழல்களெல்லாம் அவன் தன்னொழுக்கத்திற்கு இழுக்குச் சேர்ப்பவையே! (என்னை? அவன் இல்லத்தினின்று வெளியே தனித்து இயங்குவது; அவனது நட்பு -அது தீ நட்பாகவும், கூடா நட்பாகவும் இருக்கலாம். அவன் ஒரு பெண் விருப்பனாக இருந்தால்,-'வரைவின் மகளிர்'பால் அவன் உள்ளம் ஈர்த்துச் செல்லக்கூடும். (நட்பியலில், பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர் அதிகாரங்களை எண்ணுக.) எனவே, இவ்வறமல்லாத தீநெறிகளிலிருந்து அவனை அவனேதான் காத்துக்கொள்ளல் வேண்டும். இதனாலேயே **'பெருமையும் தன்னைத்தான் காத்து ஒழுகின் உண்டு'** (974) என்பார், ஆசிரியர் - என்க.

இவ்வாறு, கற்பு நிலையைப் பெண்ணுக்கும் ஆணுக்கும் பொதுவாகச் சொன்னது போலவே, பொது அறக் கூறுகளையும் அவர் இரு பாலார்க்கும் பொதுவாகவே கூறியுள்ளதை அறிவினார் தெளிவாக உணர்ந்து கொள்க. இல்லறவியலில் கூறப்பெறும் அனைத்து அறவியல் கூறுகளும், மற்றுப் பொருட்பாலில், அரசியலில் கூறப்பெறும் கல்வி, கேள்வி, அறிவுடைமை, முதலிய அனைத்துச் சிறப்பியல் கூறுகளும், அமைச்சியலில் கூறப்பெறும், சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல் வகை முதலிய செயலியல் கூறுகளும், நட்பியலில் கூறப்பெறும் நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீநட்பு, கூடா நட்பு முதலிய பழகியல் கூறுகளும், குடியியலில் கூறப்பெறும் குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நாணுடைமை முதலிய குணவியல் கூறுகளும், இருபாலார்க்கும் பொதுவாகக் கூறப்பெற்றவையே.

திருக்குறளில் எவ்விடத்தும் ஆரிய அறநூல்களிலும் பிறநூல்களிலும் உள்ளன போல் பெண்மையை இகழ்ந்தோ, இழிவு படுத்தியோ, தாழ்த்தியோ கூறப்பெறவில்லை என்பதைத் தெளிவாக உணர்க. அதே போல் ஆண்மையை உயர்த்தியோ, பெருமைப்படுத்தியோ, புகழ்ந்தோ எங்கும் கூறப்பெறவில்லை என்பதையும் தெளிவாக உணர்க. தமிழ் இலக்கியங்களில்கூட, பிற மதவியல் கருத்துகளுக்கு ஏற்றம் தருகிற நூல்களில், சிற்சில விடங்களில் பெண்மையைத் தாழ்த்தியோ, இழிவுபடுத்தியோ கூறப்பெறுவதுண்டு. திருக்குறள் மதவியல் சாராத நூலாக மட்டுமன்றி, உலகப் பொது மாந்தவியலுக்கும் அறவியலுக்கும் மாறுபடாத நூலாகவும் உள்ளதால் இதில், எங்கும் பெண்மை கீழ்மைப்படுத்தப் பெறவில்லை; என்று திண்ணமாய்க் கூறலாம்.

பொருட்பால், நட்பியலில், 'பெண்வழிச் சேறல் அதிகாரத்துள் கூறப் பெறும் கருத்துகள், பெண்ணை அல்லது பெண்மையை இழிவு படுத்துவனவாகச் சிலர் கருதுகிறார்கள், அவ்வதிகரரத்துள் கூறப்பெறும் அனைத்தும் மனவியல், அறிவியல், உடலியல், வாழ்வியல் சார்ந்த அறிவியல் கருத்துகளே ஆகும். பெண்ணின்பத்துத் தலை கால் தெரியாமல், தறிகெட்டு, மனைவி உள்பட வேறு பெண்டிர் சிலரிடமும் அளவிறந்த கழிகாம ஈடுபாடு கொண்டு திரியும் வெறியர் சிலரைத், தம் உள்ளத்தையும், அறிவையும், உடலையும், நோக்கத்தையும் கெடுத்துக் கொள்ளாமல் தடுத்து நிறுத்தி, நல்வழியில் உய்விக்க வேண்டியே ஆசிரியப் பெருந்தகை அருள் உள்ளம் கொண்டு கூறிய கருத்துகளாகும் அவை. அவ்வதிகாரத்துள், உடல் ஈடுபாட்டிற்காகத் தன் மனைவியை அளவிறந்து விழைவதும், அதற்காக அவளிடம் தாழ்வாகவும் அஞ்சுவது போலவும் நடப்பதும் அவளிட்ட ஏவல்களைச் செய்வதும், அவற்றின்வழித் தன் செயலாண்மையை இழப்பதுமான ஆடவனின் பேதைமையும் இழிவும் எடுத்துக் கூறி இடிப்புரை

செய்யப்பெறுகிறது. வேறு எந்த அற நூலாரும் கூறாது விட்ட நுட்பமான கருத்துகளாகும் இவை. மருத்துவ இயல் படியும், இதில் கூறப்பெறும் கருத்துகள் மேம்பாடும் உண்மையும் உடையன. மற்றபடி, இவ்வதிகாரத்துள் கூறப்பெறும் கருத்தியல் நுட்பங்களை உரைப் பகுதியுள் கண்டுகொள்க.

இனி, அவ்வதிகாரத்தையடுத்து வரும் '**வரைவின் மகளிர்**' என்னும் அதிகாரமும் பெண்கட்கு இழிவு சேர்ப்பதாகக் கூறப்பெறுவதும் உண்டு. பெண்மையை விலைபோக்கி வாழ்வு செய்யும் மாந்தக் கீழ்மை உலக நாடுகள் அனைத்திலும், இவ்வுலக மாந்த வியக்கம் தொடங்கிய நாள் முதல், அனைத்து அறிவியல் கூறுகளும் அளவிறந்து முன்னேறியுள்ள இந்நாள் வரை உண்டு என்பதை அனைவரும் அறிவர். இதுவும் மக்கட்கு இவ்வழி எச்சரிக்கை செய்வதற்கே எழுதப்பெற்றதாகும். அறவழி ஆசிரியர் ஒருவர், மனவியல் அறிவு கொண்டு, பெண் பித்தர்க்கு அருள் நோக்கோடு கூறிய கருத்துகளாகும் இவை; பெண்களை இழிவு படுத்துவன அல்ல. இவற்றின் சிறப்பியல்களையும் பொதுமை நலன்களையும் உரையின்கண் கண்டு தெளியலாம்.

இனி, தமிழ் இலக்கியங்களுக்குள், பெண்களைக் குறிக்கும் சொற்களுள் ஒன்றாகிய '**பரத்தை**' என்னும் சொல் பரவலாகக் குறிக்கப் பெறுவதுடன், அத்தகைய நடத்தை கெட்ட பெண்களை இழிவாகவும் கூறப்பெற்றுள்ளது. 'பரத்தை' என்பதற்கு கட்டுப்பாடின்றிப் பரந்துபட்டு ஒழுகுபவள் என்பது பொருள். அஃதாவது திருமணம் செய்து கொள்ளாமல், பொருளுக்காக ஆடவர் பலரிடம் தன் உடலை விலைபோக்கி வாழ்பவளே இலக்கியங்களில் பரத்தை எனப்பெறுகிறாள்.

ஆனால், திருக்குறளில், இத் தீயொழுக்கப் பெண்களைப் பற்றியும், இவர்களின் நடவடிக்கைகளைப் பற்றியும் எச்சரித்துக் கூற வந்த இடத்தில் கூட ஆசிரியர், இவர்களைப் '**பரத்தையர்**' அல்லது '**விலைமகளிர்**' அல்லது '**பொதுமகளிர்**' என்றெல்லாம், இழித்துக் கூறாமல், திருமணம் செய்து கொள்ளாமல் ஒழுகும் மகளிர் என்னும் பொருளில் '**வரைவின் மகளிர்**' அஃதாவது, வரைவு (திருமணம்) இல் மகளிர் என்று மிகப் பண்புடைய, நாகரிகமான சொற்களாலேயே குறிப்பிடுவதை நாம் நன்கு கவனிக்க வேண்டும். இச்சொல் திருவள்ளுவராலேயே புதுவதாக உருவாக்கப்பெற்ற சொற்களில் ஒன்றாகும். இச்சொல் வேறு இலக்கியங்களில் இல்லை. (இவர் பயன்படுத்திய இன்னொரு மிதிதகு புதுப்புனைவுச் சொல் '**வாழ்க்கைத்துணை**' என்று மனைவியைக் கூறும் சொல்லாகும். இச்சொல்லில்தான் எத்துணைப் பொதுமை மணம் கமழ்கின்றது என்பதை எண்ணிப் பாருங்கள்!)

இவர் இழிவாகக் கருதிய '**பரத்தை**' என்னும் சொல்லை ஓரிடத்திலும் பயன்படுத்தவில்லை -- என்பது இவர் பெண்மையை மதிக்கும் செயலுக்கு இன்னோர் எடுத்துக்காட்டாகும். இதற்கு மாறாக, வேறு பெண்கள்

தொடர்புடைய ஆடவன் ஒருவனை, இவர் **'பரத்த(ன்)'** என்று ஓரிடத்தில்(1311) குறிப்பிடுவதும் கருதத்தக்கதாகும். அத்துடன், இந்தச் சொல், கழக இலக்கியங்களுள் அகம்: 145-9 என்னும் ஓரிடத்திலேயே பயன்படுத்தப் பெற்றுள்ளதும் எண்ணத்தக்கது.

இவ்வாறான காரணங்களால் திருக்குறளில் இதன் ஆசிரியர் பெண்மைக்குத் தரும் சிறப்பும், பெருமையும் நன்கு புலப்படுகின்றனவல்லவா? இதுவும் அவரின் பொதுமை கருதும் நல்லுணர்வுக்கும், அறநோக்கிற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும் என்க.

இனி, உடைமைகள் தொடர்பாகவும் நூலாசிரியர், அன்றைய சிந்தனையாளர்கள், பொதுநலப் புலவர்கள் யாவரினும் மேம்பட்டுத் திகழ்வதையும் நாம் நன்கு கவனித்தல் வேண்டும்.

முதற்கண், திருவள்ளுவர் ஒருவகைத் தன்மானப் புலவராகத் தென்படுவதை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அவர் காலத்திலும் சரி, அவர்க்கு முன் பின் காலத்திலும் சரி, அவரையொத்த தனித்தன்மையும், பிறர் எவர்க்கும் தம்மைச் சார்புபடுத்திக் கொள்ளாதவாறு, செல்வரையோ, நிலக்கிழார்களையோ (அக்காலத்து வேளிர்கள்), சிற்றரசர்களையோ அண்மி, அவர்களைப் பாராட்டிப் புகழ்ந்து வாழாத செம்மாப்பும் பெருமிதமும் கொண்டவர் ஒருவரும் புலவர் மரபில் இலர் என்றே சொல்லிவிடலாம். அவர் காலத்தும் அவர்க்கு முந்தியும் பிந்தியுமாக மூன்று கழகக் காலத்திலும் அவற்றை ஒட்டியும் ஏறத்தாழ ஐயாயிரம் புலவர்கள் வாழ்ந்திருந்தனராகக் கூறப்பெறுகிறது. பெரும்பாலும் அவர்கள் அனைவருமே எவரையோ அஃதாவது வள்ளல் ஒருவரையோ, செல்வரையோ, சிற்றரசரையோ சார்ந்தோ அல்லது அவர்கள் பால் அடிக்கடி சென்று அவர்களைப் பாடிப் பொருள் பெற்று வந்தோதாம் வாழ்க்கை நடத்தி வந்துள்ளதாகக் கழக இலக்கியங்கள் முழுவதிலுமாகக் காணவேண்டி உள்ளது.

புலவர்கள், பெரும்பாலும் பழுமரம் நாடும் பறவைகளைப் போன்றவர்களாகவே இருந்திருக்கிறார்கள். பொருளுக்காகத் தமிழ் பாடும் தகையோர்கள், புலமைமுயற்சியில் பொருள்முயற்சி குன்றுவதால், அவர்கள் என்றும் ஏழ்மைப்பட்டே இருப்பவர்கள். அதனால் அவர்கள் செல்வர்களையோ வள்ளல்களையோ, அரசர்களையோ நாடிப்போய், அவர்களிடம் பாடிப் பரிசில் பெற்று வாழும் பான்மையுடையவர்கள். கால, இட வேறுபாடின்றி இந்நிலை என்றுமே தொடர்ந்து வருவது. இன்று வரையிலும்கூட அத்தன்மை மாறுபடாததாகவே தென்படுகின்றது. இன்னும் சொல்வதானால், இதில் தமிழ்ப்புலவர்கள் மட்டுமே யன்றி, வேற்றுமொழி, அல்லது வேற்றுநாட்டுப் புலவர்களும்கூட நெறி விலக்குடையவர்களாகத் தெரியவில்லை. எனவே, இந்நிலை அற்றைத் தமிழ்ப் புலவர்களிடம் குறிப்பாகத் திருவள்ளுவர் காலப் புலவர்களிடம் இயல்பாகவே இருந்தது

என்பதற்குப் பலநூறு சான்றுகள், எடுத்துக் காட்டுகள், நிகழ்வுகள் கழக இலக்கியங்களில் பரவலாகக் காணக் கிடக்கின்றன.

அவற்றுள் சிலவற்றை - அந்நிலையில் அவர்கள் அழகுறப் பாடிய கருத்துகள் நோக்கியும், அவர்களின் வறுமைக் கொடுமைகளை அறிதல் வேண்டியும் கீழே காண்போம். இவை வெறும் இட அடைப்புக்காகத் தரப்பெறுவன அல்ல. அவற்றிலுள்ள கருத்துகளை நாம் ஒவ்வொரு வரும் அறிதல், நம் புலமை வரலாறு தெரிவதன் கடமையாகும். இலக்கியமே வாழ்வு; வாழ்வே இலக்கியம் என்பதற்கு இவை அழுத்தமான சான்றுகளாகும். அத்துடன் இவை நம் திருவள்ளுவப் பேராசானின் பெருமிதத்தையும், தன்மானத்தையும், எவர்க்கும் எதற்கும் என்றும் ஒருவரையும் சார்ந்திராத மதுகையையும், தாமே உழைத்து, ஏழைமை உணவாயினும் உண்டு, தன்முயற்சியொடு கூடிய தன்னுணர்வையும், தன்னறிவையும் கொண்டு தம் வாழ்வு முழுவதையுமே பொதுமைக்கு உளதாக்கிய வீறு குறையாத உரிமை வாழ்வையும், நாம் இப்புலவர் பெருமக்களின் வாழ்க்கை முயற்சிகளுக்கிடையில்தான் பளிச்சென்று உணர்தல் இயல்வதாகும் என்க. எனவே, கீழ்வரும் பாடல்களைக் கட்டாயம் தவிர்த்துவிடாமல் ஒரு வரியும் விடாது, விளங்குகிற வரை விளங்கிக்கொண்டு, மேலும் விளக்கம் வேண்டின் அந்நூல்களையே துணைக்கொண்டு, இஃதொரு நல்வாய்ப்பென்று அறிந்து அமைந்து செல்ல வேண்டிக் கொள்கின்றோம்.

கீழ்வரும் பாடல்களில் நமக்குத் தேவையான மிகவும் இன்றியமையாத அடிகள் மட்டுமே காட்டப் பெற்றுள்ளன. அவற்றுள்,

1) புலவர்களின் வறுமைச் சூழல், அவற்றின் கொடுமை,
2) அதனால் அவர்கள் வள்ளல்களையும், செல்வர்களையும் வேளிர்களையும், சிற்றரசர்களையும், பேரரசர்களையும் அண்டிய முறைகளும் பாடிப் புகழ்ந்த தன்மைகளும்,
3) அவர்களின் புலமைத் திறம்,
4) அத்தகு வறுமையிலேயே வதங்கி வாடியதால், அவர்கள் பொதுமக்களின் நலம் நாடாத தன்மை,
5) இச் சூழ்நிலைகளால், அற்றை வீழத் தொடங்கிய இத் தமிழ் மொழியைப் பற்றியும் இனத்தைப் பற்றியும் கவலைப்படாமல் போன இயலாமை

– ஆகிய உண்மைகளெல்லாம் நன்கு புலப்படுத்தப் பெற்றிருக்கின்றன. இனி, இன்னொன்று, நாம் புலமையிற் பேராற்றலர் என்று அறிந்துள்ள பெரும்புலமைப் பெருமக்களெல்லாம், தம் வறுமையின் பொருட்டும் அதன் தாக்கத்தாலும், செல்வர் அல்லது அரசர் பிறரை எத்துணையளவு கீழிறங்கிப் பாடவேண்டியிருக்கின்றது என்னும் இழிதகையையும்,

தன்மானமின்மையையும் இப்பாடல் அடிகள் நன்கு உணர்த்துவனவாகும். இவற்றை அறிய அறிய நம் திருவள்ளுவப் பெரும் பேராசிரியரின் பெருமைப்பாடும் அருமைக் குணனும் திறமை முதிர்வும், பொதுமை நோக்கும், நேரிய வாழ்வும், சீரிய கொள்கையும் மிக நன்கு புலப்படும் என்க. எனவே, இத்தகு செம்மாப்பும், எவர்க்கும் தலைதாழாத் தன்மானமும் கொண்ட அவர் போல்வரால்தான் இத்தகு உயரிய பொதுமையற நூலை உலகநலன் நோக்கிச் செய்தற்கியலும் என்று உறுதியாய்க் கருதுக.

இனி, கழக இலக்கியப் பரப்பளவில் நாம் காண வேண்டிய, வறுமை புலமையைப் பிறரிடம் போய் மண்டியிடவும் அண்டி வாழவும் செய்த அவலச்சுவை நிறைந்த சில பாடற் பகுதிகளை - அதுவும் புறநானூறு என்னும் வீறிலக்கியத்துள் உள்ள ஒருசில பாவடிகளை மட்டுமே - இங்குக் காணலாம்.

புலவர்கள் பழுமரம் நோக்கிப் பறந்து சென்று பாடும் பறவைகளைப் போல அலைவுற்றிருந்த நிலை:

'பழுமரம் உள்ளிய பறவை போல'

— புறம்: 370: 11.

'பழுமரம் உள்ளிய பறவையின் . . . . புக்கு'

— பொருந: 64: 7.

'பழுமரம் தேரும் பறவை போல'

— பெரும்பாண்: 20: 32.

'பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல'

— மதுரைக் காஞ்சி: 576: 80.

'கனிபொழி கானம் கிளையொடு உணீஇய
துனை பறை நிவக்கும் புள்ளினம் மான
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
நன்னற் படர்ந்த கொள்கை யொடு'

— மலைபடு: 56, 57, 64.

'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வாடிய நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருந்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை'

— புறம்: 47: 1 - 6.

*(**நெடுங்கிள்ளியைக் கோவூர் கிழார்** பாடியது)*
*'மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி*
*நிலவரை இழிதரும் பல்யாறு போலப்*
*புலவர் எல்லாம் நின்நோக் கினரே'*

*— புறம்: 42: 20 - 23.*

*(**கிள்ளி வளவனைக் கோவூர்கிழார்** பாடியது)*
*'புலனுழுது உண்மார் புன்கண் அஞ்சித்*
*தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்'*

*— புறம்: 46: 3 – 4.*

*(**கிள்ளி வளவனைக் கோவூர் கிழார்** பாடியது)*
*'புலவர் பாடும் புகழுடையோர்'* *— புறம்: 27: 7.*

*(**நலங்கிள்ளியை** உறையூர்*
***முதுகண்ணன்** சாத்தனார் பாடியது.)*

- இனி, புலவர்கள், புரவலர்கள் பலரிடத்தும் பல நிலையிலும் பலவாறு சென்று, தங்கள் தங்கள் வறுமை நிலைகளையும், மனைவி மக்கள் வாழ்கின்ற கொடுமை நிலைகளையும் இழிவுகளையும் தாழ்வுகளையும் பாடி, உணவும் உடையும் உறையுளும் வாழ்வும் பெற்று வாழ்ந்தமை பற்றிய அவலநிலைப் பாடல்கள், சில வருமாறு:

இவ்வகையில் **ஔவையார்,** அரசர் பலரிடம் சென்று பாடியவை:

*'ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்*
*பலநாள் பயின்று பலரொடு செல்லினும்*
*தலைநாள் போன்ற விருப்பினன்'*
*(அதியமானிடம்)* *— புறம்: 101: 1 -3.*

*'அடகின் கண்ணுறை யாக யாம்சில*
*அரிசி வேண்டினெம் ஆகத் தான்பிற*
*வரிசை யறிதலில் தன்னும் தூக்கி*
*இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்*
*பெருங்களிறு நல்கி யோனே'*
*(நாஞ்சில் வள்ளுவனிடம்)* *— புறம்: 140: 4 5.*

*'வாயி லோயே வாயி லோயே*
*வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்*

உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயி லோயே!

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே.'
(பரிசில் நீட்டித்த அதியமானை) — புறம்: 206: 1 – 5; 12 – 13.

'சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந்து உண்ணும் மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடும் வழியெல்லாம் எமக்கீயும் மன்னே'
(அதியமான் நெடுமானஞ்சியை) — புறம்: 235: 1 – 6.

'அரிக்குரல் தடாரி இரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னாள் அன்றியும்
சென்ற ஞான்றைச் சென்றுபடர் இரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருநன் அளியன் தானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி என்அரை
முதுநீர்ப் பாசி யன்ன உடைகளைந்து
திருமலர் அன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும்
அமிழ்தன மரபின் ஊன்துவை அடிசில்
வெள்ளி வெண்கலத்து ஊட்டல் அன்றி

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

பகடுபெறு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையலர் அணியும் தலைநீர் நாடன்'
(அதியமான் நெடுமானஞ்சியை) — புறம்: 390: 8 – 18; 22 – 24.

'மதியேர் வெண்குடை அதியர் கோமான்
கொடும்பூண் எழினி நெடுங்கடை நின்றுயான்

*பசலை நிலவின் பனிபடு விடியல்*
*பொருகளிற்று அடிவழி யன்ன என்கை*
*ஒருகண் மாக்கிணை ஒற்றுபு . . . . . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*சென்றுயான் நின்றனென் ஆக அன்றே*
*ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி*
*வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை*
*நுண்ணூல் கலிங்கம் உடீஇ உண்மெனத்*
*தேள்கடுப்பு அன்ன நாள்படு தேறல்*
*கோண்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ*
*ஊண்முறை ஈத்தல் அன்றியும் கோன்முறை*
*விருந்திறை நல்கி யோனே'*
*(அதியமான் மகன் பொகுட்டெழினியை)* — *புறம்: 392: 1 -5; 12-19.*

*சிரப்பான் மணிமவுலிச் சேரமான் தன்னைச்*
*சுரப்பாடு யான்கேட்பப் பொன்னாடு ஒன்று) ஈந்தான்*
*இரப்பவர் என்பெறினும் கொள்வர் கொடுப்பவர்*
*தாமறிவார் தம்கொடையின் சீர்.*

— *தனியன்.*

*இனி,* **கபிலர்** *பாடியவை:*

*'பாரி பாரி யென்றுபல ஏத்தி*
*ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்'*
*(வேள் பாரியை)* — *புறம்: 107: 1 – 2.*

*'ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்*
*பலரும் வருவர் பரிசின் மாக்கள்*
*வரிசை அறிதலோ அரிதே! பெரிதும்*
*ஈதல் எளிதே . . . . . . . . . . . . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே*
*(மலையமான் திருமுடிக்காரியை)* — *புறம்: 121: 1 – 4, 6.*

*இனி,* **வன்பரணர்** *பாடியவை:*

*'பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்*
*செய்யா கூறிக் கிளத்தல்*
*எய்யா தாகின்றுஎஞ் சிறுசெந் நாவே'*
*(கண்டீரக்கோப் பெருநள்ளியை)* — *புறம்: 148: 5 – 7.*

*'துடியடிக் குழூவிய பிடியிடை மிடைந்த*

வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே'
(வெல்கெழு குட்டுவனை) — புறம்: 369: 26 – 28.
(முகவை - பரிசில்)

இனி, **கல்லாடனார்** பாடியவை:

'அரிசி யின்மையின் ஆரிடை நீந்தி
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
பணைமுக முகவைக்கு வந்திசின் பெரும'
(நெடுஞ்செழியனை) — புறம்: 371: 9, 19.

'வெள்ளி தோன்றப் புள்ளுக்குரல் இயம்பப்
புலரி விடியல் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினும் இலனே பிறன்கடை
அகன்கண் தடாரிப் பாடுகேட் டருளி
வறன்யான் நீங்கல் வேண்டி என்னரை
நீல்நிறச் சிதாஅர் களைந்து
வெளியது உடீஇஎன் பசிகளைந் தோனே'
(அம்பர் கிழான் அருவந்தையை) — புறம்: 385: 1 – 7.

'முகடுற வுயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
அரிய லார்கையர் உண்டுஇனி துவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந் திறுத்தவென் இரும்பேர் ஒக்கல்
தீர்கை விடுக்கும் பண்பில முதுகுடி'
(பொறையாற்று கிழானை) — புறம்: 391: 3 – 9.

இனி, இவ்வகையில் **பெருஞ்சித்திரனார்** பாடியவை.

'பாடி வருநரும் பிறரும் கூடி
இரந்தோர் அற்றம் தீர்க்கென விரைந்திவண்
உள்ளி வந்தனென் யானே'
(குமணனை)

— புறம்: 158: 18 – 20.

'ஈத்த நின்புகழ் ஏத்தித் தொக்கவென்
பசிதினத் திரங்கிய ஒக்கலும் 'உவப்ப
உயர்ந்தேந்து மருப்பின் கொல்களிறு பெறினும்

தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலென் உவந்துநீ
இன்புற விடுதி யாயின் சிறிது
குன்றியும் கொள்வல் கூர்வேல் குமண'
(குமணனை)

— புறம்: 159: 20 — 25.

'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்
மட்டார் மறுகின் முதிரத் தோனே!
செல்குவை யாயின் நல்குவன் பெரிதெனப்
பல்புகழ் நுவலுநர் கூற வல்விரைந்து
உள்ளம் துரப்ப வந்தனென்; எள்ளுற்று
இல்உணாத் துரத்தலின் இல்மறந்து உறையும்
புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்
பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
கூழும் சோறும் கடைஇ ஊழின்
உள்ளில் வறுங்கலத்து இறந்துஅழக் கண்டு
மறப்புலி உரைத்து மதியம் காட்டியும்
நொந்தனள் ஆகி நுந்தையை உள்ளிப்
பொடித்தநின் செவ்வி காட்டெனப் பலவும்
வினவல் ஆனா ளாகி நனவின்
அல்லல் உழப்போள் மல்லல் சிறப்பச்
செல்லாச் செல்வம் மிகுத்தனை வல்லே
விடுதல் வேண்டுவல் அத்தை படுநிரை
நீர்சூழ் நிலவரை உயரநின்
சீர்கெழு விழுப்புகழ் ஏத்துகம் பலவே'
(குமணனை) — புறம்: 160: 12 — 20.

'இன்மை துரப்ப இசைதர வந்துநின்
வண்மையில் தொடுத்தஎன் நயந்தனை கேண்மதி
வல்லினும் வல்லே னாயினும் வல்லே
என்னளந்த தறிந்தனை நோக்காது சிறந்த
நின்னள்ந்து அறிமதி பெரும . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வானமர் உழந்தநின் தானையும்
சீர்மிகு செல்வமும் ஏத்துகம் பலவே'
(குமணனை) — புறம்: 161: 21–25; 31 — 32.

'எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே

பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே'
(குமணனைப் பாடிப் பெற்ற பரிசிலை மனைவிக்குச் சொன்னது)
— புறம்: 163: 7 — 9.

'எழுவினி நெஞ்சம் செல்கம்' யாரோ
பருகு வன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகனக வாரா முகனழி பரிசில்
தாளி லாளர் வேளா ரல்லர்'
(இளவெளிமான் சிறுபரிசில் கொடுப்பக் கொள்ளாது கூறியது)
— புறம்: 207: 1 — 5.

'குன்றும் மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்
தினையனைத் தாயினும் இனிதவர்
துணையளவு அறிந்து நல்கினர் விடினே'
(அதியமான் நெடுமானஞ்சி, காணாது கொடுத்தனுப்பிய
பரிசிலைக் கொள்ளாது கூறியனுப்பியது)
— புறம்: 208: 1 — 2; 6 — 9.

'நீடுவாழ்க என்றுயான் நெடுங்கடை குறுகிப்
பாடி நின்ற பசிநாட் கண்ணே
கோடைக் காலத்துக் கொழுநிழல் ஆகிப்
பொய்த்தல் அறியா உரவோன் . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . :
நனியுடைப் பரிசில் தருகம்
எழுமதி நெஞ்சே துணிபுமுந் துறுத்தே'
(இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாது பாடியது)
— புறம்: 237: 1 — 4,19— 20.

இனி, அவ்வகையில் **பெருந்தலைச் சாத்தனார்** பாடியவை:

'பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப
விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
கிழவன் சேட்புலம் படரின், இழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோன்'

(கண்டீரக்கோனை) – புறம்: 151: 1 – 6.

'ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பில்
ஆம்பி பூப்பத் தேம்பசி யுழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந்து இசினே நற்போர்க் குமண
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
இன்மை தீர்க்கும் குடிப்பிறந் தோயே'
(குமணனை) – புறம்: 164: 1 – 8, 13.

'முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின்று ஈதல் யாம்வேண் டலமே'
(கடிய நெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானை)
– புறம்: 205: 1 – 2.

'பழனுடைப் பெருமரம் தீர்ந்தெனக் கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
நசைதர வந்துநின் இசைநுவல் பரிசிலேன்'
(மூவன் பரிசில் நீட்டித்தானை) - புறம்: 209: 9 - 11.

இனி, அவ்வகையில் **கோவூர் கிழார்** பாடியவை:

'விளங்குதிணை வேந்தர் களந்தொறும் சென்று
புகர்முக முகவை பொலிகென்று ஏத்திக்
கொண்டனர் என்பப் பெரியோர் யானும்

நின்னோர் அன்னோர் பிறர் இவண் இன்மையின்
மன்னெயின் முகவைக்கு வந்திசின் பெரும'
(கிள்ளி வளவனை) — புறம்: 373: 28 - 10; 33-34.

'நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்பாடிப் பெறல்வேண்டேம்
அவன்பாடுதும் அவன்தாள் வாழியவென
நெய்குய்ய ஊன்அவின்ற
பலசோற்றான் இன்சுவைய
நல்குரவின் பசித்துன்பினின்
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
வறனொரீஇ வழங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் தோன்றல்'
(நலங்கிள்ளியை) — புறம்: 282: 5-10; 15 - 16.

'நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடு கிழித்து வாடூன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை இசைதன தாக'
(கிள்ளிவளவனை) — புறம்: 386: 1 — 9.

'கேட்டோன் எந்தைஎன் தெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப் பெருஞ் சிறப்பின் . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கலிங்கம் அளித்திட்டு . . . . . . .
பசிப்பகை கடிதலும் வல்லன்'
(நலங்கிள்ளியை) — புறம்: 400: 8 — 11; 13 — 17

இனி, அவ்வகையில் **உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்** பாடியவை.

*'விருந்திறை நல்கும் நாடன் எங்கோன்*
*கழல்தொடீ ஆஅய் அண்டிரன் போல*
*வண்மையும் உடையையோ ஞாயிறு*
*கொன்விளங் குதியால் விசும்பி னானே'*

*(ஆய் அண்டிரனை) – புறம்: 374: 15 – 18.*

*'யாவரும் இன்மையிற் கிணைப்பத் தாவது*
*பெருமழை கடற்பரந் தாஅங்கு யானும்*
*ஒருநின் உள்ளி வந்தனென் அதனால்*
*புலவர் புக்கில் ஆகி நிலவரை*
*நிலீஇயர் அத்தை நீயே'*

*(ஆய் அண்டிரனை) – புறம்: 375: 12 – 16.*

*இனி, அவ்வகையில்* **நன்னாகனார்** *பாடிவை:*
*'இரப்பச் சிந்தியேன் நிரப்படு புணையின்*
*உளத்தின் அளக்கும் மிளிர்ந்த தகையேன்*
*நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னாகி*
*ஒருநாள்,*
*இரவலர் வரையா வள்ளியோன் கடைத்தலை*
*ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்*
*தோன்றல் செல்லாதுஎன் சிறுகிணைக் குரலே'*

*(ஓய்மான் நல்லியக் கோடனை) – புறம்: 376: 18 – 23.*

*'யானே பெறுகவன் தாள்நிழல் வாழ்க்கை*
*அவனே பெறுகஎன் நாவிசை நுவறல்'*
*(ஓய்மான் வில்லியாதனை) – புறம்: 379: 1 – 2.*

*'ஊனும் ஊனும் முனையின் இனிதெனப்*
*பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டனவும்*
*அளவுபு கலந்து மெல்லிது பருகி*
*விருந்துறுத் தாற்றி இருந்தனம்'*
*(கரும்பனூரா் கிழானை) – புறம்: 381: 1 – 4*

*'துணையேம் பெரும*

நெல்லென்னா பொன்னென்னா
கனற்றக்கொண்ட நறவென்னா
. . . . . . மனையென்னா அவைபலவும்
யான்தண்டவும் தான்தண்டான்
நிணம் பெருத்த கொழுஞ் சோற்றிடை
மண்ணாணப் புகழ்வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
புரந்தோன் எந்தை . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
உண்ட நன்கலம் பெய்து நுடக்கவும்
தின்ற நண்பல் ஊன்தோண்டவும்
வந்த வைகல் அல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே'
*(கரும்பனூர் கிழானை) – புறம்: 384: 10 – 18; 21 – 24.*

இனி, அவ்வகையில் **மாறோக்கத்து நப்பசலையார்** பாடியவை:

'பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி
இரந்தன் றாகல் வேண்டும்'
*(கிள்ளிவளவனை) - புறம்: 226: 3 – 4.*

'ஒண்பொறிச் சேவல் எடுப்பஏற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோல் சிறுகிணை சிலம்ப ஒற்றி
நெடுங்கடை நின்று பாடுபல வாழ்த்தித்
தண்புகழ் ஏத்தினன் ஆக . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கான்கெழு நாடன் கடுந்தேர் அவியன்என
ஒருவனை உடையேன் மன்னே யானே'
*(கடுந்தேர் அவியனை) – புறம்: 383: 1 – 5; 22 – 23.*

இனி, அவ்வகையில் **ஊன்பொதி பசுங்குடையார்** பாடியவை:

'வளிமரற் றிரங்கிய கானம் பிற்படப்
பழுமரம் உள்ளிய பறவை போல

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
இருப்புமுகம் செறித்த வேந்தெழின் மருப்பின்
வரைமருண் முகவைக்கு வந்தனென் பெரும'
(இளஞ்சேட் சென்னியை) — புறம்: 370: 10 – 11; 19, 21.

'எஞ்சா மரபின் வஞ்சி பாடி
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே'
(இளஞ்சேட் சென்னியை) — புறம்: 378: 9 -12

இனி, இவ்வகையில் **மதுரைக் குமரனார்** பாடியவை:

'இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவாய் இரவல'
(ஈர்ந்தூர்க்கிழான் தோயன் மாறனை) — புறம்: 180: 8 – 9.

'மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெரும உவந்துநனி பெரிதே'
(பரிசில் நீட்டித்த பெருந்திருமாவளவனை) — புறம்: 197: 15 – 18.

'வலித்துஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்
வள்ளியன் ஆதல் வையகம் புகழினும்
உள்ளம் ஓம்புமின் உயர்மொழிப் புலவீர்!
யானும்,
இருள்நிலாக் கழிந்த பகல்செய் வைகறை
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசின் இயறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினேன் ஆக,
அகமலி யுவகையொடு அணுகல் வேண்டிக்
கொன்றுசினம் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி

*யானது பெயர்த்தனென் ஆகத் தானது*
*சிறிதென உணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்*
*பெருங்களிறு நல்கி யோனே'*

*(சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனர்)*

*— புறம்: 394: 3 — 15.*

*இனி, சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனை* ***மதுரைநக்கீரர்*** *பாடியது:*

*'தன்கடைத் தோன்றி என்னுற இசைத்தலின்*
*தீங்குரல் . . . . . . கினரிக்குரல் தடாரியோடு*
*ஆங்குநின்ற எற்கண்டு*
*சிறிதுநில்லான் பெரிதும் கூறான்*
*அருங்கலம் வரவே அருளினன்'*

*— புறம்: 395: 24 — 28.*

*இனி, ஆயைத் துறையூர்* ***ஓடை கிழார்*** *பாடியது:*

*'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை*
*நுண்பல் மணலினும் ஏத்தி*
*உண்குவம் பெருமநீ நல்கிய வளனே'*

*— புறம்: 136: 25 — 27.*

*இனி, நாஞ்சில் வள்ளுவனை* ***மருதனிள நாகனார்*** *பாடியது:*

*'ஆனினம் கலித்த அதர்பல கடந்து*
*மானினம் கலித்த மலைபின் னொழிய*
*மீனினம் கலித்த துறைபல நீந்தி*
*உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்*
*சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண'*

*— புறம்: 138: 1 — 5.*

*இனி, கொண்கானங் கிழானை* ***மோசிகீரனார்*** *பாடியது:*

*'கொண்பெருங் கானம்*
*நச்சிச் சென்ற இரவலர்'*

*— புறம்: 156: 2 — 3.*

*இனி, பெரும்பெயர் வழுதியை* ***இரும்பிடர்த்தலையார்*** *பாடியது:*

'நின்னசை வேட்கையின் இரவலர் வருவரது
முன்னம் முகத்தின் உணர்ந்தவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே'

— புறம்: 3: 24 – 26.

இனி, பிட்டங்கொற்றனைக் **காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்** பாடியது:

'இன்று செலினும் தருமே சிறுவரை
நின்று செலினும் தருமே பின்னும்
முன்னே தந்தனென் என்னாது துன்னி
வைகலும் செலினும் பொய்யா னாகி
யாம்வேண்டி யாங்குஎம் வறுங்கலம் நிறைப்போன்'

— புறம்: 171: 1 – 5.

இனி, சிறுகுடி கிழான் பண்ணனைச் சோழன் **குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்** பாடியது:

'யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி அரவம் தானும் கேட்கும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே'

புறம்: 173: 3 – 4;

இனி, வல்லார் கிழான் பண்ணனைச் **சிறுகருந்தும்பியார்** பாடியது:

'உண்ணா வறுங்கடும்பு உய்தல் வேண்டின்
இன்னே சென்மதி நீயே'

— புறம்: 181: 7 – 8

இனி, நன்மாறனை **வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்** பாடியது:

'நீயும்
புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி
நீடு வாழிய நெடுந்தகை! யானும்
கேளில் சேஎய் நாட்டின்எந் நாளும்

*'நின்னசை வேட்கையின் இரவலர் வருவரது*
*முன்னம் முகத்தின் உணர்ந்தவர்*
*இன்மை தீர்த்தல் வன்மை யானே'*

*— புறம்: 3: 24 – 26.*

*இனி, பிட்டங்கொற்றனைக்* ***காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்*** *பாடியது:*

*'இன்று செலினும் தருமே சிறுவரை*
*நின்று செலினும் தருமே பின்னும்*
*முன்னே தந்தனென் என்னாது துன்னி*
*வைகலும் செலினும் பொய்யா னாகி*
*யாம்வேண்டி யாங்குளம் வறுங்கலம் நிறைப்போன்'*

*— புறம்: 171: 1 – 5.*

*இனி, சிறுகுடி கிழான் பண்ணனைச் சோழன்* ***குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்*** *பாடியது:*

*'யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன*
*ஊணொலி அரவம் தானும் கேட்கும்*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*பசிப்பிணி மருத்துவன் இல்லம்*
*அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே'*

*புறம்: 173: 3 – 4; 11 – 12.*

*இனி, வல்லார் கிழான் பண்ணனைச்* ***சிறுகருந்தும்பியார்*** *பாடியது:*

*'உண்ணா வறுங்கடும்பு உய்தல் வேண்டின்*
*இன்னே சென்மதி நீயே'*

*— புறம்: 181: 7 – 8.*

*இனி, நன்மாறனை* ***வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்*** *பாடியது:*

*'நீயும்*
*புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி*
*நீடு வாழிய நெடுந்தகை! யானும்*
*கேளில் சேஎய் நாட்டின்எந் நாளும்*

துளிநசைப் புள்ளின்நின் நளிநசைக் கிரங்கிநின்
அடிநிழல் பழகிய அடியுறை
கடுமான் மாறி மறவா தீமே'

— புறம்: 198: 22 – 27.

இனி, வல்வில் ஓரியைக் **கழைதின் யானையார்** பாடியது:

'தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணார் ஆகுப நீர்வேட் டோரே!
ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்
சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்!
புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியலர் அதனால்
புலவேன் வாழியர் ஓரி விசும்பின்
கருவி வானம் போல
வரையாது காக்கும் வள்ளியோய் நின்னே'

— புறம்: 204: 5 – 14.

இனி, பரிசில் நீட்டித்த குடக்கோச் சேரல் இரும்பொறையைப் **பெருங்குன்றூர் கிழார்** பாடியது)

'உள்ளி வந்த ஓங்குநிலைப் பரிசிலென்
வள்ளியை ஆதலின் வணங்குவன் இவன்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . என்
நுணங்கு செந்நா வணங்க ஏத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வல்'

— புறம்: 211: 7 – 8; 14 – 17.

இனி, கிள்ளிவளவனை **ஐயூர் முடவனார்** பாடியது:

'புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை'

— புறம்: 228: 7.

·இனி, நம்பி நெடுஞ்செழியனைப் **பேரெயின் முறுவலார்** பாடியது:

*'இரந்தோர்க்கு மறுப்பறியலன்*
*வேந்துடைய வையத்து ஓங்குபுகழ் தோற்றினன்'*

*— புறம்: 239: 9 – 10.*

இனி, ஆய்அண்டிரனைக் **குட்டுவன் கீரனார்** பாடியது:

*'ஆடுநடைப் புரவியும் களிறும் தேரும்*
*வாடா யாணர் நாடும் ஊரும்*
*பாடுநர்க் கருகா ஆஅய் அண்டிரன்*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது*
*கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்*
*வாடிய பசிய ராகிப்பிறர்*
*நாடுபடு செலவினர் ஆயினர் இனியே'*

*— புறம்: 240: 1 – 3; 11 – 14.*

இனி, பாண்டியன் நெடுஞ்செழியனை **மாங்குடி கிழார்** பாடியது:

*'புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்*
*நிலவுத்திகழ் ஆரம் முகக்குவம் எனவே'*

*— புறம்: 372: 12 – 13.*

இனி, பெருநற் கிள்ளியை **உலோச்சனார்** பாடியது:

*'கரவில்லாக் கவிவண்கையான்*
*வாழ்கவெனப் பெயர்பெற்றோர்*
*பிறர்க்குவமம் தானல்லது*
*தனக்குவமம் பிறரில்லென*
*அது நினைந்து மதிமழுகி*
*ஆங்கு நின்ற எற்காணூஉ*
*. . . . . . . . . . . . . . . . . . . .*
*மலைபயந்த மணியும் கடறுபயந்த பொன்னும்*
*கடல்பயந்த கதிர்முத்தமும்*
*வேறுபட்ட உடையும் சேறுபட்ட தசும்பும்*
*கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப*
*நனவில் நல்கியோன் நசைசால் தோன்றல்'*

*— புறம்: 377: 8 – 13; 16 – 20.*

இனி, நாஞ்சில் வள்ளுவனைக் **கருவூர்க் கதப்பிள்ளை** பாடியது:

*'துப்பெதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்*

நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையன்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

இலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே'

— புறம்: 380: 10 – 11; 15 – 16.

இனி, செல்வக் கடுங்கோ வாழியாதனைக் **குண்டுகட் பாலியாதன்** பாடியது:

'பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குரவு அகற்றி
மிகப்பொலி யர்தன் சேவடி யத்தை என்று
யான்இசைப்பின் நனிநன்றுஎனாப்
பலபிற வாழ்த்த இருந்தோர் என்கோ. . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

என்சிறுமையின் இழித்துநோக்கான்
தன்பெருமையின் தகவுநோக்கிக்
குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்று நிறையு நிரையென்கோ
மனைக்களமரொடு களமென்கோ
ஆங்கவை,
கனவென் மருள வல்லேன் நனவின்
நல்கி யோனே நசைசால் தோன்றல்'

— புறம்: 387: 12 – 16; 20 27.

இனி, சிறுகுடி கிழான் பண்ணனை, **மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்** பாடியது:

'தன்னிலை யறியுநன் ஆக அந்நிலை
இடுக்கண் இரியல் போக வுடைய
கொடுத்தோன் எந்தை கொடைமேந் தோன்ற'

— புறம்: 388: 5 – 7.

இனி, ஆதனுங்கனைக் **கள்ளிலாத்திரையனார்** பாடியது:

'ஆதனுங்கன் போல நீயும்
பசித்த ஒக்கல் பழங்கண் வீட
வீறுசால் நன்கலம் நல்குமதி பெரும'

- புறம்: 389: 13 – 15.

இனி, கிள்ளிவளவனை **நல்லிறையனார்** பாடியது:

'வள்ளன் மையின்எம் வரைவோர் யாரென
உள்ளிய உள்ளமொடு உலைநசை துணையா
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
மலர்தார் அண்ணளி நல்லிசை உள்ளி
ஈர்ங்கை மறந்தஎன் இரும்பேர் ஒக்கல்
கூர்ந்த வெவ்வம் விட . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன
அகன்றுமடி கலிங்கம் உடீஇச் செல்வமும்
கேடின்று நல்குமதி பெரும'

— புறம்: 393: 6–7; 9–11; 16–19.

இனி, வாட்டாற்று எழினியாதனை **மாங்குடி கிழார்** பாடியது:

'உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
கழுமிய வென்வேல் வேளே
வளநீர் வாட்டாற்று எழினி யாதன்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
விரிகதிர் வெண்திங்களின்
விளங்கித் தோன்றுகஅவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசால் நன்கலம் நல்கி
உரைசெலச் சிறக்கஅவன் பாடல்சால் வளனே'

— புறம்: 396: 10–13; 27 – 31.

இனி, கிள்ளி வளவனை **எருக்காட்டூர் தாயங்கண்ணனார்** பாடியது:

'தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் தோன்றி யேனே அதுநயந்து
உள்ளி வந்த பரிசிலன் இவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கலன் நிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன வண்மையிற் சொரிந்து
வேனில் அன்னஎன் வெப்பு நீங்க

அருங்கலம் நல்கி யோனே'

– புறம்: 397: 10 – 18.

இனி, சேரமான் வஞ்சனைத் **திருத்தாமனார்** பாடியது:

'மதியத் தன்னஎன் அரிகுழல் தடாரி
இரவுரை நெடுவா ரிப்ப வட்டித்து
உள்ளி வருநர் கொள்கலன் நிறைப்போய்
தள்ளா நிலையை யாகியர் எமக்கென
என்வரவு அறீஇச் சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்தன் ஆகி எனதுஅரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்அரைப்
புகைவிரிந் தன்ன பொங்குதுகில் உடீஇ
அழல்கான் றன்ன அரும்பெறல் மண்டை
நிழல்காண் தேறல் நிறைய வாங்கி
யானுண அருள அன்றியும் தானுண்
மண்டை அகண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிரல் ஒக்கல் ஆர
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி ஒளிர்வரும் அரவுறழ் ஆரமொடு
புரையோன் மேனிப் பூத்தால . . . . . . . . .
உரைசெல அருளி யோனே'

– புறம்: 398: 12 – 29.

இனி, தாமான் தோன்றிக்கோனை **ஐயூர் முடவனார்** பாடியது:

'காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவன் உள்ளி யவற்படர்தும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பகடே யத்தை யான் வேண்டிவந் ததுவென
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
ஆன்று விட்டனன் அத்தை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
ஊர்தியொடு நல்கி யோனே'

– புறம்: 399: 12 – 13; 28; 30 – 33.

இனி, கோப்பெருஞ் சோழனைப் **பொத்தியார்** பாடியது:

'பாடுநர்க் கீத்த பல்புகழன்'

— புறம்: 221: 1.

இனி, பிற நூல்களுள் அவைபற்றிய ஒரிரு குறிப்புகள்:

'ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை — அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில்'

— பழமொழி: 55.

'செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர் - ஒருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருள் நசையால் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்'

— தண்டி. சூ. 21. உரை. மேற்.

ஆக, இதுவரை அக்காலப் புலவர்கள் அனைவரும் மேற்காட்டிய பாடற் சான்றுகள்வழி, எவரோ ஒரு வள்ளலர், செல்வர், நிலக்கிழார், வேளிர், சிற்றரசர், பேரரசர் ஆகியோர்களைச் சார்ந்தோ அண்டியோ, அவர்களைப் பலவாற்றானும், அவர்கள் மகிழுற வேண்டிப் பாடிப் புகழ்ந்தோ பராவியோ, தம் வறுமை நிலைகளையும் ஏழ்மைக் கொடுமைகளையும் போக்கிக்கொண்டவகையிலேயே, தம் தம் புலமைத் திறன்களையும் கற்பனையாற்றல்களையும் வெளிப்படுத்தியுள்ளதை நன்கு உணரலாம்.

ஆனால், அவர்கள் போல் அல்லாமல் நம் திருவள்ளுவப் பெருந்தகையோ, இவ்வாறு, இன்னன்னோர்களை நெருங்கித் தம் புலமைத் திறத்தை அவ்வவர்பொருட்டு வீணே இழக்காமல், தன்மானத்தொடு தம் சிந்தனையாற்றல், புலமையாற்றல் அனைத்தையும் ஒன்றுதிரட்டி, அவற்றை இவ்வுலக நன்மைக்காகவும், மக்கள் நலத்துக்காகவும், பொதுமை அறம் கருதி, இவ்வுலகத்து எக்காலத்தும் எவ்விடத்தும் பயன்படுமாறு செய்த பெருந்தகைமையை என்னென்று கூறி, மகிழ்வது? அது, பெரிதும் வியந்து பாராட்டக் கூடியதன்றோ?

இனி, அவர் வாழ்வில், அவரும் ஏலேல சிங்கன் என்னும் கப்பல் வணிகர் ஒருவரால் புரக்கப்பெற்றார் என்பதும், அவர் மகளாகிய 'வாசுகி என்னும் பெண்ணியல் நல்லாளை மணந்துகொண்டு இல்லறம் மேற்கொண்டு ஒழுகினார் என்பதும் எந்த அடிப்படைச் சான்றும் அற்ற கட்டுக் கதைகளே என்க.

அம் மெய்ப்பொருள் பேராசிரியர் இல்லறம் மேற்கொண்டு வாழ்ந்திருக்கலாம் என்பதும், அவர்க்கு மக்கட்பேறு இருந்திருக்கலாம் என்பதும் அவர் நூலுள் ஆங்காங்குப் புலப்படுத்தியுள்ள அகப் புறவுணர்வுகள்

வழியாக ஒருவாறு உய்த்துணரப்பெறுகின்றனவே எனினும், அவற்றுக்கும் எவ்வகைச் சான்றுறுதியும் இல்லை என்க. அதுபோலவே அவர் உழவோ, நெயவோ போலும் யாதாமொரு தொழிலோ அரச கரும வினையோ ஆற்றியிருக்கலாகும் என்பதும் உறுதியாகத் தெரியவரும் செய்தி அன்று.

ஆனாலும், அவர் தன்மானமும், தன்முயற்சியும் கொண்டே வாழ்ந்திருக்க முடியும் என்பதும், அவ்வாறாக வாழ்கையிலும் அவர் மிகுந்த ஏழைமை நிலையிலேயே இருந்திருக்கக்கூடும் என்பதும், அவர் ஏழைமை பற்றி எடுத்துரைக்கும் உண்மை நிலைகளாலும், வேறு சில கூற்றுகளாலும் நன்கு புலப்படுகின்றன.

நூலுள் வரும் **நல்குரவு, இரவு, இரவச்சம்** ஆகிய அதிகாரங்களால் அவர்தம் ஏழைமை நுகர்ச்சி நன்கு வெளிப்படுகிறது. அவ்வதிகாரங்களுள் வரும்,

*'இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த*
*சொற்பிறக்கும் சோர்வு தரும்' – 1044.*

*'நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்*
*சொற்பொருள் சோர்வு படும்' – 1046.*

*'நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்*
*யாதொன்றும் கண்பாடு அரிது' – 1049.*

– என்னும் குறள்பாக்களால் அவர் நுகர்ந்த வறுமையும் நுகர்ச்சியும்,

*'தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது*
*உண்ணலின் ஊங்கினிது இல்' – 1065.*

– 'என்பதில் அவர் வறுமையால் மனம் சோர்வுறாது யாதாம் ஒரு தொழில் முயற்சியாலேயே வாழ்ந்திருத்தல் வேண்டும் என்பதும்,'

*'ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு*
*இரவின் இளிவந்தது இல் – 1066.*

– என்பதில், அவர் தன்மானம் இழந்து முற்காட்டிய புலவர்கள் போல் எவரிடமும் போய் இரந்தோ, சார்ந்தோ, தம் எய்தற்கரிய புலமையைப் புறம் போக்கியோ, பொருளுக்கு விற்றோ பிழைத்திருக்க இயலாது என்பதும் உறுதியாக, மிக நன்கு புலப்படுகின்றன என்க. அவ்வாறு அவர் இரவு வாழ்க்கை வாழ்ந்திருப்பின் இத்தகைய உயரிய, செயற்கரிய வாழ்வியல் அறநூலைச் செய்திருக்கவும் இயலாது என்று திண்ணமாய் நம்புக.

இனி, அவர் யாத்துள்ள இப்பேரற நூலுள் பொதுவுடைமை நலச் சிந்தனைகளையும், இவ்வகையில் முதன் முதலாக வெளிப்படுத்திய பாங்கும்

நன்கு கருதத்தக்கது.

முதற்கண், இந்நூலுள் அவர் தாம் கூறவேண்டிய கருத்துகளை உணர்வு அளவாகவும் உடைமை அளவாகவும் என இரண்டு வகையாகப் பிரித்துச் சொல்வதை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

அத்துடன், அவர் **'அறம்'** என்று கூறுவது முற்றும் பொதுமை - பொது நலம்-பொதுவுடைமைக் கூறுகளையே என்பதையும் தெளிவாக நாம் அறிதல் வேண்டும். ஒரே வகையான, ஆனால் சிற்சிறிது கூர்தலுற்ற இம்மூன்று உணர்வுகளையுமேதாம் அவர் அறம் என்று கூறுவார். **உணர்வு அளவானும் உடைமையளவானும்** ஆங்காங்குத் தேவைக்கேற்ப, பொதுவாகவும் சிறப்பாகவும் கூறப்பெறும் அனைத்துக் கருத்துகளுமே அறந்தான் என்பது அவர் கருத்து. எடுத்துக்காட்டாக, ஒரு சில அறக்கருத்துகளாக அவர் கூறுவனவற்றைக் காண்க.

**உணர்வு அளவாகக் கூறப்பெறும் அறக்கூறுகள் சில:**

*1) மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் — 34.*

*2) அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம். — 35.*

*3) அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை. — 76.*

*4) துறந்தாரில் தூய்மை உடையர் இறந்தார்வாய்*
*இன்னாச்சொல் நோற்கிற் பவர். — 159.*

*5) ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து*
*அழுக்காறு இலாத இயல்பு. — 161.*

*6) மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்*
*அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. — 204.*

*7) வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்*
*ஐந்தும் அகத்தே நகும். — 271*

*8) பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று — 297.*

*9) தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்*
*தன்னையே கொல்லும் சினம். — 305.*

10) காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். — 360.

11) வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல். — 363.

12) சென்ற இடத்தான் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப(து) அறிவு. — 422.

13) வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. — 439.

14) மனநலம் மன்னுயிர்க்(கு) ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். — 457.

15) வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். — 622.

**உடைமை அளவாகக் கூறப்பெறும் அறக்கூறுகள் சில:**

(இவற்றைப் பொருளவாகவும் செயலளவாகவும்கூடக் கொள்க.)

1) அன்றறிவாம் என்னாது அறம் செய்க. — 36.

2) வீழ்நாள் படாஅமை நன்றாற்றல் — 38.

3) செயற்பாலது . . . . . அறனே. — 40.

4) அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை --- 49.

5) தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
. மன்னுயிர்க் கெல்லாம் இனிது — 68.

6) உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு. — 89.

7) நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். — 123.

8) படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். — 172.

9) சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். — 173.

10) புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும். — 183.

11) ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. — 215.

12) பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடைய யான்கண் படின். — 216.

13) மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். — 217.

14) வறியார்க்கொன்(று) ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது) உடைத்து. — 221.

15) அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. — 236.

— என்றிவ்வாறு, அறக்கூறுகளை உணர்வளவானும் உடைமையளவானும், செய்தக்கவை இவை, செயத் தகாதன இவை என்றெல்லாம் பகுத்தும் வகுத்தும் தொகுத்தும் கூறுதலை இந்நூல் முழுவதும் காணலாகும் என்க. இவை அனைத்தும் பொதுமை நோக்கிலும் பொதுவுடைமை நோக்கிலுமே, சாதிச் சார்பும், மதச் சார்பும், இனச்சார்பும், நிலச்சார்பும் இன்றி, மக்கள் குலம் அனைத்திற்குமே கூறப்பெற்றுள்ளதை ஆழ்ந்து நோக்குதல் வேண்டும். இந்நிலை தமிழியல் அறத்தை முற்றும் வடிவப்படுத்தியதாகும். மற்று ஆரியவியல் தர்மமோ, நிறச்சார்பும் அஃதாவது வரணச் சார்பும் சாதிச் சார்பும் மதச்சார்பும் இனச்சார்பும் நிலச்சார்புமே கலந்து கூறப்பெறுவதால் அந்நிலை பொதுமைக்கும் பொதுவுடைமைக்கும் எள்ளத்துணையும் பொருந்தி வராதென்று புறம் விடுக்கப்படுவதே ஆகும், என்க.

## 5. திருவள்ளுவரின் தமிழியல் பார்வையும் ஆரியவியல் எதிர்ப்பும் தவிர்ப்பும்:

பொதுவாகவே ஒரு நூல் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணங்கள் சில உண்டு. அவை,

1) அது தோன்றுகின்ற காலச்சூழல்;

2) அக்கால், நூலாசிரியர் தோன்றி வளர்ந்துள்ள மக்கள் இனப் பகுதிக்கு ஏற்பட்ட அகப்புறத்தாக்கங்களும் அவற்றின் வலிவு மெலிவுகளும்;

3) இவ்வகையில் நூலாசிரியர்க்கு உற்ற அறிவுநிலை, மனவுணர்வுநிலை, வாழ்வியல் நிலை - இவற்றுள் ஏற்பட்ட வளர்ச்சியும்பட்டறிவும்;

4) இயற்கையாக அவர்க்குள்ள கற்பனை வளம், மொழிப்பயிற்சி, சிந்தனையாற்றல், மாந்தவியல் நேயம், உலகவியல் நோக்கு முதலியவை.

இவ்வகையில் திருக்குறள் தோன்றியதற்கும் இக்காரணங்கள் தலையாயவையாக இருந்திருக்கின்றன. அவர் வாழ்ந்திருந்த காலம் தமிழகத்துள் ஆரியவினம் புகுந்து, வாழ்வியல் நிலை, கலை, பண்பாட்டு நிலைகள், அரசியல்நிலை, மொழிநிலை முதலியவற்றுள் பற்பல கோணங்களிலும் பலவாறான அகப்புறத் தாக்கங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்த காலம். அஃது ஏறத்தாழ கி. மு. 3 – ஆம் நூற்றாண்டு போல் என்க.

“கி. மு. 3 – ஆம்நூற்றாண்டை ஒட்டியே, இந்தியாவின் தென்கோடி வரையிலும் ஆரியப் பண்பாடு அமைதி வழியில் ஓரளவில் பரவியிருந்தது என்று கூறுதற்குச் சான்றுகள் உண்டு. ஆரியவினம் தங்களின் செயற்கை மொழியாகிய சமசுக்கிருதம், வேதவியல் கருத்துகள், வர்ணாச்ரம தர்மவியல் கோட்பாடுகள், புராண, இதிகாசக் கதைகள், சடங்குகள், வேள்விகள் முதலியவற்றை மெது மெதுவாக, படிப்படியாக, ஆனால் பரவலாக, (இக்கால் வடநாட்டு வல்லாண்மையர் இந்திமொழியையும், பிற வடவர் கலை, பண்பியல்களையும் புகுத்துவது போலவே) தமிழர்களிடையே புகுத்தி வந்தனர். இவற்றுக்கு அற்றைத் தமிழ அரசர்களும் ஆதரவும் புகலிடமும் வலிவும் தந்தனர்.”

(The Civilized Demons - The Harappans in Rigveda - By Malati J. Shendge (1977.)

இவ் விரும்பத்தகாத சூழ்நிலைகளால், தமிழ் இனத்தவரிடையே படிப்படியான சில மனமாற்றங்களும், நடைமுறைப் பழக்க வழக்க வேறுபாடுகளும், வரணப் பூசல்களும் மூடநம்பிக்கைகளும் வேரூன்றி வளர்ந்துவந்தன. அவை திருவள்ளுவர் காலத்தில், வழிவழியாக வந்த தமிழியல் மரபுகளையும், வாழ்வியல் கோட்பாடுகளையும், மெய்யியல் கொள்கைகளையும், இல்லற நெறிமுறைகளையும், குமுகவியல் பண்பாடுகளையும், அறவியல் கூறுகளையும், அரசியல், பொருளியல் நாகரிகங்களையும் திசைவுறச் செய்து, தமிழியலுக்கும், புதுவதாகப் பரவிய ஆரியவியலுக்கும் எளிதில் வேறுபாடுகள் தெரியா வண்ணம் தமிழர்களை நிலைகுலையச் செய்தன.

அக்கால் வாழ்ந்திருந்த அரசர்கள் பலரும், அறிஞர்கள் பலரும், இக்கால் போலவே, அவற்றில் கருத்துச் செலுத்தாதவர்களாகி, உருமாறி வந்த ஆரியவியலின் புதுவரவிற்குத் தாங்களும் மதிமயங்கி வழிவிட்டவர்களாக, எவ்வகை எதிர்ப்பும் காட்டாதவர்களாகத் தங்கள் வாழ்க்கையே நோக்கமென அடிசாய்ந்து வந்தனர். அவர்களுள் திருவள்ளுவர் போலும் புலவர் பெருமக்கள் ஓரிருவரும்கூட நேரடியாக எதிர்ப்புக் காட்டமுடியாதவர்களாகி, வெளிப்படையாகக் கருத்துக்கூற இயலாதவர்களாகக் கையற்று நின்றிருத்தல் வேண்டும்.

இந்நிலை, வலிந்த புறவினத்தாக்கம், ஏற்கனவே செழிப்புற்றிருந்த, பண்பட்ட ஓர் இனத்தின் மேல் நிகழும் பொழுது இயல்பாக ஏற்படுகின்ற ஓர் இழிநிலையாகும். அத்தாக்கத்தின் விளைவுகள் அறியப்பெறும் வரை, அதற்குத் தோன்றும் எதிர்ப்புகள் குறைவாகவேதாம் இருக்கும். எப்பொழுதும் ஆற்றின் போக்குக்கு இயைபாகவே ஓடக்காரர்கள் ஓடங்களைச் செலுத்த விரும்புவது போலவும், அவ்வாற்றை எதிர்த்துப்போவார் மிகமிகக் குறைவாகவே இருப்பது போலவும்தான், ஓர் இனக் கூறுகளின் மேல் ஏற்படும் தாக்க நிலைக்குள்ள எதிர்நிலைப் போக்கும் இருக்கும் என்பது, மாந்த இயங்கியலும், மாந்த மனவியலும் ஆகும். தாக்கமுறும் இனத்தில் உள்ள பெரும்பாலார்கள் அத்தாக்கங்களை எதிர்த்துப் போவதால் ஏற்படும் கடும் விளைவுகளுக்கும் வாழ்வியல் இடையூறுகளுக்கும் அஞ்சி, அவற்றுக்கு இயைபாகவே ஒட்ட ஒழுகவே செய்வர் என்பதே உலகியலாக உள்ளது. மிகச் சிறந்த உலகியல், மாந்த மனவியல் பேராசிரியராகிய திருவள்ளுவப் பேராசானும்,

> உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார் — 140.

> செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
> இயற்கை அறிந்து செயல் — 637.

— என்று இவ்வுலக நடைமுறைகளைப் பொது அறிவாக எடுத்துக் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. எனவே, அவ்வாரியவியற் கருத்துகள் பரவுகின்ற நிலையில், அக்கால் உள்ள அறிஞர்கள் பலரும் வாளா அமைந்திருக்கவும், அவற்றோடு மாறுபடாமல் இயைந்து சென்று, தங்கள் தங்கள் வாழ்க்கைக்கு ஊறு நேராமல் தங்களைக் காத்துக்கொள்ளவுமே விரும்பியிருந்திருப்பர் என்க.

ஆனால், இந்நிலைகளைப் பொறுத்துக் கொள்ளாத இயல்பான நல்லுணர்வும், தன்மானமும், தமிழியல் அறிவும், மிகச்சிறந்த பொது அறவுணர்வும் அளவற்ற புலமையும் கொண்டிருந்த திருவள்ளுவப்

பேராசான், அவ்வாரிய இனநிலைப் பரவல்களை வெளிப்படையாக எதிர்த்துப் போராடுவதற்கேற்ற சூழ்நிலை வாயாமற் போன அக்கால நிலையில், (ஆரியியலை வெளிப்படையாக எதிர்த்துப் போராட இக்காலச் சூழ்நிலையிலும்கூட, பலரும் முன்வராத நிலையை எண்ணிப் பொருத்திப் பார்க்க.) அம் மாறுபட்ட ஆரிய இனவியல், வாழ்வியல், கலை, பண்பாட்டியல், அரசியல், பொருளியல், அறவியல் நிலைகளைத் தவிர்க்கவும், நந்தமிழினத்தவர்களிடம் ஏற்கனவே, நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே, தோன்றி விளங்கிக் கால்கொண்டு சிறந்திருந்த தமிழியல் அறக்கூறுகளையும், பொருளியல், அரசியல் கூறுகளாகிய புறக் கூறுகளையும், வாழ்வியல் கூறுகளாகிய இல்லறவியல், இன்பியல் கூறுகளையும், அவ்வாரிய வியல்களோடு கலந்து மாசுற்று இழிந்து விடாமல் கட்டிக் காத்தற் பொருட்டாகவும், அவை அனைத்தையும் பின்னர் வழிவழியாக வரும், தமிழின மக்களுக்கும் பிற உலக மாந்தர்க்கும் இவை இவை என்று பிரித்துக் காட்டி உணர்த்துதற் பொருட்டாகவும், தொகுத்தும் வகுத்தும் வடிவப்படுத்திக் காட்டவுமே, இந்நூலை உருவாக்கிக் கொடுத்திருத்தல் வேண்டும் என்க. இல்லெனில், இதுபோலும் அறம், பொருள், இன்பவியற் கூறுகளை முறையுறத் தொகுத்து, வகையுற வகுத்துக் கொடுக்கும் முயற்சியை, அக்காலப் புலவோருள் வேறு எவருமே எண்ணாதும் நூல் வடிவாய் இயற்றாதும் இருக்க, இவர் ஒருவர் மட்டுமே இத்தகு ஒரு நூல் செய்திருக்க வேண்டிய தேவை என்னவாக இருந்திருக்கும் என்று நல்லறிவினார் சிந்தித்து உணர்க.

அக்கால் பரவியிருந்த ஆரியவியற் கருத்துகள் **மாந்தவியலையே மாசுபடுத்துவனவாகவும்,** இழிவுபடுத்துவனவாகவும் இருந்து, இன்றளவும் தமிழியலை ஆட்டிப்படைத்துக் கொண்டுள்ளன என்பதை நாம் தெளிவாக அறிதல் வேண்டும். அவற்றின் கொடுமைகளையும், ஈவு இரக்க மற்ற தன்மைகளையும், மக்கள் இழிவு நிலைகளையும் அழிவு நிலைகளையும் ஓரளவேனும் உணர்ந்திருந்தால்தான் திருக்குறள் கூறும் தமிழியலின் உயர்வையும் சிறப்பையும், மீமிசை மாந்தக் கோட்பாடுகளையும் நன்கு அறிந்துகொள்ளமுடியும். எனவே, ஆரியவியல் கொடுநிலைக் கோட்பாடுகளை ஓரளவில் இங்குக் காட்டி, அவற்றுக்கு நேர் எதிராகத் திருக்குறள் கூறும் தமிழியல் கொள்கைகளையும் இணைவைத்துப் பொருத்திக் காட்டுவோம்.

"இனி, இவ்விடத்து இன்னோர் உண்மையையும் நாம் அறிந்து கொள்ளுதல் நல்லது என்க. அஃது, அன்று முதல் இன்று வரை நம் தமிழகத்தும், இவ்விந்தியாவிலும் தொடக்கக் காலத்து, இந்நில முழுவதும் வேரூன்றிப் பற்றிப் படர்ந்திருந்த நம் பழந்தமிழ்ப் பண்பாட்டுடன், ஊடுருவிக் கலந்து மயங்கி வளர்ந்திருக்கும் ஆரியப் பண்பாட்டிலும், வாழ்வியல், அறவியல், மெய்யியல் கருத்துகளிலும் சிற்சில மாந்தவியலுக்கும்

உண்மைக்கும் பொது அறவியலுக்கும் பொருந்துவனவாக உள்ளனவென்றால், அவை நம் பழந்தமிழ் மரபு நிலைகளினின்றும் அவை பொதிந்து அவற்றைப் பழஞ் சுவடிகளினின்றும் எடுத்து அவர்கள் மொழியில் வடிவப்படுத்திக் கொண்டனவேயாகும் என்க. *அன்பர்கள் அவற்றை நன்குணர்ந்து தேர்ந்து தெளிவார்களாக. இதனாலன்றோ, **'மனோன்மணீயம்'** யாத்த பேராசிரியர் சுந்தரனார்,

'வள்ளுவர் செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தவர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி'

– என்று ஆரியநெறியினும் திருக்குறளை மேம்படுத்திப் பெருமைப்படுத்திக் கூறினார் என்க.

ஆரியவியல் நெறிமுறைகள் - தர்மங்கள் - அனைத்தும் **'மனுதர்மம்'** போன்ற நெறிநூல்களிலேயே சொல்லப் பெற்றிருக்கின்றன. அவற்றிற்கும் அடிப்படை வேதங்களே ஆகும். எனவே, அனைத்துத் தர்மங்களுக்கும் வேதங்களே வழிகாட்டிகள். அந்த உண்மையும் அந்த நூல்களிலேயே கூறப் பெற்றுள்ளது. அவற்றை முறையாகப் பார்க்கலாம்.

'வேதங்களில் சொல்லப்பட்ட உண்மைகளே மனுவில்
சொல்லப்பட்டுள்ளன' – (மனு: 2: 7, 8)

'வேதத்திற்கு மாறுபட்ட தர்ம(அற) நூல்கள் நரகத்திற்கே
வழிகாட்டிகள். அவை அழியும்; பொய்யானவை'

– (மனு: 12: 95, 96)

'மக்கள்', உலகம் முதலியவை, ஒழுக்கங்கள் – யாவும்
வேதத்தினாலேயே ஏற்பட்டிருக்கின்றன'

– (மனு: 12: 97, 98)

இனி, வேதத்தில் அடிப்படையாக என்ன சொல்லப் பெற்றுள்ளது? வர்ணாச்ரமம். வர்ணவொழுக்கம். அஃதாவது பிரமன் என்னும் படைப்புக்

---

* "ரிக்வேதம் சதபத பிராமணத்தில் (111 -2-1-24) அசுரர்களின் (தமிழர்களின்) மொழி, இலக்கிய நூல்களைத் தங்கள் மொழியில் பெயர்த்தெழுதிக் கொண்ட தேவர்கள் (ஆரியர்கள்) அவற்றைத் தாங்கள் வளர்த்த வேள்வி நெருப்பில் 'ஆகுதி' (படையல் பொருள்) ஆக இட்டு எரித்தது பற்றிய குறிப்பு வருகிறது. அந்நூல்கள் பனையோலைகளில் எழுதப்பெற்றிருந்தன."

– மாலதி செண்டுகே.

("The Civilized Demons – The Harappans in Rigveda – By Malati J. Shendge. (1977").

கடவுளால் படைக்கப் பெற்ற மக்கள் நான்கு வகையினர். அவர்கள் பிர்மாவின் முகத்தில் பிறந்த **பிராமணர்கள்,** அவன் தோளில் பிறந்த **சத்திரியர்கள்,** தொடையில் பிறந்த **வைசியர்கள்,** பாதத்தில் பிறந்த **சூத்திரர்கள்.**

இவையே வர்ணப் பிரிவுகள். இப்படைப்பு நிலை நான்கு வேதங்களிலும் முதலாவதான ரிக்வேதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

*'ப்ராஹ்ம ணோஸ்ய முகமாஸீத்*
*பாஹூ ராஜன்ய க்ருத:*
*ஊருத தஸ்ய யத்வைஸ்ய*
*பத்வியாக்ம் ஸூத்ரோ அஜாயத:*

*– ரிக் வேதம்: 8-ஆம் கட்டளை. புருஷ ஸூக்தம்.*

இதே கருத்துத்தான் மனுவிலும் சொல்லப்பெற்றிருக்கிறது.

*'உலக விருத்தியின் பொருட்டு (பிர்மாவானவர்) தன்னுடைய முகம், தோள், தொடை,கால் (பாதம்) - இவற்றினின்றும் பிராமணன், க்ஷத்திரியன், வைஸியன், ஸூத்ரன் இவர்களைக் கிரமமாக உண்டு பண்ணினார்.*

*– மனு: 1-31.*

இம் 'மனுதர்ம' நூலை மனு அல்லது மநு என்னும் பெயருடைய ஓர் அரசன் எழுதியதாக ஆரிய நூல்கள் கூறுகின்றன. ஆனால் அதே பொழுது, மனு என்னும் பெயரில் பதினான்கு பேர்கள் இருந்தனர் என்றும், அவற்றுள் கூறப்பெற்றுள்ளது. அவருள் மனுதர்மத்தை எழுதிய மனு என்பான் திருவள்ளுவர் காலத்திற்கு முன்னோ பின்னோ வாழ்ந்ததாகவும் அறிஞர் பலர் கூறுகின்றனர். மனு என்பான் சோழ மரபில் வந்த முன்னோன் என்றும் ஒரு குறிப்பு உள்ளது. அதனால் மனுதர்மம் எழுதியவன் ஒரு தமிழவரசன் என்றும் கூறுகின்றனர். இவ்வகையில் கூறப்பெறும் கூற்றுகள். யாவும், வரலாற்றடிப்படையாகவன்றிப் புராண நூல்கள் முதலியவற்றையே அடிப்படையாகக் கொண்டு கூறப் பெற்றுள்ளன வாகையால், இவற்றுள் எதனையும் உறுதியாகத் தீர்மானிக்க வியலாமல் உள்ளது.

மேலும் மனுதர்மம் எழுதிய மனு என்பான், கி. மு. 20 முதல் கி.பி. 200க்குள் வாழ்ந்திருக்கவேண்டுமென்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். சிலர், திருவள்ளுவர்க்கு நான்கு நூற்றாண்டுகள் முன்பு என்றும், கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர் என்றும் பலபடக் கூறுவர். எப்படியோ, அவர் அக்காலத்து வழங்கிய ஆரிய வேதமதக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டே மனு அத் தரும நூலை எழுதியிருப்பதாக அதிலேயே கூறியிருப்பதாலும், வேதங்களுக்கே அந்நூலுள் உயர்வு கற்பிக்கப்

பெற்றிருப்பதாலும் அவ்வகைக் கருத்துகள், திருவள்ளுவர் காலத் தமிழகத்தில் பரவிக்கொண்டிருந்திருக்க வேண்டும் என்றும், அக்கருத்துகளை மறுத்துரைக்கவும், அவற்றுக்கு எதிரான தமிழியல் கருத்துகளை நிலைப்படுத்தவுமே அவர் திருக்குறளை எழுதியிருத்தல் வேண்டும் என்றும் உறுதியாகக் கருத இடமுண்டு. அதற்கு அகச் சான்றுகளாகப் பல கருத்துகளும் இந்நூலுள் கூறப்பெற்றிருப்பதையும் காணலாம்.

ஆனால், இதற்கு நேர் எதிரான கருத்தாக, திருக்குறளை, முழுமையும் ஆரியச்சார்பான கருத்துகளைக் கொண்டிருப்பதாக முதன் முதல் வலிந்து காட்டியவர் பரிமேலழகரே என்க. அவர்தம் திருக்குறள் உரையின் முன்னுரையில் இவ்வாறு குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. அவ்வுரை வருமாறு:

“அவற்றுள் அறமாவது, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழித்தலும் ஆம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்.

அவற்றுள் ஒழுக்கமாவது. அந்தணர் (ஆரியப் பார்ப்பனர்) முதலிய வருணத்தார், தத்தமக்கு விதிக்கப்பட்ட, பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று, அவ்வவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.

வழக்காவது, ஒரு பொருளைத் தனித்தனியே ‘எனது எனது’ என்று இருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு, அப்பொருள்மேல் செல்வது. அது, ‘கடன் கோடல்’ முதல் பதினெட்டுப் பதத்தது ஆம்.

தண்டமாவது. அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயனாரை, அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தக ஒறுத்தல்.

இவற்றுள் வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தலாவது அல்லது, ஒழுக்கம் போல் உயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பில ஆகலானும், அவைதாம் நூலாலே அன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது.”

– இவ்வாறு, திருவள்ளுவர் கூறிய அறம், ஆரியவியலாரால் வகுத்துக் கூறப்பெற்ற வருணவொழுக்கமே ஆகும் என்று பரிமேலழகரால் திசை மாற்றிக் கூறப்பெறுகிறது.

இனி, ஆரியவியல் கோட்பாடுகள், தமிழியலுக்கு எவ்வெவ்வகையுள் மாறுபட்டனவாக உள்ளன என்பதை ஆரிய நெறி நூலான அம் மனுதர்மத்தைக் கொண்டே உறுதிப்படுத்துவோம். மனுதர்ம நூலுள் வேதத்திற்கும் ஆரிய வர்ணாச்ரம நெறிக்கும் உயர்வு கற்பித்துள்ளதைக்

கீழ்வரும் சொலவகங்களால் (ஸ்லோகங்களால்) காண்க: (வடமொழி கலந்த மொழிபெயர்ப்பு தமிழ்படுத்தப் பெறவில்லை)

*'வேதத்தை நிந்திப்பவன் தெய்வமில்லை என்று சொல்பவன்' அஃதாவது, அவன் 'நாஸ்திகன்') 'நாஸ்திகோ வேத நிந்தக:'*

*— மனு: 2:11.*

*'வேதத்தில் சொல்லப் பெற்றவைதாம் தர்மம்'*

*— மனு:2:13.*

*'வேதத்தில் மாறுபடச் சொல்லியிருந்தாலும் அது தர்மமே'*

*— மனு:2:14.*

*'வேதங்களே (பஞ்ச) பூதங்களைக் காக்கின்றன. வேதம் அநாதி. வேத மந்திரங்களே ஹோமங்களுடன் சூரியனையடைந்து மழை பொழிவிக்கின்றன. அதனால் பருவமும் அதனால் உணவும் அதனால் மக்களும் உண்டாகிறார்கள்' — மனு: 12: 99.*

*'சிரார்த்தம், யாகம், தானம் இவற்றிற்கு அடிப்படை வேதங்களே'*
*— மனு: 12: 94.*

*'வேதத்தை அறிந்தவனே (பிராமணன்) பாபத்தைப் போக்க வல்லவன்*

*— மனு: 12: 101.*

*'வேதத்தை அறிந்தவன் (அஃதாவது பிராமணன்) எந்த ஆச்சாரிய (அஃதாவது பிரமசாரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்யாசம்) ஒழுக்கமுள்ளவனாக இருந்தாலும் அவனே இம்மைக்கு (இப்பிறவிக்கு) அதிகாரி'*

*— மனு:12: 102.*

*'வேதத்தை அறிந்தவனே (பிராமணனே) எல்லாரிலும் உயர்ந்தவன்'*

*— மனு: 12: 103.*

*'வேதம், ஸ்மிருதிகள் (ஆரிய தர்ம நூல்கள்) இவற்றை மீமாம்ஸை நியாயத்தால் கேட்பவனே தர்மத்தை அறிபவன்' — மனு: 12:106,- 109.*

*'இதில் (அஃதாவது மனுதர்ம சாஸ்திரத்தில்) எல்லா தர்மமும் சொல்லப்படவில்லை. சொல்லப்பட்டவையும் கால, இட, வேறுபாட்டால் ஐயத்திற்குரியவையானால், அது தொடர்பாக, வேதமறிந்த பிராமணர்கள் எந்தத் தர்மத்தை ஏற்படுத்துவார்களோ அதுவே நிச்சயமான தர்மம்.'*

*— மனு: 12: 108.*

'வேதங்களை மறுக்கக் கூடாது'

– மனு: 12: 110.

'வேதமறிந்த பிராமணன் சொல்வதே தர்மம். வேதமறியாத பத்தாயிரம் பேர் கூடிச் சொன்னாலும் தர்மம் ஆகாது' – மனு: 12: 113.

மனு முதலிய தர்மங்களில் சொல்லப்பட்டவற்றை பிசகாமல் பின்பற்றுபவர்களே துறக்கம்(சொர்க்கம்) அடைகிறார்கள். - மனு: 12: 116

இக்கருத்துகளின் வலிவைக் கூர்மழுக்கிப் பொதுநிலையாகத் திருக்குறளில் மறுத்தும் எதிர்த்தும் கூறப்பெற்ற கருத்துகள் வருமாறு: (ஆரிய தர்மம் அடியூன்றிப் பரந்து நின்ற அக்காலத்து இதுபோலும் மறைமுகமாக வன்றி, நேரிடையான வேதஎதிர்ப்புக் கருத்துகளை எவராலும் கூறியிருத்தல் இயலாது என்பதை ஆராய்ந்து உணர்க.)

'சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு' – 18.

'தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்' – 19.

– இவை தேவர்களால் மழை பொழியும் என்பதை மறுத்தது.

'ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு' – 21.

'அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்' – 30.

– இவை பிராணமர்களே உயர்ந்தவர்கள் என்பதை மறுத்து, ஒழுக்கம் உடையவனும், எல்லா உயிர்களிடத்தும் உண்மையான, பொதுவான அன்பும், நேர்மையும், இரக்கமும் காட்டுபவனே உயர்ந்தவன் என்றது.

'தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை' – 55

– இது தமிழ்ப் பெண்டிர், தம் கொழுநரைத் தவிர, வேறு உயா குலத்தவர்களையோ, மற்றும் தெய்வங்களையோகூட மதியார், என்றது. (பிராமணர்களுக்குத் தமிழ (சூத்திர)ப் பெண்டிர் வைப்பாட்டிகளாக இருக்க வேண்டும் என்னும் ஆரிய ஒழுக்கத்தைத் தமிழ ஒழுக்கத்தால் கண்டித்து மறுத்தது. இந்த வகையாலன்றி, வேறு எந்த வகையாலும் அக்கருத்து மறுத்தற்கியலாது, என்க. அக்காலத்துப் பேரரசர்களும் வேளிர்களும் செல்வர்களும் தெய்வ பத்தியால் தம்தம் மனைவியரையே ஆரியப்

பார்ப்பனர்க்கு ஊட்டக் கொடுத்ததும் இன்றும் பெருங்குல மக்களிற் பலரும், தமிழ்ப் பெண்டிர்களையும் திருமணம் செய்விக்கப் பெற்ற புதுமண மகளிரையும் ஆரியப் பார்ப்பனர் நுகர்ச்சிக்கே* முதலில் சில காலம் தருவதும் பழந்தமிழ்ச் சேர நாடாகிய கேரளா முதலிய சிலவிடங்களில் வழக்கமாகவும், பிறவிடங்களில் இல்லறவியல் சடங்காகவும் இருப்பதும் அறிந்துகொள்ள வேண்டுவன.

இக் கற்பு வழுநிலை தமிழப் பெண்டிர்க்கு உறுதியாக விருந்த அக்காலத்து, மேற்கூறிய ஆரியச் சிதைவொழுக்கம் தலையெடுத்துப் பரவிய பொழுதே, திருவள்ளுவப் பேராசான் தமிழப் பெண்டிரின் கற்பொழுக்க நிறைநிலையைக் காத்தொழுகல் வேண்டியும், ஆரியப்பார்ப்பனர்க்குப் பெண்டிரைத் தேவரடியார் ஆக்குதலைத் தடுத்து நிறுத்துதல்வேண்டியும், அக்காலக் குமுகச் சூழலுக் கேற்ற வகையில் இல்லறவியலில், கீழ்வருமாறு பெண்டிரொழுக்க நிலையின் மாண்பை மறைமுகமாகத் தமிழியலறம் என்னும் பெயரில் வலியுறுத்த வேண்டியிருந்தது, என்க. ஒரு நன்னெறியும் நற்பண்பும் சிதையவரும் இடத்துத்தான், அதன் வலியுறுத்தம் தேவையே யன்றி, அஃது இயல்பான விடத்து அவ்வாறு வலியுறுத்தல் தேவையில்லை என்னும் மக்கள் மனவியலை உணர்க.

---

* இவ்விடத்தில், திருமணச் சடங்கின் பொழுது, ஆரியப் பார்ப்பனப் புரோகிதன் கூறும் மந்திரங்களில் இதுவும் ஒன்று.

'சோமஹ ப்ரதமோ
விவிதே கந்தர்வ
விவிதே உத்ரஹ
த்ருதியோ அக்னிஸ்டே
பதிஸ துாயஸ்தே
மனுஷ்ய ஜாஹ"

அஃதாவது, மணப் பெண்ணாகிய இவளை (புனிதம் பெறவேண்டி) முதல்நாள் சோமனும் (சந்திரனும்), அடுத்த நாள் கந்தர்வனும் (தேவரும்), அதற்கடுத்த நாள் உத்திரனும் (இவனும் ஒரு தேவன்), நான்காம் நாள் இரவு அக்னியும் (நெருப்புத் தேவன்), (நுகர்ச்சி செய்த பின்னர்), ஐந்தாம் நாள் இரவுதான் இவளை மணந்தவனாகிய கணவன் நுகரவேண்டுவது - — என்பது இதன் விரிபொருள். இதில் இன்னும் கவனிக்க வேண்டுவது, இதில் கூறப்பெற்ற நான்கு தேவர்களும் பிராமணர் வடிவிலேயே இவள் தங்கியிருக்கும் தனி அறையில் இரவுப் பொழுதில் வருவார்கள் என்றும் இதற்கு விளக்கம் சொல்லியிருப்பதுதான்.

'**மனைத்தக்க மாண்பு**டையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை' – 51.

'**மனைமாட்சி** இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்' – 52.

'இல்லதென் **இல்லவள் மாண்பானால்** உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை' – 53.

– ஆகிய இக்குறட் பாக்களில் குறிப்பிடப்பெறும் **மனைத்தக்க மாண்பு, மனைமாட்சி, இல்லவள் மாண்பு** என்பனவும், பிற குறட்பாக்களில் குறிக்கப்பெறும் பெருந்தக்க, திண்மை (54), தற்காத்தல், தகை சான்றல் (56), மகளிர் நிறை காக்கும் காப்பு (57), பெண்டிர் பெருஞ்சிறப்புப் பெறுவர் (58), புகழ்புரிந்த இல் (59), மங்கலம் (60) – ஆகிய சொற்களும் தமிழியற் பண்பில் பெண்களுக்கு இருக்கவேண்டியதாகக் கருதப்பெறும் நல்லொழுக்கச் சிறப்பையே வலியுறுத்திக் காட்டுவன, என்க.

இனி, எல்லாவற்றுக்கும் முதலாகக் கூறவேண்டுமானால், திருவள்ளுவர் உலகப் படைப்புக் கொள்கையிலேயே, ஆரியவியலினின்று மாறுபட்டு நிற்பதை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வகையில் ஆரியவியல் தமிழியலினின்று முற்றிலும் வேறுபடுகிறது. அது, படைப்புக் கொள்கையைக் கற்பனை சேர்ந்த, அறிவுக்குப் பொருந்தாத ஒரு கட்டுக் கதையாகவே விளக்கப்படுத்தி (விரித்து)க் கூறுவதைப் பார்க்கலாம், ஆரியவியலின் படைப்புக் கொள்கையாக **யஜுர் வேதம், புருஷசூக்தம்,** 11, 12, 13 முதலிய சொலவகங்களில் கூறப் பெறும் செய்திகள் வருமாறு:

"**பிரமமே** முதல் புருஷன். அவன் சிரசிலிருந்து சோதியுலகமாகிய **சொர்க்கமும்,** பாதத்திலிருந்து **பூமியும்** உண்டாயின.

அவன் மனத்திலிருந்து **சந்திரனும்,** கண்ணிலிருந்து **சூரியனும்,** செவிகளிலிருந்து **வாயு**வும், **பிராண**னும் (உயிரும்) வாயினின்று **அக்னி**யும் உண்டாயின.

அவன் முகத்திலிருந்து **பிராமணர்**களும், புஜங்களிலிருந்து **சத்திரியர்**களும், தொடைகளிலிருந்து **வைசியர்**களும், பாதங்களிலிருந்து. **சூத்திரர்**களும் பிறந்தார்கள். இது பற்றிய ரிக்வேதச் சொலவகம் (சூத்திரம்) மேலே எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது."

– இக் கற்பனைக் கட்டுரையை ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள். இஃது அறிவியலுக்குச் சற்றேனும் பொருந்துகிறதா என்று எண்ணுங்கள். எவ்வளவு பெரிய் பொய்! அறிவுக்குப் பொருந்தாத உளறல்! ஏமாற்று! முதலில் சந்திரன் தோன்றியதாம்! அதன் பின் சூரியன் தோன்றியதாம்!

அதன் பின் வாயு (காற்று) தோன்றியதாம்! என்னே கற்பனை! அறிவியல் கற்ற அனைவரும் வெட்கித்தலைகுனிய வேண்டிய செய்தி இது! இப்படித்தான், இன்று அறிவியல் கற்ற ஆரியப் பார்ப்பனர்கள் அனைவரும் தலைமேல் வைத்துக் கொண்டாடும் வேதங்கள் அனைத்திலும் சொல்லப் பெற்றிருக்கின்றன! இவ்வேதங்களைத்தாம், தாமே உண்டானவை (ஸ்வயம்பு) என்றும், தொடக்கமும் முடிவும் இல்லாதவை (அநாதி) என்றும், என்றும் இருப்பவை (நித்யம்) என்றும் ஒலிவடிவானவை (ஸ்ருதி) என்றும், அறிவுநூல் (ஸாஸ்த்ரம்), என்றும், கடவுள் வாயிலிருந்து வெளியானவை (ஈஸ்வர வாக்யம்) என்றும், கடவுளால் பிரமதேவனுக்குச் சொல்லப்பெற்று, அவனால் பின்னர் ரிஷிகளுக்குச் சொல்லப்பெற்று பிறகு அவற்றைத் தம் சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்கள் என்றும், அவை இந்த உலகம் அழிந்தாலும் அழியாமல் விந்து (ஒளி) வடிவமாய் இருக்குமென்றும், இவை ஒருகாலத்தில் அசுரர் (தமிழர்)களால் திருடிச் செல்லப்பெற்றுப் பிரமனால் அன்னப் பறவை வடிவம் கொண்டு மீட்கப் பெற்றவை என்றும், இன்னும் பலவாறாகவும் இன்றுவரை ஆரியப் பார்ப்பனரால் கூறப்பெற்று வருகின்றன என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

இனி, அவற்றில் படைப்புக் கொள்கை பற்றி மேலும் விளக்கப் பெற்ற செய்திகளையும் நாம் பார்ப்போம்.

"அப்பிரமன், இவ்வாறு, சந்திர சூரியர்களையும் உலகத்தையும் படைத்ததற்குப் பின்னர், உபபிர்மாக்கள் எனப்பெறும் ஒன்பது பிரஜாபதிகளை (மக்கள் தலைவர்களை) உண்டாக்கி, அவர்களைக் கொண்டு உலகத்திலுள்ள எல்லா உயிரினங்களையும் உண்டாக்கினான்' என்று கீழ்வருமாறு வண்ணிக்கப்பெறுகிறது.

'அப்பிரஜாபதிகளுள், மரீசி மகனான **கசியபன்** (காசிபன்) ஒரு பிரஜாபதியாவான். இவனுக்கு **தக்ஷன்** என்பவனுடைய பதின்மூன்று பெண்களும், **வைசவாக்ரன்** (வைசியாநரர்) என்பவனின் பெண்கள் இருவரும் ஆகப் பதினைந்து பேரும் மனைவியர் ஆவர்.

அவர்களுள் **அதிதி**[1] என்பவள் வயிற்றில் **பன்னிரு ஆதித்தர்** (சூரியர்)களும், **தேவர்களும்** பிறந்தார்கள்.'

- '**திதி**[2] என்பவள் வயிற்றில் **தைத்தியர்கள், அசுரர்கள்** பிறந்தனர்,'

– '**தநு**[3] என்பவள் வயிற்றில் **தானவர்கள்** பிறந்தனர்.'

- '**மதி**[4] என்பவள் வயிற்றில் **மனிதர்கள்** பிறந்தார்கள்.'

– '**சுரபி**[5] என்பவள் வயிற்றில் **காமதேனு**வும், **கந்தர்வர்**களும் பிறந்தார்கள். (காமதேனு – பசுக்கூட்டம்).'

— **‘சுதை**[6] என்பவள் வயிற்றில், ஒருதலையுடைய நாகங்களும் பலவகைப் **பாம்புகளும், தேள், பூரான், சுரமண்டலி** முதலிய அனைத்து நஞ்சுள்ள பிறவிகளும் பிறந்தன.’

— **‘கத்துரு**[7] என்பவள் வயிற்றில், ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேஷனும், **தட்சன், வாசுகி, கார்க்கோடகன்** முதலிய எண்ணற்ற நாகங்களும் பிறந்தார்கள்.’

— **‘தாம்பரை**[8] என்பவள் வயிற்றில் **ஊர்க்குருவி, உள்ளான், கோழி, கொக்கு** முதலிய பறவையினங்கள் பிறந்தன.’

— **‘விநுதை**[9] என்பவள் வயிற்றில் **அருணன், கருடன், பருந்து, கூகை** முதலியனவும், **வான்இடி, மின்னல்** முதலியனவும் பிறந்தன.’

— **‘குரோதவசை**[10] என்பவள் வயிற்றில் **கழுதை, ஒட்டகம், மரை, மான், புலி, சிறுத்தை** முதலிய கொடிய விலங்குகள் பிறந்தன.

— **‘இளை**[11] என்பவள் வயிற்றில் **மீன்கள், ஆமைகள், தவளைகள், சுரா, திமிங்கலம்** முதலிய நீர்வாழும் **உயிரிகள்** அனைத்தும் பிறந்தன.

— **‘கதை**[12] என்பவள் வயிற்றில் **மரம்,செடி, கொடி, புல், பூண்டு** ஆகிய பல்லாயிரம் பயிரினங்கள் எல்லாம் பிறந்தன.’

— **‘அநாயு**[13] என்பவளிடம் **சித்திரையும்**’

— **‘பிரதை**[14] யிடம் **காந்தர்வர்**களும்,’

— **‘முனி**[15] யிடம் **அப்ஸரஸ்களும்,** பிறந்தனர்.’

— இனி, இவர்கள் அல்லாமல், காசிபர் மேலும்,

— **‘காலை** என்பவளை மணந்து **காலகேயர், பர்வதன்** என்னும் தேவரிஷி,

— **‘புலோமை’** என்பவளை மணந்து, **புலோமர், விபாண்டகன்** என்னும் பிரம்மரிஷி,

— **‘மாயை** என்பவளை மணந்து, **சூரபத்மன்** முதலியவரையும்,

— **‘ஊர்வசி**யைப் புணர்ந்து **வசிஷ்டமுனிவரை**யும் பிறப்பித்தார்.’

— ‘அவர் மேலும் **பூமாதேவி**ய்ய மணந்து, பூமியில் உள்ள பிற அனைத்தையும் பிறப்பித்தார்.

— **காசிப**ரால் இவையனைத்தும் பிறப்பிக்கப் பெற்றதால் இவை வாழுமிடமாகிய பூமிக்கு **காசினி** என்று பெயர் உண்டாயிற்று —’ என்பர்.

இவ்வாறான பொய்ம்மையும் புலைமையும் புன்மையும் பொருந்தாமையும் நிறைந்த ஆரியவியலின் படைப்புக் கொள்கையையும்

பிறப்பியல் கோட்பாட்டையும் திருவள்ளுவர் அடியோடு பின் வருமாறு மறுத்துரைப்பார்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.' — 1.

'விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது' — 16.

'நீரின்று அமையாது உலகு' — 20.

— முதலிய கருத்துகளால் அவர்தம் படைப்புக் கொள்கையையும்,

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்' — 972.

'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்' — 973.

'ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்' — 133.

'மறப்பினும் ஒத்துக் கொளலாகும்; பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்' — 134.

'அந்தணர் என்போர் அறவோர்,மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்' — 30.

'செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்' — 26.

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்' — -505.

'இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்' — 698.

'மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு' — 409.

— என்னும் இவை போன்ற நூற்றுக் கணக்கான கூற்றுகளால் ஆரியவியலின் பிறப்பியல் கோட்பாட்டையும் வருணாச்ரமக் கொள்கையையும் அழுத்தம் திருத்தமாக அடியோடு தகர்த்து எறிகிறார், என்க. எசுர் வேதத்தில் மக்களுக்குள் நூற்றுத் தொண்ணூற்றாறு பிரிவுகள் உள்ளன என்று கூறப்பெற்றுள்ளது. இனி, வர்ணாச்ரமக் கோட்பாட்டின்படி ஆரியவியலில்

*கற்பிக்கப்பெற்ற தொழிலமைப்பு வேறுபாடுகள் பன்னூற்றுக் கணக்கானவை ஆகும், அவற்றுள் கூறப்பெற்றுள்ள சிற்சில தொழிலமைப்பு வேறுபாடுகளைக் காண்க:*

*'மனு வேதங்களை உணர்ந்த பிரம்ம ஞானி. எனவே அவரால் எந்தச் சாதியார்க்கு எந்தத் தொழில் விதிக்கப்பட்டதோ அது வேத சம்மதமாகும்.'*

*— மனு — 2 : 7.*

*'அந்தப் பிரம்மாவானவர் இந்த உலகத்தைக் காப்பாற்றுவதற்காகத் தன் முகம், தோள், துடை, பாதம் இவற்றினின்று உண்டான பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வருணத்தார்க்கு, இம்மைக்கும் மறுமைக்கும் உபயோகமான கருமங்களைத் தனித்தனியாகப் பகுத்தார்'*

*— மனு — 1 . 87.*

*'வேதஞானம், வேதம் ஓதல், ஓதுவித்தல், வேள்விபுரிதல், புரிவித்தல், செல்வம் ஈதல், ஏற்றல் — ஆகியவை **பிராமணனுடைய** பணி'*

*— மனு: 1 — 88, 93, 94, 95, 96, 98, 99, 100.*

*'உலகை ஆளுதல், மக்களைக் காத்தல், கொடை, வேள்வி செய்வித்தல், வேதம் பயிற்றுவித்தல், எதனாலும் ஈர்க்கப் படாத திடமனத்தினனாய் இருத்தல் — ஆகியவை **க்ஷத்திரியன்** தொழில்.*

*— மனு: 1 — 89.*

*'செல்வம் தேடுதல், கடல், மலை, கனிப்பொருள், விளைபொருள் வணிகம் செய்தல், ஆநிரைகாத்தல், பயிர்த்தொழில், வட்டித் தொழில் செய்தல் ஆகியவை **வைசிகன்** தொழில்.*

*— மனு: 1 — 90.*

*'பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் ஆகிய மூவர்க்கும் மனம் கோணாமல், பொறாமையின்றி அவர்களின் விருப்பப்படி தொண்டு செய்தல் **சூத்திரன்** தொழில்'*

*— மனு: 1 — 91.*

*'தன் சாதித் தொழில் விட்டு வேறு சாதித் தொழிலைச் செய்பவனை அரசன் ஊரை விட்டே ஓட்டவேண்டியது'*

*— மனு: 9 — 225.*

*'பிராமணர்க்குப் பணிவிடை புரிவதே சூத்திரர் தர்மம்.*
*சூத்திரர்க்கு அதுவே மோட்சப் பாதை'*

*— மனு: 9 — 334.*

''சூத்திரன் பிராமணனுடைய தொழிலைச் செய்தாலும் சூத்திரனேயாவான். பிராமணன் சூத்திரனுடைய தொழிலைச் செய்தாலும் பிராமணனேயாவான். ஏனென்றால் கடவுள் அப்படியே நிச்சயம் செய்து விட்டார்'

– மனு: 1 – 92 – 100

"பிராமணன் இழிதொழில்களில் ஈடுபட்டிருந்தாலும் அவன் பூஜிக்கத் தக்கவன்" – மனு: 9 – 313.

"சூத்திரன் தன் ஊழியத் தொழிலைவிட வேறு உயர்ந்த வேலைகளை எந்த இடத்தில் செய்யவில்லையோ அந்த இடமே பிராமணர்கள் வசிக்கத் தகுந்த இடம்"

– மனு: 2 – 24.

"சூத்திரன் தன் சாதித் தொழிலைச் செய்யாவிட்டால் அரசன் தண்டனை தரவேண்டும்"

– மனு: 8 – 410.

"பிராமணர் தீச்செயல் புரிந்தாலும் அவர் போற்றுதற்கு உரியவராவர்."

– மனு: 10 – 246.

என்னும் இவ்வறக் கேடான கொள்கை கோட்பாடுகளைத் திருவள்ளுவம் 'சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான் (972) 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்" (505) என்று மறுத்துரைப்பதை உணர்தல் வேண்டும்.

இனி, உழவுத்தொழில் செய்வதை ஆரியம் இழிவு என்பதை அறிக.

'பிராமணர், க்ஷத்திரியர் உழவுத் தொழில் செய்யலாகாது. பயிர்த்தொழில் உயர்ந்தது என்பர். பூமியையும் பூமியில் வாழும் சிற்றுயிர்களையும் கலப்பை, மண்வெட்டியால் கொல்ல நேர்கிறது. ஆதலின் வாழ்வின் பொருட்டாக பிராமண, க்ஷத்திரியர் ஆட்களை அமர்த்தியே உழவு செய்க.

– மனு: 11 – 52..

ஆனால், திருவள்ளுவம் – தமிழியல் – உழவுத் தொழிலையே மேம்பாடான தொழில் என்று போற்றுகிறதை நாம் அறிவோம்.

'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை' – 1031

'உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது

எழுவாரை எல்லாம் பொறுத்து' — 1032.

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்' — 1033.

'பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழல் அவர். — 1034.

'உழவினார் கைம்மடங்கின் இல்லை; விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கும் நிலை' — 1036.

— என்னும் குறள் கருத்துகளை ஓர்மின்!

மேலும் உலகில் உள்ள வேறு எத்தொழிலையும் திருக்குறளில் சுட்டிச் சொல்லாமலும், போற்றியுரைக்காமலும், உழவுத்தொழில் ஒன்றுக்கே தனிஓர் அதிகாரம் வகுத்தளித்ததையும், அதில் அத்தொழிலையே போற்றிச் சொல்லியதையும் ஆழமாக எண்ணி, அக் கருத்துகளால் உழவுத்தொழிலை இழிவுபடுத்தும் ஆரியவியலை மிகுவாகக் கண்டிப்பதையும் எண்ணிப் பார்க்கவும்.

இனி, மனுநூலில் உழவியலைக் கண்டித்தும் இழிவுபடுத்தியும் கூறிய கூற்றில், அத்தொழிலால் சிற்றுயிர்களைக் கொல்லுதல் நிலை ஏற்படுகிறதாகக் குறிப்பிட்டுள்ளதற்கு நேர் மாறாக, மற்றுமுள்ள பேருயிர்களைக் கொல்வதும், அவற்றை உண்பதில் தவறில்லை என்று கூறப்பட்டிருப்பதும் கவனிக்கத் தக்கன. அவற்றையும் இங்கு எடுத்துக் காட்டுவோம்.

'பிராமணன் மீனை மட்டும் விலக்கி மாமிசம் உண்ணலாம்'

மனு: 5 — 15, 17)

— இங்கு வடவிந்தியாவில் சில பகுதிகளிலும், காசுமீரிலும் உள்ள பிராமணர்கள் மீனையும் உண்டுவருவது குறிப்பிடத்தக்கது.

'பிராமணன் உணவுக்காகவே எல்லா உயிர்களும் பிரமனால் படைக்கப்பட்டன.'

முதல் — மனு: 5 — 29, முதல் 32 வரை 36, 37.

'யக்கியத்திற்காக மிருகக் கொலை செய்வது பாவமாகாது'

— மனு: 5 — 39 முதல் 42 வரை 44.

"உயிர் வாழ்வதற்குப் புசிக்கத்தக்க பிராணிகளை நாள்தோறும் ன்று புசித்தாலும் தோஷமில்லை; ஜீவனுக்கு ஆகாரமாகவே புசிக்கத்தக்க பிராணிகள் பிரமனால் சிருஷ்டிக்கப்பட்டுள்ளன. ஆனால் யாகம் செய்து மாமிசத்தைப் புசித்தால் தேவகாரியம்; மாமிசத்தைத் தேவர்களுக்கும்

பிதுரர்களுக்கும் நிவேதித்துப் புசிக்கிறவன் தூஷிக்கப்படமாட்டான். எக்கியத்திற்காகவே பிரமனால் பசுக்கள் மிருகங்கள், பறவைகள் படைக்கப்பட்டன. ஆதலால் யாகத்தில் செய்யும் கொலைகள் கொலைகளாகமாட்டா. யாகத்தால் தேவர்கள் மகழ்கிறார்கள்; உலகமெல்லாம் நன்மையடைகிறது; யாகத்தில் உயிர்களைக் கொன்றால் அவை பின்பு உயர்ந்த கதியை அடைகின்றன. ஆதலால் யாகம், சிரார்த்தம் இவற்றில் உயிர்க்கொலை செய்யலாம்; அக் கொலை பாவமாகாது.

இங்ஙனம் யாகத்திற் கொல்லப்பட்ட கொலையைக் கொலை என்று நினைக்கலாகாது. வேதத்தினாலேயே தர்மம் விளங்குவதால், வேதம் கொலை செய்யக் கூறினாலும் அது புண்ணியமாகவே இருக்கும். அதுவே தர்மமாகும்."

— மனு: 5 — 28 முதல் 44 வரை.

கீழுள்ள மனுவியல் கருத்துகள் இறந்து போனவர்களுக்குப் பிராமணப் புரோகிதர்களைக் கொண்டு நீத்தார் கடன்கள் (சிரார்த்தம் — பிதிர்க்கடன் திதி கொடுத்தல்) பற்றிக் கூறுகின்றன. அவற்றிலும் உயிர்க் கொலையும் புலால் உண்பதும் வலியுறுத்தப்பெறுகின்றன.

'எள்ளு, அரிசி, உளுந்து, கிழங்கு, பழம் இவற்றால் சிரார்த்தம் செய்தால் பிதிரர்கள் ஒரு மாதம் வரையில் திருப்தி அடைவார்கள்.

— மனு: 3 — 267.

'ஆமை, மீன் இவற்றின் இறைச்சியால் இரண்டு மாதங்களும், மான் இறைச்சியால் மூன்று மாதங்களும், செம்மறியாட்டின் இறைச்சியால் நான்கு மாதங்களும், பறவைகளின் இறைச்சியால் ஐந்து மாதங்களும், வெள்ளாட்டின் இறைச்சியால் ஆறு மாதங்களும், புள்ளிமான் இறைச்சியால் ஏழு மாதங்களும், கருமான் இறைச்சியால் எட்டு மாதங்களும், கலைமான் இறைச்சியால் ஒன்பது மாதங்களும், முள்ளம்பன்றி, காட்டெருமைக்கடா இவற்றின் இறைச்சியால் பத்து மாதங்களும், முயலிறைச்சியால் பதினொரு மாதங்களும், வார்த்தீசன் என்னும் வெள்ளாட்டின் இறைச்சியால் பன்னிரண்டு மாதங்களும், பிதிரர்கள் திருப்தியடைகின்றார்கள்.'

— மனு: 3 — 268, 269, 270.

'முள்ளுள்ள வாளை மீன், கட்க மிருகம், சிவந்த ஆடு இவற்றின் இறைச்சியால் சிரார்த்தம் செய்தால் பிதிரர்கள் அளவற்ற காலம் திருப்தியடைவார்கள்'

— மனு: 3 — 271.

'சிரார்த்தத்தில் விதிப்படி, அழைக்கப்பட்ட பிராமணன் இதில் கூறப்பட்ட மாமிசங்களைப் புசிக்காவிட்டால் அவன் இருபத்தொரு பிறப்பு பசுவாகப் பிறப்பான்'

— மனு: 5 — 35.

— இவ்வாறு ஆரியவியல் உயிர்களைக் கொல்லவும், அவற்றைத் தின்னவும், அவ்வாறு தின்பது கரிசு(பாவம்) இல்லை என்றும், நல்வினையே (புண்ணியம்) என்றும் கூறுவதை நோக்குங்கால், ஏர் உழுவதால், கலப்பையால் உயிர்கள் மடிகின்றன என்றும் புலம்பி, அதனால் அவ்வுழவுத் தொழிலைப் பிராமணரும் க்ஷத்தியரும் செய்யக்கூடாதென மறுப்பது, உடல் உழைப்பைத் தவிர்ப்பதற்காகச் செய்துகொள்ளும் ஏமாற்றும் சூழ்ச்சியுமே ஆகும் என்க. அத்துடன் அத்தொழிலை வேறு ஆட்களை வைத்துச்செய்யச் சொல்வதும் அதனால் உயிர்வாழக் கருதுவதும் வஞ்சகமுமே ஆகும் என்க.

இனி, உயிர்க்கொலை செய்வதும், புலால் உண்ணுவதும் திருக்குறளால் தடுத்துரைக்கப்பெற்ற செயல்கள் என்பது அனைவரும் அறிந்ததே. ஆரிவியலை அறவே மறுத்தொதுக்கவே அவை எடுத்துரைக்கப் பெற்றன என்க. இவ்வகையில் கீழ்வரும் குறட்பாக்களை எண்ணிப் பார்த்து உண்மை உணர்க.

'அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்' — 254.

'செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்' — 258.

'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று' — 259.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு' — 261.

'அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை' — 315.

'அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும்' — 321.

'ஒன்றாக நல்லது கொல்லாமை' — 323.

'நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி' — 324.

'நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை' — 325.

'நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்

கொன்றாகும் ஆக்கம் கடை' — 328.

– இவை போலும் கருத்துகள் தமிழியல் சார்ந்தவை. இவை ஆரியவியலுக்கு நேர் எதிரானவை என்பதறிக.

இனி, ஆரியவியலில் எங்கு நோக்கினும் எவ்விடத்தும் பிராமணர்க்கே ஏற்றம் கூறப்பெற்றதே காணப் பெறுகிறது. அவர்களின் வாழ்வியல், அறவியல், அரசியல், சட்டம், தண்டனை, குமுக அமைப்பு, உடைமைகள், பெண்ணியல் முதலிய அனைத்து நிலைகளிலும் ஆரியவியல் கோட்பாடுகளுக்கும், தமிழியல் கோட்பாடுகளுக்கும் பலவாறான வேற்றுமைகளே காணப் பெறுகின்றன. அவ்வேறுபாடுகளை இங்குச் சிற்சில கூறுகளில் ஒரு சிறிது எடுத்துக் காட்டுவோம்.

வாழ்வியலைப் பொறுத்த வகையில் ஆரியவியலின் வகுமுறைகளைப் பாருங்கள்.

'சூத்திரர்களின் தருமம் என்னவென்றால் பிராமணர்களுக்குப் பணிவிடை செய்வதும், அவர்களுக்கு அடிமையாய் இருப்பதுமே. மோட்சத்திற்கு அதுவே ஏதுவாகும் – என்று கருதி இத்தருமத்தை விதித்தார். அதுவும் அருவருப்படையாமல் செய்யவேண்டும்.'

— மனு: 1 — 31.

**பிராமணர்களின் வாழ்விடம்:**

'தேவர்கள், பெரியோர்கள் என்பவர்கள் வாழுமிடம் சரஸ்வதி, திருஷத்துவதி என்னும் நதிகள் ஓடும் மத்திய பிரதேசமே! அதுவே **பிரம்மா வர்த்தம்.** அங்குள்ள பிராமணர்களே தருமங்களைச் சொல்லத்தக்கவர்கள்' மத்திய பிரதேசம் என்பது இமயமலைக்கும் விந்தியமலைக்கு இடையில் உள்ள பிரதேசமே! அதுவே ஆரியா வர்த்தம்'

— மனு: 2 — 17 முதல் 22 வரை.

'பிராமணர்கள் வேறு தேசத்திற் பிறந்தவர்களாயினும் அவர்கள் ஆரியா வர்த்தமான மத்திய பிரதேசத்திற்குத்தான் வந்து வாழ வேண்டும். அத்துடன் சூத்திரன் தன் ஊழியத் தொழிலைவிட (அஃதாவது பிராமணர்க்கு அடிமை செய்வதைவிட) வேறு உயர்ந்த வேலைகளை எந்த இடத்தில் செய்ய வில்லையோ அந்த இடமே பிராமணர்கள் வசிக்கத் தகுந்த இடம்'

— மனு: 2 — 24.

'பிராமணனுக்கு உயர்ந்த பெயரையும், சூத்திரனுக்குத் தாழ்வையும் இழிவையும் காட்டுகிற பெயரையுமே இடுதல் வேண்டும். பிராமணன் சர்மா என்பதையும், க்ஷத்திரியன் வர்மா என்பதையும், வைசியன் பூதி(பூபதி) என்பதையும், சூத்திரன் தாசன் என்பதையும் தொடர் பெயராக வைக்க வேண்டும்'

— மனு: 2 — 31, 32.

குருவை வணங்கும்போது, குரு, பிராமணனை 'இருக்கின்றாயா' என்றும், க்ஷத்திரியனை, 'நோயற்றிருக்கிறாயா' என்றும், வைசியனை 'க்ஷேமமாக விருக்கின்றாயா' – என்றும், சூத்திரனை 'சுகமாக விருக்கின்றாயா' என்றும் கேட்கவேண்டும்.

– மனு: 2 – 127.

'பத்து வயது பிராமணன், நூறு வயது சூத்திரன் தகப்பனும் புத்திரனும் ஆகிய மரியாதைக் குரியவர்கள்'

– மனு: 2 – 135.

'சூத்திரன் 90 வயதிற்குப் பின்தான் எல்லாராலும் மதிக்கப்பட வேண்டும்'

– மனு: 2 – 137.

'பிராமணன் கட்டாயம் வேதம் படிக்க வேண்டும்' என்பது மனு:2 157, 158, 166, 167, 168 – ஆகிய சொலவகங்களில் வலியுறுத்தப் பெறுகிறது.

'பிராணமர்களைப் பேணுவதே தேவர்களையும் பிதுரர்களையும் வழிபடுவதற் கொப்பாகும்'

– மனு: 3 – 129, 130, 131, 132,

'பிராமணர்களைப் பரீட்சை செய்யக் கூடாது.'

– மனு: 3 – 149.

'பிராமணர்கள் உண்பதை எந்தச் சாதியாரும் பார்க்கக் கூடாது.'

– மனு: – 3 – 176.

'சூத்திரன் யாகம் செய்யக் கூடாது'

– மனு: 3 – 178.

'வர்ணாச்சிரமங்களைக் கடைப்படிப்பவனே மேலான கதியை அடைகிறான்'

– மனு: 4 – 14.

'பிராமணன் பாட்டுப் பாடியோ, கூத்தாடியோ, விகடம் சொல்லியோ பிழைக்கக் கூடாது'

– மனு: 4 – 15.

'பிராமணன் தாழ்ந்த சாதி மக்களுடன் ஒரு மரத்து நிழலில் நிற்கக் கூடாது.'

– மனு: 4 – 79.

'பிராமணன் வேதம் ஓதுகையில் சூத்திரன் அருகே இருக்கக் கூடாது. அவ்வாறு கேட்ட சூத்திரன் காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும்'

*— மனு: 4 — 99.*

'பிராமணர்களை அவமானம் செய்யக் கூடாது'

*— மனு: 14 — 135, 136.*

'இரவு நேரங்களில் பிராமணன் சூத்திரனோடு வழி நடக்கக் கூடாது.'

*— மனு: 4 — 140.*

'பிராமணனை அடிக்கக் கைதூக்கினாலே நரகம்'

*— மனு: 4 — 166.*

'பிராமணன் துன்பம் தந்தாலும் அவனை அவமானப்படுத்தக் கூடாது'

*— மனு: 4 — 236 237.*

எவனும் தன் குலத்தை மறைக்கக்கூடாது.

*— மனு: 4 — 255.*

'பிராமணன் தன் தாய், தந்தை, குரு இவர்களின் பசிக்காக எந்த உயிரையும் கொல்லலாம்'

*— மனு: 5 — 22, 23, 27.*

— இவ்விடத்தில்,

'ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை' — 656.

- என்னும் திருக்குறள் கூறும் தமிழறத்தை ஓர்க.

'பிராமணன் உணவுக்காகவே எல்லா உயிர்களும் பிரமனால் படைக்கப்பட்டன'

*— மனு: 5 — 29 முதல் 32 வரை, 35–37.*

'பிராமணனைக் காப்பாற்றப் பொய் சொல்லலாம்'

*— மனு: 8 — 112.*

'சூத்திரன் பிராமணனைத் திட்டினால் அவனது நாக்கை அறுக்க வேண்டும்'

*— மனு: 8 — 270.*

'சூத்திரன் பிராமணர்களின் பெயர் சாதி முதலியவற்றைச் சொல்லித் திட்டினால், பத்து அங்குலமுள்ள இரும்புத் தடியைக் காய்ச்சி எரிய எரிய

*அவன் வாயில் வைக்க வேண்டும்.'*

*— மனு: 8 — 271.*

*'பிராமணர்களைப் போல் அடையாளங்கள் இட்டுக் கொள்பவனை, அரசன் உறுப்புகளை (அவயங்களை) வாங்க வேண்டும்'*

*— மனு: 9 — 224.*

*'தன் சாதித் தொழிலை விட்டு வேறு சாதித் தொழில் செய்பவனை அரசன் ஊரைவிட்டு ஓட்ட வேண்டியது'*

*— மனு: 9 — 225.*

*'மதம் காரணமாகப் பிராமணனைத் துன்புறுத்தக் கூடாது. அவ்வாறு துன்புறுத்தின சூத்திரனைப் பயங்கரமாகச் சித்திரவதை செய்து கொல்ல வேண்டியது'*

*— மனு: 9 — 248.*

*'பிராமணர்களைப் பகைத்துக் கொண்டால் நாடே அழியும்; அரசனும் அழிவான்'*

*— மனு: 9 — 314, 316.*

*'பிராமணன் அறிஞனாயிருந்தாலும் மூடனாயிருந்தாலும் அவனே மேலான தெய்வம்'*

*— மனு: 9 — 317, 319.*

*'பிராமணனுக்குத் தொண்டு செய்வதே சூத்திரனுக்கு மோட்சம்'*

*— மனு: 9 — 334.*

*'சூத்திரன், பிராமணன் இல்லாதபொழுது க்ஷத்திரியனுக்கும், அவனில்லாவிடில் வைசியனுக்கும் பணிவிடை செய்க'*

*— மனு: 9 — 335.*

*'தாழ்த்தப்பட்ட ஈன சாதிகள் பிணத்தின் துணிகளைத்தான் உடுக்க வேண்டும்; எச்சில் உணவைத்தான் சாப்பிட வேண்டும்'*

*— மனு: 10 — 35.*

*'அவர்கள் (தாழ்த்தப்பட்ட ஈனசாதிகள்) ஊருக்கு வெளியில் தான் குடியிருக்க வேண்டும்'*

*— மனு: 10 — 36.*

*'தாழ்த்தப்பட்ட ஈனஜாதிகள், சண்டாளர்கள் ஆகியவர்கள் செய்ய வேண்டிய தொழில்கள்:*

தஷ்யூக்கள் (தாஸர்கள்) எண்ணெய் தேய்த்துவிடுதல், கைகால் பிடித்தல்.

'குரும்பாண்டிகள் – மணியடித்தல், பிச்சையெடுத்து உண்ணுதல்.
செம்படவர்கள் படகு ஓட்டுதல், மீன் பிடித்தல்.
காருவாரன் (சக்கிலியர்) தோல் தொழில் செய்தல்.
பாண்டு சோபாகன் மூங்கில் வேலை செய்தல்.
ஆகிண்டிகன் அடியாட்களாக இருத்தல், கொலை முதலியவற்றைச் செய்தல்; ஊர் காவல் செய்தல்.

சோபாகர் கொலை செய்தல்.

சண்டாளன் சுடுகாட்டைக் காவல் காப்பது.

– மனு: 10 – 37முதல் 42 வரை.

'பிராமணர்களிடத்தில் வணங்காமையாலும், உபநயனம் (பூணூல் அணிதல்) முதலிய செய்து கொள்ளாமையாலும் க்ஷத்திரியர் சூத்திரர்களாகிறார்கள்.'

– மனு: 10 – 43.

'சூத்திரர்கள் இருக்கின்ற தேசங்கள்; பௌண்டரம், ஔண்டரம், த்ரவிடம், காம்போசம், யவனம், பாரதம், பால்ஹீகம், சீனம், கிராதம், தரதம், கசம் ஆகியவை. **இங்குள்ளவர்கள் பிராமணர்களுக்கு அடங்காமையினாலேயே சூத்திரர்களாகிப் போனார்கள்.**

– மனு: 10 – 44.

**'ஸம்ஸ்கிருதமே** உயர்ந்த பாஷை. சூத்திரர்கள் அனைவர் பேசுவதும் **மிலேச்ச பாஷையே.** மிலேச்ச பாஷையைப் பேசுகிறவர்கள் அனைவரும் **தஸ்யூக்கள்.** (தஸ்யூக்கள் - – திருடர்கள்)'

– மனு: 10 – 45.

'தஸ்யூக்கள் எனப்படுபவர்களும் அவர்கள் செய்யும் தொழில்களும்:

**சூதன்** – தேரோட்டுதல்; **அம்பட்டன்** – இரணவைத்தியம்; **வைதேகன்** - அந்தப்புரக் காவல்; **மாகதன்** - கடல் வாணிகம்; **நிஷாதன்** – மீன்பிடித்தல்; **அயோகவன்** – தச்சுவேலை; **மேதன், ஆந்திரன், சஞ்சு** – வேட்டையாடுதல்; **க்ஷத்தா, உக்கிரன், புல்க்கசன்** – உடும்பு, எலி பிடிக்கிறவன்; **திக்குவணன்** தோல் தொழில் செய்தல்; **வேணன்** – தாளம் முதலிய வாத்தியம் வாசித்தல் இவர்கள் அனைவரும் பட்டணத்துக்கும் ஊருக்கும் வெளியில் மரத்தடி, தோப்பு, மயானம் (சுடுகாடு) மலைக்காடு ஆகிய

இவ்விடங்களில்தான் வாழவேண்டும்.'

'இவர்களுக்கு உலோகப் பாத்திரம் கூடாது. இவர்கள் நாயும், கழுதையுந்தாம் வளர்க்க வேண்டும். பசுக்களை வைத்துக் கொள்ளக் கூடாது.'

'அவர்கள் பிணத்தின் துணிகளையே உடுக்க வேண்டும். உடைந்த சட்டிகளில்தான் உண்ண வேண்டும். இரும்பு, பித்தளை நகைகளையே அணிய வேண்டும். அவர்கள் தொழிலுக்காகத் திரிந்து அலைய வேண்டும்.'

'அவர்களோடு பேசவும், அவர்களைப் பார்க்கவும் கூடாது. அவர்கள் தங்கள் தங்கள் சாதிகளில்தாம் சம்பந்தம் கொள்ள வேண்டும்.'

'இவர்களுக்கு நேரே அன்னம் (சோறு) போடக் கூடாது. வேலையாட்கள் வழியாகத்தான் போட வேண்டும். அதுவும் பாத்திரங்களாலேயே போட வேண்டும். இரவில் அவர்கள் ஊருக்குள் வரக்கூடாது.'

- மனு : 10-54

'அவர்கள் அடையாளத்தோடுதான் சஞ்சரிக்க வேண்டும்; அநாதைப் பிணங்களை அவர்களே எடுக்கவேண்டும்'

'அரசன் கொலை செய்யச் சொல்லுகிறவர்களை அவர்கள் கொல்ல வேண்டும். கொலை செய்யப்பட்டவர்களின் துணிகள், நகைகள், படுக்கை இவற்றை எடுத்துக்கொள்ளலாம்'

மனு : 10-55

'அவர்கள் நல்ல உடை உடுத்தாலும் செய்யும் தொழிலால் அவர்களை ஈனர்கள் (இழிந்தவர்கள்) என்று அறிதல் வேண்டும்.'

மனு : 10-56

'குறும்பும், இழிமொழியும், கொடுமை, துன்புறுத்துவது, இழிதொழில், நல்லொழுக்கமின்மை – இவையும் ஈனனைக் காட்டும்.'

மனு : 10-57

'ஈனன் தன் பிறப்பை மறைக்கக் கூடாது. தாய் தொழிலையோ, தந்தை தொழிலையோ தான் இவர்கள் செய்ய வேண்டும்.'

மனு : 10-58

ஈனன் தன் பிறப்பை மறைக்கக்கூடாது. தாய் தொழிலையே தகப்பன் தொழிலையோதாம் இவர்கள் செய்ய வேண்டும்.

– மனு: 10 – 59

'இவர்கள் மிகுதியாகப் பிறந்து வளர்கிற நாடு விரைவில் அழியும்'

— மனு: 10 — 61.

— இவ்விடத்தில்,

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்' — 972.

— என்னும் திருக்குறளை ஓர்க.

'பிராமணன், பசு, பெண், குழந்தைகள் - இவர்களைக் காப்பதற்காக யார் உயிரை விடுகிறார்களோ, அவர்கள் சொர்க்கத்துக்குப் போகிறார்கள்'

— மனு: 10 — 62.

'பிராமணன் தொழிலைச் செய்தாலும் சூத்திரன் பிராமண சாதியாக மாட்டான். பிராமணன் சூத்திரத் தொழிலைச் செய்தாலும் சூத்திரனாகமாட்டான்'

— மனு: 10 — 73.

'சூத்திரன் பொருள் சம்பாதித்தால் அது அவனுடைய எஜமானாகிய பிராமணனுக்குச் சேரவேண்டுமேயன்றிச் சம்பாதிப்பவனுக்குச் சேரலாகாது'

— மனு: 9 — 416.

'வைசியன் தன் தொழிலால் பிழைக்க இயலாதபொழுது சூத்திரனது தொழிலைச் செய்தே வாழவேண்டும்'

— மனு: 10 — 98.

'பிராமணன் துன்பப்படுகையில் இழிசாதியாரிடத்திலும் தானம் வாங்கலாம்'

'வறுமையில் பிராமணன் தகாதவர்களுக்கும் அறுதொழில் செய்து பிழைக்கலாம்'

'பிராமணன் உயிர்போகும் காலத்தில் எந்த இழிசாதியாரிடத்திலும் சோறு வாங்கி உண்ணலாம்; அது பாவமாகாது.'

'பிராமணர்கள் அவ்வாறு செய்தமைக்கு எடுத்துக் காட்டுகள் உண்டு. அஜீகர்த்தன் என்னும் முனிவன் 100 பசுக்களுக்குத் தன் மகனை விற்று வாழ்ந்தான்'

'வாசுதேவன் என்னும் முனிவன் உயிர்போகும் காலத்தில் நாய்க்கறியை உண்டு பிழைத்தான்'

'பரத்துவாசன் என்னும் முனிவன் தச்சனிடம் பசுவைத் தானமாக வாங்கிப் பிழைத்தான்'

'விசுவாமித்திரன் ஒரு சமயம் நாய்க்கறியை உண்டான்'

'பிராமணன் உயிர்வாழ வேண்டி நரக காரியங்களைக் கூட செய்யலாம்'

— மனு: 10 — 102 முதல் 109 வரை

'ஆனால், பிராமணன் கீழான சூத்திரர்களிடத்தில் தானம் வாங்கிப் பிழைப்பதைவிட, வயல்களில் சிந்தின நெல்லைப் பொறுக்கித் தின்று உயிர்வாழலாம்'

— மனு: 10 — 112.

'சூத்திரன் பிராமணனையே தொழுது வாழவேண்டும்'

— மனு: 10— 113.

'பிராமணன் சாரமில்லாத பொருள்களைச் சூத்திரனுக்குத் தானமாகக் கொடுக்கலாம்' பிராமணன் உண்டு மிகுந்த 'எச்சில் ஆகாரத்தை'யும், உடுத்திக் கிழந்த கந்தல் ஆடையையும், கெட்டுப் போன தானியங்களையுமே சூத்திரனுடைய வாழ்க்கைக்குக் கொடுக்க வேண்டும்'

— மனு: 10 — 125.

'சூத்திரன் இப்பிறவியில் பிற சாதியாரைத் தூஷிக்காமல் இருந்தால் தான் மறுபிறவியில் நற்கதி அடைகிறான்'

'சூத்திரன் எவ்வளவு திறமை உடையவனாக இருந்தாலும் மிகு பொருள் சம்பாதித்தாலும், கண்டிப்பாக அவனைத் தன் குடும்பத்திற்குத் தேவையானதைவிட மிகுதியான பொருள் சேர்க்க விடக் கூடாது. அவ்வாறு அவனைப் பொருள் சேர்க்க விட்டால், அப்பொழுது பிராமணனை மதிக்க மாட்டான்; அது பிராமணனுக்கு ஆபத்தாய் முடியும்'

மனு: 10 - — 128, 129.

'பிராமணர்களுக்குப் பசு, நிலம், பொன் இவற்றைத்தானம் செய்தவர்கள் சுவர்க்கம் புகுவர்'

மனு: 11 6.

'மிகுதியான செல்வமும் பசுக்களும் வைத்து இருக்கிறவனிடம் பிராமணன் கேட்டும் கொடுக்காவிட்டால், களவு செய்தாவது, பலாத்காரம் செய்தாவது அவற்றைப் பிராமணன் எடுத்துக் கொள்ள உரிமையுண்டு'

'யாகத்திற்கு வைசியனுக்குப் பொருள் இல்லாவிடில் சூத்திரர்களின் வீட்டிலிருந்து கேட்டோ கேளாமலோ எடுத்துக் கொள்ள வேண்டியது'

மனு: 11 - — 12, 13.

'சத்திரியனோ பிராமணன் பொருளை இவ்வாறு எடுக்கக் கூடாது.'

மனு: 11 - — 18.

'யாகம் செய்பவன் பொருள்கள் தேவதையின் பொருள்கள். யாகம் செய்யாதவன் பொருள்கள் அசுரர்களின் பொருள்கள். ஆகையால் அசுரர்

பொருள்களைத் தேவதைகளின் பொருள்களாக்குவது தர்மமே'

மனு: 11 - — 20.

- இவ்விடத்தில் கீழ்வரும் திருக்குறள் (தமிழியல்) கருத்துகளை ஓர்ந்து உண்மை உணர்க.

'நல்லாறு எனினும் கொளல்தீது; மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று' - — 222.

'ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்' - — 225.

'உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்' - — 282.

'களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்' - — 283.

'தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று' - — 274.

'இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்' - — 174.

'அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்' - — 176.

'இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து' - — 205.

இனி, மேலும், ஆரியவியலின் பிராமண ஏற்றங் கூறும் வர்ணாச்சிரமக் கருத்துகளைப் பாருங்கள்.

'பிராமணனே தர்மத்திற்கு அடிநிலை ஆவான்'

'பிராமணர்கள் தேவர்களைவிட உயர்ந்தவர்கள்.

எனவே அவர்களும் பூஜிக்கத் தக்கவர்களே'

மனு: 11 - — 83, 84, 85.

'யக்ஜம் (வேள்வி) செய்பவனே 'யஜ்மான்' அவன் மனைவியே பத்நி.'

மனு: 3 - — 178, 179.

இனி, **அறவியல்** (நீதி நெறி, தர்மவியல்) கோட்பாடுகளில் எவ்வாறு தமிழியலுக்கு ஆரியவியல் மாறுபட்டுள்ளது என்பதைப் பார்ப்போம்.

*'மனுவால் எந்த வர்ணத்தார்க்கு என்ன தர்மம் விதிக்கப்பட்டதோ அதுவே வேத சம்மதமாகும். ஏனெனில் அவர் வேதமுணர்ந்த பிர்ம்ம ஞானி'*

*மனு: 2 7.*

*'எவனொருவன் இந்த மனுசாஸ்த்திரத்தைத் தர்க்க ரீதியான யுக்தியினால் ஆட்சேபிக்கிறானோ, அவனை ஊரைவிட்டுத் துரத்திவிட வேண்டும். ஏனென்றால் அவன் வேத நிந்தகனான நாஸ்திகன் ஆவான்'*

*மனு: 2 10.*

*'வேதத்தில் சொல்லப்பட்டவைதாம் தர்மம்; வேதத்தில் மாறுபடச் சொல்லியிருந்தாலும் அது தர்மமே!*

*மனு: 2 13, 14.*

*'பிராமணனிடம் அரசன் தீர்வை பெறக்கூடாது. அவன் பசியினால் துன்பப்படும்படி வைக்கக் கூடாது; பிராமணன் துன்பப்படும் நாடு அழியும்; தந்தை தன் பிள்ளைகளைக் காப்பது போல் அரசன் பிராமணர்களைக் காக்க வேண்டும். அரசன் பிராமணர்களுக்கு உதவினால் நாடு விருத்தியடையும்'*

*மனு: 7 133- —136*

*'வழக்குகளை விசாரிக்கத் தனக்கு அடுத்தபடி பிராமணனையே அரசன் அமர்த்த வேண்டும். பிராமணர்கள் இல்லாததை நீதிசபை எனலாகாது. சூத்திரன் ஒருபோதும் வழக்கை விசாரிக்கக் கூடாது.'*

*மனு: 8 9, 10, 11, 17,*

*'பிராமண குலத்தில் பிறந்தவன் கர்மானுஷ்டானம் இல்லாதவனாயினும், ஒழுக்கம் கெட்டவனாயினும் அரசனைப் போலவே தீர்மானம் செய்யலாம். (அஃதாவது ஆட்சி செய்யலாம். பிறரைத் தண்டிக்கலாம்.) சூத்திரன் ஒரு போதும் அப்படிச் செய்யலாகாது.'*

*மனு: 8 20.*

*'பிராமணன் சூத்திரன் தேடிய பொருளைச் சந்தேகமில்லாமல் கொள்ளையிடலாம்'*

*மனு: 2 417.*

*'பிராமணன் பொருளை அபகரித்த சூத்திரனைச் சித்திரவதை செய்து கொல்லவேண்டும். ஆனால் பிராமணன் சூத்திரனுடைய பொருளைத் தன்*

இஷ்டப்படி கொள்ளையிடலாம்.'

மனு: 9 248.

'தரும சிந்தனையுள்ள அரசன் இங்ஙனம் திருடிக் கொள்ளையிட்டு யாகம் செய்கிற பிராமணர்களைத் தண்டிக்கக் கூடாது'

மனு: 11 21.

'பிராமணன் எத்தகைய கொடிய குற்றங்களைச் செய்தாலும், கொலை செய்தாலும் கொலைத்தண்டம் விதிக்கலாகாது. கொலைத் தண்டனைக்குப் பதில் அவன் தலையை மொட்டை அடித்தாலே போதுமானது.'

மனு: 7 26.

'அரசன் தண்டிக்காது விட்டால், தாழ்ந்த சாதியான் உயர்ந்து விடுவான்'

மனு: 7 21.

'பிராமணர்கள் சொல்லுகிறபடிதான் அரசன் நீதி செலுத்த வேண்டும்'

மனு: 7 37, 38.

'பிராமணனை அரசன் நம்ப வேண்டும்'

மனு: 7 58, 59.

'அரசன் பிராமணர்களைத் தனக்குத் துணையாக வைத்துக் கொள்ள வேண்டும்'

மனு: 7 78, 79.

'அரசன் பிராமணர்களுக்கு நிறைய பொருள் தரவேண்டும்.'

மனு: 7 82 84.

'அரசன் பிராமணனைப் பூஜிக்க வேண்டும்'

மனு: 7 88.

'பிராமணன் புதையல் எடுத்தால் அவனுக்கே கொடுத்து விடவேண்டும்'

மனு: 8 37, 39.

'அரசன் புதையல் கண்டால் பாதியைப் பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டும்'

மனு: 8 38.

'அரசன் சாதி தர்மத்தைக் கொண்டே நீதி வழங்க வேண்டும்'

மனு: 8 41, 46.

*'பறையன் சாட்சியை அரசன் ஏற்றுக்கொள்ளக்கூடாது'*

*மனு: 8 66.*

*'பிராமணன் பால்காரன், வணிகன், மிட்டாய் விற்கிறவன், சிற்பி, பாடகன், ஏவலன் - — ஆகிய இவர்களுள் ஒருவனாக இருந்தால்அவனைச் சூத்திரனாக மதிக்க வேண்டும்'*

*மனு: 8 102.*

*'பிராமணர்களைக் காப்பாற்றப் பொய் சொல்லலாம் அதற்காகப் பிராமணரல்லாதவனைக் கொன்றாலும் பாவமில்லை.'*

*மனு: 8 112, 143.*

*'பிராமணனைத் தவிரப் பிற மூன்று வர்ணத்தார்க்கும் தண்டனை தப்பாமல் கொடுக்கவேண்டும்'*

*மனு: 8 124.*

*'பிராமணனைத் திட்டினால் மற்ற மூன்று வர்ணத்தார்க்கும் அரசன் கட்டாயம் தண்டனை கொடுக்கவேண்டும்'*

*மனு: 267, 268, 270 272, 276.*

*'பிராமணனைக் கொடுமை செய்தவனுக்கும் கட்டாயம் பலவாறான தண்டனைகள் கொடுக்கப்பட வேண்டும்'*

*மனு: 8 279, 281 283, 314 316.*

*'பிராமணன் பசுக்களை அபகரித்தவனுக்குக் காலை வெட்ட வேண்டும்'*

*மனு: 8 328.*

*'பிராமணனைக் காப்பாற்ற ஒருவனைக் கொலை செய்தவனுக்கு அரசன் தண்டனை கொடுக்கக் கூடாது'*

*மனு: 8 349.*

*'சூத்திரன் மற்ற மூன்று வர்ணத்தாருடைய மனைவியரைப் புணர்ந்தால் அவனை உயிர் போகும் வரை தண்டிக்க வேண்டும்'*

*மனு: 8 359.*

*'கட்டுக் கடங்காமல் இஷ்டப்படி திரியும் பிராமணப் பெண்களைச் சூத்திரன் புணர்ந்தால் அவன் ஆண்குறியை அறுக்க வேண்டும். ஒருவனின் கட்டுக்குட்பட்ட பெண்களைப் புணர்ந்தால் அவனைத் துண்டு துண்டாய் வெட்டி அவன் பொருளையெல்லாம் கொள்ளையிட வேண்டும்'*

*'பறையன் சாட்சியை அரசன் ஏற்றுக்கொள்ளக்கூடாது'*

*மனு: 8 66.*

*'பிராமணன் பால்காரன், வணிகன், மிட்டாய் விற்கிறவன், சிற்பி, பாடகன், ஏவலன் - — ஆகிய இவர்களுள் ஒருவனாக இருந்தால்அவனைச் சூத்திரனாக மதிக்க வேண்டும்'*

*மனு: 8 102.*

*'பிராமணர்களைக் காப்பாற்றப் பொய் சொல்லலாம் அதற்காகப் பிராமணரல்லாதவனைக் கொன்றாலும் பாவமில்லை.'*

*மனு: 8 112, 143.*

*'பிராமணனைத் தவிரப் பிற மூன்று வர்ணத்தார்க்கும் தண்டனை தப்பாமல் கொடுக்கவேண்டும்'*

*மனு: 8 124.*

*'பிராமணனைத் திட்டினால் மற்ற மூன்று வர்ணத்தார்க்கும் அரசன் கட்டாயம் தண்டனை கொடுக்கவேண்டும்'*

*மனு: 267, 268, 270 272, 276.*

*'பிராமணனைக் கொடுமை செய்தவனுக்கும் கட்டாயம் பலவாறான தண்டனைகள் கொடுக்கப்பட வேண்டும்'*

*மனு: 8 279, 281 283, 314 316.*

*'பிராமணன் பசுக்களை அபகரித்தவனுக்குக் காலை வெட்ட வேண்டும்'*

*மனு: 8 328.*

*'பிராமணனைக் காப்பாற்ற ஒருவனைக் கொலை செய்தவனுக்கு அரசன் தண்டனை கொடுக்கக் கூடாது'*

*மனு: 8 349.*

*'சூத்திரன் மற்ற மூன்று வர்ணத்தாருடைய மனைவியரைப் புணர்ந்தால் அவனை உயிர் போகும் வரை தண்டிக்க வேண்டும்'*

*மனு: 8 359.*

*'கட்டுக் கடங்காமல் இஷ்டப்படி திரியும் பிராமணப் பெண்களைச் சூத்திரன் புணர்ந்தால் அவன் ஆண்குறியை அறுக்க வேண்டும். ஒருவனின் கட்டுக்குட்பட்ட பெண்களைப் புணர்ந்தால் அவனைத் துண்டு துண்டாய் வெட்டி அவன் பொருளையெல்லாம் கொள்ளையிட வேண்டும்'*

மனு: 8 374.

'பிராமணன் எத்தகைய கொடிய குற்றங்களைச் செய்தாலும் அவனுக்குத் தூக்குத் தண்டனை ஏற்பட்டால் அவனைத் தூக்கில் இடக் கூடாது. அவன் தலையை மொட்டை யடித்தல் வேண்டும். அதுவே அவனுக்குத் தூக்குத் தண்டனைக்கு ஒப்பாம். மற்ற வர்ணத்தார்க்குக் கொலையே தண்டனை'

மனு: 8 379.

'கொடிய குற்றம் செய்தவனாயினும் பிராமணனைக் கொல்லாமலும், வேறு எத்தகைய துன்பமும் செய்யாமலும் பொருளைக் கொடுத்து அவனை அயலூருக்கு அனுப்பிவிட வேண்டும். எத்தகைய குற்றம் செய்தாலும் பிராமணனைக் கொல்ல அரசன் நினைக்கலாகாது'

மனு: 8 380, 381.

'பிராமணன் கூலி கொடுத்தோ, கொடாமலோ சூத்திரனிடம் வேலை வாங்கிக்கொள்ளலாம். ஏனெனில் பிராம்மணனுக்குத் தொண்டு செய்யவே சூத்திரன் பிரமனால் படைக்கப்பட்டிருக்கிறான்'

மனு: 8 413.

'பிரமாணம் கேட்கும் போது, பிராமணனைச் 'சத்தியமாகச் சொல்' என்று சொல்லிக் கேட்க வேண்டும். சூத்திரனை நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய மழுவைக் கையில் பிடித்துக்கொண்டு பிரமாணம் செய்யச் சொல்லவேண்டும். அல்லது அவனைத் தண்ணீரில் அமுத்த வேண்டும். அவன் மனைவி, பிள்ளைகளின் தலைகளில் ஓங்கி அடித்தும் பிரமாணம் சொல்லும்படி செய்யவேண்டும்.

மழு எடுத்த சூத்திரன் கை வேகாமலும், தண்ணீரில் அமுத்தப்பட்ட சூத்திரன் சாகாமலும், அவன் அடித்ததால் மனைவி, மக்கள் தலையில் வலி தோன்றாமலும் இருந்தால்தான் அவன் சொல்லும் பிரமாணம் சத்தியம் என்று கொள்ள -வேண்டும்.

மனு:8 113, 114, 115.

'பிராமணன் எல்லாப் பாவங்களையும் செய்தாலும் அவனை ஒன்றும் செய்யாமல் ஊரைவிட்டுத் துரத்தி விடவும்'

மனு: 8 380.

'பிராமணனைக் கொல்லும் பாவத்தைப் போல் கொடியது உலகில் வேறொன்றுமில்லை'

மனு: 8 381.

'அரசன் மனுவில் கூறப்பட்டுள்ள தண்டனையை மாற்றக் கூடாது'

மனு: 9 233.

'அரசன் குற்றத் தண்டனைப் பொருள்களை எடுத்துக்கொள்ளக் கூடாது. தண்ணீரில் போட்டுவிட வேண்டும். அல்லது பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டும்'

*மனு: 9 244,225,246.*

'பிராமணன் தன் தொழிலைச் செய்ய முடியாத பொழுது க்ஷத்திரியன் தொழில் மேற்கொண்டு உலகை ஆளுதல் வேண்டும்'

'பிராமணன் தன்தொழில், க்ஷத்திரியன் தொழில் இரண்டாலும் வாழமுடியாத பொழுது வைசியன் தொழிலாகிய வியாபாரத்தில் ஈடுபடலாம்'

*மனு: 10 81, 82.*

'பிராமணனுக்கு வேதம் ஓதலே தவம்; க்ஷத்திரியனுக்கு இந்நூலில் சொன்னபடி ஆட்சி செய்தலே தவம். வைசியனுக்கு வர்த்தகம் செய்தலே தவம்; சூத்திரனுக்குப் பிராமணனுக்குப் பணிவிடை செய்தலே தவம் ஆகும்'

*மனு: 11 235.*

'மனுவில் சொல்லும் கருமங்களில் தவறிய அரசன் மலம், பிணம் இவற்றைத் தின்னும் கடபூதம் என்னும் பேயாகப் பிறப்பான், மேற்சொன்ன வேத ஸ்மிருதிகளுக்கு அடங்காமல் விரோதமாக நடக்கும் சூத்திரன் சீலைப்பேனைத் தின்னும் பேயாகப் பிறப்பான்'

*மனு: 12 71, 72.*

'பிராமணர் இந்த மனு ஸ்மிருதியைப் படிக்கலாம்; மற்ற வருணத்தார்க்கு ஓதுவிக்கக் கூடாது' *மனு: 1 – 103.*

'படைத்தளபதி, அரசாளுகை, நியாயம், உலகாளுமை, இவையெல்லாவற்றுக்கும் வேதமறிந்தவனே தக்கவனாவான்'

'வேதத்தை யறிந்தவனே பாவத்தைப் போக்க வல்லவன்'

'வேதத்தை யறிந்தவன் எந்த ஆச்சாரிய ஒழுக்கமுள்ளவனாக இருந்தாலும், அவனே இம்மைக்கு அதிகாரி'

'வேதத்தை யறிந்தவனே எல்லாரினும் உயர்ந்தவன்'

*– மனு: 12 100 முதல் 103 வரை*

'இதில் (மனுஸ்மிருதியில்) எல்லா தர்மமும் சொல்லப்படவில்லை. சொல்லப்பட்டவையும் கால, இடவேறுபாட்டால் சந்தேகத்திற் கிடமுள்ளவையானால், அது தொடர்பாக, வேதமறிந்த பிராமணர்கள் எந்தத் தர்மத்தை ஏற்படுத்துவார்களோ, அதுவே நிச்சயமான தர்மமாகும்'

மனு: 12 108.

'வேதங்களை மறக்கக் கூடாது; பரிக்ஷத் (அறிஞர்கள்) அவைக்கு அவையே இலக்கணம். வேத மறிந்த பிராமணன் சொல்வதே தர்மம். வேதமறியாத பத்தாயிரம் பேர் கூடிச் சொன்னாலும் அது தர்மம் ஆகாது'

மனு: 12 110 114.

'மனு முதலிய தர்மங்களில் சொல்லப்பட்டவற்றைப் பிசகாமல் பின் பற்றுபவர்களே சுவர்க்கம் அடைகிறார்கள்.

மனு: 12 116.

இவ்விடங்களில், 'மனோன்மணியத்'துள் கூறப்பெற்ற 'மனுவாதி ஒருகுலத்துக்(கு) ஒரு நீதி' என்பது நன்கு புலப்படுகின்ற தன்றோ?

(மனுஸ்மிருதியோடு வைத்து எண்ணத்தக்க ஸ்மிருதிகளைச் செய்தவர்கள்: பவுத்தயாயினர், நாரதர், பிரகஸ்பதி, விஷ்ணு, ஆபஸ்தம்பர், இரண்யகேசின், கோபிலா, அவர்மகன் உசானன், யக்ஞவல்கியர், ஔரிதர், அத்ரி, காத்தியாயினர், ஆங்கிரசர், யமன், ஸம்வர்த்தர், பராசரர், வியாஸர், சங்கலிதர், தக்கர், கௌதமர், சாதான்மர், வாஸிஷ்டர் முதலியோர் ஆவர்.)

இனி, இங்குக் காட்டப் பெற்ற ஆரிய தர்ம வர்ணாச்சிரம நெறிகளுக்கு மாறாகவே, திருக்குறளில் தமிழியல் அறக் கோட்பாடுகள், சாதி, மத வேறுபாடுகளுக்கு உட்படாமல் பொதுவிலும், நடுநிலை தவறாமலும் கூறப் பெற்றுள்ளமைக்குச் சில சான்றான கருத்துகளைக் காண்க.

'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்(கு) அணி' - — 118.

'வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடாது எனின்' - — 546.

இங்கு, அறநெறிக்கு அடையாளமாகத் துலை (துராசு)க் கருவி காட்டப் பெற்றுள்ளது. இவ் வடையாள இலச்சினை (Symbol, Sign) முதன் முதலில் காட்டப்பெற்றது திருவள்ளுவராலேயே என்று உணர்தல் வேண்டும். இக்குறியே இன்று வரை அறமன்றங்களில் காட்டப் பெறுவதையும் அறிக. அறநெறி (நீதி)க்கு இதைவிட வேறு இணையான அடையாளப் பொருள் இல்லை என்று அறிதல் வேண்டும்.

இனி, மேலும் திருவள்ளுவர் காட்டும் அறம் வழங்கு கருத்துகளையும் காண்க.

'கெடுவல்யான் என்பது அறிக,தன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின்' 116.

**'ஒத்த தறிவான்** உயிர் வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்' - — 214.

**'ஒப்புரவி** னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க(து) உடைத்து' - — 220.

**'முறைசெய்து** காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்' - — 388.

**'குணம்நாடிக் குற்றமும் நாடி** அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்' - — 504.

**'நன்மையும் தீமையும்** நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்' - — 511.

**'ஓர்ந்துகண் ணோடாது** இறைபுரிந்து யார்மட்டும்
**தேர்ந்துசெய் வஃதே** முறை' - — 541.

'வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
**கோல்நோக்கி** வாழும் குடி' - — 542.

'எண்பதத்தான் **ஓரா முறைசெய்யா** மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்' - — 548.

'குடிபுறம் **காத்தோம்பிக்** குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்' - — 549.

'கூழும் குடியும் ஒருங்கிழக்கும் **கோல் கோடிச்**
**சூழாது** செய்யும் அரசு' - — 554.

'மன்னர்க்கு மன்னுதல் **செங்கோன்மை** அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க்(கு) ஒளி' - — 556.

**'தக்காங்கு நாடித்** தலைச் செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து' - — 561.

**'இளையர் இனமுறையர் என்றிகழார்** நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்' - — 695.

இங்கு, இவற்றுள்ளும் இவை போலும் ஆங்காங்குக் கூறப்பெறும் பிறவற்றுள்ளும், அரசன் குடிமக்களிடம் எவ்வாறு நடுநிலையுடனும், சமநிலை ஒத்த உணர்வுடனும், முறையாகவும், குணம் குற்றம் இரண்டையும்

நாடிடும் நோக்குடனும், நன்மை தீமை இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்கும் திறத்துடனும், ஒருவர்க்கு ஏற்றமும் மற்றவர்க்குத் தாழ்ச்சியும் வராத எச்சரிக்கையுடனும், ஆராயும் அறிவுடனும், ஒருபுறம் கோடாத செங்கோன்மையுடனும், நல்ல குடிகளைக் காக்கவும் அல்லகுடிகளைத் தண்டிக்கவும் ஆன உரத்துடனும், கொடுங்கோன்மை தவிர்த்தும், நேர்மை அறத்துடனும் ஒவ்வொரு நிலையிலும் தவறு நேர்ந்துவிடாத செம்மை அறத்துடனும், சிறியவர் பெரியவர், இவ்வினத்தைச் சார்ந்தவர் அவ்வினத்தைச் சார்ந்தவர் என்று எண்ணாத சாதி, மத நோக்கற்றவனாகவும், அறிவு நிலையை மட்டும் பார்க்கின்ற மேலான உணர்வுடனும் நடந்து அறத்தை (நீதியை)க் காத்தல் வேண்டும் என்று கூறப் பெற்றுள்ளன என்பதை அறிவினார் கண்டுகொள்ளல் வேண்டும்.

இவ்வாறு **அரசியல், சட்டம், தண்டனை** என்னும் ஆளுமை நெறிகள் அனைத்திலுமே, திருவள்ளுவர் கூறுகிறன்ற தமிழியல் நெறிகள் அற்றைத் தமிழகத்தில் வழிவழியாக இருந்து வந்த அறமுறைகளே யன்றி, அக்கால் இடைநுழைந்த ஆரியவியல் கொடுநெறிகளோ, வர்ணாச்சிரமத் தர்மவியல் கோட்பாடுகளோ அல்ல என்பதைத் தமிழினத்தினார் உறுதியாக அறிந்துகொள்க. அவ்வுண்மையைக் கீழ்வரும் கழக இல்கியச் சான்றுகள் சிலவற்றாலும் உறுதி செய்துகொள்க. இடமஞ்சி விரிவாகத் தரப்பெறவில்லை.

'உவவுமதி உருவின் ஓங்கல் **வெண்குடை**
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் **நிழற்ற**
ஏம முரசு இழுமென முழங்க
நேமி உய்த்த நேய நெஞ்சின்
தவிரா ஈகைக் **கவுரியர்**' (பாண்டியர்)

— புறம்: 3:1 — 5.

'**அறத்தாறு** நுவலும் பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு **நிழற்றும்**
எம்கோ'

— புறம்: 9:6 — 8.

'நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி'

— புறம்: 10: 3 — 4.

'தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலாவெல்லை
குன்றுமலை காடுநாடு

*ஒன்றுபட்டு வழிமொழியக்*
*கொடிதுகடிந்து* **கோல்நிறுத்திப்**
*படுவதுண்டு பகலாற்றி*
*இனிதுருண்ட சுடர்நேமி*
*முழுதாண்டோர் வழிகாவல்'*

*— புறம்: 17: 1– 8.*

**'வேற்றுமை யில்லா விழுத்திணைப்** *பிறந்து*

*வீற்றிருந்தோர்'*

*— புறம்: 27: 3 – 4.*

*(விழுத்திணை - சிறந்தகுடி; வீற்றிருந்தோர் - அரசாண்டோர்.)*

**'அறம்புரிந்** *தன்ன* **செங்கோல்** *நாட்டத்து*
*முறைவேண்டு பொழுதில் பதன்எளியோர் ஈண்டு*
*உறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே!*
*ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ*
*மாக விசும்பின்* **நடுவுநின்** *றாங்குத்*
*தண்பொர விளங்கும் நின் விண்பொரு* **வியன்குடை'**

*- — புறம்: 35: 14- —19.*

*(கொண்மூ - — மழைமேகம்)*

*'புறவின் அல்லல்* **சொல்லிய** *கறையடி (களைய)*
*யானை வான்மருப்பு எறிந்த வெண்கடைக்*
*கோல் நிறை* **துலாஅம்** *புக்கோன் மருக'*

*- — மனு: 39: 1 — 3.*

*துலாஅம் - — தராசு)*

**'அறநெறி** *முதற்றே அரசின் கொற்றம்*
*அதனால், நமரெனக் கோல் கோடாது*
*பிறரெனக் குணம் கொல்லாது*
*ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்*
*திங்கள் அன்ன தண்பெரும் சாயலும்*
*வானத் தன்ன வண்மையும் மூன்றும்*
*உடையை'*

*— புறம்: 55:- 10 — 16.*

'அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇயர் உலகமோடு'

— புறம்: 56: 22 — 25.

'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது
நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ
இளைய தாயினும் கிளையரா வெறியும்
அடுநரை யுருமிற் பொருநரைப் பொறாஅச்
செருமான் பஞ்சவ ரேறே நீயே
அறந்துஞ்சு உறந்தைப் பொருநனை
நல்ல போலவும் நயவ போலவும்
**தொல்லோர்** சென்ற **நெறிய** போலவும்'

— புறம்: 58: 4-9, 24 - 25.

'ஞாயிறு அனையை நின்பகை வர்க்குத்
திங்கள் அனையை எம்ம னோர்க்கே'

— புறம்: 59: 6 — 7.

'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் பிறரும்
**சான்றோர்** சென்ற **நெறியென**
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே'

— புறம்: 134: 1 — 4.

'வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்
ஓடாப் பூட்கை **உரவோர் மருக**'

— புறம்: 139: 5 — 7.

'பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றுஎம் சிறுசெந் நாவே'

— புறம்: 148: 5 — 7.

'புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்'

— புறம்: 182: 5 — 6.

'வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பா லவனும் அவன்கட் படுமே'

— புறம்: 183: 8 — 10.

'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால் யான்உயிர் என்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே'

— புறம்: 186: 1 — 4.

'வெண்குடை நிழற்றிய ஒருமையோர்'

— புறம்: 189: 2.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'

— புறம்: 192: 1,-12 — 13.

'படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்
இன்னா தம்ம வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே'

— புறம்: 194: 5 — 7.

(வேறுபாடுகளையும் ஏற்றத் தாழ்வுகளையும் உடைய இவ்வுலகைப் படைத் தவனாகக் கூறப்பெறும் நான்முகன் (பிரமன்) பண்பில்லாதவன் என்னும் குறிப்பு இங்குக் கவனிக்கத் தக்கது. அத்துடன்

'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்' — 997.

'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்' — 1062.

— ஆகிய இருகுறள்களும்கூட இங்குக் கவனிக்கத் தக்கன.

முதல் குறளில், 'அறிவுள்ளவர் என்பதற்காகவே ஒருவர் மதிக்கப்பெறார்; அவர் மக்கட்குரிய பொதுமைப் பண்பு உள்ளவராகவும் இருத்தல் வேண்டும்' - — என்பதையும்,

அடுத்த குறளில், 'ஏற்றத் தாழ்வுள்ள இவ் வுலகைப் படைத்தவனாகச்

சொல்லப் பெறும் நான்முகன் ஒழிந்து போகட்டும்'- என்னும் குறிப்பையும் உணர்க.)

(– இதே பொருளில் உள்ள கீழ்வரும் நற்றிணைச் செய்யுளடியும் கவனிக்கத் தக்கது)

'ஐதே கம்மஇவ் வுலகுபடைத் தோனே'

— நற்: 240: 1.

(– இப் பாடலடியிலும், உலகைப் படைத்தவனெனக் கருதப் பெறும் நான்முகன் முறையற்ற (நீதியற்ற) செயல் உடையவன் என்னும் குறிப்பு உணரத் தக்கது.)

'சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்
பாடறிந்து ஒழுகும் பண்பினாரே'

— புறம்: 197:-13 — 14.

'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வெளவல்'

— கலி: 133: 8, 13.

– எனும் 'கலித்தொகை'ச் செய்யுளடிகளும் இணைத்து நோக்கத் தக்கன.)

'ஈயென இரத்தல் இழிந்தன்று) அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று) அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று'

— புறம்: 204: 1 — 4.

'முற்றிய திருவின் மூவர் ஆயினும்
**பெட்பின்று** ஈதல் யாம்வேண் டலமே'

— புறம்: 205: 1 — 2.

'**நன்னடை** நல்கல் **வேந்தற்குக்** கடனே'

— புறம்: 312: 4.

'மறம்கெழு சோழர் உறந்தை **அவையத்து**
**அறம்கெட** அறியா தாங்கு'

— நற்: 400: 7 — 8.

'வாழிஆதன் வாழிஅவினி

*அரசு**முறை** செய்க! களவுஇல் லாகுக'*

— ஐங்: 8: 1 — 2.

*'**நன்று**பெரிது சிறக்க! தீதுஇல் லாகுக'*

— ஐங்: 9 — 2.

*'**அறம்புரி செங்கோல் மன்னனின்** தாம்நனி*
*சிறந்தன போலும்'*

— ஐங்: 290: 1 — 2.

*'**அறம்** சாலியரோ1 அறம் சாலியரோ!*
*வறன்உண் டாயினும் அறம் சாலியரோ!'*

— ஐங: 312: 1 — 2.

*'கடலக வரைப்பின்இப் பொழில் முழு தாண்டநின்*
***முன்திணை முதல்வர்** போல நின்றுநீ*
***கெடாஅ நல்லிசை** நிலைஇத்*
*தவாஅளி யரோஇவ் வுலகமோடு உடனே'*

— பதிற்: 14:-19 — 22.

*'கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும்*
*வளம்பல பிறவும் நனந்தலை நன்னாட்டு*
*விழவுஅறுபு அறியா முழவுஇமிழ் மூதூர்*
***கொடிநிழற்** பட்ட பொன்னுடை **நியமத்து***
***சீர்பெறு** கலிமகிழ் இயம்பும் முரசின்*
*வயவர் வேந்தே'*

— பதிற்: 15:- 16 — 21.

*'ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்*
*அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇ*
*கடுங்கால் கொட்கும் நன்பெரும் பரப்பின*
*விசும்புதோய் **வெண்குடை நுவலும்***
*பசும்பூண் மார்ப! பாடினி வேந்தே!*

— பதிற்: 17:- 10 — 14.

*'மன்னுடை ஞாலம் புரவுஎதிர் கொண்ட*
*தண்ணியல் எழிலி தலையாது மாறி*
***மாரி பொய்க்குவ தாயினும்***
*சேரலாதன் பொய்யலன் நசையே!'*

*— பதிற்: 18: 9 — 12.*

*'மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி*
*இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு*
*வெளியன் வேண்மாள் நல்லினி ஈன்றமகன்*
*அமைவரல் அருவி இமையம்விற் பொறித்து*
*இமிழ்கடல் வேலித்* ***தமிழகம் விளங்கத்***
***தன்கோல் நிறீஇத்*** *தகைசால் சிறப்பொடு*
*பேரிசை மரபின்* ***ஆரியர் வணக்கி***
*நயனில் வன்சொல்* ***யவனர்ப் பிணித்து***
*நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ*
*அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு*
*பெருவிறல் மூதூர்த் தந்து, பிறர்க் குதவி*
*அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்தாள்*
*இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதன்'*

*— பதிகம்: பதிற்: 2 ஆம் பத்து.*
*1 — 13.*

*'சினனே, காமம், கழிகண் ணோட்டம்,*
*அச்சம், பொய்ச்சொல், அன்புமிக உடைமை,*
*தெறல் கடுமையொடு, பிறவும், இவ் வுலகத்து*
*அறம்தெரி திகிரிக்கு வழியடை யாகும்.*
***தீதுசேண் இகந்து, நன்றுமிகப் புரிந்து***
*கடலும் வானமும் பலபயம் உதவ*
*பிறர்பிறர் நலியாது, வேற்றுப்பொருள் வெஃகாது*
*மைஇல் அறிவினர் செவ்விதின் நடந்து, தம்*
*அமர்துணை பிரியாது, பாத்துண்டு, மாக்கள்*
*மூத்த யாக்கையொடு பிணிஇன்று கழிய*
*ஊழி உய்த்த உரவோர் உம்பல்!*

*— பதிற்: 22: 1 — 11.*

*'தொல்நிலைச் சிறப்பின் நின்னிழல் வாழ்நர்க்குக்*
***கோடற வைத்த கோடாக் கொள்கையும்***
***நன்றுபெரிது உடையையால்*** *நீயே*
*வெந்திறல் வேந்தேஇவ் வுலகத் தோர்க்கே'*

*— பதிற்: 37:-10 — 14.*

*'உலகத் தோரே பலர்மன் செல்வர்*

**எல்லா ருள்ளும்** நின் நல்லிசை மிகுமே'
— பதிற்: 38: 1 — 2.

'கடவுள் நிலைய கல்ஓங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமயம் ஆக
தென்னம் குமரியொடு ஆயிடை அரசர்
**முரசுடைப் பெருஞ்சமம்** ததைய ஆர்ப்பெழ
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போர்அடு தானைப் பொலந்தார்க் குட்டுவ!'
— பதிற்: 43: 6 — 11.

'பாடுநர்,
கொளக் கொளக் குறையாச் செல்வத்துச்
செற்றோர்,
கொலக் கொலக் குறையாத் தானை, சான்றோர்
வண்மையும் செம்மையும் சால்பும் மறனும்
புகன்று **புகழ்ந்து அசையா நல்லிசை**
நிலந்திரு திருவின் நெடியோய்'
— பதிற்: 82:-12 — 16.

'அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
**மறம்புரி கொள்கை** வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலைஇல் நெஞ்சின்
நனவில் பாடிய நல்லிசை'
— பதிற்: 85: 9 — 12.

'பல்வேல் இரும்பொறை! **நின்கோல் செம்மையின்**
நாளின் நாளின் **நாடுதொழுது** ஏத்த
உயர்நிலை உலகத்து **உயர்ந்தோர்** பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை ஆகியர் நீயே'
– பதிற்: 89: 9 — 13.

'தொன்று மொழிந்து தொழில் கேட்ப
அகல் வையத்துப் பகல் ஆற்றி
மாயாப் பல்புகழ் வியல்விசும்பு ஊர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்டு
**அறன் வாழ்த்த நற்குஆண்ட**

விறல் மாந்தரன் விறல் மருக!
ஈரம் உடைமையின் நீர்ஓர் அனையை
அளப்பு அருமையின் இருவிசும்பு அனையை
கொளக்குறை படாமையின் முந்நீர் அனையை
பன்மீன் நாப்பண் திங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை'

- — பதிற்: 90: 8 — 18.

'ஓர்வுற்று ஒருதிறம் ஒல்காத நேர்கோல்
**அறம்புரி** நெஞ்சத்தவன்'

- -கலி: 42: -13 - — 14.

'நீண்டுநீர் மிசைத்தோன்றி இருள்சீக்கும் **சுடரேபோல்**
வேண்டாதார் நெஞ்சுஉட்க வெருவந்த கொடுமையும்
காண்டகு **மதியென்னக்** கதிர்விடு தண்மையும்
மாண்டநின் ஒழுக்கத்தால் மறுவின்றி வியன்ஞாலத்து
யாண்டோரும் **தொழுதுஏத்தும்** இரங்குஇசை முரசினாய்'

- — கலி: 100: 1 — 6.

'முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வெளவல்'

- — கலி: 133: 13.

'மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்
கொற்கை'

- — அகம்: 27: 8 — 9.

'ஆரங் கண்ணி அருபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை உறந்தை'

— அகம்: 93 :4 — 5

'குன்றுஓங்கு வைப்பின் நாடுமீக் கூறும்
மறங்கெழு தானை அரசருள்ளும்
**அறம்கடைப் பிடித்த செங்கோ லுடன்**அவர்
மறம்சாய்த் தெழுந்த வலன்உயர் திணிதோள்
பலர்புகழ் திருவின் பசும்பூட் பாண்டியன்'

- — அகம்: 328: 1 — 5.

'**முறை**வேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டியார்க்கு அருளி'

- — பெரும்பாண்: 443444.'

**அறம்கூறு** அவையம்'

— மதுரை: 432.

'**அறம் செய்து** அருளுடையீர் ஆற்ற ஆகுமின்'

— நாலடி: 7:3.

'உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்
கெடாஅத நல்லறம்'

— நாலடி: 10: 1 — 2.

'மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம் செய்ம்மின்'

— நாலடி: 19: 1- —2.

'புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை'

— நாலடி: 29: 1 — 2.

'ஆவாம்நாம் ஆக்கம் நசைஇ அறம்மறந்து
போவாம்நாம் என்னா புலைநெஞ்சே — ஓவாது
நின்றுஞற்றி வாழ்தி'

— நாலடி: 32: 1 — 3.

'ஒருவுமின் தீயவை; ஒல்லும் வகையால்
மருவுமின் மாண்டார் அறம்'

— நாலடி: 36: 3- —4.

'எங்கண் இளையர் எனக்கருதின் ஏதமால்
தங்கண்ண ராயினும் தகவில கண்டக்கால்
வன்கண்ணன் ஆகி ஒறுக்க ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான் அரசு'

— பழமொழி: 322.

— தண்டனைகளைப் பொறுத்த மட்டில், என்ன குற்றம் செய்தாலும் எத்தகைய கொடுவினைகளைச் செய்தாலும் பிராமணரைத் தண்டிக்கக் கூடாது என்றே ஆரிய நெறி கூறுகிறது. அந்நிலைகளையே அரசனும் கடைப்பிடிக்க ஆரிய தர்மம் வற்புறுத்துகிறது. இவை பற்றி முன்னரே பல எடுத்துக்காட்டுகள் கூறப்பெற்றுள்ளன. எனவே, இந்த வகையில் வடவாரிய வர்ணாச்சிரம தர்ம நூல்களைத் தழுவித்தான் திருவள்ளுவர் நூல் செய்தார் என்று கூறுவது எத்துணை அறியாமை நிறைந்தது, கொடுமையானது, முன்னுக்குப் பின் முரணானது என்று உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

'திருவள்ளுவர் . . . ஆரியக் கொள்கைகள் தமிழ் நாட்டில் புகுந்த போது அவற்றை ஏற்காமல் மறுத்தவர், வெறுத்தவர் என்பதும். தமிழ்க்குடி மக்கள் ஆரியக் கொள்கைகளால் அறிவிழந்துவிடாமல் (நெறியிழந்து

*விடாமல்) அறிவு நிலைபெற்று விளங்கவே திருக்குறளைச் செய்தார் என்பதும் எம் கொள்கையும் பெருந் துணிபுமாகும்' (**இறையனார்,** 'திருக்குறள் ஆராய்ச்சி' (1949) பக்:43.)*

'இவர் கொண்ட கொள்கைகள் பண்டைத் தமிழர் கண்ட செந்நெறியின் தெளிந்த கொள்கைளேயாகும். இவை இப்பொழுது கூறப்படும் சமய மதங்கள் யாவும் தோன்றுமுன் அறிவும், அன்பும், அருளும் அமைந்து நிறைந்த பண்டைத்தமிழ்ப் பேரறிஞர்களால் கண்டு கைக்கொண்டு பயன்பெற்ற தமிழர்க்குரிய தனிப் பண்பாடுகளாகும்'

*(மேற்படி நூல்: பக்: 48.)*

– இனி, குமுகாய (சமுதாய) அமைப்பிலும் உடைமைக் கொள்கையிலும் ஆரியவியல் கோட்பாடு எவ்வாறு கையாளப் பெற்றது என்பதையும் நாம் அம் மனுநூலைக் கொண்டே ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.

*'பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் இவர்கள் தம்தம் வருணங்களுக்குக் கீழான மற்ற வருணங்களிலும், சூத்திரன் தன் வருணத்தில் மட்டும், மணம் செய்துகொள்ளலாம்'*

*— மனு: 3- —13:*

'பிராமணன் உயர்ந்த குலத்தாரோடுதான் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும்'

*— மனு: 4- —244, 245.*

'அட்டை, கன்று, வண்டு ஆகியவை, இரத்தம் பால், தேன் இவற்றை உறிஞ்சுவது போல் அரசன் குடிகளிடம் வரி வாங்க வேண்டும்'

*— மனு: 7 — 131.*

'பிராமணனிடம் அரசன் தீர்வை பெறக்கூடாது. அவன் பசியினால் துன்பப்படும்படி வைக்கக் கூடாது.'

*— மனு: 7 — 133.*

'பிராமணனிடத்தில் தோணிக்காரன் கட்டணம் வாங்கக் கூடாது'

*— மனு: 8- — 40.*

'பிராமணன் சூத்திரனிடம் கூலி கொடுக்காமல் வேலை வாங்கலாம்'

*— மனு: 8 — 413, 414.*

– இவற்றாலும் இன்னும் பிற நடைமுறைகளாலும் குடிமக்களிடம் அதுவும் பிராமணக் குடிகளிடம்- அரசன் வரிகள் தண்டுவதில் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பது நன்கு புலப்படுத்தப்பெற்றுள்ளது,

ஆரியவியலில். இவ் வேறுபாடான நடைமுறைகள் திருக்குறளில் தவிர்க்கப் பெற்று, குடிமக்களிடம் அரசன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதைத் திட்டவட்டமாக வரையறுத்துச் சொல்லப்பெறுகிறது. பின் வரும் சில குறட்பாக்களைக் கவனமுடன் சிந்தியுங்கள்.

'குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு' - — 544.

'இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்' - — 547.

'வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு' - — 552.

'அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை' - — 555.

இனி, இன்னும் சில பொதுநிலைகளைப் பார்த்துவிட்டு மேலே செல்வோம்.

'பிராமணனைத் துன்புறுத்துகிற அரசனைப் பிராமணன் அழிக்க வேண்டும்'

மனு: 9 320.

'பிராமணனே அழிந்துபோக விருந்த அரச குலத்தை அக்குலப் பெண்ணைச் சேர்ந்து விருத்தி செய்தான்; எனவே, அரசன் அவனைப் பகைத்துக் கொள்ளக் கூடாது.'

மனு: 9 321, 322.

'அரசன் தன் மூப்புக்காலத்தில் தன் சொத்துகளைப் பிராமணனுக்கும், நாட்டைத் தன் பிள்ளைகளுக்கும் தரவேண்டியது'

மனு: 9 323.

'பிராமணனிடத்தில் வணங்காமையாலும், உபநயனம் முதலிய செய்து கொள்ளாமையாலுமே க்ஷத்திரியர்கள் சூத்திரர்களாகிறார்கள்'

மனு: 10 43.

'க்ஷத்திரியன் எக்காலத்திலும் பிராமணன் வேலையை மேற்கொள்ளக் கூடாது'

மனு: 10 95.

'தாழ்ந்த சாதியான் பொருளாசையால் தனக்குமேலான சாதித் தர்மங்களைச் செய்தால், அவன் பொருள் முழுவதையும் பிடுங்கிக் கொண்டு அவனை உடனே ஊரைவிட்டு ஓட்ட வேண்டும்'

*மனு: 10 96.*

*'பிராமணன் திருடிவந்து யாகம் செய்தால், அரசன் அவனைத் தண்டிக்கக் கூடாது. அரசனின் மூடத்தனத்தாலேயே பிராமணன் பசித்துக் கிடக்க வேண்டியுள்ளது'*

*மனு: 11 21.*

*'ஏழையாய் உள்ள பிராமணனுக்கு அரசன் தன் அரண்மனைப் பொருளைத் தந்து அவனை வாழச் செய்ய வேண்டும்'*

*மனு: 11 22, 23.*

*'பிராமணன் பொருளை அபகரித்த பாபி மறுபிறப்பில் கழுகு தின்ற மீதி மாம்சத்தைக் கொண்டு பிழைக்க வேண்டியுள்ளது.'*

*மனு: 11 26.*

*'பிராமணன் தனக்குக் கெடுதல் செய்தவர்களைத் தானே தண்டிக்கலாம். அரசனிடம் அறிவிக்க வேண்டியதில்லை'*

*மனு: 11 31 33.*

*'பிராமணனைக் கொல்வது, சுராபானம், பொன் திருடுவது, குருமனைவியைச் சேர்தல் இவை மகாபாவங்கள்'*

*மனு: 11 54.*

*'அரசனிடத்தில் பிராமணரீஊஒத் தீகஓ வரும்படி கோள் சொல்லுதலும் பிரம்ம அத்தியே'*

*— மனு:- 11 — 5*

*'முனிவர்கள் பாவம் செய்தாலும் தம் தவ வலிமையால் அதன் கெடுதல் வராமல் காத்துக் கொள்கிறார்கள்'*

*மனு: 11 241*

இனி, இவை பற்றி இன்னும் விரிவாக எடுத்துக் காட்டுவது தேவையற்றது. அவை நீண்டு கொண்டே போகுமாகையால் இப் பகுதியை இத்துடன் நிறுத்திக் கொண்டு ஆரியவியலில் கூறப்பெற்றுள்ள பெண்ணியல் கொடுமைகளைப் பற்றிச் சிறிது காணலாம்.

பொதுவாகவே ஆரியவியல் கோட்பாடுகளின் பெண்கள் மிகவும் அடக்கியொடுக்கப்படும். கொடுமைப்படுத்தப்படும் செய்திகள் எல்லாம் மிகப்பரவலாகக் காணப்பெறுகின்றன. இன்றைக்கும் இந்தியாவில் பெண்ணினம் முன்னேறாமைக்கும், தாழ்ச்சியாகவும் இழிவாகவும் நடத்தப் படுவதற்கும் ஆரியரின் தர்மவியல் கொள்கையும் ஆயிரக்கணக்கான புராண, இதிகாசக் கதைகளுமே தலையாய காரணங்கள் எனக் கூறினால், அதில்

மிகையில்லை. ஆரியரின் வர்ணாச்சிரம தர்மவியல் கோட்பாடு களின் படி பெண்கள் மிகவும் இழிவானவர்கள், கீழானவர்கள், வெறும் உடலுறவு இன்பத்திற்காகவே படைக்கப்பெற்றவர்கள். அவர்களுக்குக் குடும்பத்திலோ, குமுகாயத்திலோ எந்த வகையான உரிமையும் இல்லை. உடைமைகளும் இல்லை;. அவர்கள் தீவினைங்களின் இருப்பிடங்கள், ஒழுக்கக் கேடுகளின் தூண்டுகோல்கள் என்றே வருணிக்கப் பெறுகிறார்கள். ஆண்களுக்கு உடலின் பத்தை வாரி வழங்கவும், பிள்ளைகளைப் பெற்றுக் கொடுத்து மக்களினத்தைப் பெருக்கவும், ஆண்களுக்குத் தொண்டு செய்யவுமே அவர்கள் படைக்கப்பட்டுள்ளார்கள் என்பதே ஆரியர்களின் கோட்பாடு, கொள்கை, நடைமுறைகள் எல்லாம். இவற்றை மெய்ப்பிக்க பல்லாயிரக் கணக்கான சான்றுகள், எடுத்துக் காட்டுகள் அனைத்தும் அவர்களின் வேத ஸ்ருதிகளிலும், மனு முதலிய ஸ்மிருதிகளிலும், பாரத, இராமயண, பாகவத முதலிய இதிகாச, புராணங் களிலும் உண்டு. அவையத்தனையுமோ அவற்றில் சிலவற்றையுமோகூட இங்கெடுத்துக் கூறுவது சிறிதும் இயலாதது. எனவே மனு நூலில் மட்டுமே இருந்து மொழிபெயர்க்கப் பெற்ற சிற்சில சொலவகங்கள் சுருக்கமாக, மிகவும் சுருக்கமாக இங்குக் காட்டப்பெறுகின்றன. அறிவர்கள் அவற்றைக் கொண்டே அவர்களின் இழிவையும் அநாகரிகச் சிந்தனைகளையும் தெரிந்து தெளிவுறுவார்களாக.

'பெண்களுக்கு மணம் செய்வதே பூணூல் அணிவது போல் ஆகும்'
– மனு 2-67

மகன், மாணாக்கன், மனைவி இவர்களைக் கயிறு, பிரம்பு முதலிய கருவிகளால் அடிக்கலாம்

– மனு 4-164

**பெண்ணடிமைக் கட்டுப்பாடுகள்:** (மிகச் சுருக்கமாகத் தரப்பெறுகின்றன. விரிவாகப் பார்க்க விரும்புபவர்கள் மனுநூலின் 5 ஆம் பிரிவு 147 ஆம் நெறிமுதல், பார்க்கவும்)

1. 'பெண் தன்மனம் போனபடி செய்யக் கூடாது (5-147)'
2. 'பெண் தன் சுவாதீனமாக வாழக் கூடாது.' (5-148, 149), (9-2,3)
3. 'பெண்கள் அதிகமாகச் செலவு செய்யக் கூடாது.' (5-150)
4. 'பெண் தன் பெற்றோர் விருப்பத்தின் படிதான் திருமணம் செய்து கொள்ள வேண்டும்'. (5-151)
5. பெண்ணுக்குத் தன் கணவனே முழு அதிகாரமுள்ள எஜமானன் - (5-152)

6. 'தன் கணவன் எவ்வளவு அயோக்கியனாக இருந்தாலும், இழிந்த நடத்தையுடையவனாக இருந்தாலும், விபச்சாரிகளுடன் உறவு கொண்டவனெனினும் அவனே அவளுக்குத் தெய்வம்' (5-154)

7. 'பெண்களுக்கு யாகம், உபவாசம், விரதம் இவை எல்லாம் கிடையாது. கணவனுக்குத் தொண்டு செய்வதே அவளுக்குச் சொர்க்கம்.' (5-155)

8. 'விதவைகள் சொற்ப ஆகாரமே - காய், கனி, கிழங்கு ஆகிய புல்லுணவே உண்ண வேண்டும். மாமிசம் உண்ணக் கூடாது'. - (5-157)

9. 'காம உணர்வால் பெண்கள் தம் கணவரலல்லாத பிறர் பெயர்களைச் சொல்லக் கூடாது'. - (5-158)

10. 'பிள்ளை இல்லை என்று ஒரு மனைவி வருந்தக் கூடாது. -(5-159-161)

11. ' விதவைகளுக்கு மறுமணம் இல்லை.' -(5-162)
மறுமணம் செய்துகொள்ளாதவளே கற்புடையவள்.

12. ' பெண் விபசாரம் செய்யக் கூடாது.' -(5-163-165)

13. 'மனைவியை இழந்தவன் வேறு மணம் செய்து கொள்ள வேண்டும்.' -(5-167-169)

14. பெண்களை வைத்துக்கொண்டு அரசன் மந்திராலலோசனை செய்யக் கூடாது. -(7-150)

பிராமணர்களுக்கே பிரம்மச்சாரியம், கிருகஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் - ஆகிய ஆஸ்ரம ஒழுக்கங்கள் உண்டு' – மனு 6-97

போகத்தை விரும்பும் ஒரு கன்னிப் பெண்ணைப் புணர்ந்தால் குற்றமில்லை. (ஆனால் அதிலும் வர்ணாச்சிரம வேறுபாடுகளுக்கு உரிய முறை உண்டு.)

– மனு 8-364-366

பிராமணப் பெண்களை விரும்பும் பிற சாதியார்க்குத் தண்டனைகளும் வர்ணாச்சிரம முறைப்படி தரவேண்டும்.

– மனு 8-375,378

பெண்கள் பருவம் எய்தும் முன்னரே மணம் செய்து கொடுத்து விட வேண்டும்

– மனு 9-4

மனுநூல் அதிகாரங்கள் 9, 10 ஆகியவற்றுள் பெண்களைப் பற்றிக் குறிப்பிடும் மொத்தக் கருத்துகளும் இங்குத் தனித் தனியாக எடுத்துக் கூறப்பெறாமல், அவற்றின் விரிவை அஞ்சித் தொகுத்துத் தரப்பெறுகின்றன. இவற்றினின்று ஆரியவியலில் பெண்களை மதிப்பிடும் தன்மைகளை நன்கு உணர்ந்துகொள்க. இன்று வரை பெண்களை அடிமைப்படுத்தியும், அவர்களுக்கு எவ்வகையான வாழ்வுரிமையும் தராமலும், அவர்களைக் கொடுமைப்படுத்தியும் வருகின்ற நிலைகள் அனைத்திற்கும் இவ்வாரிய வர்ணாச்சிரமக் கொள்கைகளும் கோட்பாடுகளும் நடைமுறைகளுமே காரணம் அன்றித் தமிழியல் அறக் கோட்பாடுகள் அல்ல என்பதை அனைவரும் உணர்தல் வேண்டும். ஆரியர் வருகைக்குப் பின்னர்தான், இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழ்நாட்டிலும் பெண்களைத் தாழ்த்தி வைக்கும் ஆடவர் மேலாளுமை (ஆதிக்க) உணர்வு தோன்றிய தென்னும் உண்மையையும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். இவ்வுண்மையறியாத சிலர், சில பெண்கள் விடுதலை இயக்கங்கள் உட்பட, திருக்குறளிலும், ஆணாளுமை கூறப்பெற்றிருப்பதாகக் கூறி வருவது, அவர்களின் அறியாமையையும் பேதைமையையுமே உணர்த்துவதன்றி, அவர்களின் பொது மையறிவையும், ஆரிய வழக்குகளையும் தமிழியல் வழக்குகளையும் பிரித்து ணரும் ஆற்றலையும், உணர்த்தா வென்க.

இனி, மனுநூலில் கூறப்பெற்ற ஆரியவியலின் பெண்ணடிமைக் கோட் பாடுகளைப் பார்வைக்கு வைக்கின்றோம்.

‘காமம், கோபம், பொய், துரோக எண்ணம், அலங்காரம், இருக்கை, படுக்கை - இவையனைத்தும் பெண்கள் காரணமாகவே தோற்றுவிக்கப் பட்டன.’

‘பெண்கள் அனைவரும் நிலையில்லாத மனம் கொண்டவர்களே; எப் பொழுதும் கற்பை இழக்கும் தன்மையினரே. இவை அவர்களின் பிறவியோடு வருபவை’.

‘அழகும், வயதும் பாராமல், ஆண்களிடத்து அவர்கள் எப்பொழுதும் கற்பிழந்து விடுவது அவர்களின் இயல்பு. அவர்களை நன்றாகப் பேணி வந்தாலும், கணவனின் கட்டுக் காவலை அவர்கள் விரும்புவதில்லை.’

‘இந்த வகையில் பெண்கள் அனைவரும் கற்பிழந்தவர்களே. கெடுமனம் உடையவர்களே. கூடாவொழுக்கத்திலிருந்து பெண்களைக் காப்பாற்றும் திறன் எந்த ஆணிடத்திலும் இல்லை. பெண்கள் கற்பில்லாதவர்கள் என்றே எல்லா நூல்களும் கூறுகின்றன.’

‘எனவே பெண்கள் பருவம் அடையும் முன்பேயே அவர்களை மணம் செய்து கொடுத்துவிட வேண்டும். அந்த வகையில் 24 வயதுள்ளவன் 8

வயதுப் பெண்ணையும், 30 வயது நிறைந்தவன் 12 வயதுப் பெண்ணையும் மணக்கலாம்.'

'பெண்ணைக் கட்டுக் காவலுடன் கருத்தாய்ப் பேணாவிடில் வர்ணாச் சிரம தர்மம் கெட்டுப் போகும். அவளின் கூடாவொழுக்கத்தால் சூலத்தை அழித்து விடுவாள். அவளால் பிறந்த குலமும் கெடும்; புகுந்த குலமும் கெட்டுவிடும்.'

'எனவே. பெண்களை விபசாரம் செய்யாதபடி கணவர்கள் காப்பாற்ற வேண்டும். அதுவே அவர்களின் தலையாய கடமையாகும்.'

'கணவன், மனைவியை வீட்டு வேலைகளில் ஈடுபடுத்தி அவள் மனம் வேறிடத்தில் செல்லாதபடி செய்ய வேண்டும்'.

'தனது ஒழுக்கம், குலம், சந்ததி, நற்கருமங்கள் ஆகியவற்றை முறையாகக் காப்பது போலவே மனைவியைக் காப்பது கடன்.'

'இளமையில் தந்தை, பருவத்தில் கணவன், முதுமையில் மக்கள் பெண்களுக்குக் காவல் ஆவர். பெண்களை எப்போதும் தனித்திருக்கும்படி விடவே கூடாது.'

'பெண் பிறவியைத் தூய்மைப்படுத்தும் செயல்பாடுகள் எதுவும் இல்லை. மந்திரம் எதுவும் இல்லை. பெண் பொய்யைப் போலவே அழுக்குடையவள்.'

'கணவன் சூதாடி, குடிகாரன், நோயாளி என இகழ்ந்து எந்தப் பெண்ணும் அவனுக்குப் பணிவிடை செய்யாமல் இருக்கக் கூடாது.'

'என் தாய் கற்பிழந்தவள் என்றே ஒவ்வொரு மகனும் கருத வேண்டும்.'

'பெண்கள் ஆடவர்களின் அழகு, பருவம், செல்வம் இவற்றை விரும்பாமல் ஆண் தன்மையை மட்டுமே விரும்புகிறார்கள்.'

'பெண்களுக்குக் கற்பும், மனமும், நட்பும் இயற்கையிலேயே நிலையானவை அல்ல. சில தீய குணங்கள் பெண்களுக்காகவே கற்பிக்கப் பெற்றன.'

பெண்கள் தம்மிச்சையாகச் சென்று கூத்து, பாட்டு நிகழும் அரங்கு களில் மகிழ்வர். குடிக்கக் கூடாது என்று விதிக்கப்பெற்ற திருமண நாள் முதலிய நல்ல நாள்களிலும் குடிப்பவர்.

'மகளிர் அங்குமிங்கும் சும்மா போதல் வருதல், அயலார் வீடுகளில் போய் அமர்தல், கண்டவிடங்களில் தூங்குதல், கணவனை விட்டுத் தனியே வேற்றூர் செல்லுதல், தீயவரின் உறவு, கள்ளுண்ணுதல் இவையெல்லாம் பழிகள் தருவன.'

'பெண்கள் கர்மம் இல்லாதவர்கள் மந்திரம் அவர்களுக்குக் கிடையாது; அவர்களுக்குத் தூய்மையான மனம் இல்லை. அவர்கள் விபசார குணம் படைத்தவர்கள்.'

'ஒருவன் தாய் ஏற்கனவே கெட்டவளென்று கருதிக்கொண்டு, அவளுக் காக விபசார தோஷம் செய்ய வேண்டுமென்று வேதங்கள் கூறுகின்றன.'

'பெண்கள் கடலில் சேர்ந்த நதியைப் போல் தம் கணவர்களின் குணங்களையே அடைதல் வேண்டும்.'

'பெண்கள் குழந்தைகளைப் பெறுவதால், அவர்களை ஆடை ஆபரணங் களால் அலங்கரித்தல் வேண்டும்.'

'பிள்ளை பெறுவதும் பெற்ற பிள்ளைகளைக் காப்பதும், விருந்து பேணுவதும் பெண்கள் கடமை.'

'கணவன் சொல் கடவாமல் நடப்பவளே தன் கணவனுடன் சுவர் க்கம் எய்துவாள்; அல்லாதவள் நரியாய்ப் பிறப்பாள்.

'கணவனைப் பகைத்து மனைவி விலகியிருந்தால், ஓராண்டு பொறுத்து அவளுக்குக் கொடுத்திருந்த ஆடை, அணிமணி இவற்றைத் திரும்பப் பெற்றுக்கொள்க. அவளிடம் மீண்டும் பேச்சும் உறவும் கொள்ள வேண்டாம்.'

'பொல்லாங்கு சொல்பவளை உடனே நீக்குக. மலடியை எட்டாண் டுகள் கழித்தும், அடிக்கடி பிள்ளை பிறப்பிக்கிறவளைப் பத்தாண்டுகளுக்குப் பிறகும், பெண் குழந்தைகளை மட்டுமே பெறுகின்றவளைப் பதினோர் ஆண்டுகள் கழித்தும் விலக்குக. வேறு மணம் புரிந்துகொள்க. அன்னவர் களுக்குப் பொருள் ஏதும் தர வேண்டியதில்லை.'

'குடிகாரி, கெட்டவள், கணவனுக்குத் துரோகம் செய்பவள், கொடு மையான மனம் உடையவள், ஊதாரி, தீராத நோயாளி - போன்றவர்களுக்கு ஜீவனாம்சம் கொடுத்து விலக்குக. வேறு மணம் புரிந்து கொள்க'.

'சந்ததியற்றுக் குலமே சர்வ நாசமுறும் போது, ஒரு பெண் தன் மைத்துனன், அல்லது ஏழு தலைமுறைக்கு உட்பட்ட கணவனின் பங்காளி ஆகியோரைக் கூடி, தன் கணவன், மாமனார் ஆகியோரின் அனுமதியுடன், வம்ச விருத்திக்குப் பிள்ளை பெறலாம்.'

'பெரியோர்கள் அனுமதியுடன் விதவையைக் கூடலாம். அவன் அப்பொழுது உடலெங்கும் நெய்யைப் பூசிக் கொண்டு, இருட்டான இடத்தில் கூடுக. ஒரு பிள்ளையை மட்டும் உண்டு பண்ணுக. அதற்கு மேலே உண்டாக்கக் கூடாது.'

'ஒரே பிள்ளை இருப்பது சந்ததியில்லாமல் இருப்பது போல. எனவே

இரண்டாம் பிள்ளையையும் பெறலாம். முதல் பிள்ளை குலத்துக்கேற்ற பிள்ளையாய் இல்லாதபோது இரண்டாவது பெறலாம்.'

'கணவன் இறந்த பின் எந்தப் பெண்ணையும் இன்னொருவர் கூட அனுமதிக்கக் கூடாது.'

'பிராமண குலத்தில், பிள்ளையற்றபோதும், விதவையானவளை யாரோடும் கூடிச் சந்ததி பெற அனுமதிக்கக் கூடாது. விதவா விவாகம் ஒரு திருமணமாகக் குறிப்பிடப்படவில்லை.'

'அண்ணன் தம்பி இருவரும் பிள்ளையில்லாத பொழுது தம் மனைவி யர்களை மாற்றிப் புணரலாம்.'

'விதவைக்குப் பிள்ளை வேண்டின் அவள் பிள்ளையுண்டாகத் தன் கணவனின் தம்பி அல்லது அண்ணனுடன் சேர்ந்து பிள்ளை பெறலாம்.'

'பெண்குறியைவிட ஆண்குறியே உயர்ந்தது; சிறந்தது. நிலத்தை விட வித்தே சிறந்தது.'

'அறிவுள்ளவன் தன் வித்தைத் தன் மனைவியிடத்தில்தான் விதைக்க வேண்டும்'.

'விபசாரக் குற்றமுள்ள பெண்ணை மணந்துகொள்ள நேர்ந்தால் அம்மி மிதிப்பதற்கு முன் அவளை விலக்க வேண்டும்.'

'கணவன் இல்லாத பொழுது மனைவி ஆடை, ஆபரணங்களை நீக்க வேண்டும்.'

'அக்காலத்து வருமானமில்லா விட்டால், கோலமிடுதல், இராட்டை நூற்றல் முதலிய கற்புக் கெடாத தொழில்களைச் செய்து வருமானம் செய்து கொள்ளலாம்; வாழ்க்கை நடத்தலாம்'.

'பெண் பூப்பெய்தி மூன்றாண்டுக்குள் தந்தை மணம் செய்து தராவிடில் தானாகவே ஒருவனைத் தேடி மணந்து கொள்ளலாம்.

'மனைவி தெய்வத்தால் கொடுக்கப் பெறுகிறவள் என்று வேதம் சொல் கிறது.'

'விதவை தன் கொழுநனை மணந்து கொள்ளலாம்.'

'புத்திரர்களுக்குள்ள அதிகாரம் பெண்களுக்கில்லை.'

'சூத்திரனுக்குப் பிற சாதிப் பெண்கள் மனைவியராகார்.'

'தந்தை 'புத்' என்னும் நரகத்தில் போய்ச் சேராமல் காப்பதால் மகனுக்கு

புத்திரன் (புதல்வன்) என்று பெயர்.'

'மனைவியர் பலருள் ஒருத்திக்கு மகன் பிறந்தால் பல மனைவியர்க்குமே சந்ததி வாய்த்தது எனக் கொள்ள வேண்டும்.'

'பல மனைவியர் வழக்கம் தொடக்கக் காலத்திலிருந்தே உண்டு. மனித குல முதல்வரில் ஒருவனான அந்தகன் என்பான் ஏராளமான பெண்களைப் பெற்றான். அவர்களுள் சந்திரனுக்கு 27 பெண்களையும், காசியபருக்கு 13 பெண்களையும், எமதர்மனுக்கு 10 பெண்களையும் மணம் செய்து கொடுத்தான்.'

'புத்திரன் பிறந்தால் ஒருவன் சொர்க்கமும், பேரன் பிறந்தால் சொர்க்கத்தில் நிலைபேறும், புத்திரனுக்குப் பேரன் பிறந்தால் சூரிய லோகமும் பெறுகிறான்.'

'மூத்த பிள்ளை மட்டுமே தர்மத்தால் பிறக்கிறான். மற்றோர் காமத்தால் விளைந்தவர்களே.'

– இவ்வாறு, பெண்களைப் பற்றிப் பற்பல கோணங்களில் வரும் ஆரியவியல் கருத்துகளுக்கு நேர் எதிரான கருத்துகளே திருக்குறளில் கூறப்பெறுகின்றன. இவற்றையெல்லாம் விட்டுவிட்டு, இக்காலப் பெண்ணியல் ஆய்வாளர்களும், அரைகுறை அறிஞர்கள் ஒரு சிலரும், திருக்குறளிலும் ஆணாளுமை (ஆணாதிக்கம்) உள்ளது என்றும், பெண்களைப் பற்றி இழிவாகவும், தாழ்வாகவும் கூறப்பெற்றுள்ளது என்றும் தவறாகவும் தாறுமாறாகவும் எழுதுவதும் பேசுவதும் மிகவும் அறியாமையும், திருக்குறளைச் செரியாமையும், ஆரியவியலைப் புரியாமையும் ஆகும் என்க.'

இனி, திருக்குறளில் கூறப்பெறும் பெண்ணியல் கருத்துகளில் ஒரு சிலவற்றை இங்கு ஒப்பிட்டுக் காணுவது அனைவரின் தெளிவுக்கும் உகந்ததாகும்.

'திருக்குறளில் பெண்மை உயர்வாகவும் உண்மையாகவும் பெருமையாகவும் பேசப்பெறுகிறதே யொழிய எங்கும் எவ்விடத்திலும், ஆரியவியல் போல் இழிவாகவும், தாழ்வாகவும், பொய்யாகவும் பேசப் பெறவில்லை என்பதைக் கீழ்வரும் எடுத்துக் காட்டுகளால் உணர்க. இவற்றின் விரிவான விளக்கங்களை நூலுள் வரும் அவ்வக் குறட்பாவின் உரைகளாலும் கண்டு தெளிக.'

'முதற்கண் ஆரியவியலில் கூறப்பெறும் எண்வகைத் திருமணப் பிரிவுகள் திருக்குறளிலோ வேறு தமிழியல் நூல்களிலோ ஏற்கப்பெறவில்லை.'

ஆரியவியலில் கூறப்பெறும் எண்வகைத் திருமண முறைகளாவன:

**பிராமம், தைவதம்** (தெய்வம்) **ஆருஷம், பிரஜாபத்தியம், ஆசுரம், காந்தர்வம், இராக்ஷசம், பைசாசம் ஆகியவையாகும்.**

இன்று தமிழரிடைய வழக்கில் வந்துள்ள திருமண முறையும் அதன் சடங்குகளும் பெரும்பாலும் ஆரிய வழக்கத்தை அடிப்படையாகக் கொண்டனவே யாகும். ஆனால்,

இவற்றுள் **பிராம்மம்** என்பது, வேதம் கற்ற மாணகன் (பிரம்மசாரி) ஒருவனுக்குத் தன் மகளைத் தானே விரும்பிக் 'கன்னிகாதானம்' செய்து கொடுப்பது.

– **தைவதம்** அல்லது **தெய்வம்** ஆவது தான் செய்த வேள்விக்கு (யாகத்திற்கு) உதவிய புரோகிதனுக்குத் தன் பெண்ணை மணம் செய்து கொடுப்பது.

– **ஆருஷம்** என்பது, தான் செய்யப் போகிற வேள்விக்கு உதவுகின்ற ஒருவனிடத்தில், ஒன்றோ இரண்டோ எருதுகளையும் ஆ(பசு)க்களையும் வாங்கிக் கொண்டு, தன் பெண்ணை மணம் செய்து கொடுப்பது.

– **பிரஜாபத்யம்** என்பது, மாணகன் ஒருவனை யழைத்து அவனை விரும்பி வேண்டியும், அவன் உறவினர்களிடம் கேட்டும், தன் மகளை மணம் செய்து கொடுத்து அவர்களைத் தர்மங்களைச் செய்ய ஈடுபடுத்துவது.

– **ஆசுரம்** ஆவது பெண்ணின் பெற்றோரிடம் அவர்கள் பெண்ணை விரும்பிக் கேட்டு, அவர்கள் அப் பெண்ணுக்குக் கேட்கும் பரிசங்களையும் அணிமணிகளையும் கொடுத்துத் தான் மணந்து கொள்வது.

(பெரும்பாலும், இந்தத் திருமண முறையே தமிழர் திருமண முறையாகும். ஏனெனில் தமிழியல் திருமண முறையுள், மணமகளுக்கே மணமகன் **பரிசம்** அல்லது **முலைவிலை** அல்லது **பாற்கூலி** கொடுத்துத் திருமணம் பேசிப் பின்னொரு நாளில் அனைவரும் கூடியமன்றில், கரணங்களுடன் (சடங்குகளுடன்) மணந்து கொள்வது. கீழ்வரும் நூற்பா இதனை உணர்த்தும்

'கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே'

– தொல்:(1088)

'மணமகனுக்கு அவன் வேண்டிய தொகையோ, செல்வமோ, பொருளோ **மகற்கொடை** (வரதட்சிணை)யாகக் கொடுத்துப் பெண்ணை மணம் செய்து கொடுக்கும் வழக்கம் தமிழரதில்லை. அஃது ஆரியப் பார்ப்பனரது வழக்கமே.'

மேலும், இத் திருமண முறை 'ஆசுரம்' என்று குறிக்கப் பெற்றுள்ளது. 'ஆசுரம்' என்பது அசுரர்களுடைய மணமுறை என்று பொருள்படும். அசுரர் என்று ஆரியர் குறிப்பிடுவது தமிழர்களையே என்றும் உணர்ந்து கொள்க.

– காந்தர்வம் என்பது இளைஞன் ஒருவனும் இளைஞை (இளம்பெண்) ஒருத்தியும், புணர்ச்சியுணர்வால், ஒருவரை ஒருவர் விரும்பி இணைவது. இது 'தம்முளே புணர்ந்த தாமுறு புணர்ச்சி' தமிழியலில் இதனைக் களவு மணம் என்பர்.

– **இராக்ஷஸம்** ஆவது, ஒருவன் தன் உடல் வலிவால் ஒருத்தியை அவள் பெற்றோரின் ஒப்புதலின்றியும் அவள் இசைவின்றியும் அவள் அழஅழ, அவளது வீட்டினின்று உரிமையோரை அடித்தும், கொன்றும், வலியத் தூக்கிச் சென்று விடுவது.

– **பைசாசம்** ஆவது, கன்னி ஒருத்தி தூங்கும் போதும், குடியினால் மயக்க முற்றிருக்கும் போதும், பித்து (பைத்தியம்) பிடித்திருக்கும் போதும் அவளை வலியப் புணர்வது ஆகும்.

– இனி, இவற்றுள்ளும் முதல் நான்கு திருமண முறைகள் பிராமணர் களுக்கே உரியன என்றும், இராக்ஷஸம் சத்தியர்களுக்குரியதென்றும், ஆசுரமே வைசியர்களுக்கும், சூத்திரர்களுக்கும் உரியன என்றும் ஆரியவியல் கூறும்.

இவ்வாறு இம்மணப் பிரிவுகள் வேறுபட்டிருக்க, இவற்றின் சடங்கு முறைகளும் பல வேறுபாடுகள் உடையன. அவ்வகையில் ஆரியவியலும், தமிழியலும் தொடக்க முதல் இறுதி வரை அறவே வேறுபட்டனவாம். ஆரியவியல் பெண்களை அடிமைப்படுத்துவதும் தமிழியல் பெண்களின் உரிமையை உறுதிப்படுத்துவதும் ஆகும். இவற்றை விரிக்கின் பெருகு மாகையால் இத்துடன் நிறுத்தி மேலே செல்வோம்.

மொத்தத்தில், இவற்றின் பெயரமைப்புகளும், முறைச் செயல்களுமே இவை தமிழியலுக்கு உரியன இல்லை என்பதை மெய்ப்பிப்பனவாகும். ஆயினும், இவற்றுள் ஆசுரமும், கந்தர்வமும் தமிழியலில் உள்ள **கற்பு, களவு** என்னும் மணமுறைகளுக்கு ஒரு வகையில் பொருந்துவனவாம். **தமிழில்** உள்ள **மணம்** என்னும் கூடுதல், சேர்தல், இணைதல், ஒன்றுபடுதல் என்னும் பொருள்களைத் தரும் 'மண்' என்னும் வேரடியாகப் பிறந்தது.

மணத்தல்–கூடுதல். திருமண அகவை வந்த ஆணும் பெண்ணும் கூடி வாழ்வதற்கான நிகழ்வு.

உலகிலுள்ள எல்லா உயிரினங்களிலும் உள்ள ஆண், பெண் உயிர்கள் கூடி வாழும் செயலே **மணம்**.

இனி, அவற்றுள்ளும் மேம்பட்ட ஆறறிவுள்ள உயிரினமாகிய மக்களி னத்துள்ள ஆணும் பெண்ணும் கூடி வாழப் போகும் நிகழ்வு இஃதாகையால்

'திரு' என்னும் சிறப்படை சேர்த்து இதனைத் **திருமணம்** என்றனர் என்க.

இனி, தமிழியலில் பெண்ணியற் கொள்கைகளும், கோட்பாடுகளும் எவ்வகையில் பெருமை சான்றன என்பதற்குத் தமிழிலக்கிய இலக்கண நூற்பரப்பினின்று ஒரு சில சான்றுகளைக் காட்டுவோம்.

'ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லும் தாயர்'

– தொல்: 983

வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை
அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றிவை யெல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி

– தொல் :985.

'காமம் சாலா இளமை யோள்வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து'

– தொல் :996

'மக்கள் நுதலிய அகன்ஐந் திணை'

– தொல்: 1000

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை'

– தொல்: 1038

'காமக் கூட்டம் காணும் காலை
**மறையோர்** தேயத்து மன்றல் எட்டனுள்
துறையமை **நல்யாழ் துணைமையோர்** இயல்பே'

– தொல்: 1038

'ஒன்றே வேறு என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே**

– தொல் 1039

(அன்பு, கல்வி, பொருள், எழில், அகவை முதலியவற்றுள் ஒத்துள்ள இளைஞனும் இளைஞையும் இவருள் தலைவன் தன்மையில் மிகுந்தவனாயினும் அம் மணம் கடியப்படுதல் இல்லை.)

‘பெருமையும் உரனும் ஆடூஉ மேன’

– தொல்:1044

(பெருமை :

‘ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு’ –974

– இங்கு ஆணுக்கும் கற்பு வலியுறுத்தப் பெறுகிறது எண்ணி மகிழ்க)

‘அச்சமும் நாணும் மடனும்முந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரியன என்ப’

– தொல் : 1045

(**அச்சம்** – அஞ்சுவது அஞ்சல் (4-28); **நாணம்** – முதுவரிடமும் புதுவரிடமும் அமைந்து பழகுதல் ‘திருநுதல் நல்லவர் நாணு’ (1011); **மடன்** – மடங்கியிருத்தல், அறிந்து அறியார்ப்போல் இருத்தல், துடுக்குற வாய்வாளாமை நிச்சம் - எப்பொழுதும், நித்தமும் இவற்றொடு உலக வழக்காய பயிர்ப்பு என்பதொரு குணம் எண்ணப்பெறாதது உணர்க. அஃது ஆரிய வழக்காதலின் என்னை? **பயிர்ப்பு** என்பது அருவருப்புணர்வு அஃதாவது, கணவனன்றிப் பிறர் தன்னைத் தொடும்பொழுது, பெண்ணுக்கு ஏற்பட வேண்டிய அருவருப் புணர்வாக இது கருதப் பெறுகிறது. பழந்தமிழ் நூல்களில் இவ்வுணர்வு தமிழியல் சார்ந்ததாகக் காணப்பெறவில்லை. எனவே இஃது ஆரியவியலென்று ஒதுக்குக. இஃதொரு பெண்ணடிமை உணர்வே என்பது தண்டமிழ்ச் சான்றோர் முடிபாகலாம்)

‘நாணும் மடனும் பெண்மைய’

– தொல் 1054-2

‘உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந் தன்றெனத்
தொல்லார் கிளவி புல்லிய நெஞ்சமொடு’

– தொல் 1059

‘கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்

மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்'

– தொல் 1098

'சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய
இடித்துரை நிறுத்தலும் அவர தாகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்'

– தொல் 1100-1101

கிழத்தி

'மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடியை என்றலும் உரியள்'

– தொல் 1104

காமக் கடப்பினுள் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற்கு உரித்தே
வழிபடு கிழமை அவட்கிய லான

–தொல் 1106

'அருள்முந் துறுத்த அன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே'

– தொல் 1107

'தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்வினைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான'

– தொல் 1119

'யாறும் குளனும் காவும் ஆடிப்
பதியிகந்து நுகர்தலும உரிய என்ப'

– தொல் 1137

(இதில் தலைவனும் தலைவியும் ஒப்ப இணைந்து தம் ஊர் விட்டுச் சென்று ஆறும் குளமும் சோலையும் சேர்ந்து ஆடிப்பாடி மகிழ்தல் கூறப்பெற்றது. எனவே சம உரிமை உணர்க.)

'காமம் சான்ற கடைக்கோட் காலை

ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'

– தொல் 1138

(இதிலும், தலைவனும் தலைவியும், தம் வாணாள் இறுதிக் காலத்து ஒப்ப இணைந்து, சிறந்ததாகிய பொதுவறமோ, அல்லது தவமோ செய்து வாழ்வுப் பயன் காணுதல் கூறப் பெற்றது காண்க. இங்கும் சம உரிமை பெண்டிர்க்குத் தருகின்ற தமிழியல் மரபு நிலையை உணர்க. ஆரியவியலில் பெண்டிர்க்குத் தவவொழுக்கமும் பொதுத் தொண்டில் ஈடுபடுதலும் தவிர்க்கப் பெற்றன என்க.)

'செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பால் ஆன,

தொல் 1155

தேரும் யானையும் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப,

- தொல் 1158

(இதில் தலைவன், தலைவி இருவரும் தேரிலும், யானை, குதிரை மேலும் ஊர்ந்து செல்வதற்கு உரியர் என்றது, இருபாலார்க்கும் சமநிலை தெரிவித்தது.)

'முறைப்பெயர் மருங்கின் கெழுதகைப் பொதுச் சொல்
நிலைக்குரி மரபின் இருவீற்றும் உரித்தே'

- தொல் 1166

(இதில், கணவன், மனைவி இருவரும் அல்லது ஆண் பெண் இருவரும் ஒருவர்க்கொருவர் பெயர் சுட்டி அழைத்துக் கொள்ளுதல், 'எல்லா' என்பது போலும் பொது விளிச் சொல் கூறி, பேசி, அழைத்தல், இவை போலும் பிற உரிமைச் சொற்களை மரபு வழிப் பயன்படுத்திக் கொள்ளுதல் இருவர்க்கும் உரிய என்பதால், ஆண், பெண், வேறுபாடின்றி இயங்குதல் வழக்கிலிருந்தமை உணர்க.

இங்கு 'எல்லா' என்னும் தமிழ் அழைப்புச் சொல்லே, ஆங்கிலர் வழக்கிலும், பிறமொழியினர் வழக்கிலும் Hellow - ஹலோ - எனும் ஆண், பெண் இருவரும் அழைத்துக் கொள்ளும் பொது அழைப்புச் சொல்லாகப்

பயன்பட்டு வருதல் உணர்ந்து மகிழ்தற்குரியது என்க.)

'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான்அமர்ந்து வருஉம் மேவற் றாகும்

- தொல் 1169

(உள்ளத்தால், உணர்வால், உடலால் வரும் இன்பநிலைகள் அனைத்தும், அனைத்து உயிர்களுக்குமே பொதுவாகும். அஃது ஆரியவியல் போல் பிராமணர்க்கோ அல்லது ஆண்களுக்கு மட்டுமோ உரியதன்று என்று இலக்கணப்படுத்திய தமிழியல் பொதுநெறியை இதன் வழி நன்கு உணர்க.

'ஒருதலை உரிமை வேண்டியும், மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்கும் என்று
அஞ்சு வந்த ஆங்கிரு வகையிலும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிக் கண் தோன்றும்'

- தொல் 1171

(இதில், தலைவி அவளின் உரிமையை நிலைநாட்டிக் கொள்ளவும், தன்னைத் தலைவன் பிரிந்து விடுவானோ அல்லது கைவிட்டு விடுவானோ என்னும் அச்சத்தாலும், தான் தனியே யிருப்பின் அவன் தொடர்பு வெளிப்பட்டு ஊர் தூற்றுவதும் பழிப்பதும் நேருமே என்பதாலும், அவன் பொருளீட்டும் நோக்கோடு செல்லுமிடத்தும்கூட, தான் விரும்பிய அல்லது காதலித்த ஒருவனொடு வெளியூர்க்குப் போவதும் அங்கேயே அவனை மணந்து கொள்வதும் நிகழும் என்று கூறப்பெற்றிருப்பது, தமிழியல் பெண்களுக்குத் தந்த உரிமையைக் காட்டுவதாகும்.)

'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய'

- தொல் 1173

(இதில், படுக்கையறையிலும் பெண்ணுக்கு உரிமையுண்டு என்று கூறப்பெறுவது உற்று நோக்கத் தக்கது. இதுதான் தமிழியல். இங்கு அவள் உரிமை மட்டும் நிலைநாட்டப் பெறவில்லை. ஆணை அடிமையும் கொள்கிறாள். 'காமம் காரணமாகவே, இங்கே ஆண் பணிந்து நிற்றல் சொல்லப் பெறுகிறதோ' எனில் அஃதன்று, பிறவிடங்களில் சமநிலை கொண்டவள், இங்கு அவள் உயர்ந்து நிற்பதும், ஆண் பணிந்து நிற்பதும் நிகழ்கிறதே தவிர, ஆரியவியலில் கூறப்பெறுவதுபோல், பெண் எங்கும் ஆணுக்கு

அடிமையே; அவள் படுக்கையறைப் பதுமையே என்பது தமிழியலில் இல்லை என்று உணர்க.)

'நிகழ்தகை மருங்கின வேட்கை மிகுதியில்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே'

- தொல் 1174

(இதில் காமவுணர்வின் மிகுதியாலும், அது ஒருவரால் ஒருவர்க்கு நிறைவூட்டப் பெறுவதாலும், இருவரும் சமநிலை நின்று, ஒருவரை ஒருவர் புகழ்ந்து பாராட்டிக் கூறிக்கொள்ளுதல் செய்வார். அதைத் தவிரார் என்று உரைக்கப்பெற்றதென்க. இஃது ஆரியவியலில் காணப்பெறாத நிலை என்று உணர்க.)

கிழவோள், பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும உரியள்'

- தொல் 1180

(இதில் வேறு பெண்ணை விரும்பும் தன் கணவனைக் கண்டித்துக் கூறுதற்கும், அவனைக் கடிந்து திருத்துதற்கும் மனைவிக்கு உரிமையுண்டு என்று கூறப்பெறுவதால், பெண்ணுரிமைக் கோட்பாடு தமிழியலில் உண்டு என்க.)

இனி, திருக்குறளில் பெண்மைக்குப் பெருமை தரும் கூற்றுகளைக் காண்போம்.

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்' -54

(இதில், பெண்ணின் உள்ள உறுதியே கற்பென்று கூறப் பெறுகிறது. உள்ள உறுதி ஒருமை உள்ளம், கடைப்பிடி, இல்லற இணைவு, மனைமாண்பு, தகைசான்ற சொற்காத்தல், நிறைகாத்தல், புகழ் பெறல் முதலியவை உள்ளடங் கியது) ஆரியவியலில் பிறன் மனைவியை விரும்பலாம் என்று கூறப்பெற் றுள்ளது. (மனுநூல் (5-63) எடுத்துக்காட்டுப் பகுதியுள் காண்க) ஆனால், தமிழியலில் 'பிறனில் விழையாமை' தெளிவாகச் சுட்டப் பெறுகிறது. பிறனில் விழைவாரைத் திருக்குறள்

பேதை (141), அறன் கடை நின்றான் (142), விளிந்தான் (செத் தான்-நடைப்பிணம்), (143), எந்தச் சிறப்பும் இல்லாதவன் (144), பழியுடையவன் (145), பகை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கும் உடையவன் (146), அறத்திற்கு மாறானவன் (147), ஆண்மைக்குறையுடையவன், ஒழுங்கில் லாதவன் (148), நலங்கெட்டவன் (149), அறமில்லாதவன் (150) பரத்தன் (1311)

முதலிய சொற்களால் கடுமையாக இழித்துரைப்பது காண்க.

மேலும், திருமணம் ஆகி இல்லறத்தில் ஈடுபட்ட பெண்ணை, இல்லாள் (52), மனைவி (60), (904) ஆகிய சொற்களால் குறிப்பதுடன், அவளுக்குச் சமநிலை தந்து வேறு எந்நூல் ஆசிரியரும் கூறாத நிலையில் **'வாழ்க்கைத் துணை'** என்றும் பொதுமையும் உரிமையும் புலப்படுமாறு குறித்திருப்பது, தமிழியலை நன்கு புலப்படுத்திக் காட்டுவதாகும்.

இனி, திருக்குறளில் பெண்களைப் பற்றி முழுமையாகக் கூறும் அதிகாரங்கள் ஐந்து ஆகும். அவை, அறத்துப்பால், இல்லறவியலில் **இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், பிறனில் விழையாமை, பொருட்பால், நட்பியலில் பெண்வழிச்சேறல், வரைவின் மகளிர்** ஆகியவை. இவையன்றிக் காமத்துப்பாலில் பலவிடங்களிலும், நூலின் வேறு பகுதிகளில் சிற்சில இடங்களிலும் பெண்களைப் பற்றிய கூற்றுகள் வருகின்றன.

இல்லறவியலில் ஆண் எவ்வளவுதான் பொறுப்புடையவன், கடமையுணர்வுடைய்வன், தலைமை தாங்குபவன், குடும்ப உறுப்பினர்கள் (தாய், தந்தை, மனைவி, மக்கள், உறவினர், நட்பினர்) அனைவரையும் இயக்குபவன் (ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை நோற்கும் (48) தலைமைப் பொறுப்பு வாய்ந்தவன் ஆயினும், அத்தகைய இல்லற வாழ்க்கைக்கே அடித்தளமாக இருப்பவள் பெண்ணே ஆகிறாள் என்பது உலகியல். அவளை வைத்தே இல்லறக் கூறுகள் அனைத்தும் நிறைவு செய்யப் பெறுகின்றன. எனவேதான், பண்டைத் தமிழர் புறச் செயல்கள் அனைத்தும் ஆணை ஒட்டியே நிகழ்வதையும், அகச் செயல்கள் முழுவதும் பெண்ணை ஒட்டியே நிகழ்வதையும் உற்று நோக்கிக் கண்டு **ஆணைப் புறத்துக்கு உரிய தலைவனாகவும், பெண்ணை அகத்துக்குரிய தலைவியாகவும்** மதித்துப் போற்றி ஒழுகினர். அதனாலேயே, பெண்ணை, அகமுடையாள், அகத்துக்காரி, (அகத்துக்குரியவள்), மனைவி (மனைக்குரியவள்(, இல்லாள் (இல்லத்துக்குரியவள்), கிழத்தி (தலைவனுக்கும் அவனைச் சார்ந்த அனைத்துக்கும் உரியவள்) என்று உரிமைப் பொருளும், பெருமைப் பொருளும் தோன்ற (விதந்து) சிறப்புப் பெறக் கூறினர்.

இவ்வகையில், இல்லறவியலில் நிகழும் (இல்வாழ்க்கை மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல் முதலிய) அத்தனைச் சிறப்பியல் கூறுகளும், இல்லறத் தலைவியாகிய ஒரு பெண்ணை முதன்மையாகக் கொண்டே இயங்குவனவாகத் திருவள்ளுவப் பேராசான் உறுதிப்படுத்தினார், என்க. இதனை, அவர்.

> 'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது.'

-45

*'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்*
*பிறன்பழிப்பது இல்லாயின் நன்று'*

-49

என்ற வகையில், புறச் சிறப்பாகவும்,

*மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை*
*எனைமாட்சித் தாயினும் இல்*

-52

*இல்லதென் இல்லவள் மாண்பானாள் உள்ளதென்*
*இல்லவள் மாணாக் கடை*

-53

*புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்*
*ஏறுபோல் பீடு நடை*

-59

- என்ற வகையில் அகச்சிறப்பாகவும் எடுத்துக் கூறினார், என்க. இனி, இவை போலும் இவற்றையொட்டிய கருத்துகளையே முழுமையாக, இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம் என்னும் அதிகாரங்களிலும் திருமணம் ஆன ஆணும், பெண்ணும் பிற குடும்பங்களுடன் பழகுகையில் இருக்க வேண்டிய எச்சரிக்கையைப் 'பிறனில் விழையாமை' அதிகாரத்தும் அடக்கினார்.

இவ்வுலகில் பிறந்த ஒவ்வோர் ஆணுக்கும், பெண்ணுக்கும் உடலியல், மனவியல், உயிரியல், வாழ்வியல் கோட்பாடுகளின்படி, இல்லற வாழ்க்கையே இங்குள்ள அனைத்தினும், மிகு தேவையானதும், இன்றியமையாததும், அனைத்துத் துய்ப்புகளுக்கும், தொண்டறத்திற்கும் தொடக்கமும் முடிவும் ஆகும் என்பதை வலியுறுத்துவான் வேண்டி.

*'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை'*

-47

என்றும்

*'ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை*
*நோற்பாரின் நோன்மை உடைத்து'*

-48

என்றும்

அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை

-49

என்றும்,

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்

-50

என்றும்,

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவது எவன்

– 46

என்றும், பலபடியாக, உலக வாழ்க்கைக்கே இல்லறம்தான் சிறப்புடையது, முகாமையானது, உயர்ந்தது, பொருந்துவது, தவிர்க்கக் கூடாதது, அனைத்து முயற்சிகளுக்கும் மூலமானது, நிறைவுடையது என்றவாறு கூறினார் என்க.

இவற்றுள் கூறப் பெற்ற **முயல்வார், நோற்பார்** என்னும் இரு சொற்களுக்கும், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர் பலரும், துறந்தார், தவம் செய்வார் என்றே பொருள் தந்தாராயினும் அவற்றுக்கு இவ்வுலகின் அனைத்துக் கோட்பாடுகளிலும் முயற்சிகளை உடையவர் (முயல்வார்) என்பதும், அக்கோட்பாடுகளும் கொள்கைகளும் வெற்றிபெற அவற்றிலேயே நோக்கமுடையவராக (நோற்பாராக) இருப்பவர் என்பதும் ஆன பொருள்களும் உண்டு என்றும் கருதுக.

இனி, மேலே உள்ள குறட்பாக்களுள் வரும், அன்பு, அறன், பண்பு, பயன் (45) பழிப்பது (49), மாட்சி (52), மாண்பு (53), புகழ்புரிதல் (59) என்னும் சொற்களையும் நாம் நுணுகிக் காணுதல் வேண்டும்.

- இங்கு, அன்பு என்பது கணவன், மனைவி இருவர்க்கும், ஒருவர் பால் ஒருவர்க்குள்ள பற்றுடைமை, நலம் கருதுதல், ஈடுபாடு, தன்னிழப்பு, ஆர்வமுடைமை, அக்கறையுடைமை, கவனிப்பு, காப்பு, பேணுதல், புரத்தல் முதலிய அத்தனை மனவுணர்வுகளையும் குறிப்பது.

அவ்வாறே அறம் என்பதும், இருவர் மாட்டும் நிகழும் புறவொழுக்கம், பொதுநலவுணர்வு, குடிமை பேணுதல், மாந்த நேயம், இன, நாட்டுக் கடமை - முதலிய அத்தனைச் செயலுணர்வுகளையும்

குறிக்கும்.

- இனி, பண்பு என்பதும் இருவர்க்கு வேண்டிய ஒழுகல் உணர்வு, தன்னைத்தான் கொண்டு இயங்கும் ஒழுக்க உணர்வு, பொது நடக்கை - முதலிய புறவுணர்வுகளையும் செயல்களையும் குறிக்கும்.

- பயன் என்பது, தனிநிலைக் குடும்பப் பயனும், பொதுநிலை உலகப் பயனும் ஆகும். ஒருவர் வாழ்க்கை அவர்க்கும் அவரைச் சார்ந் தவர்க்கும் மட்டன்றி, உலகுக்கும் பயன்படுதல் வேண்டும் என்பதே தமிழியல் கோட்பாடு.

- பழிப்பது என்பது இல்லறத் தாழ்ச்சியையும், அதில் நிகழும் முறைகேடுகளையும் பிறர் பழித்துரைக்கும் படியாக இருப்பது. இவ்வகைப் பழிப்பு ஏதுமின்றி, கணவன், மனைவி இருவரும் கவனமாகச் செயல்படுதல் வேண்டும் என்றார் என்க. குடும்ப வாழ்க்கை பிறர் பழிப்புக்கு உள்ளாகும் பொழுது, அதில் கசப்பும், வெறுப்பும், சலிப்பும், உடைவும், தோன்றுவது இயற்கையாகலின் அவ்வாறுரைத்தார்.

- மாட்சி என்பது, இங்குப் பெண்ணுக்கே கற்பிக்கப்படுவதாகக் கருதலாம். பெண்மைச் சிறப்பே குடும்பத்தின் அனைத்துச் சிறப்பு களுக்கும் பெருமைக்கும் உயர்வுக்கும் உரியவாகையால், பெண்ணுக்கு அது வலியுறுத்தப் பெறுகிறது. இதில் ஆணுக்கு அது வலியுறுத்தப் பெறவில்லையே என்று குறை காண்பார்க்கு, ஆணின் மாட்சிக்கும் பெண்ணுடைய மாட்சியே அடிப்படை ஆகலின், பெண்ணுக்கு அது வலியுறுத்தப் பெறுவது இழுக்கன்று. பெண்ணைத் தாழ்வு படுத்து வதும் அன்று. ஒரு குடும்பத்திற்கு ஆண் குளம் போன்றவன். பெண் அதிலுள்ள நீர் போன்றவள். ஆகலின், அந்நீரைப் போன்ற பெண்ணின் தூய்மை இங்கு வலியுறுத்தப் பெற்ற தென்க. நீராகிய பெண் தூய்மை யிழப்பின் குடும்பக் குளம் இகழ்ச்சிக்கும் பழிப்புக்கும் புறக்கணிப்புக்கும் உள்ளாகும் என்று எச்சரித்தார் என்க.

- மாண்பு என்பது அதுவே என்க. குடும்பச் சிறப்பே பெண்ணின் மாண்பைப் பொறுத்து அமைவது. ஓர் ஆண் நெகிழ்வுறின், பெண் அதனைச் சீர் செய்ய இயல்வதும், ஒரு பெண் நெகிழ்வுறின் ஆணால் அதனைச் சீர் செய்தல் அரிதாவதும் உலகியலாம் என்க. பெண் மாண்பிழப்பின் குடும்பமே மாண்பிழந்து, முன்னிருந்த அத்துணைச் சிறப்பிலும் தாழும் என்பது இங்கு எடுத்துரைக்கப் பெற்றது. இது பெண்ணின் பெருமை கூறப்பெற்றதே யன்றி, சிறுமை கூறப்பெற்றதன்று.

- புகழ்புரிதல் என்பது, குடும்பப் பெண் ஒருத்தியை அவள் குடும்பத் தாரும், பெற்றோரும், உற்றோரும், உறவும், நட்பும், ஊரும் போற் றியுரைத்தல். அவ்வாறு போற்றியுரைக்கும்படி வினைபுரிதல். என்னை? அவள் தன் குடும்பப் பெருமைகளைக் கட்டிக் காப்பதும், சிறப்பைப் பிறர் அறியுமாறு குடும்பச் செயல்களில் பாடாற்றுவதும், பொது நலம் பேணும் தன் கணவர்க்குத் துணை நிற்பதும், தோள் தருவதும், அவனின் செவ்விய போக்கிற்கு ஊக்கம் தருவதும், உதவுவதும், மக்களை அறிவறிந்த மக்களாக வளர்த்தெடுப்பதும், அவர்களின் கல்வி முயற்சிக்கு உறுதுணையாக நிற்பதும், தொடக்க நாளில், திருமணத்தின் பொழுது, தன்னைப் பாராட்டி வாழ்த்தியவர்களின் தகைசான்ற சொற் களைக் காத்துக்கொள்வதும் அவளுக்குப் புகழ்தரும் நடைமுறைகளாம். இச்செயல்கள் தன் கணவனைப் பிறர் முன் நிமிர்ந்து நடக்கச் செய்பவை என்பார் நூலாசிரியர் (59).

இவ்விவ்வாறு இயங்குகின்ற ஒரு பெண்ணே தன் குடும்பத்திற்குத் தலைமை தாங்கி இல்லறத் தலைவி என்னும் பெருமை பெறுகிறாள். இவ்வகையில் அவளுக்குற்ற உரிமைகளும் கடமைகளும் ஏராளம். இதுவே தமிழியல். ஆனால், ஆரியவியலில் அவள் ஒரு குடும்ப அடிமை; கணவற்குப் பணிப்பெண்; குடும்பத்தார்க்கு ஏவலாள்; பிள்ளை பெறும் இயந்திரம். இந்நிலைகள் தமிழியலுக்கு ஏலாவாம் என்க.

இத்தகைய தமிழியல் கோட்பாடுகளும் மரபு வழிப்பட்ட நடைமு றைகளுமே **இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம்** என்னும் இரண்டு அதிகாரங்களிலும் வலியுறுத்தப் பெறுகின்றன; அறிவுறுத்தப் பெறுகின்றன. அவற்றுள் பெண்ணடிமைத்தனம் எங்கும் சொல்லப் பெறவில்லை.

இனி, **வாழ்க்கைத் துணை** நலம் என்னும் அதிகாரத்தின கண் பெண்ணிற்குக் **'கற்பு'** என்னும் ஒரு கோட்பாடு வலியுறுத்தப் பெறுவதும், **'கொழுநன் தொழுதெழுதல்'** என்னும் கணவன் வணக்கச் செயலும் அடிமை நிலையை உணர்த்தவோ எனின், அவை அவ்வாறு இல்லை என்க. என்னை?

'கற்பு' என்னும் சொல் நிறையுடைமை. பெண்ணிற்குக் கற்பிக்கப் பெறுவதோர் ஒழுக்கம். பெரும்பாலும் உடல் வேறுபாடுகளைக் கொண்டே ஆண், பெண் என்று பிரித்துக் கூறப் பெறுகிறது. ஆணின் உடலமைப்பு வேறு; பெண்ணின் உடலமைப்பு வேறு. மற்ற வகையில் உணர்வு நிலையில் அதே போன்று சிற்சில வேறுபாடுகள் உண்டு எனினும், அறிவு நிலையிலும் உயிரியல் நிலையிலும் இருவர்க்கும் இயற்கையமைப்பு ஒன்றே. இந்நிலைகளை மேலும் சிறிது விளக்குவோம்.

ஓர் **ஆண்** என்று சொல்லப் பெறுபவனுக்கு உள்ள அனைத்துக்

கூறுகளிலும் முதலாகவும் முற்றாகவும் வேண்டுவது ஆண்மைக்கூறே. பிற அனைத்து இயற்கை யமைப்பு நிலைகளும், செயற்கைத் தகுதி முயற்சி நிலைகளும், அவ் வாண்மைக் கூறிற்குப் பின் வைத்து எண்ணப் பெறுபவையே. ஓர் ஆணுக்குள்ள ஆண்மைக் கூறை வைத்தே அவன் ஆண் என்று தமிழில் சொல்லப் பெறுகிறான் **ஆடவன்** என்னும் சொல்லிலும் **ஆண்** என்னும் பகுதியே முன் நிற்கிறது.

இவ்வாண்மைக் கூறுதான் ஒரு பெண்ணை அவன் பால் ஈர்க்கிறது; இணைக்கிறது; அவனுடன் ஈடுபடச் செய்கிறது; அவளின் பெண்மையை நிறைவுபெறச் செய்கிறது; அதன்வழி உயிரினத்தை வளர்க்கிறது; பெருக் குகிறது; இவ்வுலகில் நிலைப்பெறச் செய்கிறது. அவனுக்குள்ள பிற இயற்கை யுணர்வுத் தகுதிகளாகிய அன்பு, பண்பு, ஒழுக்கம், அறிவு, திறமை, செயல் முதலிய அனைத்தும் செயற்கை யுணர்வுத் தகுதிகளாகிய கல்வி, தொழில், பொருள், பெருமை, புகழ் முதலிய அனைத்தும் அவனுடைய ஆண்மைக் கூறுக்கு உற்ற துணையுணர்வுகளே. இவற்றால் அவன் ஆண்மை மிளிர்ந்து தோன்றி, அவன் உயிரியக்கத் தன்மை செழிப்பாகிறது. அவன் வாழ்வி யலுக்கு அவை மெருகு தருகின்றன. அவனைப் பிறர் மதிக்கும்படி, ஏற்றுக் கொள்ளும்படி செய்து, **அவன் இருந்தான்** என்னும் நிலையில், புகழ் பெற வைக்கின்றன. மற்றபடி அவனின் எதிர்ப்பாலாகிய ஒரு பெண்ணுக்கு, அவனிடத்திலிருந்து கிடைக்க வேண்டிய முதல் தேவை அவனிடத்துள்ள ஆண்மையே. ஆண்மைதான் அவளை அவனிடத்து நிலை கொள்ளச் செய்கிறது. அவனை மதித்துப் போற்றி நடக்கச் செய்கிறது. அவ்வாண் மைதான் அவனைத் துணிவுள்ளவனாகவும், வீரனாகவும், செயல்திறம் உள் ளவனாகவும் வளர்த்தெடுக்கிறது. அவ்வாண்மை ஏதோ ஒரு நிலையில் குறைவுரின், அவனைச் சார்ந்து இயங்கும் பெண், உடலால் நிறைவின் மையும், பின் உள்ளத்தால் நெகிழ்ச்சியும், அதன் பின் அறிவால் விளர்ச் சியும், அதன் செயலால் வேறுபாடும், அதன் பின் வாழ்வியலால் மாறுபாடும் அடைகிறாள். இவ்வேறுபாடும், மாறுபாடும் அவனிடமிருந்து அவளை விலகிநிற்கச் செய்கிறது. பின் அவளை வேறோர் ஆண்மையன் மீது நாட்டங் கொள்ளச் செய்கிறது. அந்நாட்டம், சூழலாலும், வாய்ப்பாலும் பிறனின் அழுத்த நடவடிக்கையாலும், அவளைப் படிப்படியாய் அறிவாலும் பின் உள்ளவுணர்வாலும், அதன்பின் அன்பாலும் அல்லது பரிவாலும் பின்னர்ச் செயலாலும், இறுதியில் உடலாலும் அவனோடு நெருங்கச் செய்கிறது. பிறகு தன்னை அவனோடு பின்னிப் பிணைத்து அவனுக்காகவே அவளை இயங்கச் செய்கிறது. இவ்வகையில் அவளுக்கு அவள் பெற்றோராலும், மரபாலும்கற்பிக்கப் பெற்ற, அல்லது இயல்பாகவே வலுப்பெற்று நின்ற தன்னொழுக்கம் சிதைகிறது. இவ்வாறு சிதைவதையே **கற்பு கெடுதல்** என்றும், சிதையாமல் **உறுதியுடன்** நின்று ஒழுகுவதையே **கற்பு** என்றும் தமிழ

முன்னோர், சான்றோர் சொல்லிச் சென்றார்கள். உறவால் ஒரு பெண் ஒருவனுக்கும், உடலால் அவள் இன்னொருவனுக்குமாக வாழ்வதை, எவருமே நல்லதென்றோ, சரியென்றோ ஏற்றுக் கொள்வதில்லை. இது மனவியலையும் வாழ்வியலையும் தாக்கமுறச் செய்யும் செயல் ஆகையால், இதனை, ஒரு பெண்ணுக்குரிய நெறியாகவும் ஆக்கினர். இன்றும் கூட இந்நிலையைத் தவறாக உளவியல், வாழ்வியல் அறிஞர்கள் மதிப்பிடு வதில்லை. உயர்மனப் பெண்டிரும் கூட இவ்வுணர்வை ஒப்பவே செய்வர். இவ்வுணர்வைத் திருவள்ளுவர் **திண்மை, மனவுறுதி** என்று போற்றி உரைத் தார். இந்தக் கற்புநிலை ஆணுக்கும் இருக்க வேண்டுவதை அவர் வலியுறுத் தவும் செய்கிறார். பெருமை அதிகாரத்துள் வரும்

*'ஒருமை மகளிரே போலப் பெருமையும் தன்னைத்தான் கொண்*
*டொழுகின் உண்டு' - 974*

என்னும் குறளை ஓர்க.

பெரும்பாலும் ஓர் ஆணுக்கோ, பெண்ணுக்கோ இயற்கையாகவோ செயற்கையாகவோ உள்ள அத்தனை உளவியல், அறிவியல், உடலியல், உணர்வியல் முதலிய கூறுகள் அனைத்துமே சிறந்து இருப்பதில்லை. புறத்தாலும் அகத்தாலும் ஆளுக்கு ஆள் அவை வேறுபடவும், ஏற்றத் தாழ்வாக இருக்கவுமே செய்கின்றன. எனவே ஒரு பெண்மைக்குத் தேவையான ஆண்மையும் ஓர் ஆண்மைக்குத் தேவையான பெண்மையும் கூட, முழு அளவில் அமைந்து விடுவதில்லை. பிறவற்றில் உள்ள வேறுபாடு களையும் ஏற்றத் தாழ்வுகளையும் அமைந்த குறைபாடுகளையும், பெரிதாகப் பொருட்படுத்திக் கொள்ளாமல் அவரவர்க்குற்ற நிறை குறைகளை நிரவலாக்கிக் கொண்டு ஆணும் பெண்ணும் இணைந்து வாழ்வதே சிறந்த வாழ்க்கை என்று எண்ணி நிறைவு பெறுதல் வேண்டும். அதுவன்றி, சூழ்நிலைகளை எதிர்த்து நில்லாமல், அறிவால் அவற்றை வெல்லாமல், அவற்றுக்குப் பணிந்து, திரிந்து அவற்றுக் கேற்ப ஒருவர் மாறிக் கொண்டே போவது நிலையான வாழ்க்கை வெற்றியைத் தருவதில்லை. நிறைவையும் உண்டாக்குவதில்லை.

எனவே, ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்னும் கற்பொழுக்கம் தேவையென்பதை உணர்தல் வேண்டும். இன்னும் சொன்னால் அது பெண்ணுக்கு மிகத் தேவை என்பதையும் நாம் அழுத்தி அறிந்து கொள்ளுதல் வேண்டும். ஆகவே கற்புநிலை பெண்ணின் அடிமை நிலையன்று.

இனி, இறுதியாக நாம் இன்னொன்றையும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அது தமிழியல் கற்புநிலை என்பது வேறு; ஆரியவியலில் கற்பு

வற்புறுத்தப்பெறும் நிலை என்பது வேறு.

தமிழியல் கற்பு என்பது, தன்னைத்தானே கொண்டு ஒழுகுதல். இயல்பானது; குடும்ப நிலையிலேயே மரபுவழி கற்பிக்கப்பெறும் பின்னணி உடையது. திருக்குறளில் சொல்லப்பெற்ற

'நிறைகாக்கும் காப்பே தலை' - 57.

'தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு' - 974.

'நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை போற்றி ஒழுகப் படும்' - 154.

'நல்லாண்மை என்பது) ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்' - 1025.

'செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்' - 1039.

'நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்
மறையிறந்து மன்று படும்' - 1254.

என்னும் குறட்பாக்களை ஓர்க.

இவற்றுடன், பிற கழகத் தமிழிலக்கியங்களில் கற்பெனும் திண்மை உறுதி - வலியுறுத்தப்பெறும் சிற்சில இடங்களையும் இங்குக் காண்க.

'மாசில் கற்பின் மடவோள்' - நற் : 15:7

'முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்' - நற் : 142:10

'நன்றி சான்ற கற்பொடு' - நற் : 330:10

'கடவுள் கற்பின் அவர் எதிர் பேணி' - குறுந் : 252:4

'அடங்கிய கற்பின் நலம்கேழ் அரிவை' - - குறுந்: 338:7

'அருந்ததி அனைய கற்பின்' - ஐங்: 442:4

'ஆறிய கற்பின் அடங்கிய சாயல்' - பதிற் : 16:10

'அறஞ்சால் கற்பின் ஒண்ணுதல்' - பதிற் : 31:24

'உலகந் தாங்கிய மேம்படு கற்பின்' - பதிற் : 59:8

'காமர் கடவுளும் ஆளும் கற்பின் ...... நறுநுதல்'
- பதிற் : 65:9

'பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்

கற்பிறை கொண்ட கமழும் சுடர்நுதல்' – பதிற் 70:14-15

'மீனொடு புரையும் கற்பின் வாணுதல் அரிவை' – பதிற்: 89:19

'அடங்கிய கொள்கை ஆறிய கற்பின் ....ஒண்டொடி' பதிற்: 90:49

'மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்' - பரி 5:46

'நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்' – அகம் 91:24

'மனைமாண் கற்பின் வாணுதல்' - அகம் 33:2

'வணங்குறு கற்பின் மடங்கொள' - அகம் 73:5

'கற்பின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை ஆக' - அகம்: 86:13-14

'மாசில் கற்பின் அணங்குசால் அரிவை' - அகம்: 114:13

'உவர்நீங்கு கற்பின் எம்உயிர்' - அகம்: 136:19

'கடவுள் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின் நன்னராட்டி'

- அகம்184:1-3

'ஆன்ற கற்பின் சான்ற பெரியள்' - அகம் 198:12

'முல்லை சான்ற கற்பின் மெல்லியள் குறுமகள்' - அகம் 274 :13

'கடவுள் கற்பின் மடவோள்' - அகம்: 314:15

'செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ' - புறம்: 3:4

'வடமீன் புரையும் கற்பின் மடமொழி அரிவை' - புறம் 122:8

'பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்' - புறம்: 163:2

'மறம் கடிந்த அருங்கற்பின் .....நின்துணைவியர்' - புறம்: 166:13

'நாணல தில்லாக் கற்பின் வாணுதல்' புறம்: 196: 13

'கடவுள் சான்ற கற்பின் சேயிழை' - புறம்: 198.3

'அடங்கிய கற்பின் ஆய்நுதல் மடந்தை' - புறம்: 249.10

'கற்புடை மடந்தை தற்புறம் புல்ல' -புறம்: 383.13

'நிலைஇய கற்பினாள்' - கலி: 2.13

'வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்' - கலி: 2.22

'இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்' - கலி: 9.22

இனி, ஆரியவியலில் கூறப்பெறும் கற்பு என்பது, கணவன் குடும்பத்தில் உள்ளார் அனைவரும், பெண்ணை அடக்கி ஆண்டு, ஒடுக்கி உடல்வருத்திச் சொல்லாலும் செயலாலும் தாக்கிக் கொடுமை செய்து, நிறையழியாமல் நிற்கச் செய்வதாம் ஒரு வன்முறை சான்றதாகும் என்க. இவற்றை முன் காட்டிய மனுநூல் சான்றுகளில் தெளிந்து கொள்க.

இனி, இவற்றை மேலும் விளக்கின் மிக விரியும் ஆகலின் இதனை இத்துடன் நிறுத்தி மேலே செல்வாம்.

அடுத்து, பெண்ணடிமைக் கருத்து எனக் கருதும் **'கொழுநன் தொழுது எழுதல்'** (55) என்னும் குறளியக் கூற்றைச் சிறிது விரிவாகப் பார்ப்போம்.

**'தொழுதல்'** என்பது மனத்தால் நினைந்து வேண்டி வணங்குதல்.

**'கொழுநன்'**- கொள் என்னும் வேரடியாகப் பிறந்த சொல். தன்னைக் கொண்டவன். அதாவது தன்னை அன்பாலும் அறத்தாலும் பண்பாலும் பயனாலும் (45) மனைவியாக ஏற்றுக்கொண்டு வாழ்வளிப்பவன்.

**'கணவன்'** என்னும் சொல் தன்னைக் கூடுதற்கு உரியவன் என்று பொருள் தரும். கணம்-கூட்டம். கண-கூடுதல், சேர்தல், இணைதல்.

'கூடுதற்கு உரியவன்' என்று பொருள் தரும் சொல்லாகிய கணவன் என்னும் சொல்லே, கழக இலக்கியங்களுள் மிகப் பரவலாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இது உடலியல் தழுவிய சொல்லாதலின், இது முதுதமிழ் மாந்தவினத்தின் முதல் தோற்றச் சொல்லாக இருந்திருத்தல் வேண்டும்.

**'கொழுநன்'** என்னும் சொல், உளமும், அறிவும் உரிமையும் கலந்த சொல்லாதலின், தமிழ மக்களிடை நாகரிகம் வளர்ந்து பண்பாடு தோன்றிய பின் உருவாகிய சொல்லாதல் வேண்டும்.'

'இவ்விரு சொற்கள் தவிர, **தலைவன்** என்னும் சொல்லும் **கிழவன், கிழவோன்** என்னும சொற்களும், பொருளுடைமைக் குமுகாயம் தோன்றிய பின்னர்த் தோன்றிய சொற்களாக இருத்தல் வேண்டும். ஏனெனில் 'தலைவன்' என்பது குடும்ப அல்லது இல்லற ஆளுமை முதல்வன் என்னும் பொரு ளிலும், கிழவன் கிழவோன் என்பது பெண்ணுக்கும், அவள் வாழ்வுக்கும் உரியவன் என்னும் பொருளிலும் வருகின்றன. கிழமை-உரிமை. இம் மூன்று சொற்களுமே 'கண்வன்' என்னும் சொல்லுக்கு அடுத்தபடி கழக இலக்கி யங்களில் மிகுதியாக ஆளப்பெற்றுள்ளன. அதிலும் கிழவோன், கிழவன்

என்னும் சொற்கள் மிகவும் அதிகமாகவே ஆளப்பெறுகின்றன. இவ்வனைத்துச் சொற்களுமே தமிழும், தமிழினமும் மிகமிகப் பழமை வாய்ந்தன என்பதைத் தெளிவாகக் காட்டுவனவாம். என்க. ஆனால், **'கொழுநன்'** என்னும் அன்பும் அறிவும் இணைந்த **பண்பியல் சொல்** கழக இலக்கியங்களில் குறைவாகவே ஆளப்பெற்றுள்ளது சிந்திக்கத் தக்கது. இச்சொல் முன்னவற்றுக்குப் பிந்திய சொல்லாக இருக்கலாம்.

ஆனால் திருக்குறளில், கணவன், 'கூட்டத்துக்குரியவன்', தலைவன் (குடும்பத் தலைமை தாங்குபவன்) என்னும் இரு சொற்களுமே ஆளப் பெறவில்லை.

இனி, **கொழுநன்** (55) **கிழவன்** (1039), **கொண்கண்** (1186, 1265, 1266, 1283, 1285) என்னும் மூன்று சொற்களையே திருவள்ளுவர் கணவனைக் குறிக்கப் பயன்படுத்துகிறார். அதுவும் முதல் இரண்டு சொற்களையும் ஒவ்வொரு முறையும் பின் ஒரு சொல்லை மட்டும் ஐந்து முறையும் பயன்படுத்தியுள்ளார்.

இவற்றுள், 'கிழவன்' என்பதை 'நிலத்துக்குரியவன்' என்னும் பொரு ளிலேயே பயன்படுத்தியுள்ளார். அது,

*செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து*
*இல்லாளின் ஊடி விடும்* - *103*

என்பது. இதில்கூட நிலத்தை இல்லாளுக்கு இணையாகச் சொல் லுவதால், 'கிழவன்' என்பதற்குக் கணவன் என்று ஒருபுடை உவமையாகப் பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது.

இனி, இதைத் தவிர்த்துப் பார்ப்பின், கணவனைக் குறிக்கப் பயன்படுத்திய 'கொழுநன்' என்று வருவது மனைவி 'தொழுதெழும்' எனும் கருத்துக் கூறும் அவ்வொரு (55) குறளிலேயே என்க. இனி, அவர் மிகுதியாக ஐந்துமுறைப் பயன்படுத்திய 'கொண்டான்' என்னும் சொல்லையும், தன்னை மனைவி யாகக் கொண்டவன் என்னும் பொருள்தரும் படியே பயன்படுத்தியுள்ளார் என்பதையும் கவனித்தல் வேண்டும். 'கொண்டான்' என்பதை இன்னும் ஒருபடி மேலே **'தற்கொண்டான்'** (56) என்றும் விரிவுபட விளக்கிப் பேசுவார். இதற்குப் பொருள் 'தன்னை அன்பாலும், மதிப்பாலும், உரிமையாலும், தான் பெருமைப்படும்படியும், இணையாகவும், சமநிலையாலும் தன்னை மனைவியாகக் கொண்டவன்' என்பதே. அவ்வாறு தன்னை மதியாதவனைத் தானும் பெருமையாக மதிக்க அல்லது கருத இயலதன்றோ? எனவே 'தன்னைக் கொண்டவன்' என்னும் பொருளில் 'தற்கொண்டான்' என்றார் என்க.

அடுத்து, இக் 'கொண்கண்' என்னும் சொல்லும் கொண்டான் என்னும் சொல்லும் கழக இலக்கியங்களில் ஆளப்படுபவையே ஆயினும் இவர் விதந்து கூறிய **'தற்கொண்டான்'** என்னும் தொகைச் சொல் இவர் மட்டுமே

புதுவதாகப் புனைந்து கொண்ட சொல்லே என்க. இச் சொல்லாட்சி ஒன்றே திருவள்ளுவப் பேராசானின் பெண்ணியல் மதிப்பைத் தெளிவாகக் காட்டுவதாகும், என்க. 'தான் மட்டும் அவனைக் கணவன் என்று கொண்டால் போதாது. அவனும் தன்னை 'மனைவி' என்று கொள்ள வேண்டும்; அவ்வாறு தன்னை மதிப்பவனையே கருதுபவனையே தானும் கணவனாக மதித்தல் வேண்டும்' என்னும் பெண்ணியல் பெருமைக் கருத்தை சமவுரிமையைப் புலப்படுத்தும் கருத்தை, இவர் உணர்த்தும் பாங்கு மதித்துப் போற்றும் தன்மையது. இதனைப் பெண்ணுரிமை பேசும் அனைவரும் எண்ணிப் பார்த்தல் வேண்டும் என்க.

இனி, கொழுநன் தொழுதெழுதல் என்னும் கருத்துக்கு வருவோம்.

ஒன்றைத் தொழுதல் என்னும் மனவுணர்வுப் பழக்கம் பெரும்பாலும் மிகப் பழங்காலத்திலிருந்தே வருவது. இஃது முதலில் அச்சம் காரணமாகத் தோன்றிப் பின்னர் அன்பு, அடக்கம், தலைமை முதலிய உணர்வும் தேவையும் மிகுந்த நிலையில் வளர்ந்து, அதன் பின்னர்த் தெய்வம், கடவுள் ஆகிய நிலைக்கு வந்ததாகலாம்.

ஒருவரை ஒருவர் வணங்கிக் கொள்ளுதலும், பின் மிகுந்த மதிப்புடன் தொழுவதும் அடிமைத் தன்மை என்று கருதவியலாது. கதிரவனைத் தொழுதல், பிறையைத் தொழுதல், விண்மீன் தொழுதல், தெய்வம் தொழுதல், கடவுளைத் தொழுதல், அரசனைத் தொழுதல், பெற்றோரைத் தொழுதல், பெரியோரைத் தொழுதல், குடும்ப முன்னோரைத் தொழுதல், குலத் தலைவனைத் தொழுதல், மறவரைத் தொழுதல், நடுகல் தொழுதல், ஆற்றைத் தொழுதல், பறவையைத் தொழுதல், பாம்பைத் தொழுதல், புற்றைத் தொழுதல், ஆ (பசு) வைத் தொழுதல், யானையைத் தொழுதல், விளக்கைத் தொழுதல், மரத்தைத் தொழுதல், பிணத்தைத் தொழுதல், புதைவிடத்தைத் தொழுதல், சிலையைத் தொழுதல் முதலிய பல்வேறு தொழுகைகள் பல்வேறு மக்களிடமும், படித்தவர், படியாதவர் அனைவரிடமும் உலகெங்கும் பரவியிருந்ததை இலக்கியங்களும் வரலாறுகளும் நமக்குச் சொல்லும். இவையெல்லாம் பல்வேறு அடிப்படையில் நிகழ்கின்றன. தெய்வங்களைத் தொழாதவர் தலைவர்களையும், தலைவர்தம் சிலைகளையும் படங்களையும் அவர்தம் புதைமேடைகளையும் தொழுது வருவதை நேரடியாகப் பார்க்கிறோம். தொழுதல் உணர்வை ஏதோ ஒரு வகையில் மதிப்பீடாகவோ, பின்பற்றுதலாகவோ, வழிபடுதலாகவோ, வழிபாடாகவோ தெரிந்தோ, தெரியாமலோ, அறிந்தோ, அறியாமலோ, காரணம் கற்பித்தோ, கற்பியாமலோ ஒவ்வொருவரும் செய்து வருகிறோம். ஏதோ ஒரு வகையில் எதையோ ஒன்றை அல்லது எவரையோ ஒருவரை, ஒருவர் தொழாமல் இருப்பதென்பது அரிதே. இவ்வாறு இப்பழக்கம் வழக்கமாகி, வழக்கம் வாழ்க்கையாகப் போய்

விட்டது. இன்றும்கூட காலில் விழுந்து வணங்கும் வழக்கம் பரவலாகவே பலரிடம் காணப்பெறுகின்றது.

இவ்வாறு தொழுவது ஓர் அன்பின் அடிப்படையில் தோன்றி இறுதியில் நம்பிக்கை நிலையில் நிகழ்கிறது என்பதை உணர்தல் வேண்டும். இந்த வகையான பலவகைத் தொழுகைகள் கழக இலக்கியங்களில் நிரம்ப உண்டு. அவற்றுள் சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டுவோம். பல்வேறு தொழு தல்களைக் காணலாம்.

'நல்லோர் ஆங்கண் பரந்து தொழுது'.ஐங் : 390:1

'தொழுது காண் பிறை' குறுந் : 178:5

'வழுதி வாழி பல' எனத் தொழுது' நற் : 150:4

'பெருங்கடற் சேர்ப்பன் தொழுது' நற் :245:12

'பல்வேல் இரும்பொறை நின்கோல் செம்மையின்
நாளின் நாளின் நாடு தொழுது ஏத்த' பதிற் : 89:10

'ஆழி முதல்வநிற் பேணுதும் தொழுது' பரி :2:19

'நின்ஆர்வலர் தொழுது ஏத்தி' பரி :4 : 2

பெரும்பெயர் இருவரைப் பரவுதும் தொழுது - பரி : 15:66

'உடங்கமர் ஆயமொடு ஏத்தினம் தொழுதே' பரி : 19:105

'வென்றிக் கொடி' அணி செல்வ நிற்றொழுது' பரி : 21:17

'ஒன்றார்த் தேய்த்த செல் நிற்றொழுது' பரி :21:70

'வடமீன் போல் தொழுது ஏத்த' கலி : 2:21

'புள்ளுத் தொழுது உறைவி' . அகம் :351:17

இவ்வகையில், அக்காலத்துப் பெண்டிர் சிலர், அன்பின் மிகுதியால், அல்லது நம்பிக்கையினால், அல்லது பத்திமையால் தங்கள் கணவரைத் தொழுதிருக்கலாம். இன்றைய நிலையிலும் பெண்டிர் கணவரைத் தொழு தலும் வணங்குதலும் உண்டு. இது பிழையன்று. குற்றமும் அன்று. மூட நம்பிக்கையும் அன்று. கழகக் காலத்தில் மனைவி கொழுநனை வணங்கியது போலவே கணவனும் மனைவியை வணங்கிய குறிப்பும் காணப்படுகிறது.

'நீயும் தொழுதகை மெய்யை' அகம் : 310:8

என்று தலைவன் ஒருவன் தலைவியை வணங்குகிறான். இராமாயணத்தில், தசரதன், கைகேயியைக் காலில் விழுந்து வணங்குவதாகக் கம்பர் பாடியுள்

ளதும், எண்ணத்தக்கது.

இனி, மனைவி கணவனைப் பிற நேரங்களில் தொழுவது அல்லது வணங்குவது இக்குறளில் கூறப் பெறவில்லை. கணவனுடன் ஒன்றித் துயின்ற மனைவி, அவனுக்கு முன் எழுகிறாள். எழும்பொழுது தன் கணவனை மனத்தால் தொழுது எழுகிறாள். அவனை நிற்கவைத்துப் பின்னர், காலில் விழுந்து, அல்லது குனிந்து காலைத் தொட்டுத் தொழுது எழவில்லை. படுக்கையிலிருந்து கண் விழிப்படைந்ததும், கணவனை மனத்தால் எண்ணித் தொழுது அதன் பின்னரே படுக்கையினின்று எழுகிறாள் என்ற குறிப்பே குறளில் காணப்பெறுகிறது. எழுந்து தொழவில்லை. 'தொழுது எழுதலே' குறிப்பிடப்பெறுகிறது. மேலும், வணங்குதலுக்கும் தொழுதலுக்கும் சில வேறுபாடுகள் உண்டு.

வணங்குதலில், கைகூப்புதல் உண்டு; தலைதாழ்தல் உண்டு; குனிதலும் உண்டு; இனி, கீழே குனிந்து காலைத் தொட்டு வணங்குதலும் உண்டு; சில பொழுது தரையில் உடல் தோய கையும் தலையும் பாதந்தொட வணங்கு வதும் உண்டு. இதில் மிக முகாமையானது. ஆளோ, படிமமோ, சிலையோ எதுவோ, வணங்கப் பெறும் ஒன்றை நேருக்குநேர் நின்றுதான் வணங்குதல் உண்டு. எங்கோ இருந்து கொண்டு எங்கோ உள்ள ஒன்றை வணங்கினான் என்று கூறுதல் மரபுப் பிழை.

ஆனால், தொழுவது நேருக்கு நேராக நின்றும் தொழலாம்; நேருக்கு நேராக அல்லாமல் எங்கேயோ எந்த நிலையிலோ இருந்து கொண்டு ஒன்றையோ ஒருவரையோ மனத்தால் வழிபடுவதும் செய்யலாம். ஆனால் பெரும்பாலும் மனத்தால் எண்ணி வழிபடுவதைத்தான் 'தொழுதல்' என்னும் சொல்லால் குறிப்பார். இக்குறளில் 'தொழுதல்' குறிப்பு அவ்வகையில்தான் காணப்படுகிறது. 'தொழுதெழும்' குறிப்பும் காணப்படுவதால், இரவில் கணவனுடன் உறங்கிய மனைவி, **விடியலில் கண்விழித்த பொழுதில், படுத்த நிலையிலேயே, மனத்தால் கணவனைத் தொழுதுவிட்டு, அதன்பின் எழுகிறாள்** என்றுதான் பொருள் கொள்ளுதல் வேண்டும் என்க. மற்றும் இதில், கணவன், மனைவியைக் கட்டாயப்படுத்தித் தன்னைத் தொழச் செய்வதோ, மனைவி, கணவன் நின்ற நிலையில் தொழுவதோ குறிக்கப் பெறவில்லை. மனைவி அவன் மேல்வைத்த அன்பாலோ, பற்றினாலோ அவன் விழித்தெழாமுன், அவனுடன் படுத்துள்ள நிலையிலேயே, மனத்தால் தொழுது, பின் எழுவது தான் குறிப்படப்பெற்றுள்ளது. அதுவும் அவள் விருப்பமாகத்தான் தொழு கிறாள். இது மன உணர்வின் பாற்பட்டது. மேலும், மனைவி இத்தொழு கையை தன் மனத்துள்ளேயே நிகழ்த்துகிறாளாகையால், இது கணவனுக்கும் தெரியாது. தெரிந்தால், ஒருவேளை அவன் தன்னை இறப்ப மதித்துக் கொள் ளலாம்; பெருமையடையலாம்; செருக்குக் கூட அடையலாம். ஆனால்,

நிலை அவ்வாறில்லை. அவள் அவனறிய அவனைக் கைகூப்பியோ மண்டியிட்டோ காலைத்தொட்டோ வணங்குவது இங்கு சொல் லப்பெறவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். எனவே, இதில் பிழையோ, அடிமைத்தனமோ இருப்பதாகச் சொல்ல முடியாது. இஃது பெண்டிற்கிருந்த, இருக்கின்ற வழக்கமே. இதையே நூலாசிரியர் இங்குக் குறிப்பிடுகின்றார். இந்த வழக்கம் நம்பிக்கை உணர்வுடன் கூடியது. இவ்வழக்கம் அக்காலத் திலும் இருந்தது. சில பெண்களிடம் இக்காலத்தும் இருக்கிறது. அறவே இல்லையென்று சொல்ல முடியாது. இவ்வாறு செய்வது, தாங்கள் பிழைபடாமல் இருக்கச் செய்கிறது என்னும் நம்பிக்கை பெண்களிடம் இருந்தது என்பதற்குக் கீழுள்ள சான்றைக் காண்க.

குறவர் மடமகளிர் தாம் பிழையார் கேள்வர்த் தொழுது எழலால்,
தம் ஐயரும் தாம் பிழையார் தாம் தொடுத்த கோல்

கலி : 39:16-18

இதில் தாங்கள் மட்டுமன்றித் தம் கணவன்மாரும் தங்கள் செயலில் பிழைபடார் என்னும் கருத்து கவனிக்கத் தக்கது.

இங்கு இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். பெண்கள் தம் கணவரைத் தொழுதெழுவதைக் குறித்த நூலாசிரியர், அவர்கள் வேறு தெய்வங்களைத் தொழமாட்டார்கள் என்று கூறுவதையும் சிந்தித்தல் வேண்டும். கற்புடைய பெண்டிர் தம் கணவரையன்றி வேறு தெய்வங் களைத் தொழ மாட்டார்கள். அதற்காக அத்தெய்வங்கள் தங்கியுள்ளதாகக் கருதப்பெறும் கோட்டங்களுக்கோ கோயில்களுக்கோ செல்லமாட்டார்கள் என்பதைக் கண்ணகி வாயிலாக, இளங்கோவடிகள் கூறுவதையும் சிலப்பதி காரத்தில் காணலாம்.

தேவந்தி, கண்ணகியிடம் பல தெய்வக் கோட்டங்களைத் தொழுது வரக் கூறி அழைக்கிறாள். அதற்கு அவள் அது பெருமை இல்லை (பீடு அன்று) என்று கூறி மறுக்கிறாள்.

'சோம குண்டம் சூரிய குண்டம் துறைமூழ்கி,
காமவேள் கோட்டம் தொழுதார், கணவரொடு
தாம்இன் புறுவர் உலகத்துத் தையலார்;
போகம் செய் பூமியினும் போய்ப் பிறப்பர்; யாம் ஒருநாள்
ஆடுதும்' என்ற அணிஇழைக்கு, அவ்ஆய்இழையாள்,
'பீடுஅன்று' என இருந்த பின்னர்,

- சிலப். கனாத்திறம் -59-64

இந்நூல் வழக்கொடு 'கற்புடைப் பெண்டிற்குக் கணவனே தெய்வம்' என்னும் உலக வழக்கையும் ஓர்ந்தே, 'தெய்வம் தொழாள்' என ஆசிரியர் இங்கு உரைத்தார், என்க.

அத்துடன், தெய்வம் என்பது 'வையத்துள் வாழ்பவள் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் (50) என்று இவரே கூறியிருந்தாலும், அதனால், பிற தெய்வங்கள் மனைவிக்கு அயலானவர்களாகவே இருத்தல் வேண்டும் ஆதலாலும், கற்புள்ள பெண் தன் கணவனையன்றி வேறு தெய்வங்களைத் தொழ மாட்டாள், என்று கூறினார் என்க.

இனி இவ்வாறு பெண்கள் கொண்ட கற்புணர்வால், மழையையும் பெய்விக்க முடியும் என்ற கருத்தும் அக்காலத்து இருந்தது என்பதற்குக் கீழ்வரும் செய்யுளடி சான்று பகர்கிறது.

'வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்' - கலி: 116:20

இதில் வானம் மழை பொழிவியாது வறண்டுவிடின், அக்கால், மழையைப் பெய்விக்கச் செய்யும் கற்பை உடையவள் என்னும் கருத்து கூறப் பெற்றிருப்பதைக் கவனிக்க. இங்கு 'வான்' என்பது மழையைக் குறிக்கும். 'தரும்' என்பது பெய்விக்கும் என்னும் பொருளது.

எனவே, இதுவரை கூறப் பெற்ற கருத்துகளாலும், காட்டப் பெற்ற சான்றுகளாலும், பெண் கற்பு நிலைக்கு உகந்தவள் என்பதும், அவள் தன் விருப்பமாகக் கணவனை மனத்தால் தொழுவது, அவ்வாறு தொழுது எழுவதும், வழக்கம் என்பதும், ஒருவகையில் அது அவள் தன் கணவன் மேல் வைத்த அளவிறந்த அன்பையும் பற்றையுமே காட்டும் என்பதும், அவ்வாறு பத்திமை கொண்ட பெண் மழையையும் வருவிக்கும் ஆற்றலையும் பெற முடியும் என்பதும், இஃது, அக்காலச் சூழ்நிலையில் மக்களிடம் பரவலாக இருந்து வந்த நம்பிக்கையின் பாற்பட்ட ஒரு கருதது என்பதும் அதையே, இக்குறளில் திருவள்ளுவப் பேராசன் குறித்துள்ளார் என்பதும் இஃது பெண்ணடிமைத் தனத்தையோ ஆணாளுமையையோ குறிப்பிடாது என்பதும், நன்கு விளக்கப் பெற்றன என்க.

இனி, **'இல்லறவிய'**லில் வரும் **'பிறனில் விழையாமை'** அதிகாரத்திலும் பெண்ணிழிவுக் கருத்துகள் சில இருப்பனவாகச் சொல்லப்படுகிறது. அவற்றையும் ஆய்ந்து உண்மை காணுவோம்.

'பிறனில் விழையாமை' என்பது, பிறனுடைய இல்லாளை ஆசையால் விரும்பாமை ஆகும். இதன் விரிந்த பொருளும் விளக்கமும் நூலுரையில் சொல்லப் பெற்றுள்ளன. அவற்றை அங்குக் கண்டு கொள்க.

இங்கு அவ்வதிகாரத்தின்கண் ஆசிரியர் கூறியுள்ளதாகக் கருதும்

ஆணாளுமைக் கருத்துகளை மட்டும் ஆய்வோம்.

இதில், 'பிறன் பொருளாள்' (141), 'பிறற்குரியாள்' (149), 'பிறன் வரையாள்' (150) என்னும் மூன்று சொல்லாட்சிகளும், பெண்ணை ஒருவனுக்கு உரிய பொருளாக மதிப்பிட்டுச் சொல்வது, அவளை அஃறிணைப் பொருளாகச் சொல்லப்படுவது என்பது சிலர் கருத்தாகும். அவ்வாறு அவர்கள் கருதுவதற்கு இவற்றுள் வரும் 'பொருள்', 'வரையாள்' என்னும் சொற்களே காரணம் என்பர்.

'பொருள்' என்னும் சொல், அஃறிணைப் பொருளாகிய, (thing என்று சொல்லப்பெறும்.) பணம், பொன், நகை முதலிய செல்வ உடைமைகளை மட்டுமே குறிப்பதாகாது. அது உரிமைப் பொருளில் உயர்திணைகளையும் குறிப்பதாகும் என்பதை உணர்தல் வேண்டும்.

தம்பொருள் என்பதம் மக்கள் – (63)

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் (751)

– ஆகிய இடங்களில் இச்சொல் உயர்திணையாகிய மக்களையும் குறித்ததை உய்த்துணர்க. பொருள் என்பது உயிரல் உடைமைப் பருப் பொருள்களையும் குறிப்பது போலவே, உரிமை, உடைமை கருதி அஃது உயிருள்ளவர்களையும் குறித்ததாகும்.

இங்கும், மனைவி கணவனின் உரிமைக்கும் உடைமைக்கும் இலக்காகி றாள். 'ஒருவனுடைய மனைவி' என்று கூறும் இடத்து அவள் அவனுடைய உடைமைப் பொருளாகும் 'உடைய' என்னும் சொல் வருவதைக் காண்க. 'உடையவள்' என்னும் ஒரு சொல் மனைவியைக் குறிக்கும் ஒரு சொல்லும் ஆகும் என்க.

ஒருவன் எத்தனைப் பொருள் உடைமைகளைக் கொண்டிருந்தாலும், அவள் மனைவியே அவனுக்குப் பொருள் பொதிந்த முழு உடைமையாவாள். இவ்வுரிமை உணர்வாலும், உடைமை நிலையாலுமே, இங்குப் 'பிறன் பொருள்' பிறற்கு 'உரியாள்' என்னும் சொல் தொடர்கள் ஆளப்பெற்றன. மற்று, அவளை ஓர் அஃறிணைப் பொருளாகக் கருதிக் கூறினாள் என்று எண்ணவே இடமில்லை.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற -61

- என்னும் குறளுள், உயிருள்ள மக்களை, ஒருவன் அல்லது ஒருத்தி பெற வேண்டிய பேறுகளில், பேற்றுப் பொருள்களில் ஒன்றாகக் கருதுவதும் இதுபோலவே என்க.

இனி, 'பிறன் வரையாள்', 'பிறன் மணந்து கொண்டவள்' என்பதிலும் எந்தத் தாழ்வும் இழிவும் இல்லை. வரைதல் – மணத்தல், எல்லைப்படுதல் என்று பொருள் தரும்.

எனவே, மேற்கூறிய சொற்களுள் ஆணாளுமையோ பெண்ணடிமை யுணர்வோ உள்ளன என்பதற்கு இடமேயில்லை என்று உறுதி கொள்க.

அடுத்து, **'பெண்வழிச் சேறல்', 'வரைவின் மகளிர்'** என்ற பெண்ணியல்பாடு களைக் குறிக்கும் இரண்டு அதிகாரங்களும் 'பொருட்பாலி'ல், 'நட்பியலி'ல் வருவனவாம். இவ்விரு அதிகாரங்களுக்கும் ஓர் அடிப்படை உண்மை உண்டு. நட்புணர்வில் நண்பர்கள் மட்டுமே அன்றி, மனைவியும், விலைமகளும் அடங்குவர். மனைவி மணவுரிமை பெற்றாலும், அவள் கணவனுக்கு ஒரு நல்ல நண்பியே. மனைவிக்கும் அவள் கணவன் நல்ல நண்பனே. உடலுறவாலும், உடைமை உரிமையாலும், மக்கள் பேற்றாலும் சில கடமை உணர்வாலுமே அவர்கள் கணவன், மனைவி என்று அழைக்கப் பெறுகின் றனர். மற்ற பிற பொது நடைமுறைகளாலும், பழக்க முறைகளாலும் சில குடும்பச் செயல்களாலும் அவர்கள் நல்ல நண்பர்களே.

இதுபோல்தான், கணவன் சிற்சிலகால் தொடர்பு கொள்ளும் விலைமகள் ஒருத்தியும். அவள் தொடர்பும் தீய நண்பர் சிலரால் அல்லது அவளிடம் நேரிடையாகக் கொண்ட பழக்கத்தால் ஏற்படுவதே ஆகும்.

இதுபற்றியெல்லாம் உரையுள் விரிவாகப் பேசப்பெறும்.

இங்கு, இவ்விரண்டு அதிகாரங்களிலும், ஆணாளுமையும் அல்லது பெண்ணடிமையுணர்வும் உள்ளனவாகக் கூறப்பெறும் கருத்துகளை மட்டுமே ஆய்வோம்.

**'பெண் வழிச் சேறல்'** என்னும் அதிகாரத்தின் பொருள், 'பெண்மைச் சுவை கொண்டு, மிகு காம உணர்வில் தன் மனைவியிடம் அளவுக்கு அதிகமான உடலுறவு நோக்கத்துடன் தன் கடமையுணர்வுகளில் வழுவியும், அவளை நிறைவு செய்ய, அவளுக்கு அடிமைச் செயலால் ஒழுகுதலும் கூடாது' என்பதேயாகும். சுருங்கச் சொல்வதனால், 'தன் மனைவியிடம் கழிகாம உணர்வுடன், அவளை ஒரு நுகர்ச்சிப் பொருளாகக் கருதித் தன்மானமும், தன் ஆளுமை மானமும் இழந்துவிடக் கூடாது' என்பதேயாம்.

இத் தலைப்புப் பொருளிலேயே, பெண்ணிழிவும், பெண்ணியற் கொடு மையும், அவளை ஒரு நுகர்ச்சிப் பொருளாக மட்டும் கருதி விடக் கூடாது என்னும் உரிமை மீட்சிக் கருத்தும் புலப்பட வில்லையா? இது சார்ந்த உடலியல், பாலியல், உணர்வியல் கூறுகளெல்லாம் நூலுரையில் நன்கு விரிவாக விளக்கப் பெறுமாயினும், இங்கு, இவ்வதிகாரமும், அதிகாரக்

கருத்துகளும், பெண்ணடிமைக் கருத்துகள், ஆணாளுமைக் கருத்துகள் கொண் டிருக்க வில்லை என்பதுடன், அவற்றுக்கு எதிரானவை என்பதும் ஒருவாறு விளக்கப்பெறும். இதுவே இவ்வகையில் தமிழியலையும் விளங்கிக் கொள்ளும் ஒரு முயற்சியுமாகும்.

இஃதிவ்வாறிருக்க, இவை, பெண்ணுக்கு இழிவையும் தாழ்வையும் கற்பிக் கின்றன என்று எவ்வாறு தவறாகக் கொள்ளப்பெற்றனவோ, எனில் அஃது உரையாசிரியர் சிலரின் தவறான விளக்கத்தின் பாற்பட்டெழுந்த விளைவாகும் என்க. என்னை?

இத்தலைப்புக்குப் பொருள் கூற வந்த பரிமேலழகர் முதலிய சிலரும் அவர்களையொட்டி, இறுதி நிலையாகப் பாவாணரும், கீழ்வருமாறு ஒரு தவறான விளக்கத்தைத் தந்துள்ளனர். அவை இவையாகும்:.

அற்றைப் பரிமேலழகர் தம் தலைப்புரையில் **அதாவது, தன் வழி 'ஒழுகற் பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல்,** என்று கூறுவதும் இற்றைப் பாவாணரும் அக்கருத்தை வழிமொழிந்தும், மொழி மொழிந்தும், **அஃதாவது, காம வின்பக் கழிபேராசை பற்றி, தனக்கு அடங்கி நடக்க வேண்டிய தன் மனைவிக்குத் தான் அடங்கி நடத்தல்'** என்று உரை செய்ததுடன் நில்லாமல், 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' என்று வாழ்வியலுக்குப் பொருந்தாத பெண்ணடிமைப் பழமொழி ஒன்றையும், பொருந்தாமல் எடுத்துக் கூறுவதும், பெண்ணை அடிமை செய்வதும், ஆணாளுமைக் கருத்தை ஊக்குவிப்பதுமான கருத்துரைகளாகும் என்க. இவற்றை இன்னும் சிறிது விளங்கக் கூறுவோம்.

பொதுவாக, உயிர்க் கூற்று நிலையில், மக்களிடத்துச் சிலர்க்கு உள்ளத்தின் உணர்வு மிகுதியாக இருக்கும். சிலர்க்கு அறிவுணர்வு மிகுதியாக இருக்கும். இன்னும் சிலர்க்கு உடலுணர்வு மிகுதியாக இருக்கும். உள்ள உணர்வு மிகுதியாக இருப்பவர்கள், அன்பு, பற்று, வெறுப்பு, சினம், பொறாமை, பகை முதலிய உள்ளத்தின் பாற்பட்ட உணர்வு நிலைகளில் மிகுந்து தோன் றுவர். அறிவுணர்வு மிகுதியாக இருப்பவர்கள், அறிவியல், ஆராய்ச்சி, கொள் கை, அரசியல், பொருளியல், மக்களியல் முதலிய அறிவின் பாற்பட்ட அனைத்து நிலைகளிலும் மிகுந்து தோன்றுவர். அதே போல், உடலுணர்வு மிகுதியாக இருப்பவர்கள், வீரம், போராட்டம், போர், விளையாட்டுத் திறன் கள், உடல் துய்ப்பு, பாலியல் முதலிய உணர்வு நிலைகளில் மிகுந்து தோன் றுவர், இந்த மூன்று நிலைகளும் ஒவ்வொருவரிடமும், ஒன்றோ, இரண்டோ, அல்லது மூன்றுமோஅவரவர் உயிரியல், மரபியல், சூழலியல் கூற்றுப்படி, கலந்தும், ஆனால் வெவ்வேறு அளவுகளில், குறைந்தும் மிகுந்தும் அல்லது சமநிலையிலும் இருக்கும்.

இவற்றுள் இவ்வகையில், உடலியல் உணர்வு மிகுந்து தோன்றுவோர்க்குப் பெண்ணின்பத் தொடர்புணர்வும் மற்றவர்களைவிட மிகுதி யாகவும், அளவுக்கு அதிகமாகவும் இருக்கும். அவ்வாறிருப்பவர், இரவு, பகல், தனி மை, பொதுமை, வீடு, காடு என்னும் வேறுபாடான, காலம், இடம், சூழல் என்று இல்லாமல், எப்பொழுதும் பெண்ணின்ப உணர்வுகளொடு, உரை, செயல், ஈடுபாடு முதலிய நிலைகளில் ஈடுபாடாக இருப்பர். வாய்ப்பு நேரும் பொழுதெல்லாம், எந்த ஒரு பெண்ணையும், தன்னுணர்வுக் குட்படுத்தி, அவளுடன் உடலுறவு கொள்ளும் எண்ணத்துடனேயே இருப்பர்; இயைபு கிடைப்பின் உடலுறவும் கொள்ளுவர். அவ்வகையில்- அத்தகைய பெண் களும் அவ்வுணர்வு மிகுந்த கூறுகளைக் கொண்டவர்களாகவே இருப்பர். இவ்வாறான ஆண்களாலும் பெண்களாலுமே, கற்பழிப்பு முதலிய பாலியல் கொடுமைகளும் மிகுதியாக உலகில் நிகழ்ந்துவருகின்றன.

இவ்வுடலுணர்வு மிகுந்துள்ள ஆண்கள் அல்லது பெண்கள் அல்லது இருதரத்தினரும், கணவன் மனைவியராக ஆகும் நிலை ஏற்படின், அவர்கள் இருவரும் ஒத்தோ, அல்லது ஒருவரின் தூண்டுதலாலும் வற்புறுத்தலாலும் அல்லது கட்டாயத்தாலுமோ, ஒருவர்க்கொருவர் உடலுணர்வு கொண்டு நுகர்ச்சியின்பம் பெறுவர், இவர்கள், தம் இளமைக் காலம் உள்ள வரையி லுமோ, அல்லது நல்ல உடல் வளம் கொண்டிருப்பவர் முதுமை வரையி லுமோ, இத்தகைய ஈடுபாடுகளிலேயே நாட்ட முடையவராக இருப்பர், இவர்களுக்கு, அவரவர் அறிவாற்றலையும், உளவாற்றலையும் பொறுத்து, கற்பனை யீடுபாடும், கலையீடுபாடும், ஆடல், பாடல், பொழுது போக் குகளின் ஈடுபாடும் மிகுந்து இருக்கும், இவர்கள் தம் குடும்பநிலையில் பிறர்மேல் அன்புடையவராக இருப்பினும், தம் மனைவியர் மேல் மிகுந்த அன்பும், ஆர்வமும், ஈடுபாடும் காமவெறியுணர்வும் அளவிறந்து இருக்கும், அதனால், அவளிடம் மிகுந்த பணிவும், அச்சவுணர்வும், அவள்சொல் வதை யெல்லாம் கேட்கின்ற தாழ்வுணர்வும் மிகுந்திருக்கும். தனிமை வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் அவர்கள் தம் மனைவியரை வற்புறுத்தி இணைவிழைவுக்கு ஈடுபடுத்துவர், அப்பெண்டிர் நோய்வாய்ப் பட்டிருப்பினும், உடல் மெலிவும் தளர்வும் கொண்டிருப்பினும், குழந்தைப் பேறு வாய்க்கப் பெற்றுக் கருவுற்று நிறைசூலியாக இருப்பினும், அல்லது கருவுயிர்த்துக் குழந்தைப்பேறு நிகழ்ந்து, பச்சையுடம்பினராய் இருப்பினும், அவர்களை, ஏதோ ஒருவகையிலாவது முயன்று அல்லது வற்புறுத்தி உடல் தொடர்பு கொள்ளும் கழிகாம வெறியராக அவர்கள் இருப்பர். இவர்களுக்குப் பொதுவுணர்வு, மக்கள் தொண்டு, கொள்கை, கோட்பாடு (இலட்சியம்) முதலியன இரா. அல்லது அவ்வாறிருந்தாலும், அங்கும் அவ்வகையிலும், இவர்களுக்கு அத்கைய உடலின்ப நாட்டம் குறைவு படாமல்தான் இருக்கும். இத்தகைய உணர்வுடையவர்கள் பிறர் மதிக்கத்

தக்க பெரும் பதவிகளிலும், அதிகாரப்பொறுப்புகளிலும், அரசாட்சி நிலைகளி லும் செல்வ நிலைகளிலும், மக்களை வழிநடத்தும் தலைமை நிலைகளி லும், இன்னும் பெயரும், புகழும் பெற்ற பெரிபோர்களாகவும், சான்றோர்களாகவும் கூட இருக்கலாம், ஆனாலும் அவர்களுக்கு இப்பெண் ணின்ப ஈடுபாடு மிகுந்தே இருக்கும், இன்னுஞ் சொன்னால், அவர்களின் பொதுநிலை வாய்ப்புகளையும்கூட இதற்கென்று மிகுதியும் பயன்படுத்தித் தங்கள் விழைவு வேட்கைகளை நிறைவேற்றிக் கொள்ளவே செய்வர். இவர்களுக்கு இஃது இயற்கை, என்க.

இவ்வுலகியல் நிலை, மக்களிடம் பெரும்பாலார்க்கு உண்டு என்பது மக்கள் உடலியலறிஞரும், மக்கள் உளவியலறிஞரும் கூறும் உண்மையாகும், மேலும் உலகின் மிகப் பண்பட்ட இனமக்களிடமும்கூட இந்நிலைகள் மிகுதியும் உண்டென்பர், அறிஞர். நம் அரும் பெறல் பேராசான் திருவள் ளுவரும் இவர்கள் தம் மனைவியரிடமும் மட்டுமன்று, தம் குடும்பத்தொடர் புடைய பிறர் மனைவியரிடம்கூட இவ்வாறு நடந்து கொள்ளலாம் என்று கருதி, அவ்வொழுக்க மின்மையைக் கண்டிக்கும் வகையில், அவ் வாய் புகள் பெறுகின்ற நிலையில், சான்றோர்க்கும் உள்ள இவ்வுடலியல் சறுக்கலை யெண்ணியே, 'பிறனில் விழையாமை' அதிகாரத்துள்,

'பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு' - 148

'அறண் வரையாண் அல்ல செயினும் பிறன் வரையாள்
பெண்மை நயவாமை நன்று' - 150

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்'. 144

– என்றும், **'துறவறவிய'**லில் **'கூடாவொழுக்கம்'** என்னும் அதிகாரத்துள், துறவு நிலையில் உள்ள துறவியர்க்கும் கூறும் வகையில்,

'வானுயர் தோற்றம் எவன் செய்யும் தன் நெஞ்சம்
தானறி குற்றப் படின்' - 272

'தவம் மறைந்து அல்லவை செய்தல் புதல் மறைந்து வேட்டுவன் புள்
சிமிழ்த் தற்று. -274

மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்.' -278

- என்றும், இன்னும் சில இடங்களில் சிலவாறாகவும் மிகவும் மனம் நெகிழ்ந்து கூறிக் கடியலுற்றார் என்க.

மேற்கண்ட வகையில், பெண்ணின்ப விழைவு மிகுந்திக்கும் கணவன்மார்களுக்கு, அறிவுறுத்தலாகக் கூறும் கருத்துகளைக் கொண் டவையே இப் **'பெண்வழிச் சேறல்'** என்னும் அதிகாரமும், அதையெட்டிய **'வரைவின் மகளிர்'** என்னும் அதிகாரமும் என்க. அஃதாவது, அப் பெண்ணின்ப வுணர்வாளர்க்கு, ஒருவேளை, அவர் விழைவுக் கெல்லாம் ஒத்துழைத்து, ஈடுகொடுக்கும் பெண்கள் மனைவியராக வாய்க்கப் பெறாவி டில், அவர்கள் அக் கழிகாம வுணர்வுகளைத் தணிவிக்கக் காத்திருக்கும் விலைமகளிரை நாடிப் போவது இயல்பாகலின் அல்லது உலகியலாகலின், முன் அதிகாரத்தை அடுத்தே பின்னதிகாரத்தையும் வரைந்து, அதனால் அவ்வழி வரும் கேடுகளையும் இழுக்குகளையும் தாழ்ச்சி வீழ்ச்சிகளையும் எடுத்துக் கூறி எச்சரித்தார், என்க.

ஈண்டு இவ்விரு அதிகாரப் பொருள்களும், இவற்றுள் கூறப்பெறும் கருத்துகளும், அவற்றை விளக்கப் பயன்படுத்தப்பெறும் சொற்களும், பெண்மை நல நாட்டம் கொண்டவையும், அவர்தம் இழிவு, தாழ்வு மீட்சிகளையும், பெண்ணின் பெருமையை நிலை நாட்டுவதற்குக் கூறப் பெற்ற உயர்வையும், ஆண்கள் அவ்வெளிய பெண்டிர்க்குச் செய்யும் கொடு மைத் தவிர்ப்புகளையுமே கொண்டனவேயன்றி, அவர்களை எச்சிறு அளவிலும், எந்த வகையானும் தாழ்த்துபவை அல்ல என்று தெள்ளத் தெளிவாக உணர்ந்து கொள்க. இவ்வகையில் உலகின் பாலியல் நூலாசிரிய அறிஞர் எவரும், அறிவும் தெளிவும் உள்ள இவைபோலும் கருத்துகளைக் கூறியிருத்தல் இயலாதாம் என்றும் தெளிவுறுக.

இனி, இவ்வதிகாரங்களில், ஆணாளுமை, பெண்ணிழிவுகள் தொடர் பாகக் குற்றம் குறைகளையும் நேரடியாகவே ஆராய்ந்து பார்ப்போம். இதில் வரும்,

> 'மனைவிழைவார் மாண்பயன் எய்தார்; வினைவிழைவார்
> வேண்டாப் பொருளும் அது' - 901.

என்பதில், 'மனைவியைக் கழிகாமவுணர்வுடன் மட்டுமே அதிகம் விரும்பு வர், பெருமைமிக்க பல பயன்களை அடைய மாட்டார்கள் என்பதும், 'நல்ல மக்கட்குமே பயன்தரும் செயல்களைச் செய்ய விரும்புவார், விரும்பத் தகாத தன்மைச்செயலும் அது' என்றும் கூறும் கருத்தில் தவறென்ன? இதில், பெண்ணிற்குப் பெருமைதரும் கருத்தல்லால் தாழ்ச்சிதரும் கூற்று யாது? என்று நல்லறிவினர் எண்ணி முடிவு செய்க.

அடுத்து 'பேணாது பெண்ணை அஃதாவது மனைவியை காமப் பொருட் டாக விரும்புவான்.தான் ஆக்கமாகக் கருதிச்செய்யும் செயல்களில், பிறர் நாணப்படும் படியான நிலையையே பெறுவான், என்னும் கருத்துப்பட

*பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்*
*நாணாக நாணுத் தரும்.* - 902

என்று கூறுவதிலும், மனைவியின் உயர்ந்த பெண்மைத் தன்மைகளைப் போற்றிக் கொள்ளாமல், அவளை இழிந்த கழிகாம உணர்வுக்கு ஆட்படுத்தும் உடலுறவுக் கென்று கருதி ஈடுபடலைக் கண்டிக்கிற கருத்தே உள்ளதன்றி, அவளை இழிவாகக் கருதும் கருத்து எங்குள்ளது என்று ஆய்ந்து தெளிக.

இனி, இவையல்லாமல், அடுத்தடுத்து வரும் குறட்பாக்களிலும் வரும்,

'இல்லாள் கண் தாழ்ந்த இயல்பு' - 903
'மனையாளை அஞ்சும் மறுமையிலாளன்' - 904
'இல்லாளை அஞ்சுவான்' - 905
'இல்லாள் அமையார் தோள் அஞ்சுபவர்' - 906
'பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மை' - 907

என வரும் கருத்தெல்லாம், பெண்ணை - தன் மனைவியை அவளின் உடலுறவு நோக்கம் ஒன்றே கருதி, அவளைத்தன் காம உணர்வுக் கழிவுக் கென்றே, அவள் அழகையும், வளப்பமான உடலுறுப்புகளையும் பயன்படுத்தி நுகர்ச்சி விரும்பும் நோக்கத்துடன், விரும்பும் ஒருவன், அவள் மீறிச் செய்யும் கட்டளைகளுக்கும், செயல்களுக்கும் அஞ்சி, இணங்கித் தன்னைத் தாழ்த்திக்கொண்டு நடக்கும் செயல்களைக் கண்டித்துக் கூறியனவேயன்றி, இயல்பாக, அவன் தன் மனைவியின் பால் கொள்ளும் பண்புள்ள அன்பையும் ஈடுபாட்டையும் கண்டித்து ஆகாதென்க. இவற்றிலும் பெண்மை மதிப்புக் கருத்துகளே உள்ளன என்பதை உற்றுணர்ந்து கொள்க.

இனி, இவைபோலவே, பிற குறட்பாக் கருத்துகளிலும் அவ்கைக் குறைபாடுகளோ, குற்றங்களோ சொல்லப் பெறாமல், பெண்மையைக் கணவன் மதித்தொழுக வேண்டிய கருத்துகளே, உடலியல், மனவியல், வினையியல் தொடர்பாகச் சொல்லப் பெற்றுள்ளன என்பதை, எம் நூலுரைக்கண், அவ்வதிகார விரிவு விளக்கங்களில் கண்டு தெளிக. இவற்றை இங்கு விரிப்பது மிகையும், தேவையின்மையும் ஆகும்.

இனி, அடுத்து வரும் 'வரைவின் மகளிர்' பற்றியும் ஓரிரு கருத்துகளை முன்வைக்கும் தேவை கருதிச் சில சொல்வாம்.

முதலில், இவ்வதிகாரத் தலைப்பே, பெண்மையை அஃது இழிவுற்று இயங்கும் நிலையிலும், இழிவு படுத்தாத இயல்பின் அமைந்துள்ளது என்பதை உற்று நோக்குக. இதில் கூறப்பெறும் கருத்துகள் விலைமகளிர் பற்றியவை என்பதை முதலில் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். விலைமகளிரின்

பலவகையான இயல்புகளில் திருமணம் செய்து கொள்ளாமையும் ஒன்று என்பதை நாம் அறிவோம். திருமணத்தை 'வரைவு' என்னும் பண்பியல் சொல்லாலும் புலவர்கள் குறிப்பர்.

'வரைவு' என்பது எல்லைப் படல் அடையாளப் படல், ஒரு நிலையில் ஒழுகுதல், உரிமையாதல், 'நிலைப்படல்', முதலிய ஒழுகியல் பொருள்களைத் தரும் சிறந்த சொல்லாகும்.

'வரைதல்' திருமணம் செய்து கொள்ளல். இதுபோலும் அதிகாரப் பெயர் கொண்ட சில பல சொற்களைக் கொண்டே நூலாசிரியராகிய திருவள்ளுவரே இந்நூலின்கண் உள்ள அதிகாரங்களைப் பகுத்தும் பெயர் சூட்டியும் இருப்பர் என்பதை நிலைநாட்டலும் இயலும் என்க. இருப்பினும் நீண்ட நெடிய காலமாற்றங்களாலும், பல்வேறு வகைப் பண்பியல், கொள் கையியல் உள்நுழைவுத் தாக்கங்களாலும், சிற்சில மாறுதல்கள், இவ்வதி காரப் பெயர்களிலும், பகுப்பு வகுப்புகளிலும், குறள் அடைவுகளிலும் நேர்ந் திருக்கவியலாது அல்லது இல்லை என்று கூறிவிட முடியாது என்க. அது பற்றியும் இம்முன்னுரையின் பின்னுரையின் கண் ஓரளவு ஆயப்பெறும். இது நிற்க.

இங்குக் கூற வந்தது, கழக இலக்கண இலக்கியங்களுள் வரைவு, வரைதல் என்னும் சொற்கள் உண்டேதவிர வரைவில் - வரைவின் மகளிர் என்னும் சொல்லாட்சிகள் இல்லை. பல சொற்களைப் போலவே 'வரைவின் மகளிர்' எனும் சொல்லாட்சிம் நூலாசிரியர் படைத்துக் கொண்ட பண்பியல் சொல்லே என்பது தெளியற் பாலது.

திருமணம் ஆகாமல், பல்வேறு ஆண்களுடன் பொருளுக்காகத் தம் உடலை விற்றுப் பிழைக்கும் விலை மகளிர் அன்றும் இருந்தனர்; இன்றும் இருக்கின்றனர்; என்றுமே இருந்து வருவர். இதைத் தடுக்கவோ எடுக்கவோ எவராலுமே எந்த அரசாட்சியாலுமே இயலா தென்க. இருப்பினும் இவற்றின் கொடுமையையும் கடுமையையும் உணர்த்துவது, எடுத்துரைப்பது அறிஞரின், அறநூலாரின் கடனாகும். அவ்வாறு எடுத்துரைக்கும் பொழுது அவ்வேழை, எளிய பெண்டிர்க்கு இழிவு கூறாமல் இருப்பது பெண்மையை மதித்துப் போற்றும் பெருந்தகை நூலாசிரியர்க்கே ஏற்றதும் இயல்வதும் ஆகும் என்க. அத்தகைய நூலாசிரியருள் நம் திருவள்ளுவப் பெருந்தகை, கற்றாருள் கற்றார், சான்றோருள் சான்றோர், பண்பாளருள் பண்பாளர் ஆகலின், அக்கொடு வினையாற்றும் விலைமகளிரை, பொருட்பெண்டிரை, பொதுப் பெண்டி ரைக்கூட, இழிவுப்படுத்திக் கூறாமல், பண்புமணம் கமழும் இனிய சொற் களால், 'வரைவின் மகளிர்' திருமணம் செய்து கொள்ளாத பெண்டிர் என்று போற்றியே சொன்னார் எனின், பிற உயர்வொழுக்கப் பெண்டிரைச் சொல்லாலோ கருத்தாலோ இழித்தும் பழித்தும் கூறுவரோ என்று எண்ணிப்

பார்த்தல் வேண்டும் என்க. இவ்வகையிலும் ஆரியவியலையும் தமிழியலையும் ஒப்பிட்டுப் பார்க்கில் அதனினும் இதன் பண்பாட்டுப் பெருமையும் மாந்தநேயப் பொதுமையும், பெண்டிரைத் தாழ்வாகக் கருதாத தன்மையும் பல நூறு மடங்கு பெரிதாகும். ஆரியவியலின் இவ்வகை இழிவு நிலைகளை அவர்தம் காமவியல் நூல்களில் நன்கு தெளியலாம்.

இனி, இவ்வதிகாரத்துள்ள இன்னொரு நுட்பமும் நன்கு உணர்ந்து கொள்ளற்பாலது. இதில், வரைவின் மகளிரின் பொதுவான தன்மைகளைக் குறிப்பதைவிட அவரிடத்துக் காமவின்பம் நோக்கிச் செல்லும் செல்வர், அறிவுடையவர், பொதுநிலை ஆடவர்தம் இழிவுகளும் தாழ்வுகளுமே மிகுதியும் கூறப்பெறுவதையும் கருதுமிடத்து, இங்கும் ஆணாளுமை, கடியப்பெறுகிறது என்க.

இதில் இத்தகைப் பெண்டிர், அன்பின் விழையார், பொருள் விழைபவர்(911), இனிய சொல்லினார், பண்பில் மகளிர் (912), பொருட் பெண்டிர் (913), பொருட் பொருளார் பொருள் நோக்கினர் (914), பொது நலத்திற்குரியவர் (915), தங்கள் மேனி அழகினைச் செயற்கையால் மிகுவித்துப் புன்மை நலத்தைத் தருபவர் (916) கற்பு நெஞ்சம் இல்லாதவர் (917), பிறரைப் பெண்மையால் மயக்கும் மாய மகளிர் (918), மணந்து கொள்ளாமல் வரை துறையின்றிப் பழகும் பெருமைமிகு நகைகளை அணிந்து புனைவு செய்து கொள்பவர் (91) இரண்டு மனங்கள் கொண்ட வஞ்சகர் (920) ஆகிய சொற் களால் கூறப்பெற்றுள்ளார்.

ஆனால், இவருடன் தொடர்பு கொள்ளும் ஒழுங்கிலா ஆடவர்களை நூலாசிரியர், நேர்மையற்றவர் (912), இருட்டறையில் ஏதிலி (அனாதை)ப் பிணங்களையும் தழுவத் துடிக்கும் மூடர் (913) அருளை ஆராயும் அறிவில் லாதவர் (914) மதிநலம் இல்லாத சிறுமை அறிவுடையவர் (915), தந்நலம் கருதுபவர், புல்லிய இன்ப நாட்ட உணர்வுடையவர் (916), நிறை நெஞ்சம் இல்லாதவர் (917) எதையும் ஆராயும் அறிவில்லாதவர் (918), பெருமையில் லாத கீழ்மக்கள் (919) செல்வத்தை அழிப்பவர் (910) - எனப் பலபட இழித்துக் கூறுவர்.

-எனவே இதிலும் ஆணாளுமை இழிக்கப்பட்டும், பழிக்கப்பட்டும் கூறப்பெறுவதுடன், பெண்மையழிவு இரக்கவுணர்வுடனும் அவர்கள் வாழும் இழிவுச் சூழலுடனும் குறிக்கப்பெற்றிருப்பதை நல்லறிவினார் கண்டு கொள்க.

இனி இவ்வகையில், கூறப்பெற்ற கருத்துகளுள், நேரிடையாகவும் வெளிப் படையாகவு புலப்படுகின்ற கருத்துகள் தவிர, பொதுவாகவும், தாம் எடுத்துக்கொண்ட பொருளோடு புணர்த்தியும் கூறப்பெறும் சில கூற்றுகளையும் கவனிப்போம்.

இந்நூலுள் வரும் மக்கட்பேறு என்னும் அதிகாரத்துள் தலைப்பாலும் பொருளாலும் வைக்கப்பெற்ற ஆண், பெண் பொதுமைக் கோட்பாட்டை, ஆரியவியல் சார்பான உரைகாரராகிய பரிமேலழகர், தம் கருத்தியலுக்கு ஒத்த வகையில், பெண்மையைத் தாழ்த்தியும், ஆண்மையை உயர்த்தியும் கூறும் உரைகள் திருவள்ளுவர்தம் பெருந்தகைமைக்கும், தமிழியலின் பொதுத் தன்மைக்கும் இழுக்குச் சேர்ப்பனவாகும். அவை உரையால் நேர்ந்த கேடேயன்றி, நூலால் மிடைந்த கேடு ஆகா வென்று உணர்க.

இவ்வதிகாரத் தலைப்பே மக்கள் என்ற சொல்லை மாற்றிப் புதல்வர் என்று அவரால் தரப்பெற்றுள்ளது.

'புத்' என்னும் நிரையம் (நரகம்) செல்லாமற் காப்பதால் மக்கள் புதல்வர் என்பது ஆரியவியல் ஆகையால் இவ்வதிகாரத்திற்குப் புதல்வரைப் பெறுதல் என்று பரிமேலழகர் பெயர் தந்தார் என்க.

அத்துடன் அமையாது. இவ்வதிகாரத்தின் முதல் குறளாகிய

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற -61

- என்னும் பாவிற்குச் சிறப்புப் பொருள் எழுதுகையில் "அறிவறிந்த என்ற அதனால் மக்கள் என்னும் பெயர் பெண் ஒழிந்து நின்றது. இதனால் புதல்வர்ப் போற்றினது சிறப்புக் கூறப்பட்டது" என்றும்

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிப்பிறங்கா
பண்புடை மக்கட் பெறின் -62

என்னும் குறளுரையில், சிறப்புரையாக "அவன் (தந்தை) தீவினை வளராது தேய்தற்குக் காரணம் ஆகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரை (ஆண் மக்களை)ப் பெறுவான் ஆயின் என்றவாறு ஆயிற்று.... தந்தை தாயர் தீவினை தேய்தற் பொருட்டு அவரை நோக்கிப் புதல்வர் செய்யும் தான தருமங்கட்கு அவர் நற்குணம் காரணமாகலின் பண்பு என்னும் காரணப் பெயர் காரியத்தின மேல் நின்றது" என்றும் கூறி, ஆண்மக்களே பெருமையு டையவர்கள். அவர்களே பெற்றோர்க்கு வரும் கரிசு (பாவங்)களை நல்லன ஆற்றித் தடுக்க முடியும் என்று ஆரியவியல் வழி விதந்து கூறினார். மற்றும்,

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய் -69

என்னும் குறட்பாவின் விளக்கவுரையில், "பெண்ணியியல் பால் தானாக அறியாமையின் கேட்ட தாய் எனவும் கூறினார்" என்று பெண்ணுக்குத் தானாக அறிந்து கொள்ளும் ஆற்றலில்லை என்றும் பெண்மையை இழிவுபடுத்தினார் என்க.

இவர், பெண்மை யிழிவுக் கூற்றுக்கு மறுப்புரைத்து மெய்யுரை கூறலை உரையினுள் கண்டு தெளிக. ஈண்டு விளக்கின் கூறியது கூறலாகும் எனுந் தன்மையால் தவிர்க்கப்பெற்றது.

மொத்தத்தில் திருவள்ளுவப் பேராசான் மக்கட்பேறு அதிகாரத்துள் மக்கள் என்னும் பொதுச் சொல்லையே கையாள்வதுடன் தேவையான பலவிடங்களில் பெண்மைக்கு உயர்ச்சியும் கூறிப் பேசுவர்: நிலமென்னும் நல்லாள் (1040) திருநுதல் நல்லவர் நாணு (1611).

-என்றிதுகாறும் கூறிய அனைத்துத் தன்மைகளாலும், மாந்தர்தம் **வாழ்வியல், அறவியல், அரசியல், சட்டம், தண்டனை, குமுகவியல் அமைப்பு, உடைமைகள், பெண்ணியல்** முதலிய அனைத்து நிலைகளாலும், ஆரியவியலின் இழிதன்மைகளும், தமிழியலின் உயர்வுத் தகைமைகளும் நன்கு எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன என்க.

எனவே, இவ்வகையில், திருக்குறளில், நூலாசிரியர், உலகியலுக்கும், மாந்தவியலுக்கும், அறிவியலுக்கும், அறவியலுக்கும், பொதுமைக்கும் நடுநிலைக்கும் பொருந்தும் தமிழியல் சார்ந்த வாழ்வியல் கோட்பாடுகளையே கருதுவர், பேசுவர் என்பதை உறுதியாகக் கொள்க.

“ஆரிய மத (வைதீக)க் கலப்பும், தமிழ்நெறி (ஆகம வழி)க் கலப்பும் தமிழ்நாட்டில், சிற்சில சமையத்தில் சிறிது மிகுந்தும் தோன்றுகிறது. வைதீகக் கலப்பு தமக்கு நலம் தரவில்லை. என்பதைத் தமிழரில் சிலர் உணர்கின்றனர்; ஆனால் இருமை (இரண்டு நெறிகளும் கலந்த தன்மை) பேசுகின்றனர். இக்காலத்திலும் இருமை தோன்றுகிறது. எல்லாம் (இவ்விரு நெறிகளும்) ஒருமையாய் முடிந்து, இந்து மதமாகி, வைதிக மதமாகியுள்ள இந்நாளிலும், இந்த இருமை, தோன்றுகின்ற தென்றால் - சங்கிருத வைதிகம் தமிழாகமம் என்னும் இருமை, வேறு பெயரில் வேறு வடிவில் தோன்றுகின்ற தென்றால் - திருவள்ளுவர் காலத்தில் இந்த இருமை, எங்ஙனம் பிறக்க முற்றிருக்க வேண்டும்!.

“மழுங்கிய உணர்வினார்க்கு இன்று (இந்த) இருமை (நிலை) தோன்றாது (புலப்படாது) இருக்கலாம். ஒருமைப் பேச்சால் தந்நலம் காண்போர் இருமையை மறைக்க முயலலாம்.”

“ஆனால்; திருவள்ளுவர் அஃகியகன்ற அறிவர்; நுண்மாண் நுழைபுலப் பெருமகனார்; குடிநலம் பேணும் கொள்கையர்; தந்நலம் நோக்காத தகையாளர்; தமிழ்நாட்டுப் பொதுநலம் போற்றும் அமைச்சியல், அரசியல், பொருளியல் புலவர் எனவே, அவர் வைதிகக் கலப்பும் ஒருமையும் தமிழர்க்கு நலம் தரா எனக் கண்டுகொண்டார். ஆதலின் இருமையை மறைக்க முயன்றிலர். அதனை எடுத்துக் காட்டி - இருமையைப் புலப்படுத்தி - அயலார் வஞ்சகத்தை விளக்கி - தமிழர்களின் நலம் போற்றப் பற்பல பாடுகள்

பட்டிருக்க வேண்டும் அவர். அவற்றுள் ஓர் **அரும்பாடு** அவர்தம் **திருக்குறள்** நூல்.

**— புலவர் க. நடேசனார்**

*— திருக்குறள் திறவு —2 (1955) —(நீத்தார் பெருமை)*

## 6. நூற் சிறப்பியல்கள்

உலகப் பேரற நூலாம் 'திருக்குறளின்' பொதுவான சிறப்புத்தன்மைகளைப் பற்றி முன்னைய தலைப்பிலேயே புற நிலையாக நிறைய சொல்லப்பெற்றுள் ளன. இருப்பினும், இதில், அதன் அகநிலையாக உள்ள நூற்சிறப்பியல்கள் பற்றிச் சில கூறியாகல் வேண்டும்.

திருக்குறள் பற்றி இவ்வுலகிலுள்ள எந்த ஓர் அறிஞர் மதிப்பீடு செய்வதாயினும், அதற்கிணையாக வேறு எந்த ஒரு நூலையும் குறிப்பிட்டுச் சொல்வது மிகவும் அரிதான செயலாகும். அந்த அளவுக்கு அந்நூல், தன் அமைப்பிலும் சரி, உள்ளீட்டளவிலும் சரி, அதன் வகுமுறை, தொகு முறைகளிலும் சரி, அதன் கருத்து வெளிப்பாட்டிலும் சரி, இவ்வுலகின்கண் இதுவரை தோன்றியுள்ள மிகச் சிறந்த அனைத்து நூல்களினும் மிக மேலாகவே சிறந்து விளங்குகின்றது. மக்கள் உயிர் வாழ்க்கைக்குத் தேவையான அத்தனைக் கூறுகளையும் கொண்டுள்ள இது போலும் ஒரு நூலை உலகம் இனிமேல் காணமுடியுமா என்பது ஐயமே!

முதற்கண் வடநூலார் மக்கள் வாழ்வியல் முயற்சிகளைத் தர்மம், அர்த்தநம், காமம், மோட்சம் எனும் நான்கு கூறுகளாகவே பகுத்துக் கூறுகின் றனர். இவற்றை மறுத்துக்கூறும் நோக்கில்தான், 'திருவள்ளுவப் பேராசான் அறம், பொருள், இன்பம் '— என்னும் மூன்று கூறுகளையே கொண்டார் என்க.

இருப்பினும், தமிழர் அறம்; வடவர் தர்மம் ஆகாது. அதேபோல் தமிழர் பொருள் வேறு; வடவர் அர்த்தம் வேறு; தமிழர் காமம் - காதலின்பம் - வேறு; வடவர்தம் காமவின்பம் வேறு. தமிழர் காமம் ஆண், பெண் மனவுணர்வு பற்றியது. வடவர் காமம் உடலியலின் ஒரு கூறான பாலியல் பற்றியது. உண்மை இவ்வாறிருக்க, ஆரியப் பார்ப்பனரும், பழுத்த வைத்திக நெறியாளருமாகிய பரிமேலழகர், காமத்துப்பால் முன்னுரையில், "இவர் (திருவள்ளுவர்) பொருட் பாகுபாட்டினை, அறம், பொருள், இன்பம் என வடநூல் வழக்குப் பற்றி ஓதுதலான்" என்று கூறுவார்.

இவரின் இத்தகு தகாவுரைகள் பற்றி அடுத்துவரும் தலைப்பின் கண் விரிவாகக் கூறுவோம். இதில், **நூல் அமைப்பு,** நூற் பாகுபாட்டின் கீழ் அடங்கும் **பால், இயல், அதிகாரப்பிரிவுகள், பெயர்வைப்புகள்,கருத்தமைவுகள், உவமைச் சிறப்புகள், இலக்கியச் சிறப்புகள், சொல்லாட்சிகள், சொல் சிக்கனம், பொதுமை, மதமின்மை, இனமின்மை, இடமின்மை, காலமின்மை, மூடநம்பிக்கையின் மை, அருவருப்பின்மை** முதலியன பற்றி ஒருசில கூறுவோம்.

இந்நூலுள், மாந்த வாழ்க்கைக்குத் தேவையான, அறவியல், அரசியல், பொருளியல், குமுகவியல், பொதுமையியல், பொதுவுடைமையியல், மனவியல், மக்கள் மனவியல், உடலியல், மருத்துவவியல், தொழிலியல், தொழில்நுட்பவியல், குடும்பவியல், ஒழுக்கவியல், மெய்யறிவியல், காமவி யல்-முதலிய அத்தனைத் துறைகளிலும் மிக மேம்பாடான செய்திகள், மிக நுட்பமாகவும், திட்பமாகவும், செப்பமாகவும், சுருக்கமாகவும் அதே பொழுது விரிவாகவும் எடுத்துரைக்கப் பெறுகின்றன என்பது பற்றி முன்னரே ஓரளவு விளக்கப் பெற்றுள்ளன. இவை பற்றியும் மேலும் ஒருசில விளக்கங்களை இதில் காணலாம்.

மொத்தத்தில், ஒரு நூல் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பது பற்றியெல்லாம் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்துள், மரபியலில் பலவாறு கூறப்பெற்றுள்ளன.அவற்றுள் மிக முகாமையானது, ஒரு நூல், அதிலும் செய்யுள் வடிவாக, நூற்பா வடிவாக, சூத்திர வடிவாக எழுதப் பெறும் நூலுள் மரபுநிலை பிறழக்கூடாது என்பதாகும். சொல், மொழி, கருத்து, அதை எடுத்துக்கூறும் முறை முதலிய அனைத்து நிலைகளிலும் மரபு – தமிழியல் மரபு – சிதையக்கூடாது, பின்பற்றப் பெறவேண்டும் என்பது. இது பெரிதும் வலியுறுத்தப் பெறுகிறது. ஏனெனில், ஒரு கருத்தை உணர்த்துவதற்கு ஏற்கனவே வழக்கில் உள்ள சொற்கள் சரியான முறையில் பயன்படுத்தப்பெறவேண்டும். இல்லையெனில் அம்மொழியில் பின்வரு பவர்களுக்கு அக்கருத்து சரியான முறையில் சென்றடையாது. பொருள் ·களில் தவறும் மயக்கமும் பிறழவுணர்தலும் ஏற்படும். எனவே மொழி, சொல், கருத்து, எடுத்துச் சொல்லும் முறை, ஆகியவற்றுள் ஏற்கனவே உள்ள மரபு முறைகள், நூலாசிரியரால், அதுவும் தம் இன மக்களுக்கும், உலக மக்களுக்கும் கூறப்பெறும் ·செய்திகளில் காலத்திற்கும், இடத்திற்கும் ஏற்பக் குழப்பநிலைகள் தோன்றாவண்ணம் மரபு நிலை பின்பற்றப் பெறவேண்டும் என்று தொல்காப்பியம் பின்வருமாறு வலியுறுத்துகிறது.

**'மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை**
**மரபுவழிப் பட்ட சொல்லி னான'**

– தொல்: 1590.

'மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்'

– தொல்: 1591.

இவ்வகையில் மரபே வழக்காகிறது. அதுவும் கல்லா மக்கள் இவ்வழக்கத்தை அவ்வப்பொழுது கைநெகிழவிட்டு விடுவார்களாகையால், வழக்கம் எனும் அனைத்து மரபு நிலைகளும் கற்றுணர்ந்த (உயர்ந்த)வர்களின் நடைமுறையே ஆகும் என்பதும் தொல்காப்பியம்.

'வழக்குஎனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாகல் ஆன'

-தொல்: 1592.

அதனால், ஒரு நூல், 'மரபு நிலை திரியா மாட்சிய வாகி' (தொல்: 1593) இருத்தல் வேண்டும். அவ்வகையில் திருக்குறள் தொன்மைத் தமிழ்ச் சான்றோர்தம் மொழி, இனம், பண்பாடு, நாகரிகம், கலை முதலிய அனைத்து நிலைகளிலும் தமிழ் மரபியல் நிலைக்கு ஏற்ப அமைந்த மிகச் சிறந்த நூலாக உள்ளது என்பது, தமிழ் மொழிக்கும், தமிழ் இனத்திற்கும் பெருமை தருவதாகும்.

அடுத்து, திருக்குறள் என்பது, இதன் அனைத்து அமைப்பு நிலையிலும், இது தோன்றுவதற்கு முன்னர், இது போல் எதுவும் இல்லை என்னும் நிலையிலும், இதுவே முதல் நூலாகும் என்பது தெளியப் பெற்ற உண்மையாகும் என்பதும் அறியத் தக்கது. இனி, இந்நூலைப் போலவே இதன் ஆசிரியராகிய திருவள்ளுவப் பேராசானும், தமிழினத்தின் கண் அவருக்கு முன்னும் பின்னும், இன்னும், இன்றும், இனியும், இருந்த, இருக்கப்போகின்ற பேரறிவுப் பெருந்தகையர்க்குள், மிகச் சிறந்த, தனித் தன்மை வாய்ந்த பேராற்றல் மிக்க, ஒப்பாரும் மிக்காரும் அற்ற தனி முதல்வர் ஆவர் என்க. என்னை?

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும் – தொல்: 1594

- என்றார் ஆகலின். இனி, ஒரு நூல் எவ்வகையில் அமைதல் வேண்டும் என்பதற்கும் தொல்காப்பியம் இலக்கணம் வகுத்துள்ளது. அஃது காலத்தால், இடத்தால், இனத்தால் மாறுபாடுகளுக்கு உட்படாத, பொய்த்துப் போகாத உண்மையான உறுதிப் பொருள்களைக் கொண்டு, சான்றோர் கூறிய பத்துக் குற்றங்களும் இல்லாததாகி, முப்பத்திரண்டு உத்திகளுடனும் (இவற்றின் விளக்கங்களைத் தொல்காப்பியத்துள் கண்டு கொள்க) மக்கள் அனைவரும் உய்ய வேண்டும் என்னும் நேர்மையான மனவுணர்வுடன் எழுதப்பெற்றிருத்தல் வேண்டும் என்பதாகும்.

மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்று நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூல்என மொழிப நுணங்குமொழிப் புலவர்

– *தொல்:* 1598.

*இவ்வகையிலும், இதற்கு மேலும் உடைய, பொய்யாமொழிப் பொருளுடையதாகும் இந்நூல் என்பதற்கு ஐயமும் உண்டோ? அறவே இல்லை என்க. இனி, நூலின் தகைமை கூறும் பின்வரும் கூற்றுகளையும் ஊன்றிக் காண்க.*

'மேற்கிளந் தெடுத்த யாப்பின்உட் பொருளொடு
சில்வகை எழுத்தில் செய்யுட் டாகிச்
சொல்லும் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத் தாகித்
துளக்கல் ஆகாத் துணைமை எய்தி
அளக்கல் ஆகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரி வுடையது
சூத்திரத்து இயல்பென யாத்தனர் புலவர்'

– *தொல்:* 1600

*(**செய்யுட்டாகி**–செய்யுள்களைக் கொண்டதாகி; **துளக்கல்** - வேறுபடவும் மாறுபடவும் உரைத்தல்; **அரும்பொருட்டாகி** - அரும்பொருள்கள் உடையதாகி)*

"விட்டுஅகல் வின்றி விரிவொடு பொருந்திச்
சுட்டிய சூத்திரம் முடித்தல் பொருட்டா
ஏது நடையினும் எடுத்துக் காட்டினும்
மேலாங்கு அமைந்த மெய்ந்நெறித் ததுவே"

– *தொல்:* 1602

*(**விட்டகல்வு இன்றி**-தாம் எடுத்துக் கொண்ட பொருள் பற்றி, அதை விட்டு அகலா ஆகி; **முடித்தல் பொருட்டா**-பிறவிப் பயன் முழுவதும் எய்தி, இப்பிறவியை முழுவெற்றியா முடிப்பது காரணமாக; ஏது **நடையினும்** - காரண, கருமிய முடிவுகளொடு; **மெய்ந்நெறித்து**-மெய்யான மெய்ப்பொருள் கோட்பாடுகளைக் கொண்டு)*

**மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்த்
தன்னூ லானும் முடிந்தநூ லானும்
ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்
தெற்றென ஒருபொருள் ஒற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்றல் என்மனார் புலவர்**

**– தொல்: 1604**

(**மறுதலைக் கடாஅ** – கூறப்பெற்ற கருத்திற்கு எதிரிடையான வினாவும்; **மாற்றமும்;** – விடையும்; **மருட்கை**-மயக்கம், திரிபுகள்; **தெற்றென** - தெளிவாக; **கொளீஇ** கொள்ளச் செய்து; **துணிவொடு** ஒருதலைப்பட்ட கருத்தொடு)

**சொல்லிய வகையால் சுருங்க நாடி**
**மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்து கொண்(டு)**
**இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்**
**நுனித்தகு புலவர் கூறிய நூலே**

– தொல்: 1610:25-28

- என்று கூறிய இவ்வகையில், இதில் கூறிய அத்தனைச் சிறப்பியல்களும் தகுதிப்பாடுகளும் நிறைந்த வகையில் இத் திருக்குறள் என்னும் பெருக்குரை நூலைக் கருக்குலைவின்றி அருட்கருள் கொண்டு இம் மக்களினம் திருத்துதல் நோக்கமொடு வெளிப்படுத்திப் போந்தார், இதன் நூற்றந்தை திருவள்ளுவப் பெருமுனைவர், என்க

-இனி, இவ் வரும்பெறல் நூலுள் பயன்படுத்தப் பெற்ற செஞ்சொற்களைக் கொண்டே இதன் சிறப்பியல்களைக் கூறுவதெனில், இதனை, ஒரு நுண்ணிய நூல் (373), தொட்டனைத்து ஊறும் மணற் கேணி (396), பயில்தொறும் நயந்தரும் நூல் (783), விழுப்பத்துப் பனுவல் (21), இலங்கு நூல் (410) செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர் நூல் (543), உரை சான்ற நூல் (581), மதிநுட்ப நூல் (636), நூலாருள் நூல் வல்லர் நூல் (683) - என்பதில் எவர்க்கும் மாறுபாடான கருத்து இருத்தல் இயலாதென்க.

இனி, உலகின்கண் எழுதப் பெற்றுள்ள நூல்கள் அனைத்திலும் பெரும்பாலானவை புறப்பொருள் நூல்களே. அஃதாவது, உலகில் உள்ள பொருள்கள் அத்தனை பற்றியும் இருப்பு, தன்மை, இயக்கம், பயன்பாடு ஆகியவற்றை விளக்குகின்ற நூல்களே!

இவற்றுக்கு அடுத்த நிலையில் உள்ளவை, மக்களின் புழக்கம் பற்றிய நூல்களே! அஃதாவன, இவ்வுலக மாந்தரின் மொழி, இனம், வாழ்க்கை, பண்பியல், நாகரிகம், அரசியல், ஆட்சியியல், வரலாறு, போர், காதல், கற்பனை, கலை, பொழுதுபோக்கு-முதலியவை பற்றிய நூல்களே.

ஆனால், திருக்குறள் ஓர் உயிரியக்கப் பொருள் நூல் ஆகும். அஃதாவது, மாந்தரின் அகத்தும், புறத்தும் விரிந்து கிடக்கும் அத்தனை உயிரியக்கக் கூறுகளிலும் இதில் அடக்கிக் கூறப்பெற்றுள்ளன. இன்னும் விரிவாக இதை விளக்கினால், மக்களின் மனம், அதனுள்ளிருந்து வெளிப்படும் உணர்வுகள், அவற்றை அடிப்படையாகக் கொண்ட செயற்பாடுகள், அவற்றின்

நன்மை தீமைகள், ஏற்புகள், தவிர்ப்புகள், உடன்பாடுகள், முரண்பாடுகள், அவற்றால் ஏற்படும் நட்புணர்வுகள், பகையுணர்வுகள், ஆளுமைகள், வல்லாளுமைகள், இணக்கங்கள், பிணக்கங்கள், உயர்வுகள், தாழ்வுகள், இன்பங்கள், துன்ப துயரங்கள் முதலிய அத்தனையும் பற்றிய உணர்வெழுச்சிகள், அவற்றின் தாக்கங்கள், நோக்கங்கள், கொள்கை, கோட்பாடுகள் முதலிய அத்தனை உயிர்க்கூறுகளையும் அவற்றின் முடிவுகளையும் அழிவு, தோற்றங்களையும் பற்றிய மேலோட்டமான வெளிப்பாட்டுத் தோற்றங்கள், உள்ளோடி நிற்கும் அழுத்தமான மூல மெய்ப்பொருள் உண்மைகள், இறுதி இருப்புகள்- ஆகியவை பற்றியெல்லாம் விரிவு விளக்கங்களெல்லாம், ஒருங்கிணைத்துக் கூறும் ஓர் ஒப்புயர்வற்ற ஒருமை நூலாக இது விளங்குகிறது. ஒளிகாட்டி நிற்கிறது.

இனி, பொதுவாக, ஒரு நூலின் கண், அதன் ஆசிரியர் சிந்தித்த, நினைத்த அவருக்குச் சரியென்றும் தவறென்றும் பட்ட கருத்துகளை மட்டுந்தாம் நாம் அறிந்து கொள்ளமுடியும். ஆனால், இதில், இவ்வுலகின் கண் வந்து, இருந்து, வாழ்ந்து போகின்ற அனைத்து நிலையினரும், சிந்தித்து, உணர்ந்து, செயல்பட்டுப் போகின்ற அத்தனைக் கருத்துகளும் - செறிந்துள்ள தன்மைதான், இதன் அழியாத நிலைக்குக் காரணமாக இருக்கிறது.

இத் திருக்குறளை ஆழ்ந்து கற்கின்ற ஒருவன், இதன் ஆசிரியர் வழி, அவர் கண்களால், தன்னையே பார்க்கின்றான்; தான் சார்ந்துள்ள இம் மாபெரும் மக்கள் இனத்தைப் பார்க்கின்றான்; இவ்வுலகத்தைப் பார்க்கின்றான். இறுதியில் தன் வரவையும், செலவையும், இருப்பையும் தானே, இத் திருக்குறள் துலைக்கோலின் - (தராசின்) வழி, மதிப்பிட்டுவிட்டுப் போகின்றான்.

இவ் வுண்மைக் கூற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டைக் கூறி, இதனை மெய்ப்பிப்போம். இதில் வரும்,

**சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்**
**ஏமப் புணையைச் சுடும்**

**306.**

- என்பதில் மிகு உண்மையான மூன்று கருத்துகள் கூறப்பெற்றுள்ளன. அவை:

1. சினம் என்னும் தீப் போன்ற மனவெழுச்சியின் மிகையுணர்வு வெளிப்பாடு, அனைவரையும் கொல்லும் தன்மையது.
2. அது, முதலில், தன் அண்டை அயலில், தன்னோடு தொடர்பு

உள்ளவர்களை, அஃதாவது - பல வாழ்க்கைச் சுழற்சிகளிலிருந்தும் தன்னைக் காக்கின்ற தெப்பமாகிய உறவினரை - நண்பர்களை சுற்றியிருப்பவர்களை- எரித்துக் கொல்லும் அஃதாவது, சினம் உள்ள அவனை விட்டு, அவர்கள் விலகுவதால், அவனைத் தனிமைப் படுத்தும். எனவே, அவன், தன்னை இக்கட்டுகளிலிருந்து காப்பதற்கும், சினம் கொண்டால் அதைத் தணிவித்துக் காப்பதற்கும், துணையில்லாத தனியன் ஆகிறான்.

3. பின்னர், அவன் தனிமைப்பட்டு நிற்கையில், அந்தச் சினவெழுச்சி நெருப்பு, அவனை வெறுப்புக்குள்ளாக்கி, அவனைத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டி அதால் அவனையே அழிக்கும்.

இம் மூன்று கருத்துகளும், மக்கள் உயிரியக்கக் கோட்பாட்டின் மூன்று அடிநிலை உண்மைகளாகும். இது, திருவள்ளுவர் கூறியது. அவர் கூறுகின்றவரை இதைப்பற்றி யாருக்கும் இவ்வளவு விரிவு விளக்கம் தெரியாது. அஃதாவது எந்த நூலாசிரியரும் இதனை இத்துணைத் துல்லியமாக வரையறுத்துக் கூறிவிடவில்லை.

- அடுத்தபடி, நம் நிலையில், நமக்கும் இதுதான் மிகவும் உண்மை என்று படுகிறது. அதற்கடுத்தபடி, இந்நிலை நமக்கும் சிறிது உள்ளதாக உணர்கிறோம். அதுதான் திருவள்ளுவர்வழி, அவர் கண்களால் நம்மையே நாம் பார்ப்பதாகும். இதைப் போலவே இந் நூலில் கூறப்பெற்றுள்ள அனைத்துக் கருத்துகளும் நம்மை நாமே கண்டுகொள்ள உதவும் கண்ணாடிகளாக உள்ளன என்பதை இதைப்போலவே ஆய்ந்து கண்டு கற்க.

திருவள்ளுவர் இதுபோலும் உள்ளத்தின் பண்பியல் கூறுகளைத் தேர்ந்து தெளிந்த முறையில், இந்நூலின்கண் நமக்கு நிறையவே எடுத்துக் காட்டியுள்ளது, அவர்க்குப் பின்னர் வாழும் மாந்த இனத்திற்கே கிடைத்த ஒரு பெரும் பேறாகும். அவர் காலத்திற்கு முன்னர் வாழ்ந்த தமிழினச் சான்றோர்களின் தேக்கம், அவர். அவர் இவ்வாறு கூறும் கருத்துகளில், ஏதும் பிறழ்ச்சியானவற்றையோ, தெளிவில்லாதவற்றையோ காண வியலாது. அவ்வாறு முடிவு செய்வதும் மிகவும் கடினமானது. ஆனால், உலகியல் கூறுகளைத் தெரிவிக்கும் முறையில், அவரும் சில மூட நம்பிக்கைகளுக்கு உட்பட்டிருந்துள்ளார் என்றே கருத வேண்டியுள்ளது. ஆனால், அவர் அவற்றை மிகவும் எச்சரிக்கையாகவே கையாண்டுள்ளார் என்றே சொல்லலாம்.

'திங்களைப் பாம்பு கொள்வது' (1146) 'வித்தாமல் விளையும்' (85) முதலியவற்றை ஓர்க. இவற்றுள் முதலது அறியாமையும், பின்னது அளவிறந்த நன்நம்பிக்கைக் கூற்றும் ஆகும் எனலாம்.

இவை போலவே, குறளில் வரும் இந்திரன் (25), திருமகள் (179), (519), (617), (920), மூதேவி (முகடி) (617), கூற்று (எமன்) (269), (326), (894), (1083), (1085), திருமால் (1103) முதலிய தெய்வங்கள் சார்ந்த தொன்மக் கதைகளில் அவர் நம்பிக்கை கொண்டிருக்கலாம்; அல்லது அவ்வகை நம்பிக்கை கொண்ட அக்கால மக்களுக்கு, தெரிந்தவை கூறித் தெரியாதவை உணர்த்தல் என்னும் உத்திக்குத் தக அவர் அதைக் கையாண்டிருக்கலாம். இந்திரனை நம்புவது, வேதவியற் கொள்கையினரைப்போல் சமண மதக் கொள் கையினருக்கும் உடன்பாடான ஒன்றே. அக் கொள்கையினைத் தழுவியவர் களுக்காகவும் அவர் அவற்றை எடுத்துக் காட்டியிருக்கலாம். ஆனாலும் அவற்றின் வழியாக அவர் கூறும் கருத்துகளுக்குப் பழுதேதும் காணப் பெறல் இல்லை என்க.

இவ்விடத்தில் இறையுண்மையும் ஒரு நம்பிக்கையின்பாற்பட்ட கருத்து தானே என்பார் ஒன்றைக் கவனித்தல் வேண்டும். இறையுண்மை மெய்யறி வான் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு நம்பிக்கை. அதிற் பிழையில்லை. உயிர்க் கொள்கை போன்றது அது. அறிவியலுக்கு இற்றைப் புலனாகாதது எனினும், பிற்காலத்து அதற்கும் உட்படுவது. ஆனால், இந்திரன் உண்மைக் கொள்கை மெய்யறிவியலுக்கு உட்படுவதன்று. வெறும் கற்பனையின் பாற்பட்டுக் கருத்து வலிவுக்காகத் தோன்றிய நம்பிக்கையே அது. ஆனால், திருவள்ளுவரும் இற்றை அறிவியல் விரிவை அறிந்திருக்க வாய்ப்பின்றிப் போனதால், இந்திரக் கற்பனை போலும் மெய்யறிவியலுக்குப் பொருந்தாத கற்பனை நம்பிக்கைக்கு இடனமைத்துக் கொண்டவராகலாம், என்க.

திருக்குறளில் உண்மைகள் ஐந்து வகைகளாகச் சொல்லப்பெறுகின்றன. அவை **அறிவுண்மைகள், மனவுண்மைகள், செயலுண்மைகள், பொருளுண்மைகள், வாழ்வியலுண்மைகள்** என்பனவாகும்.

**அறிவுண்மைகள்** என்பவை, ஒருவன் தன் அறிவுணர்வால் அறியப் பெறும் உண்மை நிலைகளாகும். அவற்றுக்குச் சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

அன்பும் அறனும் (45), இன்சொல் இனிதீன்றல் (99), ஏதிலார் குற்றம் போல் (190), செல்லாவிடத்து (302), காதல காதல் (440), தேரான் தெளிவும் (510). கடிதோச்சி (562), செய்க பொருளை (759), காணாதான் (849), களித் தானை (929) போன்றவை.

மனவுண்மைகள் என்பவை, ஒருவன் தன் மனவுணர்வால் அறியப்பெறும் உண்மை நிலைகளாகும். அவற்றுக்குச் சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

மனத்துக்கண் (34), மோப்பக் குழையும் (90), கெடுவல்யான் (116), வெள் ளத்தனைய (595), நிறைநீர (782), நவில்தொறும் (783), பேதைமை (805), மனத்தின் (825), உடம்பாடிலாதவர் (890) - போன்றவை.

**செயலுண்மைகள்** என்பவை, ஒருவன் தன் செயல்கள் வழியாக அறியப் பெறும் உண்மை நிலைகளாகும். அவற்றுக்குச் சில எடுத்துக்காட்டுகள்:

விசும்பின் (16), செயற்கரிய (26), மக்கள் மெய் தீண்டல் (65), எல்லார்க்கும் நன்றாம் (125), யாகாவாராயினும் (127), நெடும்புனலுள் (495), வினைபகை (674), பொருளென்னும் (753), கேட்டினும் உண்டோர் (796), பொருட்பெண்டிர் (914), கொக்கொக்க (990), கடலோடா (996)-போன்றவை.

**பொருளுண்மைகள்** என்பவை, ஒருவன் தான் காணுகின்ற பொருட்கள் வழியாக அறியப்பெறும் உண்மை நிலைகளாகும். அவற்றுக்குச் சில எடுத்துக் காட்டுகள்:

ஊருணி (215), தொட்டனைத் தூறும் (396), படைகொண்டார் (253), நிலத்தியல்பால் (45), பீலிபெய் (475), நுனிக்கொம்பர் (476), இணரூழ்த்தும் (650), செப்பின் புணர்ச்சி (887) - போன்றவை.

**வாழ்வியலுண்மைகள்** என்பவை, ஒருவன் தன் வாழ்க்கையின் பட்டறி வால் உணர்ந்து கொள்ளும் உண்மைகளாகும். அவற்றுக்குச் சில எடுத்துக் காட்டுகள்:

இல்லதென் இல்லவள் (53), புகழ்புரிந்த இல்லிலோர்க்கு (59), தக்கார் தகவிலர் (114), தீயினால் சுட்டபுண் (129), புறங்குன்றி (277), உருவுகண்டு (667), நாளென (334), காட்சிக் கெளியன் (386), அரியவற்றுள் (443), உடைத்தம் வலியறியார் (473), ஆகாறு அளவிட்டி (478), எனை வகையான்(514), சொல் லுதல் (664), அகலாது(691), அங்கணத்துள் (720) அமரகத்து ஆற்றறுக்கும் (814) போன்றவை.

இனி, இத்தகைய சிறப்பியல் உண்மைகளை யெல்லாம் நன்கு இருள் தீர எண்ணி, மருள்தீர ஆய்ந்து, அவற்றை யெல்லாம் ஒரு சேரத் தொகுத்துக்கொண்டு, அவற்றை எவ்வெப் பிரிவின்கண் அடக்குவது என்று வகுத்துக் கொண்டு, அவ்வப் பிரிவின்கண் அடக்கப்பெறுகின்ற கருத்து களைத் தேர்ந்துகொண்டு, இத்தகைய சீரும்சிறப்பும் மிக்க ஒரு நூலை யாப்பது என்பது ஓர் அரும்பெரும்செய்தற்கரிய செயலாகும். எத்தகைய பேரறிவு சான்ற பெரும் புலவர்க்கும் இஃது எளிதான செயலன்று.

அடுத்து, அவர் தொகுத்தெடுத்த கருத்துகளில், மனவுணர்வு சார்ந்த கருத்துகளை **அறம்** என்றும், அறிவியல் சார்ந்தவற்றைப் **பொருள்** என்றும், உடலியல் சார்ந்தவற்றை **இன்பம்** என்றும் முப்பெரும் பிரிவுகளுக்குள் அடக்கி,

அவ்வறம், பொருள், இன்பம் என்னும் பெரும் பிரிவுக் கூறுகளுக்குப் பகுப்பு என்னும் பொருள்தரும் **பால்** என்னும் சொல்லை இணைத்து, இந்நூலை முப்பாலாக ஆக்கிக் கொண்டு, அப் பால் பிரிவுகளினும் உள்ளடங்கும் ஒருசார்பு நின்ற பெருங்கூறுகளை **இயல்கள்** என்று பிரித்து, அவ்வியல் களினும் பிரித்தொடுக்கும் சிறு கூறுகளை **அதிகாரங்கள்** என்று கூறிட்டுக்கொண்டு, அவ்வதிகாரங்களுக்குள், தாம் எண்ணித் தேர்ந்த, இவ்வுலகியலுக்கு மிகத் தேவையான கருத்துகளை, முன்பின் என்று நிரல் நிறைப்படுத்தி, அவற்றைப், பாக்களுள் மிகமிகச் சிறிய பாவாகிய **குறட்பாவின்**வழிக் கூறுதல் வேண்டுமென்றும், அப்பொழுதுதான் அவை கற்போர்க்கு எளிதாகவும், கவனத்தில் கொள்ள இயல்வதாகவும், எடுத்துக் கூறவும் மடுத்துக் கேட்கவும் சுவையானதாகவும், மனச்சலிப்பையும் அறிவுக் கனத்தையும் உண்டாக்காமல் ஏற்றுக்கொள்ள இயைபாகவும் இருக்கும் என்று பேரருள் உள்ளத்துடனும் பெருங் கொள்கைச் சீருடனும், தீர ஆய்ந்து தீர்மானித்துக்கொண்டு, எளிமையும் இனிமையும் சுவையும் அதேபொழுதில் பொருளால் ஆழமும் அகற்சியும் கொண்ட, தாம் மிகுதியும் அறிந்த மொழிப்பரப்பின் நுண்பொருள் தொகைச் சொற்களுள் நுணுகி ஆராய்ந்து தேர்ந்த, பிறிதொரு சொல் அச்சொல்லை வெல்லாத நிலையின், கடுமையும் கசடும் இல்லாத சொற்களைப் பெய்து, தகவு சார்ந்த, பழுமையும், செழுமையும், கொழுமையும், விழுமையும், முழுமையும் நிறைந்தொளிர, அருமையும் பெருமையும் ஒருமையும் பொதுளிய, **திருக்குறள்** என்னும் இவ்வொளிதரு ஒருதனி நூலை இயற்றியுள்ளார் எனில், இதனைப் பார்த் தறியும் அறிவும், படித்தறியும் அமைவும், கற்றறியும் பூட்கையும், உற்றறியும் வேட்கையும், அறவே இல்லாதாராய், விரைந்துருளும் இவ்வுலக உருண்டையுள், எங்கேனும் ஒரு சல்லி மூலையில், கரைந்துருகி ஒழியும் உடலும், நிறைந்தினிது இயங்கா உணர்வும், கரந்திருளும் கப்பிய அறிவும் உடைய நுகர்ச்சி அவாவும் புகழ்ச்சி வயாவும் கொண்டு, மருட்சி நோக் கொடும், மிரட்சிப் போக்கொடும் கற்றவர் என்று கூறிப் பிதற்றி வெற்றுலா வரும் வறட்சி நாவினர் இதனை மதிப்பிட் டுரைக்கவும் சாலுமோ? அவ்வாறு ஒன்றிரண்டு உரைப்பினும், உயரறிவினார் உலகம் அதனை ஏலுமோ? ஏலாது, ஏலாது என்க.

இனி, இந்நிலையில், இந்நூலின்கண் உள்ள, அதிகாரப் பெயர்கள், அவற்றின் அடைவுகள், பொதி பொருள்கள், நுட்பங்கள், நெகிழாத உறுதிப் பாடுடைய தன்மைகள், அவற்றுள் புலப்படுத்தப்படும் உண்மைகள் ஆகிய இவற்றையெல்லாம் ஆழமாக எண்ணுகையில், அவற்றை ஆசிரியரே தாம் அமைத்திருத்தல் வேண்டும் என்று கருதமுடிகிறது. இவ்வளவு பொருள் பொதி சொற்களை வேறு எத்தகு புலமைத்திறம் வாய்ந்தவரும், அத்துணை எளிதில் அமைத்திருக்க ஒல்லாது என்பதே முற்றமுடிந்த முடிபாகக் கூறவேண்

டியுள்ளது. இதிலுள்ள அதிகாரத் தலைப்புகளை நிரல் நிறையாக வைத்துப் பொருள் விரித்தே திருக்குறள் முழுமைக்குமான அடங்கியல் கருத்துகளை உட்கவர்ந்து கொள்ள முடியும், என்க.

மாதிரிக்கு, அறவியலில் (பாயிரவியலில்) உள்ள அதிகாரப் பெயர் களையும், இல்லறவியலில் உள்ள அதிகாரப் பெயர்களையும் நிரல் நிறையாக வைத்து, அடங்கியல் பொருள்கொண்டு காட்டுவாம்.

முதலில், திருவள்ளுவப் பேராசான், இவ் வுலகிற்கே ஒளியூட்டி வழிகாட் டுதலாக இப்படி ஒரு நூலை எழுதுதல் வேண்டும் என்று அருளுள்ளம் இரங்கி, எழுத முற்பட்ட நிலையில், எதை முதலில் கூறுவது என்று ஆழ எண்ணி, இவ்வுலக இயக்கத்திற்கே மூல முதலாக உள்ள அறப்பேராற் றலையே முதற்கண் விளக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டு, **அறமுதல் உணர்தல்** (அஃதாவது இதுவரை வழக்கிலிருந்த ‘கடவுள் வாழ்த்து') என்னும் அதிகாரத்தைத் தொடங்கினார்.

அதன்பின்னர், இவ்வுலக இருப்புக்கும் இயக்கத்திற்கும், இதன்கண் வந்து வதியும் ஒன்றுமுதல் ஆறீறாக உள்ள உயிர்களின் தோற்ற வளர்ச்சி, நிலைப் பாடுகளுக்கு அடிப்படையாகவும், அறவுணர்வுக்கே முதலெடுத்துக்காட் டாகவும் உள்ள மாமழையினை நினைவுகூர்ந்து அதன் பொதுமை நல வெளிப்பாட்டினை உணர்த்துதல் வேண்டி, **வான்சிறப்பு** என்னும் அதிகாரத்தை அடுத்துக் கூறினார்.

பின்னர், அவர் கவனம், வானகத்து நின்று தோன்றும் அறவெளிப் பாடு போலவே, இஞ்ஞாலகத்தும் தோன்றி நின்று, இங்குள்ள உயிர்கள் நலங்காக்கவும் நோக்கவும், தங்கள் இன்ப வாழ்வியல் நாட்டங்களையும் நலன்களையும் நீத்து வாழ்கின்ற அறவுணர்வினர்தம் பெருமைகளை உலக மாந்தர்க்கு உணர்த்துதல் வேண்டியும், மழையறத்தினை அடுத்த, மனவறத் தினைக் கூறுமுகத்தானும் **நீத்தார் பெருமையை** நினைவுகூர்கின்றார்.

இனி, அதனை அடுத்து, இவ்வானமும், ஞாலமும் உள்ளீடாகக் கொண் டியங்கும் அறத்தின் புரவலர்களைக் காட்டியுணர்த்திய பின்னர், அவ்வறத் தினது உண்மையும் தன்மையும், ஒண்மையும், திண்மையும் என்னென் னென்று உணர்த்துதல் வேண்டியும், அவ்வறவுணர்வினைக் கடைப்பிடித்து வாழும் மெய்யியல் கோட்பாடே மேலாம் என்று இவ்வாழ்வியல் நூல் கற்கப் புகுந்த மக்களினத்திற்கு உணர்த்துதல் கருதி, **‘அறன் வலியுறுத்தல்'** என்னும் அதிகாரத்தை அடுத்துக் கூறினார். ஆக, இத்துடன் நுண் அறவியல் விளங்கிற்று என்க. அதன்பின் மண் அறவியல் கருதியது அவர் நெஞ்சம்

அதன் வழி அவ்வருள் நெஞ்சினார் மாந்த வினத்தின் உயிரியங்கியல் கோட்பாட்டின் உலகியங்கலின் முதனிலைப்படியாம் வாழ்வியலைப்

புகட்டல் எண்ணி, அவ் வாழ்வியலுக்கே முதல் அமைப்பாம் **இல்லறவி யலைக்** கூற விரும்பி, அதற்கே அடிப்படையாக வுள்ள **இல்வாழ்க்கை**யின் தேவையினையும் தன்மையினையும், பெருமையினையும் கூறி, அப் பெயரால் அதிகாரம் உரைத்தார்.

இனி, இல்வாழ்க்கைக்கு முழுமுதற் காரணமாக உள்ள மனைவி ஒருத்திக்கு உள்ள சிறப்பியல் குண நலன்களைக் கூறும் முகத்தான் **வாழ்க் கைத் துணை நலம்** எனும் ஓர் அதிகாரத்தையும்,

அவ் வில்வாழ்க்கையினது பெரும் பயனாக உள்ள **மக்கள்பேறு** பற்றி விளக்கிட அது பற்றிய ஓர் அதிகாரத்தையும்,

அம் மக்கட் பேற்றின் விளைவினால், கணவன் மனைவி இருவர் க்கும் துளிர் விடும் உயிர்த் தொடர்புக் கூறாகிய அன்பு என்னும் ஒரு மனவுணர்வு துளிர்விடுதலைக்கொண்டு **அன்புடைமை** என்றோர் அதிகாரத் தையும்,

அவ்வன்புடைமையின் அடிப்படையாகவும், மக்கள்பால் செலுத்தப் பெற்ற அன்பினை யடுத்து, அவ்வுணர்வு மலர்ச்சியுற்ற நிலையில், தம் போல் தம்மிடம் தொடர்பு கொள்ளும் பிறிதோர் அன்பிணக்கத்திற்கு உரியதாக வுள்ள விருந்தினை ஓம்புதல் குறித்த **விருந்தோம்பல்** தன்மையை விளக்க அதன் மேல் ஓர் அதிகாரத்தையும்,

அதன்பின்னர் அவ் விருந்து வருங்கால், அதனிடம் ஏற்படும் முதல் தொடர்பில், பரிமாறிக் கொள்ளும் புழக்கத்தில் முதலாகத் தேவைப்படும் உரையாட்டு நிலைகளை விளக்கிக் கூறும் வகையில், **இனியவை கூறுதல்** எனுமோர் அதிகாரத்தினையும்,

அதனையடுத்து, உரையாட்டும், உண்டாட்டும் முடிந்த நிலையில், அவ்விருந்து விடைபெற்றுச் சென்ற நிலையில், 'உப்பிட்ட வரை உள்ளளவும் நினை' என்னும் பழமொழிக்கு ஏற்ப அவ்விருந்தினர்க்குத் தேவையான நன்றியுணர்வினை விளக்கி நிலைப்படுத்தும் வகையில், **செய்ந்நன்றியறிதல்** என்னும் ஓர் அதிகாரத்தையும், நிரல் நிறையாகப் புலப்படுத்தினார்.

இனி, நன்றியறிவுணர்வுடைய மக்கள் தம்முள் என்றும் ஒருவர்க் கொரு வர், தமபோல் பிறரையும் கருதிச் செயல்படும் நிலையில் அவர்களுக்குத் தேவைப்படும் **நடுவு நிலைமை** உணர்வை விளக்கிட அதற்கோர் அதிகாரத் தையும்,

நடுவுநிலைமை உணர்வுடைய மக்கள், தங்களுக்குள் மிகை யுணர்வு கொள்ளாத வாறு, அடக்கமாக இருத்தல் வேண்டிய கட்டாயத்தைப் புலப்படுத்த **அடக்கமுடைமை** எனும் அதிகாரத்தால் விளக்கியும்,

அடக்க முடையவர்க்கு இருக்க வேண்டிய **ஒழுக்கமுடைமை** பற்றி அடுத்த ஓர் அதிகாரத்தையும்,

ஒழுக்கமுடையவர், தம்முள் குடும்ப அளவில் பழக்கமும் புழக்கமும் வைத்துக் கொள்ள வேண்டிய நிலையில், ஒருவர் மனைவியை இன்னொருவர் விரும்பாமை வேண்டி, அதனை வலியுறுத்தப் **பிறனில் விழையாமை** அதிகாரத் தையும்,

அவ்வாறு, மனவுணர்வாலும் புழக்க நெருக்கத்தாலும், தம் நிறையு டைமை வழுவி, பிறனில் விழைதல் எனும் குற்றம் தப்பித் தவறி நேர்ந்து விடின், அந்நிலையில் ஒருவர் கொள்ளவேண்டிய பொறுமைத் தேவையை வலியுறுத்தப் **பொறையுடைமை** அதிகாரத்தையும்,

அதன் பின்னர் மாந்தப் புழக்கத்தில், ஒருவர் உழைப்பாலோ, பிழைப் பாலோ உயர்ந்தும், மற்றவர் அந்நிலைகளில் சிறிது தாழ்ந்தும் உள்ள நிலையில் தோன்றும் பொறாமை உணர்வைத் தவிர்க்க வேண்டியும் தடுக்க வேண்டியும், **அழுக்காறாமை** அதிகாரத்தையும்,

அழுக்காறு கொண்டவன் அடுத்த நிலையில் பிறனுடைய உடைமையை விரும்பும் தீநோக்கைத் தடுத்துக் கூறு முகத்தான் **வெஃகாமை** என்றோர் அதிகாரத்தையும்,

பிறன்பொருள் வெஃகியவன், தன்னை மறைக்கவும், பிறன் பெருமையைக் குறைக்கவும் முயற்சி செய்யும் நோக்கில், மற்றவரிடம் அவனைப் பற்றி இல்லாததும், பொல்லாததும் கூற முற்படுவானாகையால், அதைத் தடுத்து நிறுத்தும் கருத்தில், **புறங்கூறாமை** அதிகாரத்தையும்,

அவ்வாறு புறங்கூறும் வகையில், அவன் பலபடியாகப் பயனில்லாத கூற்றுகளைப் பயன்படுத்துவதைத் தடுக்கவும் தவிர்க்கவும் வேண்டிப் **பயனில சொல்லாமை** எனுமோர் அதிகாரத்தையும்,

அதன் மேலும் அவ் வடங்கா உணர்வின் கிளர்ச்சியாலும் எழுச்சி யாலும், சொல்வானும் சொல்லப்பட்டானும் ஒருவர் மேல் ஒருவர் வெறுப் புற்றுப் பகை கொண்டு, ஒருவர்க் கொருவர் தீவினை செய்ய அஞ்சாதவராய்ச் செயல்படுவதைக் கண்டிக்கும் வகையில் **தீவினையச்சம்** எனும் அடுத்த அதிகாரத்தையும்,

இவ் விழிநிலைகளை யெல்லாம் தடுத்து நிறுத்தி, உலகின்கண் ஒருவர்க் கொருவர் அன்பும் அமைவும் கொண்டு நல்லிணக்கமாக நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவூட்டவும் தெளிவூட்டவும் வேண்டி, **ஒப்புரவறிதல்** எனும் அதிகாரத்தையும்,

அவ்வாறு ஒருவர்க் கொருவர் சமன்பாடு எய்தி சமநிலை தோன்றி வளருங்கால், இல்லாத ஒருவர்க்கு இருப்பார் ஒருவர் ஈந்து உதவல் வேண்டும் என்னும் உணர்வை வலியுறுத்த **ஈகையின்** பெருமை கூறும் அதிகாரத் தையும்,

அவ் வீகையுணர்வின் அடிப்படையிலேயே ஒருவர்க்குப் புகழ் கிட்டும் என்பதையும், அப் புகழ்பெறும் நோக்கில் வாழ்ந்து போவதே வாழ்க்கையின் நோக்கம் என்பதையும் தெளிவிப்பான் வேண்டி, இல்லறவியலின் இறுதியாகப் **புகழ்** அதிகாரத்தையும் அறிவு நூலில் பண்புணர்வு மணிகளைக் கோத்து, வெற்றி மணிமாலையாக, விறலும், திறலும் விளங்க நமக்களித் தார் என்க.

- என்றிவ்விவ்வாறு திருவள்ளுவப் பேராசிரியர் இருள் தீரவும் மருள் நீங்கவும் அஃகியகன்ற தம் அறிவால், வெஃகி வெறிய செய்யும் இம்மக் களினத்திற்குத் தக்கவொரு வாழ்வியல் நூலைத் தந்தளித்தார் என்க.

இவ் வகையில், இன்னொன்றையும் நாம் இவ்விடத்தில் கூற வேண்டி யுள்ளது. அதிகாரங்கள் அவர் அமைத்தனவா, நிரல்நிறை அவர் செய்ததா, அதிகாரத் தலைப்புகள் அவர் கொடுத்தவையா - முதலிய பற்பல ஐயப்பாடுகள் இக்கால் எழுப்பப்பெறுகின்றன. அவர் பிறப்பு, பெயர், குடும்ப வாழ்க்கை, தொழில், வாழ்விடம், பிறருடன் ஈடுபாடு - முதலிய வற்றுள்ளும் அவ்வையப்பாடுகள் பரவிவிரிந்துள்ளன. அவ்வகையில் திருக்குறளே ஒருவரால் எழுதியிருத்தல் முடியாது, பலபேர் எழுதி ஒருவர் தொகுத்திருக்க வேண்டும் என்று கூறும் அளவில் அவ்வையம் விரிவடைந்திருக்கிறது. ஆனால், இத்தகைய ஐயப்பாடுகளுக்கெல்லாம் தீர்வு காணல் இயலாது, கடினம்; மிகக் கடினம். வேண்டுமானால் அவரவர் மனப்பாங்கிற்கும், அறிவுணர்வுக்கும் ஏற்ப அவரவர் ஒவ்வொரு முடிவைக் கொண்டு கொள் ளலாம். அவற்றைத் தடுக்கவும் முடியாது, ஏற்கவும் முடியாது. இ'து இறை இருக்கிறது இல்லை என்பது போலும் ஒரு கருத்துப் போராட்டம் போன் றது. இதற்கு முடிவேது?

ஆனால், பெரும்பாலும் இவ்வதிகாரப் பெயர்களும், அவற்றின் வரிசையும் கூடிய மட்டில் மிகவும் பொருத்தமாகவும், சரியாகவும், நிரல் நிறையாகவுமே அமைக்கப் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. **'புதல்வரைப் பெறுதல்** என்னும் ஓர் அதிகாரப் பெயரே பரிமேலழகரால் தந்திருக்கப் படல் வேண்டும் என்னும் கருத்தையும் முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

மற்றபடி, பிற அதிகாரங்களின் பெயர்ச்சிறப்பாலும் கட்டமைந்த சொல் லாட்சியாலும், நுண்பொருள் விளக்கத்தாலும், உரையாசிரியர் பரிமேலழகரின் பின்வரும் கூற்றாலும், அதிகாரத் தலைப்புகள் நூலாசிரியர் இட்டதாகவே இருக்கக் கூடும் என்று கருத முடிகின்றது.

**'அவர் வயின் விதும்பல்'** என்னும் ஓர் அதிகாரத்தின் தோற்றுவாயில் **'கவிக் கூற்றாய அதிகாரம்'** என்று அவர் எழுதுவது, இங்கே சிந்தித்தற்குரியது.

ஒரு முழு அறநூல், அதுவும் நீண்ட நெடுங்கால எல்லையில், அதன்மேலும், பலவகை முரண்பட்ட, மாறுபட்ட, எதிர்ப்பட்ட மொழியியல், இனவியல், மதவியல், கருத்தியல், பண்பாட்டியல், அரசியல் போராட்டங்களுக்கும் அகப்புறத் தாக்கங்களுக்கும் இடையில் கால வெள்ளத்துள் நீந்திக் கொண்டு வந்து, நம் கை சேர்ந்திருக்கிறது என்றால், அதில், திரிபுகளும், முறிவுகளும், சேர்ப்புகளும், தவிர்ப்புகளும், சிதைவுகளும், மறைவுகளும், மறைப்புகளும், குறைப்புகளும், புனைவுகளும், புகுத்தல்களும் நிகழ்ந்திருத்தல் இயலாது என்று சொல்வதற்கில்லை. கைம்மாறுதல், கால மாறுதல், புடைபெயர்தல், நடை அயர்தல் போன்ற நிலைகளில் முற்கூறிய அனைத்தும் நிகழ்ந்திருக்கலாம். அவற்றை எடையிடுதலும் தொடக்கம் காண்பதும் இயலாத ஒன்று. நாடும், நகரமும், ஊரும், உலகமும் மேடிட்டு மறைந்து போகின்ற உலக இயற்கையில், அனைத்துப் பார்வைக்கும் அணித்தாகிய திருக்குறள் போலும் ஒரு பேரற நூல், அச்சிதைவுகளுக்கெல்லாம் தப்பி வருதலும் அரிதே என்றும், அவற்றுள் கூடியமட்டில் தேரிய இனங் கண்டு தேர்வதே இயல்வதாம் என்றும் எண்ணி அமைதலே அறிவுடைமையாகும் என்று கருதிக் கொள்க.

இவ்விடத்து,

'சிதைவில என்ப முதல்வன் கண்ணே'

- தொல் : 1606

என்னும் தொல்காப்பியக் கூற்றையும் நினைந்து பார்க்க.

இனி, இவ்வாறு தொகுத்தும் வகுத்தும் கொண்ட வகையில், ஆசிரியர், ஒவ்வோர் அதிகாரத்தும், அவ்வதிகார நோக்கிற்கேற்ப, தாம் கூற விரும்பிய கருத்துகளை மிகவும் தெளிவாகவும், வலிவாகவும், பொலிவாகவும், அனைத்து நிலைகளினும் மக்களினம் மேம்பாடுற, நூல் முழுவதும், அவ்வப் பால் பகுப்புகளுக்கும், இயல் வகுப்புகளுக்கும் ஏற்ற வகையிலும், நினைந்து நினைந்து போற்றும் முறையிலும், இவ்வுலகிற்குத் தொகுத்தளித்துச் சென்றது, நம் அரும்பெறல் தமிழ் மொழிக்கும் இனத்துக்கும் நாட்டிற்குமே பீடும் பெருமையும் தருவதாகும் என்க. இதனாலன்றோ, தமிழியலையும் தமிழறிஞர்களையும் மனமுவந்து பாராட்டாத ஆரியப் பார்ப்பன இனத்தில் பிறந்தும், தன் இன இயல்பினைக் கடந்தும், பாவலர் சுப்பிரமணிய பாரதி

**'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'**

என்று மெய்யுரை கூறினார், என்க.

இனி, திருக்குறளில் கூறப்பெறும் கருத்து வெளிப்பாடுகள் பல்வகையான சொல்முறைகளால் கூறப்பெற்றுள்ளன என்பதையும், நாம் சிறிது எண்ணிப் பார்த்து மகிழ்தல் வேண்டும். திருவள்ளுவப் பேராசிரியர் தமிழ்மொழியையும் (28), அதன் இனிமையையும் (100, 567) அதிலுள்ள சொல் லமைப்புகளையும் (சொல் வன்மை' அதிகாரத்தையும், 717 குறட்பாவையும் ஓர்க), சொல்லும் முறைகளையும் (பயனில சொல்லாமை, இனியவை கூறல், 'சொல்வன்மை' ஆகிய அதிகாரங்களையும் 119, 128, 184, 387, 389, 402, 415, 453, 607, 711, 712, 713, 721, 826, 872, 959, 1044, 1046, 1096, 1154 – ஆகிய குறட்பாக் களையும் ஓர்க.) நன்கு உணர்ந்து தெளிந்த சொல்லாய்வுப் பேரறிஞர் ஆகையால் அவர் பின்வரும் கூறல் முறைகளால், திருக்குறட்பாக்களை உருக்கொளச் செய்துள்ளது வியந்து போற்றிப் புகழ்தற்குரியதாம் என்க.

திருவள்ளுவர் கையாண்டுள்ள இருபத்தெட்டு கூறல் முறைகள்:

1. நேர்முறை 2. எதிர்முறை 3. இணை முறை 4. எடுத்துக்காட்டு முறை 5. வினா முறை 6. வினாவிடை முறை 7. நயப்பு முறை 8. வியப்பு முறை 9. அணி முறை 10. அமைவு முறை 11. தேர்வு முறை 12. தெளிவு முறை 13. காரண முறை 14. கட்டளை முறை 15. ஆய்வு முறை 16. அங்கத முறை 17. நகை முறை 18. தொகுப்பு முறை 19. பகுப்பு முறை 20. வகுப்பு முறை 21. தந்திர முறை 22. மந்திர முறை 23. கடுமை முறை 24. கனிவு முறை. 25. எண்ணுமுறை. 26. இருமடிமுறை. 27. சுருக்க முறை 28. பெருக்க முறை ஆகியவை.

இக்கூறல் முறை ஒவ்வொன்றிற்கும் இவ்விரண்டு குறட்பாக்கள் எடுத்துக் காட்டுகளாகக் கீழே தரப்பெறுகின்றன.

1. **நேர்முறை:** நேரிடையாகக் கருத்தைக் கூறும் முறை)

*1.* ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால் *14*

*2.* அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின் *96*

2. **எதிர்முறை:** (எதிர் நிலையாகக் கூறி விளங்க வைக்கும் முறை)

1. அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை *-37*

2. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும் -138

3. **இணைமுறை:** (இரண்டு கருத்துகளை ஒன்றோடொன்று இணைத்துக் கூறுவது)

1. அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று -4

2. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும் -63

4. எடுத்துக்காட்டு முறை: (பொருந்திய எடுத்துக்காட்டுகளால் பொருளை விளங்க வைக்கும் முறை)

1. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் -77

2. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் -475

5. **வினாமுறை:** (வினாவொன்று எழுப்பி விளங்க வைக்கும் முறை)

1. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் 2

2. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன் -46

திருக்குறளில் ஏறத்தாழ தொண்ணூறு இடங்களில் வினா முறையை கையாள்கிறார் எனலாம்.

6. **வினாவிடை முறை**: (வினாவைக் கேட்டு அதற்கு விடையும் கூறி ரிளங்க வைக்கும் முறை)

1. நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார் 149

2. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள் -178

7. **நயப்பு முறை:** (பிறர் விரும்பி விழைந்து கேட்கும் படி கூறுதல்

1. குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் -66

2.உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன் -294

8. **வியப்பு முறை:** (கேட்போர் வியந்து கேட்கும்படி கூறுதல்)

1.பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற -61

2.வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் -85

9. **அணிமுறை:** (அழகுபெறச் சொல்லுவது)

1. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை -12

2.சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து -645

10. **அமைவு முறை:** (ஓர் ஐயப்பாடு எழுப்பி, அதற்கு அமைவு கூறி விளக்குதல்)

1. சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை. -57

2.புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு -79

11. **தேர்வு முறை:** (ஒரு கருத்துத் தேர்ந்து உணரும்படி கூறுதல்)

1.மருந்தோமற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து -968

2. செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை. 1151

12. **தெளிவு முறை:** (கருத்துச் சிக்கலின்றித் தெளிவு ஏற்படும்படி கூறுதல்)

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு -190

நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று 197

13. **காரண முறை:** (காரணம் கூறிக் கருத்தை விளக்குதல்)

*மனத்தின் அமையா தவரை எனைத் தொன்றும்*
*சொல்லினால் தேறற்பாற் றன்று* 825

*களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்*
*குளித்தானைத் தீத்துரீஇ யற்று* -929

14. **கட்டளை முறை:** *கட்டளையிடுகின்ற வகையில் கூறுதல்)*

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
*அன்றே ஒழிய விடல்* 113

*காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்*
*அதனினும் இல்லை உயிர்க்கு* 122

15. **ஆய்வு முறை:** *(ஆய்ந்து பார்த்து முடிவு செய்ய வேண்டிய வகையில் கூறுவது)*

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின் 805

*காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே*
*யானோ பொறேன்இவ் விரண்டு* 247.

16. **அங்கத முறை:** *(கிண்டலாகக் கூறுவது)*

*கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்*
*சொல்லா திருக்கப் பெறின்* 403

*மடியுளாள் மாமுகடி என்ப மடியிலாள்*
*தாளுளாள் தாமரையி னாள்* 611

17. **நகை முறை:** *(நகைச்சுவையுடன் கூறுவது)*

*தேவ ரனையர் கயவர் அவருந்தாம்*
*மேவன செய்தொழுக லான்* -1073

*வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்*
*யாருள்ளித் தும்மினீர் என்று* 1317

18. **தொகுப்பு முறை:** *(பல உண்மைகளை நிரல்பட தொகுத்துக் கூறுவது)*

*கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்*
*நோக்கம்இம் மூன்றும் உடைத்து* -1085

*கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம் புலனும்*
*ஒண்டொடி கண்ணே உள.* - *1101*

19. **பகுப்பு முறை:** *(ஒரு பொருள் சார்ந்த ஒன்றுக்கு மேற்பட்ட உண்மைகளைத் தனித்தனியே பகுத்துக் கூறுவது)*

*தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி*
*நன்றி பயப்பதாம் தூது* -685

*தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு* 731

20. **வகுப்பு முறை:** *(ஒரு பொருள் மேல் வந்த பலவாம் தன்மைகளைக் கூறிட்டுக் கூறுவது)*

*குணனும் குடிமையும் குற்றமும் குன்றா*
*இனனும் அறிந்தியாக்க நட்பு* -793

*வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்*
*பண்பிலன் பற்றார்க்கு இனிது* 865

21. **தந்திர முறை:** *(ஒரு செயலுக்கான தந்திர உத்தியைச் சொல்வது)*

*காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்*
*ஏதில ஏதிலார் நூல்* 440

*தன்துணை இன்றால் பகையிரண்டால் தானவற்றுள்*
*இன்துணையாக் கொள்கவற்றுள் ஒன்று* -875

22. **மந்திர முறை:** *(மாந்தர்தம் மனத்தின் வன்மையை எடுத்துக் கூறுவது)*

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப*

-*தொல்:* 1434.

என்றாகலின்

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்* 28

*ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்*
*எண்ணின் தவத்தால் வரும்* 264

23. **கடுமை முறை:** *(சினங் கொண்டு மிகக் கடுமையாகக் கூறுதல்)*

*செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்*
*அவியினும் வாழினும் என்.* 420

*இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்* 1062

24. **கனிவு முறை:** *(கனிவான முறையில் கூறுதல்)*

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று 100

இரப்பன் இரப்பாரை யெல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று 1067

25. **எண்ணுமுறை:** *(ஒன்று இரண்டு வரிசைப்பட எண்ணிக் கருத்துகளை வரையறுத்துக் கூறுதல்)*

படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு 381

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண் 983

26. **இருமடி முறை:** *(சொல்ல வேண்டிய ஒருமுனைக் கருத்தையும், மறுமுனைக் கருத்தையும் மடித்துக் கூறுதல்)*

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு 963

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து 978

27. **சுருக்க முறை:** *அகன்ற ஆழமான கருத்துகளைச் சுருக்கமான முறையில் கூறுதல்)*

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு 424

அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். 501

28. **பெருக்க முறை:** *(எல்லார்க்கும் பொருள் விளங்குமாறு பெருக்கிக் கூறுதல்)*

கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர் 393

செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. 411

எனவாங்கு இங்குக் காட்டப் பெற்ற முறைகள்தாம் என்றில்லாமல், கூறுதல்திறம்கொண்ட முறைகளை நுணுகி ஆராயின் இன்னும்

விரியும் ஆகலின், அவ்வகல்வு அஞ்சி, இதனை இவ்வளவில் நிறுத்தி மேலே செல்வாம்.

இனி, இவர் இவ்வகைக் கருத்துகளை இவ்வாறாகக் கூறுகையில், அவை மக்களுக்கு நன்கு விளங்குதல் பொருட்டாக, அவற்றுக்கு ஏற்றவாறும், பொருந்தும் வகையிலும் எல்லார்க்கும் தெரிந்த உவமைகளை எடுத்துக் கூறுவது, வேறெவரும், எந்நூலிலும் கையாளாத திறன் கொண்டதாகும் என்பது இந்நூலின் தனிச் சிறப்பாகும். இதற்கெடுத்துக் காட்டாகச் சில குறட்பாக்களை இங்குக் காட்டுவோம்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. -90

சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி -118

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. -215

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கில் கரியார் உடைத்து -277

கனைகொடிது யாழ்கோடு செவ்விது ஆங்கன்ன
வினைபடு பாலால் கொளல் -279

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளி தற்று -332

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு -338

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்(து) ஊறும் அறிவு -396

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து -490

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. 495

(இவற்றின் பொருட் சிறப்பையெல்லாம் நூலுள் காண்க)

இவ்வாறு அவர் எடுத்துக் காட்டும் எளிய உவமைகள் கற்பனையால் அன்றிக் காட்சிக்குரிய வாகவும், கூறவந்த கருத்துகளை நன்கு விளக்கு

வனவாகவும் மிகு பொருத்தம் உடையனவாகவும் உள்ளதை நன்கு உணர்ந்து கொள்ளலாம். இவ்வகையில் இவர் பயன்படுத்திய- எடுத்துக் காட்டிய உவமைகள் ஏறத்தாழ, முந்நூறு அளவினதாகும் என்க.

அடுத்து, திருவள்ளுவப் பேராசான் ஆங்காங்குக் கூறும் கருத்துகள் அறவியல், அரசியல், பொருளியல், குமுகவியல், மக்களியல், உலகியல், பொது மையியல், பொதுவுடைமையியல், மனவியல், மக்கள் மனவியல், உடலியல், மருத்துவ இயல், தொழிலியல், தொழில் நுட்பவியல், குடும்பவியல், ஒழுக்கவியல், அறிவியல் பகுத்தறிவியல், மெய்யறிவியல், இயற்கையியல், போரியல், காதலியல், காமவியல் முதலிய அத்தனைத் துறைகளிலும் மேம்பட்டுத் தனிச் சிறப்புடன் விளங்குகின்றன என்பதை இந்நூலுள் புகுந்தார் அனைவரும் ஒரு சேர உணர்வார்.

இத்துணை அறிவியல் சிறப்புகளும் இந்நூலுள் ஒரு சேரப் புதைந்திருந்தாலும் இதன் இலக்கியச் சிறப்பைச் சொல்லி மாளாது என்பதையும் நாம் உணர்தல் வேண்டும்.

இவ்விடத்து இன்னும் ஒரு சிறப்பு நிலையைச் சுட்டியே ஆகல் வேண்டும். அதுதான் இந்நூலாசிரியர்க்கே உரிய சொல்லாட்சிச் சிறப்பாம். என்க.

இவர் கையாண்டுள்ள சொல்லாட்சி, சொற்சிக்கனம், சொற்களின் நுண்பொருள் சிறப்பு, புதுச் சொல்லாட்சி, முழுமைப் பொருள் தரும் சொல்லமைப்பு - முதலியவை வேறு எந்த நூலாசிரியர்க்கும் வாய்த் தவை அல்ல என்பதைத் துணிவுடன் கூறலாம். இவற்றை ஒரு சில எடுத்துக் காட்டுகளுடன் விளக்குவது, இவ்விடத்து மிகவும் இன்றியமையாததாம் என்க.

இவ்வியல் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குறட்பாவை இங்கு எடுத்துக் காட்டுவோம்;

1. **அறவியல்:** மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற -34

2. **அரசியல்:** அறனிழுக்கா(து) அல்லவை நீக்கி மறனிழுக்கா(து)
மானம் உடையது அரசு -384

3. **பொருளியல்:** செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல் -759

4. **குமுகவியல்:** பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான் -972

5. **மக்களியல்:** அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்(பு) இல்லா தவர் -997

6. **உலகியல்:** உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் -140

7. **பொதுமையியல் :**
ஒத்த(து) அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும் -214

8. **பொதுவுடைமையியல்:**
பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை -322

9. **மனவியல் :**
ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு -190

10. **மக்கள் மனவியல்:**
வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார் மேல் செல்லும் இடத்து -250

11. **உடலியல்:**
அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு -945

12. **மருத்துவ இயல்:**
நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல் -948

13. **தொழிலியல் :**
ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார் -463

14. **தொழில் நுட்பவியல்:**
ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு -1038

15. **குடும்பவியல் :**
அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

16. **ஒழுக்கவியல் :**

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும் -133

17. **அறிவியல் :**

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல் -637

18. **பகுத்தறிவியல் :**

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு -423

19. **மெய்யறிவியல் :**

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு -354

20. **இயற்கையியல்:**

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை -15

21. **போரியல்:**

மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு -766

22. **காதலியல் :**

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு -1088

23. **காமவியல் :**

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன் -1109

இனி, திருக்குறளைப் பற்றிப் பொதுவாகச் சொல்ல வேண்டுமானால் இது பொருளியலுக்கே முதன்மை தருகிறது எனலாம். பொருளியலில் அரசியலும் அடங்கும். அறவியலுக்கு அதற்கு அடுத்த இடமும், இன்பத் திற்கு மூன்றாம் இடமும் தந்து, இந்நூலை யாத்துள்ளார் ஆசிரியர் எனலாம். பொருளியலுக்கு எழுபது அதிகாரங்களும், அறவியலுக்கு ஏறத்தாழ அதிற் பாதியாக முப்பத்தெட்டு அதிகாரங்களும். இன்பியலாகிய காமத்திற்கு ஏறத்தாழ அதிற் பாதியாக இருபத்தைந்து அதிகாரங்களும் ஒதுக்கியிருப்பதி

லிருந்தே இது தெரிய வருகிறது.

அறவியல் மனத்தையும், பொருளியல் அறிவையும், இன்பியல் உடலையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன என்பது நுணுகி நோக்குவார்க்கு விளங்கும்.

மக்களாகப் பிறந்தவர் அனைவர்க்கும் பொருளியல் வாழ்வே முதல் தேவையானது. அறவியல், வளர்ச்சி பெற்ற மாந்தர்க்கான உணர்வு நிலையை அடிப்படையாகக் கொண்டது. உடலியலாகிய காமம், உயிரினத்திற்கே பொதுவானதாம் என்க.

உடலியல் விலங்குத் தன்மையும், பொருளியல் மாந்தத் தன்மையும், அறவியல் மீமிசை மாந்தத் தன்மையும் கொண்டவை.

உடலியல் மக்கள் பெருக்கத்தையும், பொருளியல் மக்கள் வாழ்க்கையையும், அறவியல் மக்களின் சிறப்பு வளர்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டவை.

உண்மை அறிவு நிலைகள் இவ்வாறிருந்தாலும், மக்களாகப் பிறந்தவர் அனைவரும் முதலில் விளங்கிக் கொள்ள வேண்டுவது மனவுணர்வு நிலைகளை அடிப்படையாகக் கொண்ட அறவியலே ஆகும். மாந்தர்க்கு முதலில் செப்பமுற வளர வேண்டுவது மனமேயாகும். மனமே மாந்தரை விலங்கினின்று வேறு பிரிப்பதும், அந்நிலையின்று உயர்த்துவதும் ஆகும்.

அறவியல் வழியாகத்தான் ஒருவன் அன்பைத் தெரிந்து கொள்ளுகிறான். அதன் கூறுகளாகிய குடும்பம், நட்பு, குமுகாயம், அவை இணைந்து இயங்கும் வாழ்க்கை இவற்றின் ஒன்று பட்ட தன்மைகளையும் வேறுபட்ட இயக்கங்களையும் உணர்ந்து கொள்ளுகிறான். உயிரினத்தின் இயக்கமும், அதன் நிலைப்பாடும் அன்பையே அடிப்படையாகக் கொண்டவை. ‘அன்பின் வழியது உயிர்நிலை’ (80) என்றார் ஆசிரியரும். ‘அறத்திற்கே அன்பு சார்பு’ (76) என்றும் கூறுகிறார். உலக வாழ்க்கையையே அன்போடு இயைந்த வழக்கு, (73) என்றும், ‘புறத்துறுப்பெல்லாம் நிறைவுற அமைந்தாலும், அகத்து உறுப்பு என்பது அன்பே’ என்றும், ‘அஃது இல்லையானால் வாழ்க்கை துளிர்விட்டு, மலர்ந்து, காய்த்துக் கனிதராத மரம் போல் ஆகிவிடும்’ என்றும் (78) அவர் அறிவுறுத்துகிறார். எனவே, அன்பை அடிப்படையாகக் கொண்ட அவன் அறத்தை இளம் பருவம் முதலாகவே உணர்ந்து கொள்ள வேண்டும் என்பது ஆசிரியப் பெருமகனாரின் வேணவா. எனவே, இவ்வுலகத்துப் பிறந்த மாந்தன் ஒவ்வொருவனும் முதலாக உணர்ந்து கொள்ள வேண்டுவது, நூல்வழி கற்பிக்கப்பெற வேண்டுவது அறத்தையே என்பது அவரின் தெளிந்த தேர்ந்த கருத்தாகும். எனவே அறத்தையே நூலுக்கு முதலாகவும் முடிமணிமாகவும்

வைக்கிறார். இதனால், இந்நூல் அறம் என்றும் பெயர் சுட்டி வழங்கப்பெற்றது. தமிழியல் மரபும் அறத்தையே முதன்மையாகக் கொண்டதாம் என்க. அறத்தின் வழியாகவே, அஃதாவது அறத்தைத் தெரிந்துகொண்ட பின்னரே ஒருவர்க்குப் பொருளும் இன்பமும் புகட்டப் பெற வேண்டும் என்பதே இயற்கையாகவும், பொருத்தமாகவும், அறிவுக்கு ஏற்புடையதாகவும் இருக்கிறது என்க. அதனாலேயே தமிழ முனைவோரும் முன்னோரும் அறிவரும் சான்றோரும் அறத்தை முதன்மைப் படுத்தினர். பின்னர் அதுவே தமிழியல் மரபாயிற்று. அறத்தை முதன்மையாகக் கொண்டே அதன் வழியாகப் பொருளீட்டமும், பின்னிவை இரண்டின் வழியாகவே இன்பியலாகிய காதலும் அதன் கனியாகிய காமமும் நிகழ்தல் வேண்டும் என்று நெறிப்படுத்தினர்; வழிவகுத்தனர்.

இதனைச்

> 'சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
> அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல'

-புறம் 31:1-2

என்று தமிழியல் நூல்கள் அனைத்தும் புலப்படுத்தியுள்ளன என்க

இஃதிவ்வாறிருக்க, இற்றையறிஞருள், மு. வரதராசனார் போன்ற பேராசிரியர் ஓரிருவர், இந்நிரல் முறையை மாற்றி, அதற்குப் பல்வேறு காரணம் காட்டி, இன்பம், பொருள், அறம் என்று தலைகீழ்ப்படுத்தி நூலும் உரையும் கண்டது தமிழியலுக்கும், அறிவியலுக்கும், ஆய்வியலுக்கும், வாழ்வியலுக்கும் சிறிதும் பொருந்தாதாம் என்று கூறித் தவிர்க்க. அது, நிழலைக் கண்டு மரத்தையும், மரத்தைக் காட்டிக் கதிரவனையும் உணர்த்துவிப்பதாம் என்க.

இவர்தம் **சொல்லாட்சித்** திறனுக்கு எடுத்துக்காட்டுகள்:

மலர்மிசை(3), பொறிவாயில் (5), அறவாழி (8), துப்பார், துப்பாய துப்பாக்கி (12), விரிநீர் (கடல்) (13), வியனுலகம் (19), இருமை (23), செந்தண்மை (30), அழுக்காறு (35), அறத்தாறு (35), வீழ்நாள் (38), செயற்பாலது, உயற்பாலது (40), தென்புலம் (43), பாத்தூண் (44), ஒழுக்கி (48), வாழ்வாங்கு (50), மனைத்தக்க, வாழ்க்கைத் துணை (51), மனைமாட்சி (52), பெருந்தக்க (54), தற்காத்து, தற்கொண்டார் (56), புகழ்புரிதல் (59), மக்கட்பேறு (61), எழுபிறப்பு (62), புன்கணீர் (71), புறத்துறுப்பு (79), வேளாண்மை (81), (212), (613),(614) [வேளாண்மை என்னும் சொல்லை முதன் முதலிற் கையாண்டவர் திருவள்ளுவப் பேராசிரியரே ஆவர். அதற்கு முன்னர் 'வேளாண்' என்னும் சொல் உழவு என்னும் பொருளில் தொல்காப்பியத்திலும், புறநானூற்றிலும் ஆளப்பெற்றுள்ளது. ஆனால் மை யீற்றுப் பெயர்ச் சொல்லாக இதை நான்கிடங்களிலும் 'விருந்து' (81), இல்லார்க்குதவுதல் (212), ஈகை - கொடை (612, 614) என்னும் பொருள்களில் பயன்படுத்தியவர் இவரே! இவ்வாறாகிய

பிற சொற்களை நூலுள் ஆய்ந்தறிக.

இவர்தம் **சொற்சிக்கனத்தை** பின்வரும் சில எடுத்துக்காட்டுகளில் காண்க.

1. 'வியப்புக் கொள்ளற்க' என்னும் நெடிய தொடரை மிகவும் சுருக்கமாக **வியவற்க** (439) என்று சுருங்கப் பயன்படுத்தியவரும் இவரே.

2. 'தெளிவிலாத ஒன்றை என்பதைத் 'தெளிவிலதனை' (454) என்றும்,

3. 'ஆகாதவர்' என்பதை 'ஆகார்' (895) என்றும்,

4. 'ஆக்கம் தருகின்ற வழிகளை ஆகாறு' (478) என்றும்,

5. 'செலவு செய்கின்ற வழிகளைப் போகாறு' (478) என்றும்,

6. 'செய்ய முடிந்த ஒன்றை இயல்வது' (734) என்றும்,

7. 'செயலைச் செய்து முடிக்கும் திறனுள்ளவரை ஆற்றுவார்' (985) என்றும்,

8. 'பெரியோர்கள் விரும்புகின்ற விருப்பநெறிகளை உலகவாம்' (215) என்றும்,

9. 'கண்ணைப் போல் கருதத் தக்கவர்களைக் கண்ணன்னார்' (1061) என்றும்,

10. 'கொழுந்துவிட்டு இலைகள் மல்கி ஓங்கி வரும் மரத்தைப் போன்று என்பதைத் 'தளிர்த்தற்று' என்றும்,

இன்னும் பலவாறும் சுருங்கச் சொல்லும் அழகு இவர்க்கே உரியது என்க.

**நுண்பொருள் தரும் சொற்களை** இவர் கையாள்வதற்குச் சில சான்றுகள் வருமாறு:

1. எல்லார்க்கும் விளங்குமாறு எளியமுறையில் பொருள் தருவதை **'எண்பொருளவாக'** (42) என்றதும்,

2. 'எப்பொழுதும் அடங்காத, நிரம்பாத, தொடர்ந்து மேலும் மேலும் தோன்றிக் கொண்டே இருக்கின்ற ஆசையுணர்வை'க் குறிக்க **'ஆராவியற்கை அவா'** (370) என்றதும்,

3. 'என்றும் மாறுபடாமல் நிலைப்பட்டு இயங்கும் விசும்பு, ஒளி காற்று முதலிய இயற்கைப் பொருள்களைக் குறிக்க **பேரா இயற்கை** (370) என்று கூறியதும்'

4. என்றும் நிலைத்திருக்கின்ற இறைமைப் பொருளை **மெய்ப்பொருள்** (355, 423) **செம்பொருள்** (358) என்றதும்,

5. அறிவின்பாற்பட்ட அறியாமை மயக்கத்தை **இருள்** (5, 352, 1001), மனத்தின் பாற்பட்ட ஆசையால் ஏற்படும் மயக்கத்தை **மருள்** (199, 351, 352, 1001) என்று உணர்த்தியதும்,

6. அடைவதற்கு மிக அருகில் உள்ள தொலைவை **நணியது** (353) என்று கூறியதும்,

7. பெறுவதற்கு மிக அண்மையில் உள்ள காலத்தை **நணித்து** (856) என்றதும்,

8. 'உயர் செல்வத்தினின்று ஏழைமை என்னும் வறிய நிலைக்குத் தாழ்ந்து போதலை'த் **தவல்** (853, 856) என்றதும்,

9. என்றென்றும் தாழ்வில்லாததும் அழியாததுமாக விளங்கித் தோன்றுகின்ற புகழ் என்பதற்குத் **தாவில் விளக்கம்** (853) என்றதும்,

10. உலகின்கண் உள்ள ஒளிகளெல்லாம் ஒருநாள் அணையும் அல்லது அழியும் என்னும் தன்மையில், என்றுமே அழியாததாய் நிலைத்து நிற்கும் அறிவை **நின்ற ஒளி** (698) என்று விதந்து கூறியதும்,

அவரின் மெய்ப்பொருள் உணர்வில் நுண்பொருள் காணும் தன்மையை விளக்கினவாம், என்க.

இனி, அவர் **புதுவதாகப் புனைந்து** கூறிய புதுமைச் சொல்லாட்சிகளுக்குச் சில எடுத்துக்காட்டுகளைக் காண்க.

1. திருமணவுணர்வால் பெண்கள் அடிமைப்படுவதை, விரும்பாத பேராசான், மனைவியைக் குறிக்க **வாழ்க்கைத் துணை** என்னும் சமநிலையுணர்வுச் சொல்லைப் பெய்ததும்,

2. அதேபோல் **விலை மகளிர்** (விலைநலப் பெண்டிர்-புறம் :365; விலைக்கணிகை - பரி:20;) **விலையாட்டி** - சிலப் :12) **பரத்தையர்** (தொல் III-44; நற்:230, 260; ஐங்:48, 84; பரி:9,12; கலி:73,84,93, 94, 96; அகம்:256: சிலப்:10 **பொது மகளிர்** (கலி:101), **கூத்தியர்** (சிலப் : 5,14; மணி: 12,18,28), கணிகையர் (பரி:20, சிலப்: பதி 15, 5, 11, 15, 27) மணி: 11,13,16,22,21,24,29,100) திரிகடு: 24,76,81) **காமக்கிழத்தியர்** (தொல்:III-144, 145, 149), **ஆடல் கூத்தியர்** : (சிலப் : 5) **அணங்கியர்** (குறுந்: 119; ஐங்: 250,259, அகம்: 322, 372), **காமராட்டி (காமர் நெஞ்சம்,** நற்: 242, 259 **காமர்துணை** : நற்:162, அகம் :154, **காமர் சிறுகுடி** : நற்: 239) - என்றவாறெல்லாம் பொதுப் பெண்டிரை, இழிவு கூறி அழைக்க விரும்பாத அவ்வறிநிலைப் பண்பாசிரியர், அவர்களுக்கென்றே, 'திருமணம் செய்து கொள்ளாத பெண்டிர்' என்றும், 'எல்லையின்றிப் பழகும் மகளிர்' என்றும் பொருள் படும்படி **வரைவின் மகளிர்** (வரைவுஇல் மகளிர்) என்று புதுச்சொல் புனைந்து அழைத்ததும்,

3. துன்பம் இணைந்து வரும் குற்றச் செயலை (ஆபத்தை) (Danger) **ஏதம்** (136) என்றதும்,

4. தம் இனத்தவர் ஒன்றாக வாழும் நிலத்தைத் **தமரகம்** (1027) என்று கூறியதும்,

5. பகையும் நட்பும் அல்லாத பிறரை **ஏதிலார்** (188) என்றதும்,

6. பெருந்தீனி தின்பவனைக் **கழிப்பேரிரையான்** (946) என்றதும்,

7. அன்பில்லாத தன்மையை **நாரின்மை** (958) என்றதும்,

8. நாள்தோறும் துன்புறுத்துகின்ற வறுமைத் துன்பத்தை **நிச்சநிரப்பு** (532) என்று கூறியதும்,

9. பார்வையைப் **பார்வல்** (1152) என்றதும்,

10. மற்றவன் வீட்டுப் புறங்கடையைப் பிறன்கடை (142) என்றதும்

– இவை அவர், இந்நூலுள் புதுவனவாகப் புனைந்து கொண்ட நூற்றுக் கணக்கான சொற்களுள் சிலவாகும்.

இனி, அவர் கையாண்டுள்ள கருத்துகளில் உள்ள இலக்கியச் சிறப்புப் பற்றியும் சில கூறுதல் வேண்டும். ஒரு கருத்தை நேரிடையாகவும் வெளிப் படையாகவும் சொல்லும் அதே நேரத்தில், அழகு பெறவும் அணிபெறவும் மிகச் சிறந்த சொற்களால், மிகச் சிறந்த அமைப்பு முறையில், கேட்பவர் உணர்வும் உயிர்ப்பும் உளப்பதிவும் பெறுமாறு நயம்பட எடுத்துக் கூறுவதே இலக்கியச் சிறப்பாகும். **நயம்பட உரை** என்றார் ஔவையாரும்.

திருவள்ளுவரைப் பொறுத்த அளவில், வேறு எப்புலவரை விடவும் சொல்லும் முறைக்கே இலக்கணமும் இலக்கியமும் கண்டவர் அவர் என்று கூறுவது மிகையாகாது. தாம் விரும்புவதை எவ்வாறு சொல்லுதல் வேண்டும் என்பதை அவர் கீழ் வருமாறு பாரித்துக் கூறுவார்.

'இன்சொலால், ஈரம் அளைஇப் படிறு இல்லாதவாறு' (91), 'நல்லவை நாடி இனிய' (96) முறையில், 'பண்பில் தலைப் பிரியாமல்' (97), 'சிறுமையுள் நீங்கிய இன்சொல்'லால் (98), 'வன்சொல் வழங்காது' (99), 'சொற்கோட்டம் இல்லாத செப்பமுடன்' (119), 'ஒன்றானும் தீச் சொல்' (128) பயவாமல், 'அறம் சொல்லும் நெஞ்சத்'தொடு (135), 'பயனில பாரித்துக்' (193) கூறாமல் 'சொல்லிற் பயனுடையவை'யை (200) மட்டும் தேர்ந்து, 'ஆக்கமும் கேடும் அதனால் வருவதால், சொல்லின் கண் சோர்வு காத்து' (642), 'கேட்டார்ப் பிணிக்கும் தகைவாய்க் 'கேளாரும் வேட்கும்படி' (643) 'திறனறிந்து' (644), 'பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து' (645) 'நிரந்தினிது' (648), 'மாசற்ற சில சொல்லால்' (649) 'கற்றது உணர விரித்து' (700), 'அன்பு, அறிவு, ஆராய்ந்த' (682) சொற்களால், 'தூவாத

நீக்கித் தொகும்படி' (685),'இடனறிந்து எண்ணி' (687),'வாய்மையின் வழியில் (688),'வாய் சோராமல்' (689),'உறுதி பயக்கும் வகையில்' (690),'வெறுப்பில வேண்டு வேட்ப' (696),'அவையறிந்து ஆராய்ந்து, சொல்லின் தொகையறிந்து' (711), நன்கு உணர்ந்து, சொல்லின் நடை தெரிந்து (712), சொல்லின் வகையறிந்து (713) 'சொல்லின் தொகையறிந்து' (721) 'ஏற்று உணர்வார் முன்னர் இழுக்குத் தோன்றாத வாறு (716),' கற்றறிந்து, கசடறச் சொல் தெரிந்து' (717),' உணர்வது உடையார் முன்', 'வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிதல்' (718) போல், கேட்பவர்க்கு நன்கு செல்லும்படி, (686, 719, 722, 728, 730) சொல்லுதல் வேண்டும் என்பது அவர் விரித்துக் கூறும் 'சொல்லுதல் இலக்கணம்' என்க. இவ்விலக்கணத்துக்கு இலக்கியமாய் அவர் இந்நூலை எழுதியும் காட்டியுள்ளார் – என்று உணர்க.

இனி, அவர் இவ்வகையில் கையாண்ட **இலக்கியச் சிறப்பு** வாய்ந்த குறட்பாக்கள் சிலவற்றை எடுத்துக்காட்டுவாம்

1.நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா(து) ஆகி விடின் -17

2.புகழ்புரிந்த இல்லிலோர்க்(கு) இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை -59

3.முகத்தான் அமர்ந்(து) இனிதுநோக்கி அகத்தானம்
இன்சொல் இனிதே அறம் -93

4.அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு -73

5.இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது) அரசு -385

6. பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக்(கு) உறின் -599

7.என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர் -771

8.யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும். -1094

9.துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து -1218

10. தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண்டு அவள்செய் தது -1279

11. மலரினும் மெல்லிது காமம் சிலரதன்

*செவ்வி தலைப்படு வார்.* -1279

12. *உள்ளினேன் என்றேன்மற்று ஏன்மறந்தீர் என்றென்னைப்*
*புல்லாள் புலத்தக் கனள்* -1316

*இனி, உலகப் பெருநூலாகிய இத் திருக்குறளின்கண் உள்ள இவ்வாறான பல்வகைச் சிறப்புகளுள், எண்கள் அனைத்தையும் இதனுள் பெய்து வைத்த சிறப்பும் ஒன்றாகும் என்பர். அனைத்து எண்களும் இதில் ஏதோ ஒருவகையில் சுட்டப் பெற்றுள்ளதையும் கீழ் வரும் விளக்கத்தில் காண்க.*

*திருக்குறளில் வந்துள்ள எண்கள்*

**ஒன்று:** 87, 109, 111, 221, 232, 233, 334, 380, 438, 758, 773, 831, 839, 875, 932, 934, 1006, 1007, 1035, 1080, 1202, 1271, 1273, 1274, 1325.

**இரண்டு:** 19, 392, 393, 402, 455, 581, 662, 674, 760, 875, 992, 1022, 1247

**இரு:** 5, 374, 737, 920, 1091, 1196.

**மூன்று:** 360, 383, 682, 684, 688, 941, 952, 1085.

**நான்கு:** 35, 146, 382, 390, 501, 513, 605, 743, 766, 953, 766, 953.

**நால்:** 950.

**ஐந்து:** 6, 24, 25, 126, 271, 675, 738, 939, 983.

**ஐ:** 43, 354, 1101.

**ஆறு:** 381.

**ஏழு** *(எழு):* 62, 107, 1269, 1278

**எழுமை :** 107, 126, 398, 538, 835.

**எட்டு** *(எண்) :* 9

**ஒன்பது:** இல்லை

**பத்து :** 450, 817

**நூறு:** 932

**ஆயிரம் :** 259

**கோடி:** 337, 377, 639, 816, 954, 1005, 1061

**எழுபது கோடி:** 639

**அடுக்கிய கோடி :** 954, 1005.

இனி, திருக்குறளில் ஏறத்தாழ 12,000 சொற்கள் பயிலப்பெற்றுள்ளனவாக அறிஞர் கணக்கிடுவர். சரியாக 12505 சொற்கள் என்றும், அவற்றுள் அடிப்படை வேர்ச்சொற்கள் 4310 என்றும், 1330 குறட்பாக்களில் உள்ள வேலாயுதனார், தாம் தொகுத்த **'திருக்குறள் சொல்லடைவு'** என்னும் அறிய நூலுள் குறிப்பிடுவார்.

அவற்றுள் ஏறத்தாழ 50 சொற்களே வட சொற்கள் என்பார் அறிஞர் கா. சுப்பிரமணியனார். 123க்கு மேலான வட சொற்கள் என்பர். - பேரா. வையாபுரியார். ஆனால் 17 சொற்களே என்பார் பாவாணர்.

அவர் காட்டும் வட சொற்களும், அவற்றிற்கு அவர் தரும் தமிழ்ச் சொற்களும் வருமாறு:

1. **ஆதி** - முன்னை, 1, 543.
2. **இந்திரன்** - அரசன், வேந்தன், 25.
3. **அந்தம்** - ஒருதலை, 563, 593. (ஒருவந்தம்)
4. **அமரர்** - உவணுலகர் (மேலுலகர்) -121
5. **அவி** - (ஹவிஸ்) - யாகத்தில் இடுபொருள்
நெய், ஊன் முதலியன 259
6. **அன்னம்** - எகினம், ஓதிமம்-1120
7. **ஆகுலம்**-ஆரவாரம் 34
8. **ஆசாரம்** - ஒழுக்கம் 1075
9. **உல்கு** - ஆயம், தீர்வை 756
10. **கணம்** - நொடி 29
11. **காரணம்** - கரணி, ஏது 270, 529, 530
12. **சலம்** - அல்வழி, வஞ்சனை 660, 956
13. **நாமம்** - பெயர், பேர் 390
14. **பாக்கியம்** - நற்பேறு 1141
15. **பாவம்** - கரிசு 146
16. **பாவி** - கரிசன், அறங்கடையன் 168, 1042
17. **வித்தகர்** - மாதிறவோர் 235

ஆனால், இவற்றுள்ளும், 'ஆதி' தமிழ்சொல்லே என்பார் சொல் லாய்வறிஞர் ப. அருளி.

ஆயினும் **அமரர், அன்னம், கணம், காரணம்** ஆகிய நான்கு சொற்களும் தமிழ்ச் சொற்களாகவே இருத்தல் வேண்டும். இவை பழந்தமிழ் நூல்களுள்ளும் மிகப் பரவலாகவே வழக்கூன்றி உள்ளன. இவற்றின் சொல் விளக்கம் வருமாறு:

அமர்- இரு -- **அமர்தல் — இருத்தல்,** அமரர் - இருப்பவர். அஃதாவது மேல் உலகம் என்று கருதப்பெறும் உலகில் நிலையாக இருப்பவர். அவரே தேவர். தேவர்ப் பற்றிய கருத்து ஆரியத்திலும் உண்டு; தமிழிலும் உள்ளது. தேவர் என்பதும் தமிழ்ச் சொல்லே. தேவர் இருப்பு கற்பனையாகவோ, மூட நம்பிக்கையாகவோ இருக்கலாம். ஆனால் அதற்காக அச் சொற்கள் தமிழ்ச் சொற்கள் இல்லை என்று கூற முடியாது. பழந்தமிழரும் மூட நம்பிக்கையால் சில உலகியல் கருத்துகளையும் நடைமுறைகளையும் வகுத்துக்கொண்டவர்களே. அறிவியல் நோக்கற்ற நெடும் பழங்காலத்தில் மூட நம்பிக்கைகள் இருந்திரா என்று கொள்வதற்கில்லை. எனவே, அவையும், அவை பற்றிய சொற்களும் தமிழியல் மரபினவாகவே கொள்ளப்படுதல் வேண்டும். உலகின் அனைத்து இனங்களிலும் இற்றை அறிவியலுக்கும் மெய்யறிவியலுக்கும் பொருந்தாக் கற்பனைகளும் மூட நம்பிக்கைகளும் உண்டு என்க. எனவே, தமிழரெல்லாரும் அறிவினராகவே பிறந்தனர், வளர்ந் தனர், இருந்தனர், வாழ்ந்தனர் என்று மிகைபெறக் கூறுதல் அறியாமை. உலகின் அனைத்து உயிர்களும் படிநிலை வளர்ச்சி பெற்றனவே, பெறுவனவே என்று தெள்ளிதின் உணர்க.

**அன்னம்:** மூலம் தெளியப்படவில்லை. எனினும், இதுவும் தமிழரிட்ட தமிழ்ப் பெயர்ச் சொல்லாகவே இருத்தல் வேண்டும். இவ்வாறு அயல் நிலத்துப் பொருள்கள், உயிர்கள், பயிர்கள் தமிழ் நிலத்துக்கு வந்த பின்னர், பழந்தமிழர் அவற்றின் உருவும், பருவும், திருவும், செயலும் கண்டு தமிழால் இட்ட பெயர்கள் நூற்றுக் கணக்கில் உள. அவற்றுள் சில:

குதிரை, ஒட்டகம், கோவேறு கழுதை, நீர்க்கோழி, நெருப்புக் கோழி, கிண்ணிக் கோழி, நீர்நாய், கரும்பு, உருளைக் கிழங்கு, பேரீச்சை, மா, கொய் யா, நரந்தை, ஆரஞ்சு, வெங்காயம், முந்திரி, கொடிமுந்திரி, தேக்கு, பிண்டி (அசோகு) செந்தாழை முதலிய எண்ணிறந்தன அயலகப் பொருள்களே. அவற்றுள் ஒன்றாகவே அன்னம் இருக்கலாம். வாத்தும் அவ்வகையதே.

**கணம்:** நொடி, கூட்டம் -இரண்டு பொருள் தருவது. இதுவும் தமிழ்ச் சொல் லே.

கண் - கணம் - கண்ணிமைப் பொழுது

கண்-பொருந்துதல்-கூடுதல்-கூட்டல்(கணக்கு) மிகுதல், பெருகுதல் பொருளில் கூட்டத்தைக் குறிக்கும்

**காரணம்:** *கரு-வேர் அணம் பின் பெயர் ஒட்டு. (தக்கணம், ஒட்டியாணம், இறவாணம்-காண்க)*

*கரு + அணம் -- கரணம்-கரணியம்-காரணம்*

*கரு + அமம் - (பெயர்ச்சொல் பின்னொட்டு)- கருமம் (தமிழ்ச் சொல்)*

*எனவே, காரணமும் தமிழ்ச் சொல்லே, என்க.*

*(இச் சொற்கள் பற்றிப் பாவாணரிடம் நேரில் விளக்கம் கூறி, அவை தமிழ்ச் சொற்களே என்று வழக்காடி ஒப்புக்கொள்ளச் செய்துள்ளார் இவ்வுரையாசிரியர் -- என்க.)*

*எனவே, இவை தவிர பிற பதின்மூன்று சொற்களுமே திருக்குறளில் வட சொற்கள் என்பதில் ஐயமின்று -- என்க.*

*- இனி, பழந்தமிழ் இலக்கிய நூல்களுள், திருக்குறள் ஒன்றே நூலாசிரியர் பலராலும் தம்தம் கருத்துகளுக்கு இயைபாக எடுத்துக் கையாளப் பெற்றுள்ள சிறப்பைப் பெறுகின்ற நூலாகும் என்று தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.*

*அவ்வகையில், கிபி. 12-ஆம் நூற்றாண்டு அளவில் வாழ்ந்திருந்த உலகப் பெரும் பாவலர் கம்பர், தாம் பாடிய இராமாயணத்துள் திருக்குறள் பாக்களை முழுவதுமாகவோ, பகுதியாகவோ, பலவிடத்தும் எடுத்து இணைத்துப் பாடியுள்ளார். கிட்டத்தட்ட 600-க்கும் மேற்பட்ட குறட்பாக்களைக் கம்பர் தம் நூலில் எடுத்தாண்டுள்ளதாகக் கூறுவர்.*

*இனி, இராமாயணம் தவிர,*

*'புறநானூற்'றில் 32 இடங்களிலும், 'புறப்பொருள் வெண்பா மாலை'யில் 35இடங்களிலும் 'பதிற்றுப் பத்'தில் ஓர் இடத்திலும், பத்துப்பாட்டில் ஓர் இடத்திலும், சிலப்பதிகாரத்தில் 13 இடங்களிலும், மணிமேகலையில் 91 இடங்களிலும், 69 சீவக சிந்தாமணியில் 20 இடங்களிலும், வில்லிபாரதத்தில் 12 இடங்களிலும், திருவிளையாடல் புராணத்தில் 7 இடங்களிலும், கந்த புராணத்தில் 4 இடங்களிலும்*

*திருக்குறள் பாவடிகள் எடுத்தாளப் பெற்றுள்ளவாகக் கூறுவர். (உண்மை 15.12.84)*

*இனி, தமிழ் இலக்கியப் பரப்பினுள் வைத்து எண்ணப்பெறும் நூல்களுள்ளேயே திருக்குறளே பலவாறான உலக, இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ள, இன்னும் மொழிபெயர்க்கப் பெற்றும் வரும் தலையாய நூலாகும் என்பது நாம் அனைவரும் பெருமைப் பட்டுக் கொள்ளும் ஓர் உண்மைச் செய்தியாகும். அதனைப் பற்றியும் இம் முன்னுரையுள் ஒரு சில கூறுவது முகாமையும் இன்றியமையாமையும் ஆகும்.*

முதலில், திருக்குறள் முழுமைக்கும் ஒரு **சமசுக்கிருத** மொழிபெயர்ப்பு உண்டு என்று **பா். உ.வே. சாமிநாதர்** கூறியிருக்கிறார். (நூல் : திருவள்ளுவரும் திருக்குறளும், - 1936)

இதற்கு உலகப் பெரும் பரவல் மொழியாகிய **ஆங்கிலத்தில்** அறிஞர்கள் பலரின் பல மொழிபெயர்ப்புகள் உண்டு.

1730 - இல் வெளிவந்த மதத்தந்தை **சி. சோசப் பெசுகி** (C.Joseph Beschi) அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பே முதலாவதாகத் தெரிகிறது.

1794 இல், இலண்டன், டபுள்யூ. பல்மர் குழுமம் வெளியிட்ட, **கிண்டர்சலி** (N.E. Kindersley) வெளியிட்ட சில மொழிபெயர்ப்புகளுடன் கூடிய நூல் அடுத்ததாகத் தெரிய வருகிறது. அதன் பின்னர்,

அறிஞர் **எல்லிசு** (F.W. Ellis) அவர்கள் (நூல்) 1812-இலும்,

அறிஞர் **டுரு** (W.H. Drew) அவர்கள் (நூல்) 1840-இலும்,

அறிஞர் **கோவெர்** (Charles.E. Gover) அவர்கள் (நூல்) 1871-இலும்,

அறிஞர் **இராபின்சன்** (Edward.J. Robinson) அவர்கள் (நூல்) 1873 இலும்,

அறிஞர்கள் **டுரூவும் இலாசரசும்** (மொழி பெயர்ப்பு 1876 இலும்,

அறிஞர் **இராபின்சன்** (Edward.J. Robinson) அவர்கள் தெய்விகப் பறையர் என்னும் பெயரில் 1886 இலும்,

அறிஞர் **சி.யு. போப்** (G.U. Pope) அவர்கள் (மொழிபெயர்ப்பு) 1886 இலும்

திருவாட்டி **செ.திருநாவுக்கரசு** அவர்கள் (மொழிபெயர்ப்பு) 1916 இலும்

அறிஞர் **வி.வி.எசு. அய்யர்** அவர்கள் (மொழிபெயர்ப்பு) 1816இலும்

அறிஞர் **அ. மாதவையா** அவர்கள் (உரை. மொழிபெயர்ப்பு) 1925இலும்,

அறிஞர் **எசு.எம். மைக்கேல்** அவர்கள் (மொழி பெயர்ப்பு) 1926-இலும்

அறிஞர் **எம்.எசு. பூரணலிங்கம்** அவர்கள் (திறனாய்வு) 1927-இலும்,

அறிஞர் **எச்.ஏ. பொப்பிலி** அவர்கள் (மொழிபெயர்ப்பு) 1931-இலும்

அறிஞர் **எசு. அரங்கநாதர்** அவர்கள் (மொழிபெய்ர்ப்பு 1933இலும்
அறிஞர் **சி.இராசகோபாலாச்சாரி** அவர்கள் மொழிபெயர்ப்பு 1937இலும்
அறிஞர் **எம்.எசு. பூரணலிங்கம்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1942-இலும்
அறிஞர் **வி.ஆர். இராமச்சந்திர (தீட்சித)ர்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1949-இலும்

அறிஞர் **அ. சக்கரவர்த்தி** அவர்கள் மொழிபெயரப்பு *1953*இலும்

அறிஞர் **எம்.ஆர். இராசகோபால (ஐயங்கா)ர்** அவர்கள் மொழிபெயர்ப்பு

1950 இலும்

அறிஞர் **ஐ.டி. தங்கசாமி** அவர்கள் மொழிபெயர்ப்பு 1955-இலும் அறிஞர் **இரா.பி. சேது(ப்பிள்ளை)** அவர்கள் நூல் 1955-இலும், அறிஞர்கள் **ஜி.யு. போப், டுரு, இலாசரஸ், எல்லிசு** ஆகிய நால்வரின் மொழிபெயர்ப்புகள் ஒரு சேரப் பதிப்பித்த மொழிபெயர்ப்புகள் 1958-இலும்,

அறிஞர் **வி.வி.எஸ். ஐயர்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1961-இலும், அறிஞர் **கே.எம். பாலசுப்பிரமணியம்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1962-இலும் வெளி வந்துள்ளனவாகத் தெரிய வருகிறது.

அடுத்து **செருமன்** (Germon) மொழிபெயர்ப்புகள்:

அறிஞர் **ஏ.எப். கேமர்சு** (A.F. Camers) மொழிபெயர்ப்பு 1803 இலும், அறிஞர் **பிரடெரிக் ருக்கெர்ட்** (Friederich Ruckert) அவர்கள் மொழிபெயர்ப்பு 1847-இலும்,

அறிஞர் **கர்ல் கிரௌல்** (Karl Graul) அவர்கள் நூல் 1854இலும் மறுபதிப்பு 1856இலும் மேலும் அவர் எழுதிய மொழி பெயர்ப்பு 1865-இலும் வெளிவந் துள்ளனவாகத் தெரிய வருகிறது.

இவையன்றி, **இலத்தீன்** (Latin) மொழிபெயர்ப்புகள்: அறிஞர் **சார்லசு கிரௌல்** (Charles Graul) அவர்கள் மொழிபெயர்ப்பும் திறனாய்வும் 1886இலும்,

அறிஞர் மதத் தந்தை **சி.சோசப்பு பெசுகி** (Fr. C. Joseph Besche) அவர்கள் எழுதிய இலத்தீன் மொழி பெயர்ப்பு 1730இலும் வெளிவந்துள்ளனவாகத் தெரிகிறது.

இனி, **பிரெஞ்சு** (French) மொழி பெயர்ப்புகள்:

அறிஞர் மதத் தந்தை **சி. சோசப் பெசுகி** (Fr. C. Joseph Beschin) அவர்கள் மொழிபெயர்ப்பு 1730இலும்,

அறிஞர் **ஈ.ஏரியல்** (E.Ariel) அவர்கள் மொழிபெயர்ப்பும் திறனாய்வு 1848இலும்,

அறிஞர் **பி.சி. தேதுயுமாசுடு** ( P.G.de Dumast) அவர்கள் எழுதிய விரிவான ஒப்பீட்டுத் திறனாய்வு 1857-இலும்

அறிஞர் **உலூயுசு சா கோலியட்** (Louis Jacollist) அவர்கள் ஆய்வு நூல் 1867இலும்,

அறிஞர் **எம்.இலாமாய் செசுசி** (M. Lamaisesse) அவர்கள் மொழிபெயர்ப்பு 1867இலும்

அறிஞர் **உலூயுசுசா கோலியட்** (Louis Ja Colliot) அவர்கள் மொழி பெயர்ப்பு

1876இலும்

அறிஞர் **தே. பாரிக்யு** (De Barrigue) அவர்கள் எழுதிய ஆய்வு நூல் 1889 இலும்

அறிஞர் **ஞானா தியாகூ** (Gnana Diagoo) அவர்கள் மொழிபெயர்ப்பு 1942இலும் வெளிவந்துள்ளனவாக அறியப் பெறுகிறது.

அடுத்து, அறிஞர் **வியூரி இலாசோவ்** அவர்களும், அறிஞர் **ஏ. கிருட்டிணமூர்த்தி** என்பாரும் சேர்ந்து செய்த **உருசிய** (Russian) மொழி பெயர்ப்பு 1963-இலும்

அறிஞர் **அப்பா (தீட்சிதர்)** அவர்கள் **சமசுகிருத** மொழிபெயர்ப்பு 1922இலும்

அறிஞர் **சிரிராம (தீட்சிதர்)** அவர்கள் அறத்துப்பால் சமசுக்கிருத மொழி பெயர்ப்பு 1961-இலும்

அறிஞர் செல்வி **மிசிகாமி** (Miss.Misigamy) எழுதிய **சிங்கள** மொழி பெயர்ப்பு 1961-இலும் வெளிவந்தனவாக அறியப்பெறுகிறது.

இனி **இந்தி** மொழிபெயர்ப்புகள்:

அறிஞர் **கிசிமானந் இராகித்** (Kshemanand Rahit) அவர்கள் மொழி பெயர்ப்பு 1924-இலும்

அறிஞர் **பி.டி.செயின்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1952இலும்

அறிஞர் **எகசங்கர் ராசு** அவர்கள் மொழிபெயர்ப்பு 1958-இலும், **கிசிமானந் இராகித்** அவர்கள் திறனாய்வு நூல் 1959-இலும்

அறிஞர் **எம்.ஜி. வெங்கட்ட கிருஷ்ணன்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1964-இலும் வெளிவந்தனவாகத் தெரியவருகின்றது.

அடுத்து அறிஞர் **பி.எசு. சானே** (P.S. Sane) அவர்கள் **மராத்தி** மொழி பெயர்ப்பு 1931-இலும்

அறிஞர் **நஜின்கிலால் சோக்சி** (Najṅklal Choksi) அவர்கள் குஜராத்தி மொழிபெயர்ப்பு 1932இலும்,

அறிஞர் **நளினி மோகன் சன்யால்** (Nalini Mohan Sanyal) அவர்கள் **வங்காள** மொழிபெயர்ப்பு 1937-இலும்,

அறிஞர் **ஹசரத் சுகர்வர்தி** அவர்கள் **உருது** மொழிபெயர்ப்பு 1965-இலும்

அடுத்து **மலையாள** மொழிபெயர்ப்புகள்:

அறிஞர் **கோவிந்தன் (பிள்ளை)** அவர்கள் மொழிபெயர்ப்பு 1915-இலும்,

அறிஞர் **தாமோதரம் (பிள்ளை)** அவர்கள் தேர்ந்த பல குறள்களின் மொழி பெயர்ப்பு 1951இலும்,

அறிஞர் வன்னிகுளம் **கோபால குருப்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1957-இலும்,

அறிஞர் சாத்தமங்கலம் **இராமகிருட்டிணன் (பிள்ளை)** அவர்கள் மொழி பெயர்ப்பு 1957-இலும் வெளிவந்தனவாக அறியப்பெறுகிறது.

இனி, **கன்னட** மொழியில் அறிஞர் **எல்.குண்டப்பா** அவர்கள் மொழி பெயர்ப்பு முதல் பகுதி 1955இலும், இரண்டாம் பகுதி 1960இலும், அறிஞர் **ந. முனிசாமி**, அவர்களின் மொழிபெயர்ப்பு ஒன்று அண்மையிலும் வெளிவந் தனவாகத் தெரிகிறது.

அடுத்து, **தெலுங்கு** மொழியில் அறிஞர்கள் **வைத்தியநாதன், கானுபதி வெங்கடராமன்** அவர்கள் மொழிபெயர்ப்பு 1877இலும்,

அறிஞர் **சொக்கம் நரசிம்மலு** அவர்கள் மொழிபெயர்ப்பு 1892இலும்,

அறிஞர் **பூதலப்பட்டுச் சிரீராமலு (இரெட்டி)** அவர்கள் மொழிபெயர்ப்பு 1948-இலும்,

அறிஞர் **முடிகண்டி செகன்னா (சாத்திரி)** அவர்கள் மொழிபெயயர்ப்பு 1952-இலும்,

அறிஞர் **காலா இராதாகிருட்டிண (சர்மா)** அவர்கள் மொழிபெயர்ப்பு 1954இலும்,

அறிஞர் **சலய்யா** அவர்கள் மொழிபெயர்ப்பு 1955இலும் வெளிவந் தனவாகத் தெரிகிறது.

இனி - அறிஞர் **இஞ்சே ரம்லிபின் ஆசி நாசிர்** அவர்களின் **மலாய்** மொழிபெயர்ப்பு 1964இலும், அவர்களின் சீன மொழிபெயர்ப்பு 1967இலும்,

அறிஞர் **யூ மியோ** தாண்ட் அவர்களின் **பர்மிய** மொழிபெயர்ப்பு 1964-இலும்,

அறிஞர் **சாமுவல் எல் பெர்விக்** அவர்களின் **பிசி** மொழிபெயர்ப்பு 1964இலும், வெளிவந்தனவாகத் தெரியவருகிறது.

கி.பி. 1730இல், திருக்குறளின் முதலிரு பால்களை இலத்தீன் மொழியில் **வீரமாமுனிவர்** என்னும் (பெஸ்கி பாதிரியார்) மதத் தந்தை மொழி பெயர்த்த நூல்தான், திருக்குறளின் முதல் மொழி பெயர்ப்பாகக் கருதப்பெறுகிறது. அதுமுதல் திருக்குறள் உலகின் பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பெற்றுள் ளது. அவ்வகையில் 1983 வரை, இந்நூல் முப்பது மொழிகளில் 117 மொழி பெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. (அறிஞர் க.த. திருநாவுக்கரசு - 'திருக்குறள் விளக்கம்' - கட்டுரை வள்ளுவர் வழி (17.8.83)

கி.பி. 5-ஆம் நூற்றாண்டிலேயே **கிரேக்க** மொழியில் 'திருக்குறளின் திரட்டு' ஒன்று இருந்ததாகத் திருவனந்தபுரம் இலட்சுமணனார் 60 ஆண்டுகளுக்கு முன்பே தெரிவித்ததாக பர். க.த. திருநாவுக்கரசு தம் 'திருக்குறள் விளக்கம்' என்னும் மேற்படி கட்டுரையில் தெரிவித்துள்ளார்.

சமய வழிப்பாட்டு நூல்களாக விளங்கும் 'பைபிள்', 'குர்-ஆன்' ஆகிய கிறித்தவ, இசுலாமிய நூல்களுக்கு அடுத்தபடி, உலகிலேயே பொது அற நூலாகிய திருக்குறளே மிகுதியான மொழிகளில் பெயர்க்கப் பெற்றுள்ளதாகத் தெரிகிறது. இஃதொன்றே அதன் தலைசிறந்த பெருமைக்கும் சிறப்புக்கும் மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும் - என்றுணர்க.

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ?

என்னும் கூற்று எத்துணை உண்மையானது!

## 7. உரைகளும் உரையாசிரியர்களும்:

இனி, திருக்குறளுக்கு இதுவரை வெளிவந்துள்ள உரைகளைப் பற்றியும், உரையாசிரியர்களைப் பற்றியும் சில கருத்துகளைக் கூறியாகல் வேண்டும்.

முதற்கண், நாம் இந்நூலுக்கு உரை செய்வது, நூலாசிரியரின் உள்ளக் கருத்தை, அவர் பயன்படுத்திய சொற்களைக் கொண்டே, நன்கு புலப்படுத் தவே யன்றி, உரையாசிரியனாகிய நம் கருத்தைத் திருக்குறள்வழித் தெரிவிக்க அன்று என்பதை உணர்தல் வேண்டும். இந்நிலைக்குச் சொல்லாய்வுத் திறனும், மொழிநூற் புலமையும், ஒப்பீட்டிலக்கிய ஆய்வும் அடிப்படையாக மிகு தேவையென்க. என்னை?

'கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார்' அகத்து –717

என்றாராகலின். இனி, இவரன்றிப் பிறரும் அதையே ஒப்பினர்.

'மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு' நன்னெறி: 15

'பொழிப்பு' அகலம் நுட்பம், நூல் எச்சம்இந் நான்கின்
கொழித்துஅகலம் காட்டாதார் சொற்கள் - பழிப்புஇல
நிறையாமா சேக்கும் நெடுங்குன்ற நாட
உரையாமோ நூலிற்கு நன்கு – நாலடி 319

என்பன காண்க.

திருக்குறளில் இக்கால் பலரும் ஈடுபாடு கொள்வது ஒரு புறம் மகிழ்ச்சி தருவதேனும், ஒருபுறம் வருத்தமும் தருகிறது. ஏனெனில், ஒருசிலர் திருக்கு றளைத் தப்பும் தவறுமாகப் படிப்பதும், அதை அவ்வாறே பிறரிடத்து எடுத்துப் பரப்பி, அவரவர் விருப்பத்திற்கேற்பப் பொருள் கூறுவதும்,

அதன்வழிப் பிழைப்பதும் பெருமை பெறுவதும் அளவினும் மிகுந்து வருவது. திருக்குறளில் ஏதோ ஒருவகையில் தாம் தொடர்பு உடையவர் என்று காட்டிக் கொள்வதே தமிழ் கற்றவர்க்கும், ஏன், பிறர்க்கும்கூட பெருமை தருவதாக இருக்கிறது. எனவே, எல்லாரும் திருக்குறள் கற்றவராகவே காட்டிக்கொள்ள விரும்புகின்றனர்.

இவ் வகையில் அறிஞர் அழகரடிகள் தம் திருக்குறள் அறம் என்னும் நூலின் முன்னுரையில் பின்வருமாறு கூறுவது கவனிக்கத் தக்கது.

"திருக்குறட் பணி, மிக்க பொறுப்புக்குரியது. அத் தமிழ் மறையை அதன் ஆசிரியர் எவ்வளவு பெரும் பொறுப்புடன் உலகுக்கு வழங்கியிருக்கிறார்! சிறிது தவறு நேர்ந்து பொருந்தாக் கருத்துப் பரவ நேர்ந்தாலும், தலைமுறை தலைமுறையாக எத்தனைக் குடும்பங்களை, எவ்வளவு மக்களை அது கெடுத்து விடும்! நூலாசிரியர்க்கு, அதுவும் மறைநூலாசிரியர்க்கு, இவ்வகையில் எவ்வளவோ பெரும் பொறுப்புள்ளது."

"நூலாசிரியர்க்கே இந்நிலைமை யென்றால், நூலின் கருத்தை அதுவும் குறட் செய்யுள் வடிவில் உள்ள மறைநூலின் கருத்தை அது இன்னதாகத்தான் இருக்க வேண்டும் என்று தேர்ந்தெடுத்துக் கொடுப்பதற்கு இன்னும் எவ்வளவு பெரிய பொறுப்புணர்வு வேண்டியிருக்கிறது!"

"முனைப்பு முற்றும் அற்று, நூலாசிரியர் உள்ளமே தம் உள்ளமாகி அந்நிலைக்கும் மேல் உயர்ந்து, ஒருகால், நூலாசிரியர் சிறிது வழுவினும், தாம் அருளுணர்வாற் செயற்பட்டு அவ்வழுவை நிமிர்த்திச் செப்பமாக்கி, உலகுக்கு வழங்க வேண்டும் கடுமையான பொறுப்பன்றோ உரையாசிரியருடையது..".

"தெய்வ மறைநூலாகிய திருக்குறளின் மேல், உரையாசிரியர்க்கு இந்நிலைமை இல்லையென்றே கருதலாம். திருக்குறளின் அழகும் நுட்பமும் நயமும் கண்டு கருத்துணர்த்துதலே உரையாசிரியன்மார்க்கு எளிதன்று..."

"உலக நலங்கருதி நூற்கருத்துகளை வெளிப்படுத்துவதில் ஈடுபடுகிறவர்கள், தவறு சிறிதும் நேரக் கூடாதே என்னும் இப்பெரும் பொறுப்பினால் ஒருவகை அச்சமும், அதனைக் கடந்து கடமை நிகழ்வதற்கு அந்நூலின் மேல் ஆராத பேரன்பும் உடையவர்களாக இருப்பார்கள்."

"அன்றியும், செய்யுள் வடிவில் அழியா ஆற்றலுடன் அமைந்துள்ள தரமான நூல்களின் கருத்துகளை வழுவில்லாமல் தெளிவாக உணர்ந்து கொள்வதும், தாம் உணர்ந்து நலம் பெறும் அவ்வுண்மைகளை மற்றவர்களும் தெளிந்து பயனடையும்படி எடுத்து விளக்க முற்படுவதும் அவர்களுக்கு இன்றியமையாக் கடமைகளாகவும் இருக்கின்றன.

-**அழகரடிகள்** - நூல் : திருக்குறள் அறம்- முன்னுரை

இந்நூலுக்கு உரைவகுத்தார் பலர். அவர்கள் ஒவ்வொருவரும்

அவரவர்தம் காலத்திற்கும் கருத்துகளுக்கும் ஏற்பப் பற்பல கூறினார். அவர்கள் அனைவரும் பல்வேறு தகுதிப் பாடுகளை உடையவர்கள். சிலர் ஒரு துறைப் புலமையும், மிகச் சிலர் சில துறைப் புலமையும், ஒருசிலர் பலதுறைப் புலமையும் கொண்டவர்கள்.

அவர்களுள் ஆசையால் உரை எழுதியவர்களும் உளர்; தாமும் உரையெழுதினோம் என்னும் பெயருக்காக உரையெழுதியவர்களும் உளர். புகழுக்காக உரை வகுத்தவர்களும் சிலர் உளர். இனி, பொருளுக்காக, ஏதோ பிறர் எழுதிய உரைகளுள் சிலவற்றைப் படித்தும், ஒருசிலவற்றை உட்கொண்டும், அவற்றுள் அங்கொன்றும் இங்கொன்றுமாக எழுதப்பெற்ற, தம் மனமும் அறிவும் கவர்ந்த உரைப்பகுதிகளை எடுத்து அவற்றைத் தம் தம் கருத்துகளாலும், சொற்களாலும் திரித்தும், சிதைத்தும், முறுக்கியும், திருக்கியும், ஏதோ தாம் புதுவதாகச் சிந்தித்தும் கண்டும் காட்டுபவர் போல், உரை என்னும் பெயரில் சிற்சில வரைந்தவர் சிலரும் இல்லாமல் இல்லை. இவ்வழியாக, நூலின்கண் உள்ள கருத்துகளை ஒருவாறு மனம் கொள் ளினும் அவற்றை தம் மதக் கொள்கைகளாக நிறுவிக் காட்டும் கரவும் சூழ்வும் கொண்ட நோக்கோடு, உரை வகுத்தவர்களும் சிலர் உளர். சிலர், பூவோடு சேர்ந்த நார் போலத் தாமும் புகழென்னும் மணம்பெறுவதற்காகப், பிறர் அரைத்த மாவையே தம் வாளியில் இட்டு நிரப்பிக் கொண்டவரும் உளர்.

– அவர்களுள் தமிழ் மட்டும் கற்றவர் சிலர். சிறிது தமிழோடு ஆங்கில வழி மட்டும் கற்றவர் சிலர். தமிழும் சம்சுக்கிருதமும் கற்றவர் சிலர். தமிழ் இலக்கிய இலக்கணம் நீந்திக் கரை கண்டவர் சிலர், தமிழ் இலக்கண இலக்கியங்களையும் சம்சுக்கிருத இலக்கண இலக்கியங்களையும் இணைந்து கற்றவர் சிலர். தமிழும் சம்சுக்கிருதமும் ஆங்கிலமும் கற்றவர் சிலர். தமிழும் பிற தமிழின (திராவிட) மொழியொன்றையும் அல்லது சிலவற்றையும் கற்றவர் சிலர். இனி, தமிழுடன், அறிவியலும் கற்றவர் சிலர். தமிழும் அரசியலும் கற்றவர் சிலர். தமிழும் வரலாறும் கற்றவர் சிலர். தமிழும் சட்டவியலும் கற்றவர் சிலர். தமிழும் சமய நூல்களும் கற்றவர் சிலர். அவ்வாறு தமிழுடன் பொருளியலும், மாந்தவியலும், மொழியியலும், மெய்யறிவியலும், குமுகவி யலும் - தனித்தனிக் கற்றுச் சிறந்தவர் சிலர்.

ஆனால், திருக்குறளுக்குப் பொருள் காண விரும்புவார் எவராயினும், அவர் தமிழை மொழி நிலையிலும், சொல்லாய்வு நிலையிலும், இலக்கிய இலக்கண நிலையிலும், பாட்டின் யாப்பமைப்பு நிலையிலும், ஓரளவு அறிந்தும், ஆங்கில அறிவுடன் ஓரளவு வடமொழி அறிவும் அதன் உட்கூறு களும், அவற்றை ஒப்ப வைத்துக் காணும் ஒப்பியலறிவும், தமிழின மாந்தவி யல், நிலவியல் வரலாற்றறிவும் வடமொழி வேதங்கள், தொன்மங்கள் (புராணங்கள்), வேதநெறிக் கதைகளான இதிகாசங்கள், சமயவியல், அறவியல், அரசியல், பொருளியல், காதலியல், காமவியல், மருத்துவஇயல், மெய்ப் பொருளியல் அவையே போல் வடமொழி தர்மவியல், சாங்கிய நூல்கள்,

உயிரியல், உளவியல், குமுகாய உளவியல், இயங்கியல், இயல்பியல், இயற்கையியல், மூளையியல், உடலியல், அறிவியல், பறவையியல், விலங்கியல், உலகியல், நிலவியல், கடலியல், வானியல் - முதலியவற்றுள் ஓரளவு இயற்கையாகவே அறிவும் ஈடுபாடும், பன்னூற் பயிற்சியும், இவற்றுளெல்லாம் முழு அளவு இன்றாயினும் ஓரளவு தெரிதலறிவும் இருந்தால்தான் இதில் கூறப்பெறும் கருத்துகளை மனங்கொண்டும், இனங் கண்டும், உண்மை உணர்ந்தும், அகல ஆழங் கண்டும், விண்டுரைக்கவும், விளக்கியுரைக்கவும் இயலும் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

மற்றபடி, திருக்குறளைக் கற்று உரை கூறும் அறிவுடையாரும், திறனாய்வு செய்யும் தருக்கவியலாரும், பட்டிமன்றமும் பாமன்றமும் ஏறும் பாத்திறன் பெற்றவர்களும், திருக்குறள் திறன்களை வியந்தும் விதந்தும், மனனம் செய்தும், உரையாற்றுவாரும், திருக்குறள் உள்ளிட்ட இலக்கியங்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரிய, பேராசிரியன்மாரும், மதவியல் சார்ந்தாரும், விரிவுரை செய்வாரும், அதன்மேல் கொண்ட பற்றினாலும், வியப்பினாலும் மதிப்பினாலும் ஈடுபாட்டாலும், முற்கூறியது கூறல் திறத்தினாலும், இதழாசிரியத் திறத்தினாலும் மொத்தத்தில் அதைக் கற்ற அறிவினாலும் ஆர்வத்தினாலும் மட்டும் இந்நூலுக்கு உரைகண்டு விடல் முடியாது; இயலாது; அது மிக மிகக் கடினம் என்க.

வெறுமனே பலவுரைகளையும் பரிந்து நோக்கிப் புரிந்துகொண்டு, தற்சிந்தனையின்றி, அங்கொன்றும், இங்கொன்றுமாக, அவற்றிலுள்ள சொற்களையும், பொருள்களையும் தேர்ந்துகொண்டு, அவற்றை முன்னும் பின்னும், தொகுத்தும் வகுத்தும், சேர்த்தும் பிரித்தும், திரித்தும் செறித்தும், பின்னியும் பிணித்தும், திசைத்தும் இசைத்தும், இணைத்தும் பிணைத்தும், சுற்றியும் வளைத்தும், முன்னுள்ள உரைகாரர்களை ஒட்டியும் வெட்டியும், பற்றியும் சுற்றியும், அல்லது தற்சிந்தனையுள்ளவர் போல் விளக்கியும் கலக்கியும், ஓடும் தண்டவாளத்தில் ஓடுகின்ற மக்கள் வண்டியும், சரக்கு வண்டியும், தனி இழு இயந்திரமும், ஆளோடியும், வெள்ளோட்ட வண்டியும் போலப் பகர்ந்த உரைகளே இன்றைய நிலையில், திருக்குறள் உரைகளாக உள்ளன.

எடுத்த எடுப்பில், படித்தவுடன் உரத்த சிந்தனையின்றி, ஏற்ற இறக்கமாகப் புகுத்திவிடும் மெலிந்த சிந்தனையாளர்களே இன்றுவரை யெழுந்துள்ள உரைகாரர்களில் பெரும்பாலார் என்பதை எழுத எம்தூய தமிழியல் நெஞ்சம் மிக நோகின்றது. ஆயினும் இதை வெளிப்படுத்தாமல் இருக்க எம் அறிவுணர்வு இடந்தரவில்லை. இதனை வெளிப்படுத்திக் காட்டாவிடில், அதுவும் மங்கி மறைந்துவிடுமோ என்னும் அச்சத்திலேயே இக்கருத்துகளை இங்கு வெளிப்படுத்துதற்கு மனம் துணிந்தது. மற்றபடி செருக்குணர்வோ, மிடுக்குணர்வோ இவ்வறிவு எளியேமுக்கு என்றும் இருந்ததில்லை. எதனையும்

எண்ணியதை வெளிப்படுத்தும் துணிவு தவிர.

இங்குக் கூறப்பெற்ற கருத்துகளின் அடிப்படையில், மிகவும் ஆழ்ந்த சிந்திப்பின் வெளிப்பாடுகளாக உள்ள உரைச் செல்வங்களை இம் மெய்ப் பொருள் நூலின் ஒவ்வொரு குறளுரையிலும் உறுதியாகக் காணலாம். அவை பொருந்திய உரைகள் என்பதும் பொருந்தா உரைகள் என்பதும், காலத்தின் தேர்ச்சிக்கும் கற்றுணர்ந்தார் மாட்சிக்கும் உற்றுணர்ந்தார் ஆட்சிக்கும் விடப்பெற்றுள்ளன.

அவை பொருந்திய உரைகளாகத் தேர்வு பெறின், வழக்குற்று வாழ்ந்து வழங்கட்டும். அற்றேல் அவை வழக்கொழிந்து மறைந்து போகட்டும்.

திருக்குறளுக்கு உரை காண்பதில் பற்பல சிக்கல்களை எதிர்கொள் ளுதல் வேண்டும். அவற்றுள் தலையாயது, அதிலுள்ள பற்பல சொற்களுக்கு அவர் காலத்தில் இருந்திருந்த பொருள்களை ஆய்ந்து துழாவித் தேடிக் காணுதலாகும். இதில் அக்காலப் பொருளே தேர்வுக்குரியதாம் என்க.

எடுத்துக்காட்டுகளாகச் சில பல சொற்களைப் பார்க்கலாம்.

| **சொற்கள்** | **அக்காலப் பொருள்** | **இக்காலப் பொருள்** |
|---|---|---|
| **அறம்** | பொதுநலம் கருதிய உணர்வு, உரை செயல் | தர்மம் (ஆரியநெறி) |
| **அந்தணர்** | அருளாண்மை உடையவர், துறவி, அறவுணர்வுச் சான்றோர்-முதலியர் | ஆரியப் பார்ப்பனர், பிராமணர் |
| **ஆக்கம்** | செல்வம், வருவாய், நல்விளைவு | செய்வது |
| **சலம்** | வஞ்சனை | நீர் |
| | (இரண்டும் தமிழ்ச் சொற்களே) | |
| **தடித்தல்** | குறைத்தல் | பருமனாதல், வீங்குதல் |
| **தெரிதல்** | ஆராய்தல் | தெரிந்து கொள்ளுதல் |
| **தொடுதல்** | தோண்டுதல் | கையால் தொடுதல் |
| **நாற்றம்** | மணம் | தீநாற்றம் |
| **பயிலுதல்** | பழகுதல் | கற்றல் |
| **பூசல்** | வெளிப்படுதல் | பூசுதல், மனவேறுபாடு |

| | | | |
|---|---|---|---|
| **மங்கலம்** | அழகு, நன்மை | புண்ணியம் | |
| **மதலை** | தூண் | குழந்தை | |
| **தகுதி** | பொருத்தம், | நடுவுநிலை | தக்கமதிப்பு |
| **மல்லல்** | வளம் | போராடுதல் | |
| **மாடு** | செல்வம் | பசுமாடு | |
| **மாண்ட** | சிறந்த, மாட்சிமை கொண்ட | இறந்துபோன | |
| **மாற்றம்** | மறுமொழி, விடை | வேறாதல் | |
| **முதுவர்** | அறிவுடையவர் | முதியவர், கிழவர் | |
| **முறுவல்** | பல் | புன்சிரிப்பு | |
| **முத்தம்** | முத்து | வாய்முத்தம் | |
| **முனிதல்** | வெறுத்தல் | சினத்தல், கோபப்படுதல் | |
| **மேவார்** | விரும்புவார் | பொருந்தாதவர் | |
| **வாருதல்** | சொரிதல் | வாரியெடுத்தல் | |
| **வால்** | வெண்மை, | விலங்கின் வால் | |
| **வீறு** | பெருமை, சிறப்பு | மிக்குணர்வு | |
| **வெறி** | நல்லமணம் | தீவிர ஆசை, தீவிர உணர்வு | |
| **வேண்டுதல்** | விரும்புதல் | கெஞ்சிக் கேட்டல் | |
| **வேர்ப்பு** | வெகுளல் | வெயர்வை | |
| **வேளாண்மை** | உதவி, ஈகை | உழவு | |
| **வைகல்** | நாள்தோறும் | நெருங்குதல் | |

— இவைபோலும் நூற்றுக்கணக்கான சொற்களுக்கு, அன்றைய - திருவள்ளுவர் காலப் பொருள்கள் காண்பது, அற்றைக் குமுகாயப் பழக்க வழக்கங்களையும், வாழ்வியல் நடைமுறைகளையும் அறிந்திருந்தால்தான் இயலும்.

இனி, இது போலவே அன்றைய வாழ்வியல், இனவியல், பொருளியல், அரசியல், பண்பியல், கலையியல், நாகரிகம் – முதலிய மக்களியல் கூறுகளையும், வரலாற்று நிகழ்வுகளையும் உயர்த்துணர்தலும், நூல்வழியான,

கல்வெட்டு வழியான சான்றுகளைக் கொண்டு அவற்றின் உண்மையறிதலும் கடினமான செயல்களாகும். இவற்றுக்கு மேல் திருவள்ளுவரின் உள்ளத்தையும் அறிவையும் அவர்தம் சொற்களையும் கருத்துகளையும் கொண்டே உற்றறிதலும், உய்த்தறிதலும், மிகு கடினமாம். இவற்றுக் கெல்லாம் எந்த வகையான அடிப்படை வரலாறுகளே இல்லாமல் இருப்பதுதான் இன்னும் அவலமானதும் கொடுமையானதுமாகும்.

இனி, இன்னொரு தலையாய சிக்கல் என்னவெனில், திருக்குறள் மூல பாடத்தில் பற்பல வேறுபாடுகள், சிதைவுகள், உட்செருகல்கள், முறை மாற்றுகள், பெயர் மாற்றங்கள் முதலியன ஏற்பட்டுள்ளன என்பதுதான். ஒவ்வோர் உரையாசிரியரும் மூலநிலையில் பற்பல விடங்களில் வேறுபட்டே விளங்கு கிறார்.

திருக்குறள் மூல பாடச் சிதைவுகள் பற்றி இவ்விருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அறிஞர்கள் பலர் மிகப் பெரும் ஆய்வுகளை நிகழ்த்திப் பற்பல உண்மைகளை உணர்த்தியுள்ளனர். இவ்வாய்வியல் கருத்துகளை ஒரு சேரத் தொகுத்து ஒப்பாய்வு செய்து, அறிஞர் **கு.ச. ஆனந்தன்** அவர்கள் தாம் எழுதிய 'திருக்குறளின் உண்மைப் பொருள்' என்னும் புத்துரை நூலில் 'உரை - பாட வேறுபாடுகள்' என்னும் தலைப்பில் (முகப்புரை - பக்.34 முதல் 37 வரை) பின் வருமாறு கூறுவர்.

"திருக்குறள் எழுதப்பட்டு, ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகள் உருண்டோடி விட்டன. முதல் ஆயிரம் ஆண்டுகளில் குறள் நூலுக்குச் சரியான உரைகள் எழுதப்பட்டனவாக வரலாறு கூறுவதில்லை. பத்தாம் நூற்றாண்டுக்குப் பின்னால் பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குள், அதற்குத் **தருமர், தாமதத்தர், நச்சர், திருமலையர், மல்லர், காலிங்கர், மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதியார், பரிமேலழகர்** ஆகிய பதின்மர் உரை கண்டனர். இவற்றில் பரிமேலழகர் உரை, காலத்தால் மற்ற ஒன்பது உரைகளுக்கும் பிற்பட்டது என்றாலும், பரிமேலழகர் தந்த குறள் வைப்பு வரிசை எண்களையும், இயல்களையும், பொருளையும் இன்றும் நாம் பெரும்பாலும் பின்பற்றுகிறோம். **முதல் ஐவர் உரைகள் நமக்குக் கிடைக்கவில்லை."**

"சென்ற எழுநூறு ஆண்டுகளில் பழைய உரைகளை அடியொற்றி - குறிப்பாகப் பரிமேலழகர் உரையைப் பின்பற்றிப் பல உரைகளும் பொருள் விளக்கங்களும் வெளிவந்துவிட்டன. அந்தந்தக் காலத்துக்கும் சூழலுக்கும் கருத்து நிலைக்கும் உரைகாரர்களின் பார்வைக்கும் ஏற்ப, திருக்குறளுக்குப் பதவுரைகளும், பொழிப்புரைகளும், பல்கிப் பெருகியதால், திருக்குறள் கருத்துகளில் இசைவிணக்கம் இல்லாத உரை மாறுபாடுகள் வளர்ந்துவிட்டன. உரைப் பெருக்கத்தால் குறள் நூலில் ஆற்றொழுக்குப் போன்ற கருத்துக்

கோவையில் முரண்பாடுகளும் தோன்றிவிட்டன.”

“பேராசிரியர் சாரங்கபாணி அவர்களின் (திருக்குறட் சிந்தனைகள்-பக். 124 (1979) புள்ளிக் கணக்கின்படி, அறத்துப்பாலின் 380 குறட்பாக்களில் 217க்கும், பொருட்பாலின் 700 பாக்களில், 487க்கும், காமத்துப்பாலின் 250 குறட்பாக்களில் 196க்கும், ஆக மொத்தம் 1330 குறட்பாக்களில் 900 பாக்களுக்கு உரைவேறுபாடுகள் காணப்படுகின்றன.”

“முப்பால் மூலநூலில் இல்லாத கருத்து முரண்பாட்டிற்கு இன்னுமொரு காரணம், திருக்குறளில் அவ்வப்போது பல பாட பேதங்கள் புகுத்தப் பட்டமையே. ஒரு பழைய நூலில் பாட வேற்றுமைகள் தவிர்க்க இயலாதவைதாம். ஆனால், நூற்கருத்தையும் பொருளையும் மாற்றியமைக்கும் பாட பேதங்கள் மூல நூலின் முழுக் கருத்தில் சிதிலமுண்டாக்கி விடுகின்றன.”

“திருக்குறளுக்குப் பல நூற்றாண்டுகளாகச் சரியான உரை எழுதப் படாமையும், பெரும்பாலனவர்களால் அந்நூல் அடிக்கடி பயிலப் படாமையும், ஏடு எழுதுவோரால் ஏற்பட்ட குறைபாடுகளும், படிகள் எடுக்கும் போது உருவான இயல்பான தவறுகளும், இலக்கண முறைமையை எண்ணிப் புகுத்தப்பட்ட திருத்தங்களும், திருக்குறள்-இலக்கிய நூல், அறநூல் என்ற அணுகுமுறையால் உந்தப்பட்டு, இயைபு காண்பதற்காக எழுந்த வேற்றுமைகளும், பத்து நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வந்த உரையாசிரியர்கள் (மேலே கூறிய) பதின்மர் தத்தம் சமய, சமுதாய, தனிக் கொள்கைகளின் தாக்கங்களுக்கு ஏற்றபடி மாற்றிக் கொண்ட கருத்துத் திருத்தங்களும் குறள் நூலின் பாட வேறுபாடுகளுக்கும் அடிப்படைக் காரணங்களாயின.”

“திருக்குறளில் கந்திலியார்என்ற போலிப் புலவர் மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில் தந்து இடைமடுத்த பிழையினை - அஃதாவது இடைச் செருகலாகச் சில பொருந்தாப் பாடங்களைப் புகுத்தியதைத் தொண்டெனப் புரிந்துவிட்டார். அது காரணமாகப் . பொருள் மாறுபாடுகள் ஏற்பட்டு உரையாசிரியர்கள் திண்டாடியிருக்கின்றனர். வள்ளுவ வடிவமே புரியாத நிலைக்கு ஓரளவு அல்லற்பட்டிருக்கின்றனர்.

– எனப் பேராசிரியர் செ. வைத்தியலிங்கம் தெளிவாக்குகிறார்”

('மேற்கோள் குறிப்பு, -4 “உரை வேறுபாடுகள்” (பக்.150)

“பாட பேதங்கள் இல்லாத திருக்குறள் மூலநூல் கிடைக்காததால் இன்றிருக்கும் குறட்பாக்களைக் கொண்ட, திருக்குறள் இயம்பும் உட்பொருளைக் கண்டு தெளிய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.”

“திருக்குறள் எழுதப்பட்ட காலத்துக்கும் உரைகள் தோன்றிய காலத்துக்கும் இடையிலான நீண்டகாலப் பகுதி (1000 ஆண்டுகள்) உரையாசிரியர்களின் உரை வேற்றுமைகள், அவர்கள் செய்த மாறுபட்ட இயல்

பகுப்புகள், குறள் வைப்பு முறைகள், அதிகாரத் தொடர்புக்கும், குறட்பாக் களின் வைப்பு முறைக்கும் தரப்பட்ட செயற்கையான (பரிமேலழகர்) விளக்கங்கள், வரலாற்றுச் சூழலால் ஏற்பட்ட பொருள் திரிபும், நூல் மறைப் பும், நூற்றுக்கணக்கான பாட பேதங்களும், திருவள்ளுவரால் உருவாக் கப்பட்ட நூலமைப்பு, பகுப்பு, பாடலடைவு கொண்ட முழுமையான மூலத் திருக்குறள் நமக்குக் கிடைக்கவில்லை என்பதைத் தெள்ளிதின் உணர்த் துகின்றன.”

– இவ்வாறு அறிஞர் **கு.ச. ஆனந்தன்** தம் **திருக்குறள் உண்மைப் பொருள்** - என்னும் நூலில் பலவாறாகக் கூறிச் செல்கிறார்.

திருக்குறள் நூலுக்கு வாய்த்த இக்கால உரையாசிரியர்களுள், அதற்கு மிகுந்த தாக்கத்தையும் அதே பொழுது சிற்சில ஆக்கத்தையும் தந்தவர் அறிஞர் **கு.ச. ஆனந்தன்** அவர்கள் என்பது, நம் கருத்தாகும். அவருடைய உரை நூலின் ஆராய்ச்சி முன்னுரைகள் மிகவும் விழிப்புணர்வுடன் எழுதப்பெற்றுள்ளன. அவர் நூலின் முகவுரையுள் குறிப்பிடும் ஆய்வுரைகள் மிகவும் பயனுடையன. பற்பல பொருள் விளக்கங்களைக் கொண்டு திகழ்வன. ஏனோ தானோ என்றெழுதிவிடாமல், மிகவும் கண்ணும் கருத்து மாக அரிமா நோக்கில், மிகுந்த மக்கள் நல உணர்வுடன் அவற்றை எழுதியுள் ளார். இவ்வகையில் இவரைப் பெரிதும் பாராட்டலாம். ஆனால், **முந்தைய உரையாசிரியர்கள் பற்றி அவர் கூறும் குற்றச்சாட்டுகளுக்கு, அறிந்தோ அறியாமலோ அவரும் ஆட்பட்டிருப்பது ஒரு வருந்தத்தக்க செய்தி என்பதைப் புலப்படுத்தாமல் இருக்க முடியவில்லை.**

ஒருநூல் தெள்ளத் தெளிவான--முறை வைப்பான மூலத்தில் கிடைத் தாலுமே, அந்நூலாசிரியர்க்கும் உரையாசிரியர்க்கும் இடையிட்ட கால வேறுபாட்டால், அவரின் தந்துரை, நூலாசிரியரின் கருத்தை முழுமையாகக் கூறிவிட முடியும் என்பது மனவியலுக்கும், அறிவியலுக்கும் மாறுபட்ட செய்தி. ஒரு பொருள் அல்லது ஓர் இயற்கைக் காட்சி, பல படப்பிடிப்புக் கருவிகளைக் கொண்டு, படப்பிடிப்பாளர்கள் பலரால், பல்வேறு காலகட்டங்களில், பல்வேறு கோணங்களில், படப்பிடிப்புச் செய்யப் படும்பொழுது, பதிவாகும் படங்கள் ஒன்றுபோலவே இருத்தல் இயலாது என்பது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை, அவ்வுரைகாரர் களின் உரை வேறுபாடுகளிலும் இருக்கும் என்பதும். ஆனால், அவற்றுள் அப்பொருளுக்கும், அல்லது காட்சிக்கும் ஒத்த. அல்லது பொருந்திய படம் ஒன்றோ இரண்டோ இருப்பதுபோல் அவ்வுரைகாரர்களின் உரைகளிலும் ஒன்றோ இரண்டோ ஓரளவு பொருந்தியதாகவும் உண்மையாகவும் இருக்கலாம் அன்றோ? ஆனால், அத்தனை உரைகாரர்களின் உரைகளுமே சரியில்லை, தாம் கொள்கின்ற அமைப்பே, காணுகின்ற கருத்தே நூலாசி ரியரின் அமைப்புக்கும், கருத்துக்கும் பொருந்தியதாக இருக்க முடியும் என்பது எப்படிச் சரியாகும்?

பற்பல அகப்புறச் சிதைவுகளுக்கும், அமைப்பு மாற்றங்களுக்கும் உட்பட்

டுள்ளதாக உணரப்பெறும் ஒரு நூலை, அதன் ஆக்கத்தின் பின், நீண்ட நெடிய காலத்துக்குப் பிற்பட்ட ஓர் உரையாசிரியர் அந்நூலின் மூலமுதல் கருத்தைக் கண்டுபிடிக்க முயல்வதும், அவ்வாறு முயன்றதில் ஏதோ ஒன்று கண்டுகொள்ளப்பெற்ற தென்பதும் பிள்ளை விளையாட்டே அன்றி வேறாக இருக்க முடியாது. அறிவு என்பது எவ்வாறு முடிவற்றதோ (infinite) அவ் வாறே ஆய்வும் முடிவற்றதே என்பது ஓர் இயங்கியல் உண்மையாகும். அறிஞர் கருத்துமோ நம்முடைய கருத்துமோ, அல்லது வேறு எவருடைய கருத்துமோ இதற்கு நெறிவிலக்கன்று என்பதை முதலில் நாம் தெளிவு படுத்திக் கொள்ள வேண்டும். உலகில் கண்டுபிடிக்கப்பெறும் உண்மைகளெல் லாம் ஒரு சார்பு உண்மைகளே; முழு உண்மைகள் அல்ல – என்பது மெய்யறிவியல்.

மூல வித்தினின்று பற்பலப் படிநிலை விளைவு ஆக்கங்கள் நெடிய கால முறையில் ஏற்பட்டு வருகையில் அவ்விளைவுகளின் மூலச் சுவையும், பயனும் வேறுபடுவதும் மாறுபடுவதும் இயற்கையே! ஆனாலும் அவ் வேறு பாடுகளையும் மாறுபாடுகளையும் சீர் செய்வதாகக் கூறி, உட்பகுப்பு நிலையினும் அமைப்பு நிலையினும் திரிபும் திருத்தமும் செய்து கொண்டே போவது அறிவியலுக்கும் ஆய்வியலுக்கும் பொருத்தமும் அன்று; திருத்தமும் அன்று.

உரையாசிரியர்கள் தத்தம் கருத்து நிலைக்கும் தாம் வாழ்ந்த காலத் துக்கும் சூழ்நிலைக்கும் ஆட்பட்டவர்கள் என்கிறார் அறிஞர் ஆனந்தன். (முகவுரை பக்.38). ஆட்படாதவர் எவர்? ஆனந்தனா? எண்ணிப் பார்க்க.

இவ்வாறான நிலைகளில் இக்கால உரையாசிரியர்களுள் ஒருவராகிய அறிஞர் **கு.ச. ஆனந்தன்** அவர்கள், முன்னுள்ள உரையாசிரியர்கள் அனைவரும் திருக்குறள் மூல நூலில் செய்திருக்கும் மாற்றங்களினும் மிகக் கொடுமையாக, மாந்தவுடலின் புறவுறுப்புகளையும், அகவுறுப்புகளையும், அவற்றின் இருப்பும் இயக்கமும் சரியில்லை என்று கூறிக்கொண்டு, வெட்டி வெட்டி அறுத்தறுத்து, இடம் மாற்றியும், வடிவு மாற்றியும், கையிருக்க வேண்டிய இடத்தில் காலும், காலிருக்க வேண்டிய இடத்தில் கையும், முகத்திலிருக்க வேண்டுவதை முதுகிலும், வயிற்றினுள் இருக்க வேண்டுவதை மார்பிலுமாகத், தம்மின் பொதுவுடைமைப் புலமைக்கும், சட்டவியல் அறிவுக்கும் பொருந்திய வகையில் புதுமை செய்வதாகக் கருதிப் புலமாற்றிப் பொருத்தி மகிழ்ந்திருப்பது பெரிதும் வருந்தத் தக்கதும் நெஞ்சு துணுக்குறத் தக்கதும் ஆகும். திருக்குறள் மெய்யறிஞர்களும் காலமும் இந்நூலில் இவர் இவ்வாறு கைவைத்துச் சிதைத்த இவ்வடாத செயலைப் பொறுத்துக் கொள்ள இயலவே இயலாது என்க.

இவர் செய்த இச்சிதைவுச் செயல், ஒரு விசிப் பலகையினை (Bench) அல்லது மிசையை (Table) பல்வேறு துண்டுகளாக அறுத்து, அத்துண்டுகளைக் கொண்டு, நாற்காலியும், மொட்டானும் (Stool), அமர்பலகையும் செய்து வைத்துக் கொண்டு, இவைதாம் அந்த விசிப் பலகையும் மிசையும் என்று

வலித்தும் கூறினால், என் செய்வது?

இவ்வாறு ஆளாளுக்கு ஒவ்வொரு மாற்றம் செய்தால் குறள் இருக்கும், திருக்குறள் இருக்காது. ஒரு மலரை, இதழிதழாகப் பிய்த்து, அவற்றை நாமாக, நமக்குகந்த ஒரு வகையில் அடுக்கி, அந்த உருவத்திற்கும் பழைய பெயரையே கூறி ஆனந்தன் அழைக்கச் சொன்னால் (காரணம் இருக்கட்டும்), பழைய பூவின் வடிவமைப்பும் என்னாவது?

காலத்தாலும் கருத்தாலும் பல்வேறு சிறு சிறு மாற்றங்களுக்குட்பட்டு, இப்பொழுதைய வடிவில், ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக நிலைப்பட்டுப் போன திருக்குறள் அமைப்பைச் சிதைத்து அந்நூலுக்கே புதுவடிவத்தை அறிஞர் ஆனந்தன் தந்துள்ளது, ஏற்கனவே அச்சாகியுள்ள ஒரு நூலின் பக்கங்களையும் அவற்றின் அச்சுப் பகுதிகளையும், தனித் தனியே பிரித்தும் வெட்டியும் எடுத்து, அவற்றை வேறு வகையாக இணைத்தும் ஒட்டியும் கோப்புச் செய்து, வேறொரு முறையில் அதனை உருவாக்கி இதுதான் அந்த நூல் என்று தந்துள்ளதைப் போன்றதாகும் என்க.

நெய்யப்பெற்ற ஒரு துணியில் உள்ள நூல்களைத் தனித் தனியே உருவியெடுத்து, வேறொரு நெயவு முறையில் புதுவதாக ஒரு துணி நெய்வதைப் போன்றது ஆனந்தன் செய்துள்ள திருக்குறள் மாற்றங்கள். அதற்குப் பகரமாக வேறு நூல்களால் புதிதாகவே ஒரு துணி நெய்து விடலாமே! இவ்வாறு பல்வேறு உவமைகளை அவர் செய்த செயலுக்கு ஒப்பீடாகக் காட்டலாம்.

மேலும் வழிவழியாக வரும் கட்டுக் கோப்பான ஒரு நூலமைப்பைச் சிதைப்பதற்கும், அதைத் தமக்குகந்த வேறு வகையில் அமைப்புச் செய்து காட்டுவதற்கும், வேறு எவர்க்கும் உரிமையில்லை. இஃது ஒரு மெய்ந்நூலாசிரியரின் அறிவையே தாழ்த்துவதாகும்; இகழ்வதாகும்; இழிவு செய்வதாகும். இது, முன்னைய போலிப்புலவர் கந்திலியார் செய்த கொடுமைக்கும் மேலானதாகும். நம் தாத்தாவின் தாடியும், மீசையும், குடுமியும் வைத்திருந்த பழைய உருவப் படத்தைச் சிதைத்து, நமக்கு விருப்பமான வகையிலும், இக்காலத்திற்குப் பொருந்திய வகையிலும், அவர்க்குப் புதிய நாகரிகத் தோற்றத்தைத் தருவது போன்ற, இயற்கைக்கு மாறான கொடுஞ் செயலாகும் இது. இத்தகைய செயல்கள் அடாதன; கூடாதன;. கண்டிக்கத் தக்கன.

இத்தகைய ஒரு கொடுஞ்செயலை, ஆரியத்தை வளர்த்தெடுக்கவும், நிலைப்படுத்தவும், முன்னரே உள்ள வேதங்களிலோ, அவை தழுவிய புராணங்களிலோ, அவற்றை நடைமுறைப்படுத்தும் இதிகாசங்களிலோ, வேறு ஆரியவியல் பிராமண அறிஞர் ஒருவர் என்றும் எதற்கும் செய்வதற்குத் துணியவே மாட்டார். முன்னோர் செய்ததைப் பொன் போல் போற்றியொழுகும் மரபு போற்றும் பிராமணரும் செய்யத் துணியாத இவ்விழி செயலை ஆனந்தன் போலும் தமிழியல் மரபு காக்கும் ஓர் அறிஞர் செய்திருப்பதுதான் கொடுமையிலும் கொடுமையாகும் என்க.

மேலும் இவ்விடத்து இன்னொரு வரலாற்றுச் செய்தியும் நினைவிற்கு வருகிறது.

முன்னொரு கால் தமிழ் நாட்டின் ஒரு பகுதியில் அதிகாரியாக இருந்த ஆங்கிலேய ஆனால் தமிழ் தெரிந்த ஒருவர் தாம் திருக்குறளைப் படிக்க விரும்பினார். அதற்கென அவர் தமிழறிஞர் தியாகராசர் அவர்களைத் தமக்குத் திருக்குறள் சொல்லிக் கொடுக்குமாறு கேட்டுக் கொள்ளவே, அவரும் இசைந்து அவர்க்குத் திருக்குறளை முறையாகச் சொல்லிக் கொடுத்தார்.

அவ்வகையில் ஆசிரியர் அவர்க்கு ஒரு நாள்,

**'தக்கார் தகவிலர் என்தவரவர்,**

**எச்சத்தால் காணப் படும்'** (114) என்னும் குறட்பாவில், 'எச்சம்' என்னும் சொல்லுக்குப் பரிமேலழகர் 'மக்கள்' என்று பொருள்கூறியிருப்பதை விளக்கிக் கூறினார். மறுநாள் அவ்வாங்கில அதிகாரி, அக்குறட்பாவிலுள்ள 'எச்சம்' என்னும் சொல்லை நீக்கிவிட்டு, அவ்விடத்தில் மக்கள் எனும் சொல்லைப் பெய்து, அதைத் தம் ஆசிரியரிடம் காட்டித் தாம் அத்திருக்குறளின் இரண்டாம் அடியை 'மக்களால் காணப்படும்' என்று திருத்தியிருப்பதாகவும் அஃது யாப்பிலக்கணத்திற்கும் மிகவும் பொருந்தியிருப்பதாகவும் கூறி மகிழ்ந் தாராம். இந்நிகழ்ச்சியைப் பண்டாரகர் உவே. சாமிநாதர் அவர்கள் தம்மின் 'கண்டதும் கேட்டதும்' என்னும் நூலில் பதிந்துள்ளார்.

நம் அறிஞர் ஆனந்தன் அவர்களின் திருக்குறள் அமைப்பியல் திருத்தமும் இதைப் போலும் மிகவும் வருத்தந் தரத்தக்கதே ஆகும் என்க.

திருக்குறள் கருத்துகளில் புதிய பொருளைக் காண விரும்பினால் அதே அமைப்பில் – அஃதாவது இன்று நமக்குக் கிடைத்துள்ள பால், இயல், அதிகார, அமைப்புகளிலேயே புதுப்புதுப் பொருளைத் தருவதை யாரும் தவறு என்று சொல்ல முடியாது. ஆனால், அதற்காக ஏற்கனவே உள்ள திருக்குறள் அமைப்பை, அது தவறாகவோ, பொருந்தாததாகவோ இருப்பினும்கூட, அதைச் சிதைப்பது வன்முறைச் செயலாகும். ஓர் அழிப்பு முயற்சியாகும். மதுரை அங்கயற்கண்ணி (மீனாட்சி) கோயிலும், தஞ்சைப் பெருவுடையார் (பிரகதீசுவரர்) கோயிலும், ஆக்ராவிலுள்ள தாசுமகாலும் பழுதுபட்டனவென்றால், அவற்றின் வடிவங்களை மாற்றாமல், சிதைவு களைச் சுண்ணங்களாலும், வண்ணங்களாலும் சீர் செய்யலாமே தவிர, அவற்றை அடியோடு இடித்துச் சாய்த்துவிட்டு, மீண்டும் தம் விருப்பத் திற்கும், இக்காலக் கட்டடவியற் கலை வளர்ச்சிக்கும் ஏற்ப, புதிய வகையில் கட்டிக்கொண்டு, இவைதாம் அவை என்று அடித்துக் கூறுவது எத்துணை அறியாமை! பேதைமை! வரலாற்றுக்கு ஒவ்வாமை! திருக்குறளின் இப்பொழு துள்ள அமைப்பையும் இக்கால அறிவியல் வளர்ச்சிக்கும் கருத்து வளர்ச் சிக்கும் ஏற்ப வடிவமைப்பதும் அத்தகையதுதான் என்பதை உணர்ந்துகொள்

ளுதல் வேண்டும்.

புதிய கருத்துகளைத் தருவது பிழையன்று; புதிய வடிவத்தைத் தருவது பொருந்தாமை யன்றோ? இது தன் தாயின் பழைமை நோக்கி, அவளை இப்புதிய நாகரிகக் காலத்திற்கேற்ப அழகுப்படுத்த விரும்பி, ஞெகிழி அறுவை (பிளாஸ்டிக் சர்ஜரி) முறையில், அவளுடைய கண், காது, மூக்கு, வாய், மார்பு முதலியவற்றின் அமைப்புகளை மாற்றியமைப்பது போன்றதன்றோ?

முன்னுள்ளவர்கள் செய்த மாற்றங்களும், ஏதேனும் குறள் வைப்பு முறையில், இடம் பெயர்க்காமல், மாறுதல்கள் செய்ததும், இதுவும் ஒன்றாகாது. இவர் செய்த,

1. பால் பிரிவுகளைத் தவிர்ப்பது,
2. இயல் பிரிவுகளைத் தவிர்ப்பது, இடம் மாற்றுவது, வேறு பெயர்கள் தருவது,
3. அதிகாரங்களைத் தவிர்ப்பது, புதிய அதிகார அடைவுகளைச் செய்வது புதுப் பெயர்களைச் சூட்டுவது,
4. குறட்பாக்களை, வெறும் கட்டடச் செங்கற்களாகக் கருதிக் கொண்டு, தம் விருப்பப்படி, வேறு வேறு தலைப்புகளுள், வேறு வேறு எண்ணிக் கைப் பகுப்பில் வைப்பது.

– முதலிய இவையெல்லாம் பாட வேறுபாடுகள், முன்பின் வைப்பு முறை மாறுபாடுகள் போன்றன அல்ல.

மேலே காட்டிய நால்வகைச் சிதைவுகளுக்குமான சில எடுத்துக் காட்டும் விளக்கங்களும் வருமாறு:

1. அறத்துப்பால், பொருட்பால், (காமத்துப்பால் இவர் நூலுள் அறவே தவிர்க்கப்பட்டதும், எஞ்சியுள்ள இருபால்களுக்குமே திருக்குறள் என்று பெயரிடப்பெற்றுள்ளதுமே ஒரு பெரிய கோளாறு ஆகும்.) ஆகிய பிரிவுகள் தவிர்க்கப்பெற்று மீதமுள்ளவற்றை, **இல்வாழ்வியல், சமூக வாழ்வியல், ஆட்சியியல், பொருளியல், மெய்யியல்** எனும் ஐம்பெரும் இயல் பிரிவுகளாக்கியுள்ளது.
2. **அறம்:** பாயிரவியல், இல்லறவியல், துறவறவியல், ஊழியல்–ஆகிய நான்கு இயல்களும்

   **பொருள்:** அரசியல், அமைச்சியல், அரணியல், ஊழியல், படையி யல், நட்பியல், குடியியல் ஆகிய ஏழு இயல்களும்

   அடியோடு மாறப்பட்டுள்ளன; சில தவிர்க்கப்பட்டுள்ளன. அவற்றி

லுள்ள குறட்பாக்கள் மட்டும் இவர் புதுவதாகப் புனைந்துகொண்ட, இல்வாழ்வியல் முதலிய ஐம்பெரும் இயல்களுக்குள் வேறு வேறு வகையுள் அடக்கப்பெற்றுள்ளன. இவற்றை விரிக்கில் பெருகும். விரிவை இவர் நூலுள் கண்டுகொள்க.

**3. சில பெயர் மாற்றங்கள்**

| புதுப்பெயர் கொண்டு உள்ளவை | மாற்றம் பெற்றவை |
|---|---|
| 1. அறன்வலியுறுத்தல் | குறளறம். |
| 2. வாழ்க்கைத்துணை | நலம் வாழ்க்கைத்துணை. |
| 3. பெண்வழிச் சேறல் | ஆணடிமை அகற்றல். |
| 4. சுற்றம் தழால் | சுற்றம் தழுவல். |
| 5. விருந்தோம்பல் | புதியவரைப் பேணுதல். |
| 6. அருளுடைமை | அருள். |
| 7. அடக்கமுடைமை | அடக்கம். |
| 8. பொறையுடைமை | பொறுமை. |
| 9. அழுக்காறாமை | அழுக்குவழி அகற்றல். |
| 10. ஒழுக்கமுடைமை | ஒழுக்கம். |
| 11. இனியவை கூறல் | இனிய செயல். |
| 12. பயனில கூறாமை | பயனிலாச் சொல். |
| 13. புறங்கூறாமை | புறஞ்சொல். |
| 14. செய்ந்நன்றயறிதல் | நன்றியறிதல். |
| 15. தீவினை அச்சம் | தீயவை அஞ்சுதல். |
| 16. இன்னை செய்யாமை | துன்பம் செய்யாமை. |
| 17. மருந்து | உணவு வரம்பு. |

போன்றவை முழு மாற்றங்களையும் அவர் நூலுள் கண்டு கொள்க.

**4. சில எடுத்துக்காட்டுகள்**

1. மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு —454

'சிற்றினஞ் சேராமை' - யுள் 4-ஆம் குறளாக வரும் இது, ஆனந்தன் நூற் பகுப்பில் 'அறிவு' என்னும் இயலுறுப்புத் தலைப்பில் முதற் குறளாக வருகிறது.

2. தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது 68

'மக்கட்பேறு' அதிகாரத்துள் 8 ஆம் குறளாக வரும் இது, 'தனி உடைமையைத் தகர்த்திட' என்னும் தலைப்பின் கீழ் 21 ஆவது குறளாக வருகிறது.

3. ஒவ்வோர் அதிகாரப் பகுப்பிலும் உள்ள பப்பத்துக் குறள்கள் எண்ணிக்கை குறைக்கப்பெற்றும், சில தலைப்பியல்களுள் மிகுக்கப் பெற்றும், நிரல் நிறை மாற்றப் பெற்றும், வேறு வேறு இயலுறுப்புத் தலைப்புகளில் சேர்க்கப்பெற்றும் இருத்தல்.

(எ-டு) 'மக்கட்பேறு' இயலுறுப்பில் எட்டுக் குறட்பாக்களும் 'சுற்றந் தழால்' என்னும் 'சுற்றம் தழுவல்' இயலுறுப்பில் ஆறு குறள்களுமே உள்ளன. இது, பிற குறட்பாக்கள் அவ்வத் தலைப்புகளின் கீழ் வாரா என்று உரையாசிரியர் கருதுவது திருவள்ளுவத்திற்குப் பொருந்தாதது என்று கருத இடந்தருகின்றதன்றோ?

— இவைபோலும் பற்பல மாற்றங்களும், சிதைவுகளும், பூசல்களும், புரைகளும், குறைகளும், குற்றங்களும், தன்முடப்புணர்வுகளும், அறிவுச் செருக்குணர்வுகளும், மனமுதிர்வின்மைகளும், போலி மெய்யியல் கூறுகளும், பொதுவுடைமை யென்னும் பெயரால் சிதைக்கப்பெற்ற தனிவுடைமைச் சிறப்பியல்களும், பொதுவறம் என்னும் பெயரால் முனை மழுக்கப் பெற்ற தனியறப் படிவுக் கூறுகளும் 'திருக்குறளின் உண்மைப் பொருள்' என்னும் அறிஞர் கு.ச. ஆனந்தன் அவர்களின் அவ்வுரை நூலுள் காணப்பெறுகின்றன.

இவற்றுக்கெல்லாம் அவ்வவ் விடங்களில் ஆசிரியர் கூறும் அமைவுகள் நகைக்கத் தக்கன; எள்ளத் தக்கன; முகஞ்சுழிக்கத் தக்கன. அவ்வகையான அமைவுக் கூற்றுகள் சிலவற்றை இங்குக் காண்க.

**'மற்ற குறள் பொத்தகங்களில் காணப்படுகிற 133 அதிகாரங்களின் அடைவும், அவற்றின் பெயர்களும், குறள் வைப்பு எண் முறையும் இங்குப் பின்பற்றப் படவில்லை'** என்பதும் உண்மைதான். ஆனால் பொருள் தொடர்பும் விளக்கமும் சீர்மையும் கருதி, இந்நூல் புதிய பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. (என்னுரை பக் X)

— இஃது எப்படியிருக்கின்ற தென்றால் 'பல்வேறு கணவன் மனைவியர் திருமண முறையால் இல்லறத் துணைவர்களாக இதுவரை வாழ்ந்து வருவது

உண்மைதான். ஆனால் ஆண் பெண் என்ற முறையும், அழகு, ஆண்மை என்னும் அடிப்படையும் கருதி, அவர்கள் புதிய முறையில் இணை சேர்த்து வாழ வைக்கப்பெற்றுள்ளனர் என்பதைப் போலுள்ளது என்க.

அவர் கூற்றுகளை மேலும் கவனியுங்கள்:

"திருக்குறட் கருத்துகளைத் திசை திருப்புவதோ, குறள் நூலை 'ஊனப்'படுத்துவதோ எனது நோக்கமன்று. நுண்மாண் நுழைபுலம் கொண்ட பழைய உரையாசிரியர்களின் உரைகளில் குறைகண்டு, அவர்களை இழிவுப்படுத்துவதும் என் குறிக்கோள் அன்று. திருக்குறளின் உட்பொருளைச் சிதலப் படுத்தி, என்னுடைய கருத்துகளை அதில் ஏற்றுவதும் என் எண்ணமன்று"

- (என்னுரை : பக்: vi)

ஆனால் அவர் வேறு வகையாகக் கூறும் சில கருத்துகள் இவ்வெண்ணங்களை மறுதலிப்பதாகக் கருதவும் இடந்தருகின்றன. கீழே பாருங்கள்.

"பழைய உரையாசிரியர்கள் செய்த இயல் பாகுபாட்டையும் அதிகார முறைமையையும் அப்படியே பின்பற்றித்தான் இன்றும் திருக்குறளுக்குப் பொருள் கூற வேண்டுமென்பது ஒருவகையான **மூட நம்பிக்கை".**

(என்னுரை : பக் : 4-ஆம் பத்தியின் பின் பகுதி)

"மரபு நிலை, என்பது ஒரு கால கட்டத்தில் உரையாசிரியர்கள் தத்தம் கருத்து நிலைக்கு ஏற்ற வகையில் பொருள் சொல்லுவதற்கு இயைபாக ஆக்கப்பட்டவை. அப்பாகுபாடுகளைக் குறைகூறுவது என் கருத்தல்ல. **பொருளுக்கு (subject) ஏற்பவும், காலக் கருத்து வளர்ச்சியைய ஒட்டியும், இயல்பான பகுப்புகளைப் பொருள் தரும் முறைக்கேற்றபடி செய்து கொள்வதில் தவறில்லையல்லவா ?"**

(மேற்படி பத்தியின் முன்பகுதி)

"இவை போன்ற பல்வேறு ஆய்வுக் கருத்துகளைப் பல காலக் கட்டங்களில் பல தமிழறிஞர்கள் வற்புறுத்திச் சுட்டிக் காட்டியுள்ளனர். எனவே, எது மரபு வழி? - யாருக்கும் தெரியாது. அப்படியிருக்க, ஏன் மரபு வழியில் ம்ட்டுமே திருக்குறளுக்குப் பொருள் கூற வேண்டும்?"

(என்னுரை : பக் : xiii)

- என்றிவ்வாறு கூறப்பெற்ற அறிஞர் ஆனந்தன் அவர்களின் கருத்துகள் எவ்வாறு புதுமை என்னும் பெயரால் தமிழியல் மரபு நிலைகளுக்கு எதிரானவை என்பதை ஒருவாறு விளங்கிக் கொள்ளலாம். இந்நிலை ஆரியத் தாக்கத்தைவிடக் கொடியது. இஃது அறிவு, அறிவியல் என்னும் பெயரால்

நிகழ்கின்ற அறியாமையாகும்.

**மரபு** என்பது மூடநம்பிக்கையாம்; அஃது உரையாசிரியர்கள் தங்களுக்குத் தாங்களாகவே ஏற்படுத்திக் கொண்டதாம்; எது மரபு என்பது எவருக்கும் தெரியாதாம். எனவே, திருக்குறளுக்கு மரபு வழியில் பொருள் கொள்வது தேவையில்லையாம். இவ்வாறெல்லாம் தமிழ்மொழி மரபியலையும், தமிழ்நூல் மரபியலையும் சிதைத்துப் பேசுகிறார் ஆனந்தன்.

இஃது எப்படியிருக்கிறது, எனில், தாய், மனைவி, மகள், தங்கை, அக்கை, அண்ணி, கொழுந்தி - என்னும் உறவுமுறைகளெல்லாம் தேவையற்றன; மூடநம்பிக்கை கொண்டன; இந்நிலையெல்லாம் தவிர்த்துவிட்டு, பெண்-ஆண் என்னும் இரண்டு இயற்கையான பாலியற் பாகுபாடே போதுமானது என்று கூறுவது போன்றிருக்கிறது. இல்லை, இது வேறு, அது வேறு என்று அவருள்பட எவரும் கூறிவிட முடியாது. ஏனெனில் **மரபு என்பதே இயற்கை அமைப்புகளில் இம் மக்களினம் தேர்வு செய்து நிலைப்படுத்திக்கொண்ட நடைமுறைதான்.**

அறத்துப்பால், பொருட்பால், இன்பத்து அல்லது காமத்துப்பால் என்னும் பாகுபாடுகளெல்லாம் தேவையில்லை என்றால் இயல் பிரிவுகளும், அதிகாரப் பிரிவுகளும்தாம் எதற்கு? அப்படியே திருக்குறளை அகர வரிசை முறையில் எழுதி, இதுதான் நூல் இதில் திருவள்ளுவர் எழுதியதாகக் கூறும் அனைத்துக் குறள்களும் இருக்கின்றன. இவற்றை அவரவர்களுக்கு விருப்பமான முறையில் படித்துக் கொள்ளுங்கள்; அவரவர் களுக்குத் தெரிந்த முறையில் பொருள் கொண்டு கொள்ளுங்கள் - என்று கூறிவிட வேண்டியதுதானே.

'இல்லை இல்லை அவையெல்லாம் ஓரளவுக்கு, காலநிலைக்கு ஏற்றவாறு, அறிவியலுக்குப் பொருந்திய வகையில் நாம் நமக்குகந்தபடி மாற்றியமைத்துக் கொள்ளலாம், என்றால் அதற்கு ஆனந்தன் அமைத்த அமைப்புத்தான் சரி என்று ஏன் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்? அவரவர், அவரவரது கால நிலைக்கும், கருத்து நிலைக்கும் தக்கவாறு ஒவ்வோர் அமைப்பு முறையைக் கொள்ளலாமே! அதை எவ்வாறு சரியில்லை என்று சொல்வது? சிந்திக்க வேண்டும் அறிஞர்கள்.

ஓவியர் ஒருவர் இருந்தார். அவர் குதிரை ஓவியம் ஒன்று வரைந்து, பொதுமக்கள் பார்வைக்காக ஓரிடத்தில் வைத்திருந்தார். அந்தப் படத்திற்குக் கீழே குதிரை என்றும் எழுதியிருந்தார். வருவோர் போவோரெல்லாம், அதைப் பார்த்து மகிழ்ந்து சென்றனர். ஒரு சிலர் அதில் சில பல குறைகள் கூறினர். சிலர் அதன் நிறையைப் பாராட்டி மகிழ்ந்தனர். ஓவியம் தெரிந்த சிலரும் அதைப் பார்த்தனர். 'இதன் கால்கள் கொஞ்சம் சரியில்லை; அவை இப்படி

யிருக்க வேண்டும்' என்று வண்ணத்தால் திருத்திச் சென்றார், ஒருவர். இன்னொருவர் 'இதன் முகம் கொஞ்சம் சரியில்லை. அஃது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்' என்று முகத்தைச் சிறிது திருத்தினார். இன்னோர் ஓவியர் 'அதன் காதுகள் பொருத் தமாயில்லை; அவை இவ்வாறு இருக்க வேண்டும்,' என்று கூறி அவற்றையும் திருத்திச் சரி செய்தார். இப்படியே, பலரும் பற்பல திருத்தங்களைக் கூறியும் சிலர், திருத்தியும் சென்றனர். இறுதியில் ஓர் ஓவியர் வந்தார்; அந்தக் குதிரை ஓவியத்தை நெடுநேரம் உற்றுற்றுப் பார்த் தார். கடைசியாக அவரும் கொஞ்சம் வண்ணத்தை எடுத்து அதன் கீழ் 'குதிரை' என்றெழுதியிருப்பதை அடித்துவிட்டுக் 'கழுதை' என்று எழுதி வைத்துவிட்டுச் சென்றார்.

இக்கதையுள் வரும் ஓவியர்களைப் போன்றவர்கள்தாம் அறிஞர் ஆனந்தனைப் போன்றவர்கள். திருத்தம் கூறலாம்; திறனாய்வு செய்யலாம். ஆனால், மூலத்தை எவரும் திருத்தக் கூடாது. அஃது அறிவுப் பிழை. பண்புப் பிழை; கலைப் பிழை; நாகரிகப் பிழை. உலக அமைப்புகளெல்லாம் மாந்தக் கருத்துகளுக்கு உட்பட்டவையே. ஆனால், கருத்துகள் அத்தனையும் கருத்தளவாக நிற்க வேண்டும். கருத்துகளால் மூலங்கள் சிதைக்கப்படும் பொழுது அடுத்த காலக் கட்டத்தில், அக்கருத்துகளும் சிதைந்துவிடும் என்பதை மறந்துவிடக் கூடாது. இதுதான் கருத்தியலுக்கும் பொருளியலுக்கும் உள்ள இயைபியல். ஒருவர் கருத்தின் மேல் இன்னொருவர் இன்னொரு கருத்தைச் சொல்லலாம். அதற்காக முன்னவர் கருத்தைச் சிதைப்பதற்குப் பின்னவர்க்கு எவ்வகை உரிமையும் இல்லை. அது பெருந்தவறு. இக் 'கந்திலி யார்' வேலையை ஆனந்தன்கள் செய்யக்கூடாது; கூடவே கூடாது.

இனி, மரபியலைச் சிதைக்க வந்த ஆனந்தன் அவர்களின் கருத்து களுக்குச் சில விளங்கங்களைக் கூறுவோம்.

'எது மரபு வழி?' யாருக்கும் தெரியாது – என்கிறார் உரையாசிரியர் ஆனந்தன். 'அது மூட நம்பிக்கை. அப்படியிருக்க திருக்குறளுக்கு ஏன் மரபு வழியில் மட்டுமே பொருள் கூற வேண்டும் என்றும் கேட்கிறார்' ஆனந்தன்.

'மரபு' என்பது என்ன? – இதற்குத் தொல்காப்பியம் வரையறை செய்துள் ளது.

மாற்றருஞ் சிறப்பின் மரபியல் – தொல்: 1500

'மாற்றுதற்கரிய' அருமை நிலைகளின் சிறப்புத் தன்மைதான் மரபியல், என்கிறது, தொல்காப்பியம். இத்தகைய மரபு நிலை உரைநூல் வழக்கில், வடிவில், திரிதல் நிலை ஏற்பட்டாலும் செய்யுள் நூல் வழக்கில் திரியக் கூடாது என்பார் தொல்காப்பியர். அதற்குக் காரணமும் கூறுவர். இக்கூற்

றுகளை நூல் மரபு என்றே போற்றுவர். அவர் கூற்றுகளைக் காண்க.

மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான

– தொல்: 1590

செய்யுள் சொற்களால் ஆனது. சொற்கள் பொருள்களை உள்ளடக்கிய மரபுடையவை. இன்ன சொற்கள் இன்ன பொருள்களைக் கொண்டுள்ளன என்பது மரபு. அவ்வாறு மரபு நிலைச் சொற்கள், மரபு வழிப் பொருள் களைக் கொண்டிருப்பதாலும், அப் பொருள் சொற்களைக் கொண்டே செய்யுள் யாக்கப் பெறுவதாலும், மரபு நிலைகளைத் **திரிக்கக் கூடாது** என்பது மட்டுமன்று, அது **திரியவும்** கூடாது என்கிறார். அவ்வாறு காலப்போக்கில் தானே திரியினும், மீண்டும் மரபால் அதைத் திருத்தி அப்பழைய சொல் லையே வழக்கத்துக்குக் கொண்டு வருதல் வேண்டும் என்று அறிவுறுத் துகிறார். ஏன்?

'மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்' – தொல் 1591

'சொல்லுங் காலை அவையலது இலவே' – தொல்: 1525

'குடை' என்னும் சொல்லைக் 'கொடை' என்று கூறக்கூடாது. அவ்வாறு பேச்சு நிலையில் கல்லாதவர் கூறினாலும், அதை நூல் வழக்கில் அறிஞர்கள் 'குடை என்று திருத்தித்தான் எழுதல் வேண்டும். இவ்வாறின்றி 'கொடை' என்று எழுதினால். அது 'கொடுத்தலை'க் குறிக்கும். 'கொடை' என்றாகக் 'குடை' என்னும் சொல் அழிந்துவிடும். பிறகு 'கொடை' என்றால் அது பிடிக்கும் குடையாடி கொடுக்கும் கொடையா என்று குழப்பம் நேரிடும் என்கிறார். அதுதான் 'மரபு நிலை திரியின் பிறிது' பிறிதாகும், என்பது. ஒரு சொல்லால் ஒன்றைச் சுட்டிச் சொன்னால், அச்சொல் வேறு ஒன்றைச் சுட்டக் கூடாது என்பதுதான் மரபு. அதனால் தான். சொல்லுங் காலை அவையலது இலவே, என்று கூறினார் என்க. 'விருந்தோம்பல்' என்பதை 'விருந்து' என்று சுருக்கிப் 'புதியவர்' என்று பொருள் கொண்டால் 'ஓம்புதல்' என்னும் சிறப்புப் பொருள் தரும் மரபுச் சொல் தவிர்ந்துவிடும். பிறகு மொழி வளம் குன்றும். எனவே, 'விருந்தோம்பல்' என்றே எழுதிப் பொருளை வேண்டுமானால் வேறுபடியாக விளக்கி எழுதலாம் எனக் கொள்ளுதல் வேண்டும். அது பிழையாகாது. இதை ஆனந்தன்கள் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

'புதுமை' செய்வதாகக் கூறி, அரிசியையே சோறாக விளைய வைத்து விடக் கூடாது. பகுத்தறிவாளர்கள் எனக் கூறிக் கொள்பவர் சிலர் கூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். ஏன் அரிசியைக் கடவுள் (அது இருந்தால்) சோறாகவே விளைவிக்கக் கூடாது? என்று. 'சோறாகவே விளைந்துவிட்டால்,

அதைக் காத்து வைத்துக்கொள்ள முடியுமா? அல்லது அரிசியை ஊறவைத்து ஆட்டி மாவாக்கிச் சுடும் அப்பம், இட்டளி, தோசை முதலியவற்றைச் நம் சுவைக்கு ஏற்பச் செய்துதான் சாப்பிட முடியுமா? எத்தனை நாளைக்குத்தான் சோறாகவே தின்று தெவிட்டியும் சலித்தும் போவது?' என்று ஏன் அவர் சிந்திக்கவில்லை? எனவே மூலங்கள் சிதைந்து போகக் கூடாது. அதனின்று வெளிப்படும் பொருள்கள் வேண்டுமானால் சிதைக்கப்பெற்று வேறு வேறு வடிவங்களாகக் காலத்திற்கு ஏற்பக் கருத்துக்கு இசைய, நம் விருப்பத்திற்கு உகந்த வகையில் மாறதலுற்றுக்கொண்டே போகலாம். அதில் பிழையில்லை. அதுதான் இயங்கியல், பொன் என்னும் மூலம் என்றும் மாறக்கூடாது. அதனால் செய்யப்படும். பொருள்கள் நகைகள் மாறலாம். மாற்றப்படலாம். அதை எவரும் தவறு என்றும் சொல்ல முடியாது. ஓர் அறிஞருடைய நூல் அமைப்பும் அப்படிப்பட்டதுதான்.

ஒரு நூலின் பல்வேறு சிறப்புகளில் அமைப்பு நிலையும் ஒன்று. அதுவும் மரபு தழுவியதுதானா. அறம், பொருள், இன்பம் என்பது மரபியல் அமைப்புத்தானே. அதில் என்ன தவற்றை ஆனந்தன் போலும் குறுக்குச் சால் ஓட்டிகள் கண்டனர்; அதைப் புறக்கணிக்க? அதுவும் தமிழியல் மரபுவழிப் பெற்ற திருக்குறளில்...?

மரபு நிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்

-தொல் 1593

ஆகிய திருக்குறள் போலும் மெய்ந் நூல்கள் மரபு சிதைக்கப் பெற்றால் அவற்றின் மாட்சி பெருமை குறுகும் என்பது அறிஞர் கருத்து.

மரபு என்பதற்கு இன்னொரு சிறப்பும் உண்டு. மரபு என்பது இலக்கிய இலக்கணச் சான்றோர்கள், அறவியல், வாழ்வியல், குமுகாயப் பெரியோர்கள் முதல் உயர் நன்னெறியாளர்கள் கடைப்பிடித்தொழுகும் வாழ்வியல் நிகழ்ச்சிகளிலிருந்தே மரபு படி நிலை வளர்ச்சி பெற்று வடிவம் எய்துகிறது. அதையே சான்றோர் வழக்கு என நூலாசிரியர்கள் போற்றுகின்றனர்.

வழக்கு எனப் படுவது உயர்ந்தோர் மேற்ற
நிகழ்ச்சி அவர்கட் டாகலான

-தொல் 1592

(ஐயா அவர்கள் எழுதிய முன்னுரை இத்துடன் முடிவுறுகிறது. இதற்கு மேல் உள்ள குறிப்புகள் ஐயா அவர்கள் முன்னுரையில் எழுதுவதற்காகக் குறித்து வைத்திருந்தவை)

இலக்கணக் குறிப்புகள் முதலிய யாவும் வரும். இதில் உள்ள குறள் பற்றி

உரை பற்றி

1. இதுவரை வெளிவந்துள்ள உரைகள் ஏறத்தாழ இருநூறு இருக்கலாம். அவை இந்நூல் வெளியான தமிழ், இதன் அண்டையயலாகிய தமிழின மொழிகள், ஆங்கிலம், சப்பான், சீனம், செர்மன், உருசியம் முதலிய அயல் மொழிகள் ஆகியவற்றுள் எழுதப்பெற்றிருக்கின்றன.

2. நிறைவுரையில், இக்கால் உள்ள பொழிப்புரையுடன், தேவையான குறட்பாக்களுக்குச் சிறப்புரை, விரிவுரை, விளக்கவுரை, நுட்பவுரை, சொல்விளக்கம், விளக்கங்கள் மேலும் விரிவாக வரும்.

3. பொழிப்புரையில் அடைப்புக்குறிகளுள் கூறப்பெறுள்ளவை பொருளின் மேல் விளக்கத்திற்காகத் தரப் பெற்றுள்ளன. அவற்றை நீக்கிப் படித்தால் குறட்பாவின் நேர் பொழிப்புரை கிடைக்கும்.

4. இவ்வுரையைப் படிக்க முற்படுவார்க்கு ஒன்று கூற விரும்புகிறோம். அவர்கள் இதுவரை வெளிவந்த உரைகளுள், மிகச் சிறப்பானது என்று கருதி மதிப்பிடும் உரையை அல்லது உரைகளை, எடுத்துத் தங்கள் முன்னர் வைத்துக் கொண்டு, அதை அல்லது அவற்றை வரிசையாகவும் மிக்க கவனமாகவும் ஒரு முறைக்குப் பல முறை படித்து விட்ட பின்னர், இதைப் படிக்க வேண்டுகிறோம். அப்பொழு துதான், இவ்வுரையின் சிறப்பு, பொருத்தம் முதலியவற்றின் உண்மை இன்மை புலப்படும்.

அவ்வாறு புலப்பட்ட அவை பற்றி நமக்குத் தெரிவிப்பின் அக்கருத் துகளை மிகவும் மதித்துக் காப்புச் செய்து, இதன் நிறைவுரையில் அவற்றுக்குத் தக்க விடையும் விளக்கமும் கூறுதற்குப் பயன்படுத்திக் கொள்ள வியலும் என்க.

5. இக்கால் திருக்குறள் தொடர்பாகப் பரவியுள்ள பொய்யான, புரைசலான, மதவியல் சார்பான, ஆரியச் சார்பான, மயக்கத்திற்குரிய கருத்துகள் அனைத்துக்கும் ஒரு முடிவையும், தமிழர்களின் மெய்யி யலுக்கு ஒரு விடிவையும் இவ்வுரை தரும் என்று உறுதியாய் நம்புகி றோம். ஆராய்ச்சியாளர்கள் இதில் கருத்துச் செலுத்துதல் வேண்டும்.

உரையாசிரியர்கள் இயல் பகுப்பு முறைகளிலும் வேறுபடுகின்றனர்.

ஆங்கில மொழி பெயர்ப்பாசிரியர்கள்:

1. எம்.எஸ். பூர்ணலிங்கம் (பிள்ளை), 2. வி.ஆர். இராமச்சந்திர (தீட்சிதர்)

3. எம்.ஆர். இராசகோபால (ஐயங்கார்), 4. வ.வெ.சு. ஐயர்,

5. ரெவரண்டு துரு ஜான் லாசரஸ், 6. ஐ.டி. தங்கசாமி,

7. சி. ராசகோபாலாச்சாரியார், 8. டாக்டர் ஜி.யு. போப், 9. எல்லிஸ்.

பரிமேலழகர் காலம் கி.பி. 11 முதல் 14 ஆம் நூற்றாண்டுக் காலம். பிற உரையாசிரியர்களை மறுத்தலினால் அவர்கள் காலத்திற்குப் பிந்தியவர்.

6. இவற்றுள் ஐயப்பாட்டுக் குரியனவும் விளக்கம் வேண்டுவனவும் ஆகிய கருத்துகள் நிறைவுரை நூலுள் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கப் பெறும்.

7. இவ்வுரைக் கருத்துகளை எவரும் புறக்கணித்துவிட முடியாது. புறந்தள்ளி விடவும் முடியாது. அந்த அளவில், திருக்குறள் தொடர் பாக அவ்வளவு பெரிய மாறுதல்களை-புரட்சியை-கருத்தாலும், இயங்கியலாலும் ஒருவகை நடைமுறை மாற்றத்தை-இவ்வுரை உருவாக்கும் என்பது திண்ணம்.

அறிவு நிலையிலேயே இஃதொரு புத்தொளி காட்டும் என்பதையும் எண்ணுக.

8. இவ்வுரையும் விளக்கங்களும் இதுவரை எவரும் கடைப்பிடியாத நிலையில் தூய தனிச் செந்தமிழில் இயல்வன.

9. அதிகாரப் பெயர்களை மாற்ற நினைத்து மாற்றாமற் போனதற்குக் காரணம்-

குறள் வைப்பு முறைகளை மாறற நினைத்து, மாற்றாமற் போனதற்குக் காரணம் . . .

10. **'அறமுதல் உணர்தல்'** அறமுதற் பொருள் என்று முதன் முதற் கருத்தாண்டவர், கையாண்டவர் - **பரிமேல் அழகரே**. நீத்தார் பெருமை அதிகாரத்துள் துறவியல் பெருமை கூறும் முன்னுரையுள், 'அறமுதற் பொருளை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவர் ஆதலின், இது வான் சிறப்பின் பின் வைக்கப் பெற்றது' என்றார்.

11 'திருக்குறள் மூலம் இதுவாக இராது. அடையும் இதுவாக இராது. அதிகாரங்களும் அவரால் பகுக்கப் பெறவில்லை' குறள் வைப்பு முறைகளும் சரியில்லை.

அவராகச் செய்திரார்" என்பன போலும், சிதைவு நிலைக் கருத்து களைச் சிலர் கூறித் திருக்குறளை மேலும் மேலும் ஆய்வுக்குட்படுத்திக் கொண்டிருப்பதில் இனிமேலும் பயனில்லை என்று நாம் உணர்ந்து கொள்

ளுதல் வேண்டும். அதற்கொரு முற்றுப் புள்ளி இடுதலும் வேண்டும்.

சென்ற நூற்றாண்டு வரலாற்றையே நம்மால் சிதைவும் புதைவும் இன்றி எழுதி விட முடியாது. நாமே நம் வாணாளில் பற்பல சிதைவுகளுக்குள் ளாகிறோம்.

எனவே திருக்குறளில் ஏற்பட்டுள்ள அனைத்தையும் கருத்துச் சிதைவுகளாகவோ, காலச் சிதைவுகளாகவோ கொண்டு, கூடல், குறைதல், திரிதல், திரித்தல், புகுதல், புகுத்தல் ஆகிய அனைத்துச் சிதைவுகளுக்கும் உட்பட்டு, இன்று நின்ற நிலையை ஏற்றுக் கொள்வதே ஒரு வகையில் திருக்குறளைக் காப்பதாகும். இருப்பினும், இம் மெய்ப்பொருள் உரையில், அதிகார முறை மாற்றங்கள் எதுவும் செய்யப் பெறவில்லையெனினும், சில அதிகாரங்களில், குறள் வைப்பு முறை அறிவுத்திக்குத் தக்க வகையில், தவிர்க்க முடியாத நிலையில் மாற்றப் பெற்றுள்ளது. இவற்றால் அதிகக் குழப்பங்கள் நேர்வதற்கில்லை. அதிகாரத்துள் சொல்லப் பெற்ற கருத்துகள் நிரல் நிறையாகச் சொல்லப் பெறுதலின் இன்றியமையாமை கருதியே அவ்வாறு செய்ய வேண்டியிருந்தது. அறிஞர்கள் அவைபற்றிச் சிந்தித்து, இம்மாற்றங்கள் தேவை என்பதை உணரலாம்.

- இது பற்றி மேலும் சிந்தித்து எழுதுதல் வேண்டும்.

**பரிமேலழகர் ஆரியக் கருத்துகள்**

1.அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்.

2.ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப் பட்ட பிரமசரிய முதலிய நிலைகளின்று அவ்வவற்றிற்கோதிய அறங்களின் வழுவா தொழுகுதல்.

3. அது (அறந்)தான் நால்வகை நிலைத்தாய் வருணந் தோறும் வேறுபாடு உடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்கள் ஒழித்துக் கூறப்பட்டது.

- உரைப்பாயிரம்

4.தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் .... 21

5.தீய சொற்களாவன.... வருணத்திற்கு உரிய வல்லனவுமாம் (139)

6.இனி, மனு முதலிய அறநூல்களால் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற்றுள்ளே அடங்கும். (240)

7.நாணென்னும் நல்லாள் புறங் கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங் குற்றத் தார்க்கு (924)

(பரி) பெண்பாலாக்கியது வடமொழி முறைமை பற்றி

8.பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் (972)

(பரி) வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருத்தி நின்று அதின் பயனனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கு மொத்தலிற் பிறப்பொக்கு மென்றும் ... கூறினார்.

9. பண்புடைமை

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு (993)

வெறுத்தல் - பொருத்துதல்

(பரி) 'வடநூலார் அங்கமென்றமையின் உறுப்பென்றார்'

10. காமத்துப்பால்

(பரி) இது புணர்ச்சி பிரிவென இருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடலென்பனவோ வெனின், இவர் பொருட்பாகு பாட்டினை அறம் பொருளின்பமென வடநூல் வழக்குப் பற்றி யோதுதலான் அவ்வாறே அவற்றைப் பிரிவின் கண் அடக்கினாரென்க.

இனி, அவைதம்மையே தமிழ் நூல்களோடும், பொருந்த புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார்.

- திருக்குறளில் வீடு பேறு கூறப் பெறுவதாகக் கூறும் திருவள்ளுவ மாலைச் செய்யுள்கள்.
- 7, 8, 20, 22, 33, 38, 40, 50
- 'வேத சாரம்' - 42, 37
- நான்மறைக் கருத்துகளோடு ஒப்பவைத்துப் பேசுபவை
- 4, 18, 23, 24, 28
- திருவள்ளுவ மாலைச் செய்யுள்கள் - நூல் பல நூற்றாண்டுகட்கு முன்னரே இன்றுள்ள வடிவில் இருந்துள்ளது என்பதாகக் கூறப் பெறுகிறது. நேமி நாதவரை நூலுள் - இத் திருவள்ளுவமாலைச்

செய்யுள் ஒன்று எடுத்துக் காட்டாகக் குறிப்பிடுவதைச் சுட்டிக் காட்டி உரைப்பார் உ.வே.சா.

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

பரி : கற்ற வேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங் கொடாமையிற் பின்னும் அதோதிக் கொள்ளலாம். - அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கம் குன்றக்கெடுவர்.

மறந்த வழி இழிகுலத்தனாமாகலின் மறக்கலாகா தென்னுங் கருத்தான் 'மறப்பினும்' என்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின் இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்.

பாவா : ஆரியப் பார்ப்பானான பிராமணன் தான் கற்ற வேதத்தை மறந்தானாயினும் அதைத் திரும்ப ஓதிக் கொள்ள முடியும். ஆனால், அவன் தன்னை உயர்ந்தவனாகச் சொல்லிக் கொள்ளும் பிறப்பு, தமிழ ஒழுக்கம் குன்றின் கெடும்.

ஒவ்வொரு நாட்டிலும் அந்தந்த நாட்டுப் பண்பாட்டின்படியே ஒழுக்க வரம்பிருக்கும். பிராமணன் வேதத்தை மறந்தானா மறக்கவில்லையா என்பது தமிழ்நாட்டில் ஆய்விற்குரியதன்று. அவன் தமிழ் ஒழுக்கத்தைக் கடைப் பிடித்தானா இல்லையா என்பதே ஆய்விற்குரியதாம்.

ஒழுக்கமுடைமை

தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினை உடையராதல்.

இடுக்கண் கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இல்லாத குடி (1030) (பொருள் - குடிசெயல் வகை)

(பரிமேல்) நவியம் - கோடாரி. (துன்பமாகிய கோடாரி)

(பாவா) துன்பமாகிய சிதல். /ஆலமரம்.

சிதலை தின்ப்பட்ட ஆலமரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு
குதலைமை தந்தைகண் தோன்றின்தான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். (நாலடி : 197)

பரி : "துன்பமாகிய நவியம் புகுந்துதான் முதலை வெட்டிச் சாய்க்க ஒரு பற்றின்றி வீழா நிற்கும் : அக்காலத்துத் தாங்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம்.

*பாவா : பக்கத்தில் ஊன்றும் விழுதுபோல் முட்டுக் கொடுத்துத் தாங்க வல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய ஆலமரம் துன்பமாகிய சிதல் (கறையான்) தன் அடியை அரித்துத் தின்றுவிட ஒரு தாங்கலுமின்றி விழுந்து விடும்.*

*நைந்தடி யற்ற வாலம்*
*நடுங்கிவீழ் கின்ற தென்று*
*வந்தவீ ழூன்றி வீழா*
*வகைநிலை விளைக்குமபோல்*
*மைந்தர்கள் தமக்குள் நல்ல*
*அறிவினால் மகிழ்ந்து சேர்ந்த*
*தந்தையைத் தளரா வண்ணம்*
*தாங்குவர் தவத்தினென்*

*- ஒட்டக் கூத்தர்-உத்திரகாண்டம்*

6. *நத்தம்போல் கேடும் உளதாகுஞ் சாக்காடும்*
*வித்தகர்க் கல்லால் அரிது* 235 *அறம்-புகழ் இல்லறவியல்*

*பரி : புகழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல் 'உளதாகும் சாக்காடு' -ஆவது புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல்*

**பரிமேலழகர் வழுவிய வகைகள்**

1. *ஆரிய வழிகாட்டல்.* 2. *பொருளிலக்கணத் திரிப்பு* 3. *ஆரிய வழிப் பொருள் கூறல்* 4. *ஆரியக் கருத்தைப் புகுத்ததல்* 5. *தென் சொல்லை வடசொல் மொழிபெயர்ப் பெனல்* 6. *தென் சொற்கு வடமொழிப் பொருள் கூறல்* 7.*சொற்பகுப்புத் தவறு.* 8. *சொல் வரலாற்றுத் தவறு.* 9. *சொற்பொருள் தவறு.* 10. *அதிகாரப் பெயர் மாற்று* 11. *சுட்டு மரபறியாமை* 12. *இரு குறளைச் செயற்கையாக இணைத்தல்.*

2. *பரிமேலழகர் தொடர்பால் திருக்குறள் அழியாமை. தொல்காப்பி யரால் தொல்காப்பியம் அழியாமை போல்.*

◆ **கழாக்கால் ... பொருள் - புல்லறிவாண்மை** 840

*பரி : தூயவல்ல மிதித்த காலை இன்பந் தரும் அமளிக் கண்ணே வைத்தாற் போலும்.*

*அதனால் அவ்வமளியும் இழிக்கப் படுமாறு போல*

*இவனால் அவ்வவையும் இழிக்கப் படுமென்பதாம்*

*பாவா : பள்ளி-கோயில்*

♦ **ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்** அறம்-மக்கட்பேறு 69

பரி : பெண்ணியல்பால் தானாக வறியாமையிற் கேட்டதாய் என்றார்.

பாவா : மகன்மேலுள்ள அன்புப் பெருக்கால் அவனறிவை மிகுத்தெண்ணும் தாய்க்கு நடுநிலையறிஞர் பாராட்டு முழு நம்பிக்கை யுண்டாக்கும் என்பதே கருத்து.

8. மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றார் அனைத்திலர் பாடு பொருள் - அரசியல் 409

பரி : உடலோ டொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லும் கல்வி உயர்ச்சி சிறப்புடைத் தென்பதாம்.

பாவா : கல்லாதவர் கல்வி நிலைமையும், செல்வ நிலைமையும், தொழில் நிலைமையும் அதிகார நிலைமையும் பற்றிய மேல் வகுப்பு களிற் பிறந்தாராயினும்

9. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்க் கோட்டி கொளல். பொருள்- அவையறிதல் (720)

பரி : அங்கணம்-முற்றம்

பாவா : அங்கணம் - சாய்க்கடை, சாலகம்

நாணென வொன்றோ வறியலம் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின் -காமம்-நிறையழிதல்-1257

பரி : பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச் சொல்லியது.

பாவா : பரத்தையின் பிரிந்து வந்தவனாகக் கருதப் பட்ட தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகளை, நோக்கி நீ புலவாமைக்குக் கரணியம் யாதென்ற தோழிக்குச் சொல்லியது.

♦ **உரையாசிரியர்**

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பருதி பரிமே லழகர் - திருமலையர்
மல்லர் பரிப் பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தார் இவர்

**--தனிப்பாடல்**

இவருள் மணக்குடவர், பருதி, பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் என்னும் ஐவருரையே இன்று நமக்குக் கிடைப்பன.

- இவ்வைவருள்ளும் காலத்தால் பிற்பட்டவர் பரிமேலழகர்

- இவரைச் சிறப்பித்துக் கூறும் பாக்கள்

(பாவாணர் மரபுரையில் காண்க)

- பரிமேலழகர் தொண்டைநாடு, காஞ்சிபுரம், அருச்சக வேதியர், பெயர் அழகர்.)

இவர் கம்பர் காலத்திற்கு முந்தியிருக்கலாம் -அபிதான சிந்தாமணி பக். 1045

நச்சினார்க்கினியர் காலம்

இவர் திருமுருகாற்றுப் படைக்கும் பரிபாடற்கும் உரை செய்ததாகக் கூறுவர்.

## 8. திருவள்ளுவ மாலைச் செய்யுள்கள்

- 4, 47 இரண்டும் திருக்குறள் மூன்று உறுதிப் பொருள்களைப் பற்றி மட்டும் கூறகின்றதெனவும்,

செய்யுள்கள் 7,8,19,22,23,38,40,44,50 ஆகிய 9 செய்யுள்களும் திருவள் ளுவர் முப்பாலின் நாற்பால் மொழிந்தவர் என்றும் கூறுகின்றன.

திருவள்ளுவ மாலையில் இந்நூல் பற்றிச் சொல்லப் பெற்றுள்ள கருத்து களை ஒருங்கே தொகுத்துப் பார்த்தால் இதுபோல் ஒரு நூலுக்கு எவராலும் எக்காலத்தும் எந்தவிடத்திலும் ஒரு பெருமை கிடைத்திலது என்றே சொல் லுதல் வேண்டும்.

இறைமை வெளிப்படுத்திய திருமறைகள் என்று சொல்லப் பெறும் நூல்கள், மாந்தனைப் பற்றி மிகுதியும் பேசுவதில்லை. ஆனால் மாந்தன் ஒருவனால் வெளிப்படுத்திய ஒரு நூல் இந்த அளவில் மாந்தவியக்கத்தைப் பற்றிப் பேசியிருப்பதை உலகில் எந்த இனத்திலும் எந்த மொழியிலும் எவராலும் காட்டுதற்கு இயலாது. எனவே இது மீமிசை மாந்தத்தின் வற்றாத மாந்த அறிவியல் கூறு. இது போலும் ஒரு நூல் உலக மொழிகளுக் கெல்லாம் மூத்ததும் முதலானதும், ஒப்பற்ற இயற்கைத் தன்மை வாய்ந்ததுமான தமிழ்மொழியில்தான் எழுதப் பெறல் இயலும் என்க. எனவே இதனை தமிழ்மொழியின் ஒரே மலர்ச்சி என்று கூறலாம். உலகிலுள்ள மொழிகளில் தோன்றியுள்ள நூல்கள் அனைத்தையும் அவ்வம் மொழி வரிசைப் படுத்தி,

அவற்றுள் தலைசிறந்ததான மக்கட்குப் பயன்படும் ஒரே நூலைத் தெரிவு செய்யுங்கள் என்று அவ்வம் மொழியாளர்களைக் கேட்டால், அவரவர் களும், அவ்வாறான ஒரு நூலைத் தேர்வதற்கு மிகவும் மிகவும் இடர்ப்பட வேண்டியிருக்கும். அல்லது அவ்வம் மொழியார்களுக்குள் பல்வேறு கருத்து வேறுபாடுகள் தோன்றி மலைக்க வேண்டியிருக்கும்.

ஆனால், தமிழ்மொழியில் அவ்வாறு தெரிவு செய்யும்படி நேர்ந்தால் அம்மொழியின் ஒரு நூலாகத் திருக்குறளைத்தான் அனைவரும் கருத்து வேறுபாடின்றித் தெரிவு செய்ய வேண்டியிருக்கும்.

இனி, இது மட்டன்று. அவ்வாறு ஒவ்வொரு மொழியிலும் அவ்வம் மொழியினர் தேர்வு செய்யும் ஒவ்வொரு நூலையும் ஒரு வரிசைப்படுத்தி, அவற்றுள் இவ்வுலக மக்கள் இனம் முழுமைக்கும் பயன்படும் ஒரே நூலைத் தெரிவு செய்யம்படி அவ்வம் மொழியின் கண் உள்ள அறிஞர்கள் அனைவரையும் ஒரு சேரக் கேட்டால், அவர்கள் இத் திருக்குறள் ஒன்றைத் தவிர வேறெதையும் தேர்வு செய்ய மாட்டார் - என்று உறுதியாகக் கூறலாம். இஃது அனைத்து மக்கள் உணர்வுக்கும் பொருந்தியதாகவும் பொதுமை வாய்ந்ததர்கவும் கூறலாம்.

திருவள்ளுவ மாலையில் கூறப்பெறும் தகவுரைகள்

- என்றும் புலராது (வாடாது) தேன் ஊறும் மலர் போன்றது திருக்குறள்.
- இதனைத் தலை வணங்க வேண்டும்; வாய் வாழ்த்த வேண்டும்; மனம் சிந்திக்க வேண்டும்; செவி கேட்க வேண்டும்.
- சிறு பனித்துளியில் பனைமரம் தெரிவது போல், இதன் சுருக்க அளவில் அறிவுப் பொருள்கள் பெருகத் தெரிகின்றன.
- இந்நூலின் சிறிய அடிகளால் மாந்த இனத்தின் சிந்தனைகள் அனைத்தும் ஆராய்ந்து அளக்கப்பெற்றுள்ளன.
- உலகம் உய்ய இந்நூல் தந்த திருவள்ளுவர்க்கும் உலகம் நிலைக்க மழை தரும் மேகத்திற்கும் உலகம் நன்றி காட்ட இயலாது.
- இத்தகு முழுப் பொருள்களும் விளங்குமாறு நூல் தந்த ஒரு தெய்வத்தை, அறிவு மேதையை மறந்தும் கூட வெறும் வள்ளுவன் என்னும் சாதிப் பெயரால் கூறுபவன் ஒரு பேதையே ஆவான்.
- (சுப்பிரமணிய பாரதி திருவள்ளுவரைப் புகழ்வது போல் கூறுகிற ஒரு பாடலில் 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று திருவள்ளுவ மாலைப் பாடலைப் படித்த

பின்னும் வேண்டுமென்றே கூறிய இழிதகைமையைக் காண்க. அவர் தன்னை உயர்சாதியராய்க் கருதிய பேதமையும் அதனால் விளங்கிற்று என்க.)

- வேறு வேறு நூல்களை யெல்லாம் பிறர்பிறர் மறுத்துரைக்க வாய்ப் புண்டு. ஆனால் இந்நூல் அவ்வாறு மறுக்காது சிறந்தது என்று எல்லாரும் ஒப்புக் கொள்வர்.
- அன்றைய தமிழ் மூவேந்தர்களின் முடிமணி போல் விளங்கியது இந்நூல்
- புன்மைப் புலவர்களின் நூல்களால் வருந்தி மண்டைவலி கொண்ட அறிஞர்களுக்கு அவ்வலி போக்கும் மருந்து போல்வதாகும் இந்நூல்.
- தாமரைக் குளத்தில் குளித்துப் பழகியவர் வேறு குளங்களில் குளிக்க விரும்பார். அதுபோல் திருக்குறளைக் கற்றவர்கள் வேறு நூல்களைக் கற்க விரும்ப மாட்டார்கள்.
- உலகில் பரந்துபட்டுக் கிடக்கின்ற பல்வகையான அறிவுக் கூறுகளையெல்லாம், உணர்ந்து, தெளிந்து, அவற்றை மற்றவர்களும் உணரும்படி தொகுத்து, வகுத்து, சுருங்கிய சொற்களால் விரிவான பொருள் விளங்கும்படி சொல்லியவர்கள் திருவள்ளுவரைப் போல் வேறு எவருமிலர்.
- திருக்குறளை எத்தகைய அறிஞர் படித்தாலும் அதன் பொருள் களை எந்தெந்த வகையால் எழுதிக் காட்டினாலும், அதன் ஆற்றலை எவரும் குறைத்து மதிப்பிடல் இயலாது.
- இந்நூல் முழுமையும் பொருள் விளங்க ஒருவர் படித்து முடித்து உணர்ந்துவிட்டால், அவர் அவற்றைப் பிறர்க்கும் உரைக்கும் ஆசிரியராக அமர்ந்திருக்கலாமே தவிர, இவர் போய் வேறு ஆசிரியர் களிடம் மாணவராய் அமர்ந்து பாடங் கேட்க வேண்டுவதில்லை.
- இதைவிடச் சிறந்த நூல் ஒன்று உண்டு என்று எந்த மொழி அறிஞரும் கூறமாட்டார்.
- பலவாறான வாழ்வியல் கூறுகளையும், யாவர்க்கும் எளிதில் புலப்படாமல் மறைந்து நிற்கும் அரும் பொருள்களையும் எல்லார்க்கும் விளங்கும்படி எழுதிய அறிஞர் திருவள்ளுவரைத் தவிர வேறு எவருமே இருக்க மாட்டார்.
- படிப்பதற்கு எளிதாய்ப் பொருளுணர்வதற்கரிதாக வுள்ளதிது.

- மாந்தர் சிந்தனைக் கெட்டிய எல்லாக் கருத்துகளும் இதில் கூறப் பெற்றுள்ளன. இதில் இல்லாத - மாந்தன் தெரிந்து - கொள்ளத் தக்க வேறு பொருள் உலகில் இல்லை.
- ஊற்று மணலைத் தோண்டத் தோண்ட நீர் ஊறி வரும்; குழவி வாய் வைத்துக் குடிக்கக் குடிக்கத் தாய்ப்பால் சுரக்கும்; அவையொப்ப, மதிநுட்பம் செறிந்த அறிஞர்கள் ஆராய ஆராய இதில் அறிவு பெருகித் தோன்றும்.

## 9. திருவள்ளுவர்ப் பற்றி வழங்கும் வரலாற்றுச் செய்திகள்

- திருவள்ளுவர் பிறப்பு பற்றிய பல கருத்துகள்
- ஆதி-பகவன்
- ஔவையார் - திருவள்ளுவர் உடன்பிறந்தாள் என்ற கதை.
- திருவள்ளுவர் நெசவுத் தொழில் - அரசுக் கட்டளை அறிவிப் பாளர்
- திருவள்ளுவர் மனைவி வாசுகி கதை.
- இவர்கள் இருவரையும் பற்றிய நிறைய கதைகள். நிகழ்ச்சி
- இவர் ஒரு குறு நில மன்னவர்.
- சென்னை, மயிலார்ப்பூரில் ஒரு கோயில் உள்ளதால் அவர் பிறந்த ஊர் மதுரை என்று ஒரு திருவள்ளுவமாலைச் செய்யுள் ஒன்று கூறுகிறது. (பாட்டு 21)
- இன்றைய நிலையில் கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதி அல்லது கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் என்ப'ித திருக்குறள் நூலின் காலக்குறி.

-ஆனந்தன் முகப்புரை திருக்குறளின் உண்மைப் பொருள்.

## 10. திருக்குறள் கற்றலும், நிற்றலும்

## 11. முடிவுரை

அருளியிடம் தகவுரை பெற்றதற்குக் கரணியம்

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லார் அகத்து 717

தி.பி. 4000

முன்னுரை

அரிமா நோக்கு-காலம் கருதும்-தலைப்பு. நிலவு கருதினும் கை கூடும், காலம் கருதி இடத்தால் செயின்

வள்ளுவர் காலம். இடம். அவர் நூலுக்குப் பொருள்.

பொருள்

அறநூல் தமிழகத்து விரிவு

நூல்தோற்றம்-இலக்கியம், இலக்கணம்,

அறம்-மெய்யறிவியல்-அறிவியல்-பொருளியல் -பொருளாக்கவியல் பொருளுடைமையியல்

பொருளுடைமை -வாழ்வியல், இயல்பியல்

வாழ்வியல் -அரசியல், குமுகவியல்

இயல்பியல் - பொழுதுபோக்கியல், உறவியல்.

அக்காலத்து அறநூல்கள் - ஓமரிலக்கியங்கள் போல்; மனுநூல் போல்; புதைபொருள்கள் போல்; பழங்காலத்தவர் எச்சங்களாக நூலகங்களில் நிற்கும்.

கிறித்தவ நூல் கருத்துப்படி, இசுலாமிய நூல் கருத்துப்படி உலகம் அழிவை நோக்கிப் போகின்றது.

(எ.டு) மேனாட்டாரின் வாழ்க்கை

- வானின்று உலகம் வழங்கி வருதல் மாறும். வான்சிறப்பு பெருமையிழக்கும்
- நீத்தவருக்குப் பெருமை - இப்பொழுது உள்ளதா?
- சிவிகை பொறுத்தல் - எங்கே?
- இல்வாழ்க்கையே சிறப்புக் குன்றிப் போம்.
- வாழ்க்கைத் துணை நலத்திற்குப் பொருளிருக்காது.

- *மக்கட்பேறு - இப்பொழுதென்னாயிற்று?*
- *அன்புடைமை - எங்கே?*
- *விருந்தோம்புதல் - விடுதிகளன்றோ?*
- *செய்தாலன்றோ நன்றி அறிய - யார் செய்வது?*
- *நடுவு நிலைமை-அறமன்றங்களிலாவது உண்டா?*
- *அடக்கம் எதற்குப் பயன்படும் - அடங்கி அடங்கித் தானே தமிழரே கெட்டனர்.*

O



## பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்களின் நூல்கள்

| | |
|---|---|
| ● பாவியக்கொத்து | 22.00 |
| ● ஐயை | 30.00 |
| ● கழுதை அழுத கதை | 35.00 |
| ● கொய்யாக்கனி | 25.00 |
| ● கற்பனை ஊற்று | 40.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 1 | 100.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 2 | 120.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 3 | 120.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 4 | 100.00 |
| ● வேண்டும் விடுதலை | 120.00 |
| ● பெரியார் | 40.00 |
| ● கனிச்சாறு(பெருஞ்சித்திரனார் பாடல்கள்) | |
| - முதல் தொகுதி | 50.00 |
| - 2ஆம் தொகுதி | 90.00 |
| ● நூறாசிரியம் | 100.00 |
| ● தன்னுணர்வு | 5.00 |
| ● பாவேந்தர் பாரதிதாசன் | 25.00 |
| ● இலக்கியத் துறையில் தமிழ் வளர்ச்சிக்கான ஆக்கப்பணிகள் | 5.00 |
| ● ஆரியப் பார்ப்பனரின் அளவிறந்த கொட்டங்கள் | 100.00 |
| ● சாதி ஒழிப்பு | 10.00 |
| ● செயலும் செயல் திறனும் | 30.00 |
| ● ஓ!ஓ! தமிழர்களே! | 11.00 |
| ● தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் | 10.00 |
| ● நெருப்பாற்றில் எதிர் நீச்சல் | 6.00 |
| ● இளமை விடியல் | 50.00 |
| ● இட்ட சாவம் முட்டியது | 10.00 |
| ● மொழி ஞாயிறு பாவாணர் | 50.00 |
| ● என் சுவை எண்பது | (அச்சில்) |
| ● மகபுகுவஞ்சி | (அச்சில்) |
| ● அறுபருவத் திருக்கூத்து | (அச்சில்) |
| ● கனிச்சாறு (பெருஞ்சித்திரனார் பாடல்கள்) | |
| - (தொகுதி 3 முதல் 8 வரை) | (அச்சில்) |
| ● பாவலரேறு பெருஞ்சித்திரனார் கட்டுரைகள் | (அச்சில்) |
| ● வாழ்வியல் முப்பது | (அச்சில்) |
| ● தமிழீழம் | (அச்சில்) |

*மற்றும்*

| | |
|---|---|
| ● பாவலரேறு நினைவேந்தல் மலர் (முதலாமாண்டு) | 60.00 |
| ● பாவலரேறு வாழ்க்கைச் சுருக்கம் | 40.00 |
| ● மொழிஞாயிறு பாவாணர் மலர் | 100.00 |